# ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்

என்னும்

## ஞானப் பிரார்த்தனை

(மூலமும் உரையும்)



ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள்

அருளியது

# ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்

என்னும்

## ஞானப் பிரார்த்தனை

(மூலமும் உரையும்)

ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள்

அருளியது

ஓம் நமோ பகவதே ஸ்ரீஅருணாசலரமணாய



அருணாசலரமண புக் ட்ரஸ்ட்,
திருவண்ணாமலை.

அருணாசலரமண புக் டிரஸ்ட்
11-B, மணக்குள விநாயகர் கோவில் தெரு,
ஸ்ரீ ரமண நகர், திருவண்ணாமலை
தமிழ்நாடு 606 603

2017

முதற் பதிப்பு 1990
இரண்டாம் பதிப்பு 2017

ISBN No. 9788193468901

விலை ரூ. 200

# SRI RAMANA SAHASRAM

**Ennum**

## Jnana Prarthanai

(The Prayer for Self-Knowledge in the form of
A Thousand Verses addressed to Sri Ramana)

by

## Sri Sadhu Om Swamigal

**Second Edition 2017**

Published by
ARUNACHALARAMANA BOOK TRUST
11B, Manakkula Vinayagar Koil Street,
Sri Ramana Nagar, TIRUVANNAMALAI 606603 INDIA
www.arunachalaramanabooktrust.org
mail@arunachalaramanabooktrust.org
arunachalaramanabooktrust@gmail.com

Printed by: SFA Print (P) Ltd., Sivakasi.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# உள்ளுறை



## பாயிரம்



## 1.வேண்டல் அதிகாரம்

## 2. வழக்கிடல் அதிகாரம்

# இந் நூலாசிரிய ரியற்றிய இதர நூல்கள்:

தமிழ்:

1.ஸ்ரீ ரமண சரிதச் சுருக்கம்
2.ஸ்ரீ ரமண வழி
3.சாதனை சாரம்
4.ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை - விளக்கவுரை
5.உபதேச வுந்தியார் - விளக்கவுரை
6.அநுவாத நூன்மாலை — உரை
7.குருவாசகக் கோவை — உரை
8.அருணாசல ஸ்துதி பஞ்சகம் — விளக்கவுரை (முதல் பாகம்)
9.ஸ்ரீ அருணாசல மாண்பு
10.ஸ்ரீ ரமண வருகை
11.ஸ்ரீ ரமண பிரார்த்தனை அமுதம்

ஸ்ரீ ரமண கீதம் மற்றும் ஸ்ரீ ரமண வர்ணங்கள் www.sriramanamaharshi.org என்னும் இணைய தளத்தில் காணலாம்.

English:

1. A Summary of The Life and Teachings of Sri Ramana (Under Print)
2. The Path of Sri Ramana (Under Print)
3. Sadhanai Saram
4. Sri Arunachala Stuti Panchakam (word-by-word meaning and explanation)
5. Sri Ramanopadesa Noonmalai (word-by-word meaning and explanation)
6. Upadesa Undiyar of Bhagagan Sri Ramana (word-by-word meaning and explanation)
7. Guru Vachaka Kovai (translation and explanation)

இந் நூல்கள் கிடைக்குமிடங்கள்:

அருணாசலரமண புக் டிரஸ்ட்,
11B, மணக்குள விநாயகர் கோவில் தெரு,
ஸ்ரீ ரமண நகர்,
திருவண்ணாமலை — 606603.

ஸ்ரீ ரமணாஸ்ரமம்
திருவண்ணாமலை



ஸ்ரீ ரமண பகவான்

எல்லை யிலாதபே ரின்ப வெழில்வடிவு
தொல்லமரர் காணாத் துரீயச் சுடர்வடிவு
நல்ல சிவமா நடந்த குருவடிவு
சொல்ல வொணாத சொரூபமாத் தொக்கதே.

-ஸ்ரீ முருகனார்



ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள்

தன்னுடைய பாக்களிற் றன்னன்ப ருள்ளத்தில்
என்றென்றும் வாழு மியல்பினன்காண் — அன்புருவாஞ்
ஞான குருசீ ரமண வடிவிலொன்றித்
தானிருப்பான் நம்சாது ஓம்.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# முன்னுரை

கடலெழும் எழிலியால் பொழிதரு நீர்தான்
    கடல்நிலை அடைவரை தடைசெயின் நில்லா(து);
உடலுயிர் உனில்எழும் உனைஉறு வரையில்
    உறுபல வழிகளில் உழலினும் நில்லா(து):
இடவெளி அலையினும் நிலைஇலை புள்ளுக்(கு)
    இடம்நிலம் அல(து)இலை: வருவழி செல்லக்
கடன்; உயிர் வருவழி சென்றிட இன்பக்
    கடலுனை மருவிடும் அருணபூ தரனே!

-ஸ்ரீ அருணாசல அஷ்டகம்-8

நீரின் சுபாவம் பள்ளத்தை நோக்கி விரைவதே. உலகின் மிகவும் பள்ளமான இடம் கடலேயாகையால் அங்குள்ள நீர் அப்பால் ஓட்டமற்று அளவற்றுப் பரந்து நிற்கின்றது. சூரியனால் ஆவியாக்கப்பட்டு, மேகமாகி ஆகாயத்தில் பறக்க நேரிட்டால் அங்கு அது நிலை கொள்வதில்லை. காற்றால் உந்தப்பட்டுக் குளிர்ந்த மலைப் பிரதேசங்களுக்குச் சென்று, மீண்டும் குளிர்ந்து நன்னீராகின்றது. உடனே நீரின் சுபாவப்படி அது மேலும் பள்ளமான இடத்தை நோக்கி விரைந்து நீர்வீழ்ச்சிகளாக இறங்கிக் குதித்துப் பல நீரோடைகளாக ஓடிக் கூடி, ஆறாகி, முடிவில் தன் பிறப்பிடமாகிய சமுத்திரத்தையே நாடி அடைகின்றது. தன் மூல நிலையமாகிற கடலை அடையும்வரை அது என்ன தடை செய்யப்பட்டாலும் நில்லாது.

மனிதன் முதலாகிய உயிரினங்கள் யாவற்றின் மூல நிலையமும் — பிறப்பிடமும் — கடவுளாகிய பரம்பொருளே. விளக்கவியலாத ஒரு பரமசக்தியால் (பரம்பொருளுக்கு வேறல்லாத, அப் பரம்பொருளேயான ஒரு சக்தியால்) அப் பரம்பொருளினின்றும் வேறாக்கப்பட்டது போல், கோடிக் கணக்கான அண்டகோளங்களில் அளவற்றவையாகக் காணப்படும் உயிரினங்கள் யாவும் மீண்டும் தம் மூல நிலையமாகிய கடவுளை நோக்கியே எப்போதும் விரைகின்றன. உயிர்களிடம் முயற்சி வடிவாகக் காணப்படும் எண்ணம், சொல், செயல் யாவும் பள்ளத்தை நோக்கி விரையும் நீரின் சுபாவம் போல், கடவுளை நோக்கி விரையும் ஜீவ சுபாவமேயாகும். எனவே ஜீவர்களின் சுபாவம் தன் மூலத்தை (கடவுளை) அடைவதே.

ஜீவன் தன்னை யொரு தனி வியக்தியாகவும் பரம்பொருளினின்றும் பிரிந்து நிற்பதாகவும் தவறாக உணர்வதால் பரம்பொருளின் இயல்பான சத், சித், ஆனந்தம் ஆகியவை முறையே திரிபடைந்து பிறப்பு- இறப்பு, அறிவு- அறியாமை, இன்பம்- துன்பம் என்ற இரட்டை யுணர்வுகளாக அவனுக்கு அனுபவப்படுகின்றன. எனவே அவன் தன் நிலையில் அதிருப்தியுற்று நித்தியத்துக்காகவும், பூரண அறிவுக்காகவும், என்றும் குன்றாத பூரண சுகத்துக்காகவும் ஓயாது உழைக்கின்றான். தனது உண்மையான இயல்பு ஆனந்தமேயானாலும், தனது உண்மையை மறந்த தன்மறதியினால், சுகம் தனக்கு அன்னியமாக வெளியிலிருப்பதாகத் தவறாக எண்ணிக் கொண்டு வெளியே சென்று புறமுகத்திலேயே ஓயாது உழைத்துக்கொண்டிருக்கிறான். இந்த ஜீவ முனைப்பு அவனைப் பிறவிதோறும் வெளியே இழுத்தடித்து அவனை அவனது மூல நிலையமாகிய பரம்பொருளினின்றும் வெகு தூரத்திற்கு இழுத்துச் செல்வதால் அவனது அதிருப்தியும் அமைதியின்மையும் பெருகு வதையே அவன் கண்கூடாகக் காண்கிறான்.

இந்த நிலையில் அவனுக்குத் தன் அதிருப்திக்கும் அமைதி யின்மைக்கும் காரணம் தான் உடலாலும் மனத்தாலும் தன் மூல நிலையமாகிய பரம்பொருளினின்றும் வெகு தூரம் விலகி வந்து விட்டதே என்பதை எப்படியோ அறிகிறான். இந்த அறிவு அவனுக்கு ஏதாவதொரு பிறவியில் ஏற்பட்டே தீரும். இதுவே பரம்பொருளின் அருள்விளையாட்டாகிய ஈசுவர நியதி.

இந்த அறிவு ஏற்பட்ட மனிதன் பரம்பொருளை நாடிச் செல்ல பலவழிகளிலும் முயல்கின்றான். கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய சதுர்யோகங்களைப் பயின்று அவ்வவ் வழிகளில் கடவுளை அடைய முயல்கின்றான். புலன் இன்பங்களைப் பெற்றும், பெருக்கியும் அனுபவிக்க புறமுகத்திலேயே அவன் இதுகாறும் முயன்று வந்த சுபாவத்தால் கடவுளை நாடி அடைய அவன் மேற்கொள்ளுகின்ற முயற்சிகளும் அவனது ஜீவ முனைப்பின் பழக்கத்தால் புறமுகத்திலேயே மேற்கொள்ளப்படுகின்றன. (1) 'பலனில் இச்சையற்றுக் கர்மம் புரி' என்கிற கர்ம யோகமும், (2) 'இதரப் பொருள்களை விரும்பாதே; கடவுளை விரும்பு' என்கிற பக்தி யோகமும், (3) 'இறைவனைப் பிரிந்து நீ ஜீவனாகிச் சிறுமைப்பட்டு விட்டாய்; அவனிடம் மீண்டும் போய்ச் சேர்' என்கிற இராஜ யோகமும், (4) 'நீ அவனை அறி' என்கிற ஞான யோகமும் ஒரு ஜீவபாவத்தை அடிப்படையாக ஒத்துக்கொண்டும், எனவே கடவுள் தனக்கு அன்னியமாக இருப்பதாகப் பாவித்துக்கொண்டும் பயிலப் படும் மார்க்கங்கள் ஆகும். பரம்பொருளை அடைந்து பூரண நிலையை சாசுவதமாக எய்தும் பேற்றைப் பெற மேற்கண்ட மார்க்கங்களில் முயல்கின்ற மனிதன் நாளடைவில் சித்த சுத்தி பெறவே, அவன் மனத்தில் ஒரு தெளிவு பிறக்கிறது. இவ்வாறு தெளிவடைந்த மனத்தில் மேற்கண்ட மார்க்கங்கள் கடவுளைச் சென்றடையும் வழியைக் காட்டித் தருவனவே யன்றி, அவை தன்னை முற்றிலும் கடவுள் நிலையில் — முக்தியில் — சேர்க்காது என்கின்ற அறிவு மலரும். இவ் வறிவு மலர்ச்சியும் அருட் சக்தியின் உதவியால் ஏற்படுகிறது. இந் நிலையில் தான் இதுகாறும் செய்து வந்த நால்வகை

யோகங்களும் கடவுளைத் தனக்கு அன்னியமாகக் கருதி அன்னிய பாவத்துடன் செய்யப்பட்ட பூஜை, ஜெபம், தியானாதிகள் என்றும் அறிகிறான். தியானிக்கப்படும் கடவுள் தனக்கு வேறானவர் என்று பாவிப்பதினும், அவரே தன்னுள் 'நான்' என்னும் தன்மையின் உண்மையாக விளங்குபவர் என்று கொள்ளும் அன்னியமற்ற பாவனையே யாவற்றிலும் சிறந்ததாகும் என்றும் உணர்கிறான்.

அன்னியபா வத்தி னவனக மாகு
மனனிய பாவமே யுந்தீபற
வனைத்தினு முத்தம முந்தீபற.

- உபதேச வுந்தியார் — 8

இவ்வாறு தனது குறிக்கோளாகிய மோக்ஷத்தையடைய எது சரியான வழி என்று அறிந்துகொள்ளுந் திறமை உண்டாகின்றது. இதன் பிறகே ஜீவன் ஒருவனுக்கு ஸ்ரீ பகவான் ரமணர் இவ் வுலகுக்கு அளித்தருளிய முக்திக்கு நேர் சாதனமாகிய ஆத்ம சமர்ப்பண பக்தி மார்க்கமோ, ஆத்ம விசார ஞான மார்க்கமோ பிடிபடும்.

ஏனைய மார்க்கங்கள் ஜீவபாவத்தை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பட்டனவாயிருக்க, ஸ்ரீ பகவானின் ஆத்ம சமர்ப்பண பக்தி மார்க்கமும் ஆத்ம விசார ஞான மார்க்கமும் சத்பாவத்தை அடிப்படையாகக் கொண்டு அனன்னிய பாவ அடிப்படையில் வழங்கப்பட்டவை யாகும். குறிக்கோளும் அதை அடையும் வழியும் ஒரே தன்மைத்ததாயிருந்தால்தான் குறிக்கோள் எளிதில் அடையப்படும். ஸ்ரீ பகவானின் மார்க்கத்தில் பரம்பொருளின் இருப்பையே ஜீவனின் ஆன்ம இருப்பாகவும் கொண்டு சாதனை செய்யும் வழி காட்டப்பட்டுள்ளதால் எம் மார்க்கத்தினும் ஸ்ரீ பகவானின் மார்க்கமே நேர் மார்க்கமாகத் திகழ்கிறது.

இருக்கு மியற்கையால் ஈசசீ வர்க
ளொருபொரு ளேயாவ ருந்தீபற
வுபாதி யுணர்வேவே றுந்தீபற.

- உபதேச வுந்தியார் — 24

முக்திக்கு நேர்வழியாக ஸ்ரீ பகவான் ரமணர் (1) ஆன்ம விசார அறிவு நெறி (2) ஆன்ம சமர்ப்பண அன்பு நெறி ஆகிய இரு நெறிகளைத் தந்திருத்தாலும், இவை இரண்டும் முடிவு நிலையிலும் சரி செய்முறையிலும் சரி இரண்டல்ல, ஒன்றே என்பதை சாதகன் மேற்கண்ட இரு நெறிகளில் எந்த ஒரு நெறியில் உண்மையாக முயன்று சென்றாலும் கண்டு கொள்ளுவான். இது எவ்வாறு என்பதை ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் தமது *'ஸ்ரீ ரமண சரிதச் சுருக்கம்'* எனும் நூலில் (பக்கம் 44) விளக்கியுள்ளார்:

" மேலெழுந்த வாரியாக நோக்குவார்க்கு 'ஆன்ம விசாரியோ தன்னை நாடுகிறான்; பக்தனோ கடவுளை நாடுகிறானே' என்றவாறு செய்முறையில் ஆன்ம விசாரத்திற்கும் ஆன்ம சமர்ப்பணத்திற்கும் ஒரு வேற்றுமை இருப்பது போலக் காணப்படினும், உண்மையாகவே சாதனையில் ஈடுபடும் சாதகன்

ஒருவனுக்கு, அகந்தை அழிந்து, ஆன்மாவாக நிலைபெறுவதாகிய முடிவு நிலையில் மட்டுமின்றிச் செய்முறையிலும் இரண்டும் ஒன்றேயாவது தெற்றென விளங்கும். எவ்வாறெனின், தன்னைக் கடவுளுக்குச் சமர்ப்பிக்கும் சாதனையைத் தொடங்கும் பக்தன் பிறகு தேகத்தை 'நான்' என்றோ 'எனது' என்றோ மீண்டும் பற்றிக்கொள்ளும் அபிமானத்தை ஏற்கவே கூடாது. கடவுளுக்குக் கொடுத்ததை மீண்டும் எடுத்துக்கொள்ளும் தத்தாபகாரச் செயலே இது. ஆகையால், மீண்டும் அவற்றை அபகரிக்காமல் இருக்க முயல்வதே சரணாகதியின் சரியான சாதனை முறை. அப்போது அவன் என்ன செய்கிறான்? 'தேகமே நான்' என்னும் போலித் தன்மையுணர்வு கிளம்பிவிடாமலிருப்பதற்காக அத் தன்மை யெழுச்சியின்மேல் சர்வ ஜாக்கிரதையான கவனத்துடன் இருக்க முயல்கிறான்."

ஆன்ம விசாரியோ பந்தத்திலிருக்கும் தான் யார் என்று விசாரித்துத் தன் யதார்த்த சொரூபத்தை அடைய சதாகாலமும் மனத்தை ( நாட்டத்தை) ஆன்மாவில் (தன்மை யுணர்வின்மேல்) வைத்திருக்கிறான்.

அகந்தை நாசத்தை நாடும் ஆன்ம விசாரியிடமும், அகந்தையைச் சமர்ப்பிக்க விரும்பும் பக்தனிடமும் உண்மையில் சாதனை காலத்தில் இவ்வாறாக நிகழ்வது தன்மையின் உண்மையில் கவனம் இடைவிடாது நாட்டப்படுவதேயாகும். இதனால்தான் ஸ்ரீ பகவான் 'ஆன்ம சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை கிளம்புவதற்குச் சற்றுமிடங் கொடாமல் ஆத்ம நிஷ்டாபரனாய் இருப்பதே தன்னை ஈசனுக்களிப்பதாகும்'' என்று கூறுகின்றார்.

ஜீவோபாதியினின்றும் விடுபட்டு நாம் சுயமே பிரகாசிப்பதே ஜீவன்முக்தி, மோக்ஷம், பரிநிர்வாணம், பரமபதம், கடவுள்நிலை என்றெல்லாம் பற்பல மதங்களிலும் கோஷிக்கப் படுகின்றது. ஜீவபோத ரூப அகந்தை அழியும் இந் நிலையே மரணமற்ற அமர நிலை. அகந்தையை வேரறுக்கும் இந் நிகழ்ச்சியே ஆன்ம விசார மார்க்கத்திலும் ஆன்ம சமர்ப்பண மார்க்கத்திலும் நிகழ்கிறது.

இவ் விரு மார்க்கங்களும் செய்முறையிலும் முடிவு நிலையிலும் ஒன்றே எனக் கூறப்பட்டதால், இவ் விரு முறைகளும் தனித்தனியானவையோ, தனித்தனியாகத்தான் பயிலப்பட வேண்டுவனவோ அல்ல. இவ் விரண்டையுமே ஒருங்கே பயிலவுங் கூடும். தியான காலத்தில் ஆன்ம விசாரத்தையும் விவகார காலத்தில் தன்மறுப்பாகிய ஆன்ம சமர்ப்பணத்தையும் அனுஷ்டிப்பது பொருத்தமுடையதாக இருக்கும். இம் முறையை எளிதாகவும் பயன் சிறக்கும் வகையிலும் அனுஷ்டிப்பதற்காகவே சாதகர்களுக்குப் பயன் படும் வகையில் இவ் விரு மார்க்கங்களையும் இணைத்து, இவ்விரு மார்க்கங்களிலும் ஸ்ரீ பகவானால் அருளப்பட்டுப் பொதிந்துள்ள நுட்பமான அரிய இரத்தினங்களை யெல்லாம் பட்டை தீட்டி ஒளி சிறக்குமாறும் நமக்குச் சாதனையில் கைகொடுக்கும் விதத்திலும் ஞானப் பிரார்த்தனைப் பாக்களாக ஆயிரம் வெண்பாக்களில் 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' என்ற இவ் வரிய பெரிய நூலை ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் வழங்கியுள்ளனர்.

ஆன்ம விசார நெறியில் அடங்கியுள்ளவையுமான ஆன்ம சமர்ப்பண நெறியில் அடங்கியுள்ளவையுமான கருத்துக்களாகிய ஆன்மப் பசியைத் தீர்க்கும் பலாச் சுளைகளைப் பிரார்த்தனை ரூபமாகிய நறுந்தேனில் நன்கு ஊறவைத்து அருந்துவதற்கு ஏற்ற சுவையான தெவிட்டா அமுதமாக ஆக்கி 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' என்ற ஆயிரம் தேமதுரப் பாக்களில் ஸ்ரீ சுவாமிகள் வழங்கியுள்ளனர். அவற்றின் அருஞ்சுவையையும் பெரும் பயனையும் எழுதிக்காட்ட யாரேவல்லார்? நேரிடையாகத் தாமே அனுபவித்து அறிந்து கொள்ள வேண்டியதே.

பாலும் தேனும் கலந்தாற் போல் ஆன்ம விசாரமும் ஆன்ம சமர்ப்பணமும் இசைபட இணைந்து இழையும் ஆயிரம் பாக்களும் ஸ்ரீ சுவாமிகளால் யாக்கப்பட்ட வரலாற்றினைக் காண்போம்.

ஒவ்வொரு ஜீவனிடமும் பிறவியிலேயே பொதிந்துள்ள ஸம்ஸ்காரங்கள் அவ்வக் காலங்களில் வெளிப்பட்டு பழக்கங்களாக உருவாகி அவனது வாழ்க்கையில் அவனது சுபாவமாக அமைகிறது. ஸ்ரீ சுவாமிகளின் இளமைப் பருவ முதற் கொண்டே தெய்வத்தைப் பாடிப் பரவும் வழக்கம் அவரிடம் இருந்து வந்தது. ஆதியிலிருந்து அவர் புனைந்து பாடிய பாடல்கள் யாவற்றிலும் பரமனைப் பிரிந்ததால் உலகில் தமக்குற்ற சிறுமையின் சித்தரிப்பும் பரமனின் பதத்தைப் பெற தமக்குள்ள தாளா தாபத்தின் வெளிப்பாட்டையும் மிகுதியாகக் காணலாம்.

குற்றங்கள் நிறைந்த ஜீவபோதத்தின் கொடுமையைக் கண்டு அஞ்சி நடுங்கி பரமனின் பாதம் பற்றி அழுது தொழுது தன் ஜீவபோதத்தை அவனில் கரைத்து ஞான நிலையில் ஒன்ற ஸ்ரீ சுவாமிகளின் உள்ளத்தில் கனன்று வந்த தாபம் அவரது 14வது வயது முதற்கொண்டே தெய்வத் தமிழில் பாக்களாக உருவெடுத்தன. இந் நிலையை ஸ்ரீ சுவாமிகளே கீழ்க்கண்ட பாடல்களில் குறிப்பிடுகின்றனர்:

எனக்கறிவு வந்த இளமை முதலே
உனக்கடிமை உண்மையா யாகி — மனக்கொடிய
பேய்வாயின் மீளப் பெரிதழுத துக்கம்இனி
ஓய்வாதல் என்றோ உரை. (307)

அப்பழுக்கில் லாத அருள்வாழ்வு வாழ்வதற்கே
இப்பிறவி பெற்ற இளமைதொட்டுன்-பொற்பதத்தைக்
கெஞ்சிப் பணிந்தழுது கேட்டதெலாம் உன்செவியுள்
கொஞ்சமெனுங் கொண்டிலையோ கூறு. (873)

பற்றுதியா வாறுன்தாள் பற்றளிப்பாய் என்றிளமை
யுற்றமுன்னை நாள்தொட்டே யோலமிட்டேன்-சற்றேனும்
உன்னருளால் பற்றிங்(கு) ஒழிந்தறியேன் இங்ஙனமேன்
என்னை அழ வைத்தாய் இசை. (902)

பரம்பொருளே ஸ்ரீ ரமண சற்குருவாக இவ் வுலகில் அவதரித்துள்ளதை அவரது இளமைப் பருவத்தில் அறியாத காலத்தில் அவர் நெஞ்சங்கரைந்து

பாடிய பாடல்கள் யாவும் அன்று அவரது இஷ்டதெய்வமாக இருந்த முருகப் பெருமானுக்கே அர்ப்பணிக்கப் பட்டவை யாயிருந்தன. ஆனால் பிற்காலத்தில் ஸ்ரீ பகவானை வந்தடைந்ததும் யதார்த்த நிலையை அடைய வேண்டி இதுகாறும் அழுதும் தொழுதும் பாடும் பழக்கத்தைத் தன்னிடம் ஏற்படுத்தித் தன்னை ஆட்டுவித்து வந்தது ஸ்ரீ பகவானே என்பதைத் தெற்றென விளங்கிக்கொண்டார். இதையே ஸ்ரீ சுவாமிகள்

இழந்த வெதார்த்தநிலை எய்துவிப்பான் என்னைக்
குழந்தைப் பருவமுதற் கூவித் — தொழும்பழக்கம்
ஏற்படுத்தித் தந்த இறைவா ரமணஇனி
மேற்செயலும் நீயேயார் வேறு?

என்ற 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' 648 வது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

ஜூலை 1946 ல் தமது 24வது வயதில் ஸ்ரீ சுவாமிகள் ஸ்ரீ பகவானின் சந்நிதியை வந்துற்றபோது அவர் உள்ளத்தில் ஏற்கனவே கனன்று வந்த தாபம் மேலும் தீவிரமடைந்து நெஞ்சுருக்கும் பிரார்த்தனைப் பாக்களாக அவர் உள்ளத்திலிருந்து ஊற்றெடுத்து வெளிவந்தன. ஸ்ரீ பகவானின் தேகவாழ்வின் கடைசிக் கட்டத்தில் கணக்கற்ற பக்தர்கள் அவர் சந்நிதியில் எப்போதும் மொய்த்துக் கொண்டிருந்ததாலும், ஸ்ரீ சுவாமிகள் தம்மை அப் பக்தர்களுள் கடைசியாக வந்த எளியவனாகக் கருதியதாலும், ஸ்ரீ பகவானை நெருங்கி அணுக்கமாகப் பேசவோ தமது தாபங்களை நேரிடையாகத் தெரிவிக்கவோ இயலாத நிலையிலிருந்தார். எனவே அக் காலத்தில் தமது உணர்ச்சிகளை யெல்லாம் பாக்களில் வடித்து அவற்றை பகவானுக்கு அர்ப்பணித்துத் திருப்தியடைந்தார். முதலில் சிலவற்றைத் தாளில் எழுதி ஸ்ரீ பகவானிடம் காண்பித்தும் சிலவற்றை அவர்தம் சந்நிதியில் பாடியதும் உண்டு. பின்னர் அவர் பாக்களைத் தாளில் எழுதவும் கூடச் செய்யாது மனதிலேயே புனைந்து தம் உள்ளத்தில் வீற்றிருக்கும் நாயகன் மட்டுமே அவற்றைக் கேட்டால் போதும் என்ற திருப்தியுடன் இருந்துவிட்டார். இவ்வாறாக ஸ்ரீ பகவானின் ஜீவிய காலத்திலேயே அவருடன் உள்ளத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளப் பழகிவிட்டார்.

ஸ்ரீ பகவான் 1950 ஏப்ரல் மாதத்தில் தமது தேகத்தை உகுத்ததும் ஸ்ரீ பகவானின் தேக மறைவால் ஏற்பட்ட பிரிவின் தாளாமையால் ஸ்ரீ சுவாமிகளின் அருள்வேட்கை தீவிரமாக ஓங்கியது. இதனால் யாவரிடமிருந்தும் விலகி தனித்திருந்து தம் உள்ளத்தின் வேட்கையை தம் உள்ளத்திலேயே உறையும் ஸ்ரீ பகவானிடம் முறையிட்டுக் கதறுவார். 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரத்'தின் 812வது பாடலில் இம்மன நிலையை ஸ்ரீசுவாமி களே நன்கு சித்தரித்துள்ளார்.

தனித்துத் தனித்திருந்துன் தாபமே லிட்டுப்
பனித்தகண் ணீருடன்என் பாபச் — செனிப்பைப்
பயனாக்கித் தாவென்று பற்பலகால் கேட்டும்
இயலாதென் பாயோ எனக்கு?

இவ்வாறாக ஸ்ரீ சுவாமிகளின் உள்ளத்தில் கனன்று வந்த தாபாக்கினி கொழுந்துவிட்டு எரிந்து மேன்மேலும் தீவிரமடைந்து கடைசியாக 1955

ஜுலை மாதத்தில் 'ஸ்ரீ ரமண வருகை' எனும் நெஞ்சை உருக்கும் பாக்கள் வடிவில் வெளிப்பட்டுச் சுடர் விட்டது. இக் காலக்கட்டத்தில் ஸ்ரீ சுவாமிகள் பாடிய 'ஸ்ரீ ரமண வருகை', 'அண்ணாமலை ரமணாண்டி' போன்ற பாடல்களின் உணர்ச்சி வேகத்தையும், அவற்றில் வெளிப்பட்டுள்ள ரமண பக்தியையும் ஏக்கத்தையும் காண்கையில் இத்தகைய பாடல்களை ஸ்ரீ சுவாமிகளிடமிருந்து உலகுக்குப் பெற்றுத் தருவதற்காகவே ஸ்ரீ பகவான் அவரை இத்தகைய ஏக்க நிலையில் நீண்ட காலத்திற்கு வைத்திருந்த பாட்டுவிக்குந் தந்திரமோ என்ற முடிவுக்கே நாம் வரவேண்டியிருக்கிறது.

சிறு பிராயம் முதல் ஸ்ரீ சுவாமிகளின் உள்ளத்தில் இருந்து வந்த அருள் வேட்கையும் ஞானப் பசியும் மெல்ல மெல்ல வளர்ந்து வளர்ந்து, முற்றி, கடைசியாக ' ஸ்ரீ ரமண வருகை' மூலம் முழுதும் கனிந்து, அதன் பயனாய் அவரது ஏக்கமும் தாபமும் நிறைந்த ஜீவத்துவம் ஸ்ரீ பகவானின் ஞானாக்கினியால் முற்றிலும் எரிக்கப்பட்டு நீராக்கப்பட்ட பிறகும், பிரார்த்தித்துப் பிரார்த்தித்துப் பெற விரும்பும் அவரது சுபாவமும் ஸ்ரீ பகவானின் அருளையே முற்றும் சார்ந்து நிற்கும் அவரது போக்கும் அவரது தேக வாழ்வின் இறுதிக் கட்டம் வரையிலும் அவரிடம் தொடர்ந்தே வந்தது என்பதை அவர் மேற்கொண்டு பாடிய **'ஸ்ரீ ரமண குருவருளந்தாதி', 'ஸ்ரீ அருணாசல வெண்பா', 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்', 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலையின் விரிவுப்பாமாலை'**, மற்றும் **'ஸ்ரீ ரமண கீதத்'**தின் அநேகப் பாடல்களைக் காணும் போது நன்கு தெரிந்துகொள்ளலாம். இவ்வாறாக குருவருளுக்காகவும், ஞான நிலைக்காகவும் அழுதும் தொழுதும் பாடிப் பரவும் அவரது மனப்பாங்கு ஞானாக்கினியால் புடம் போடப் பட்ட பிறகு அவர் யாத்த 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' வடிவில் செறிவுடன் விளங்குவதைக் காணலாம். மேலும் அவருடைய தேகவாழ்வின் கடைசி நாட்களில் கடைசியாக எழுதிய பின்வரும் பாடலிலும் செயல், சொல், எண்ணம் ஆகிய யாவற்றுக்கும் ஸ்ரீ பகவானின் அருளையே சார்ந்து அவர் இறுதிவரை வாழ்ந்து வந்ததைக் காணலாம்:

> இஷ்டமுனக்கில்லாத எச்செயலும் செய்யேனான்
> இஷ்டமுனக் கில்லாத எச்சொல்லும் சொல்லேனான்
> இஷ்டமுனக் கில்லாத எந்நினைவும் எண்ணேனான்
> இஷ்டமிதை நின்னருளால் ஈடேற்றி வைப்பாயே.

இப் பாடல் அவரது அருள் வாழ்க்கைக்கு ஒருமுத்தாய்ப்பாய்ச் சிறந்து விளங்குவதாய் அமைந்துவிட்டது.

'ஸ்ரீ ரமண வருகை' என்னும் நூலின் முன்னுரையில் குறிப்பிடப் பட்டுள்ளவாறு தஞ்சையில் 'ஸ்ரீ ரமண வருகை' என்ற பாடல்களை ஸ்ரீ சுவாமிகள் பாடியபோது பகவான் ஸ்ரீ ரமணரின் காட்சி அவருக்குக் கிடைத்தது. ஸ்ரீ பகவான் பணித்தவாறு அவர் திருவண்ணாமலைக்கு 1955ல் வந்து அவரது ஜீவிய காலம் முழுவதும், அதாவது 1985 வரை திருவண்ணாமலயிலேயே வாழ்ந்து வந்தார். ஸ்ரீ ரமணாசிரமத்தில் ஐந்து ஆண்டுகளும் பலாக்கொத்தில் ஓராண்டும் வசித்த பிறகு ஸ்ரீ ரமண நகரிலுள்ள ஸ்ரீ C. பழமலை நாதன் என்ற உத்தம ரமண பக்தரின் வீடு இருந்த

வளாகத்தில் வந்து வசிக்கலானார். ஸ்ரீ சுவாமிகளுக்கும் ஸ்ரீ பகவானின் மற்ற பக்தர்களுக்கும் ஸ்ரீ C.P. நாதன் அவர்கள் ஆற்றிய அருந்தொண்டை விளக்கப் புகுந்தால் அதுவே ஒரு புத்தகமாகி விடும். ஸ்ரீ C.P. நாதன் அவர்கள் ஸ்ரீ பகவானின் அடியார்களுக்கு அடியாராகவும், சாதுக்களுக்கும் ரமண பக்தர்களுக்கும் சேவை செய்வதற்கே தம் முழு வாழ்க்கையையும் அர்ப்பணித்துக்கொண்டு, அருள் திருவிளையாட்டால் தமக்கும் தம் குடும்பத்தினருக்கும் ஏற்பட்ட வறுமை, நோய் ஆகிய இன்னல்களுக்கு இடையிலும் தாம் மேற்கொண்ட சேவையைத் தொடர்ந்து செய்துவந்தார்[1]. ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளின் பெருமையையும் ரமண பக்தியையும் ஞானத்தையும் எல்லாரினும் முதன் முதலாகத் தெரிந்து கொண்ட அவர் ஸ்ரீ சுவாமிகளின் எங்கும் சுற்றித் திரியும் பரிவிராஜகப் போக்கைத் தடுத்து, தனது வாசஸ்தலத்திலேயே ஓர் இருப்பிடம் அமைத்துக் கொடுத்து உபசரித்தார். ஸ்ரீ C.P. நாதன் அவர்களின் உண்மையான அன்பினால் கட்டுண்ட ஸ்ரீ சுவாமிகள் அவரின் வேண்டுகோளின்படியே அவரது வளாகத்தில் தமக்கென ஒரு சிறு குடிசையைத் தாமே கட்டிக்கொண்டு 1961 முதல் அதில் வசித்து வரலானார். அக் குடிசையில் வசித்து வந்த போது தான் 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' பாடல்களை எழுதத் துவங்கினார்.

1964 ஆம் ஆண்டில் ஒருநாள் ஸ்ரீ சுவாமிகள் அந்தாதி வடிவில் 15பாடல் களைப் (இந் நூலின் பாடல்கள் 118, 117, 157,329, 125, 145, 780, 495, 641, 819, 561, 858, 313, 227, 671) புனைந்தார். ஸ்ரீ.C.P, நாதன் அவர்கள் இப் பாடல்களைப் படித்துப் பார்த்து அவை ஞானத்தையே வேண்டும் நேரிடையான பிரார்த்தனைகளாக அமைந்திருக்கும் அழகைக் கண்டு அவற்றால் மிகவும் கவரப்பட்டு, இதே போன்று தொடர்ந்து மேலும் பிரார்த்தனைப்பாடல்கள் புனையுமாறு ஸ்ரீ சுவாமிகளைக் கேட்டுக் கொண்டார். ஸ்ரீ சுவாமிகளும் மேற்கொண்டு ஐந்து பாடல்கள் (106, 774, 811, 217, 284) எழுதினார். ஸ்ரீ C.P. நாதன் அவர்கள் தொடர்ந்து வற்புறுத்தவே, ஒரு நாளைக்கு ஒரு வெண்பாவாகிலும் எழுதவேண்டும் என்ற அவரது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு மேலும் பாடல்கள் புனைய ஆரம்பித்தார்.

ஒன்றெழுத வேண்டுமெந்தாய் ஒவ்வொருநா ளுங்கவிதை;
இன்றெழுதும் அஃதென்ன என்பாயேல் — கன்றழுதுங்
தானிரங்காக் கற்றாப்போல் சற்குருநீ யென்னளவில்
ஏனிருந்தாய் என்றவெண்பா வே. (பாயிரம் 4)

என்ற பாடல் இச் சமயத்தில் எழுதப்பட்டதே.

சில மாதங்கள் கழித்து 1 0 0 பாடல்கள் எழுதி முடித்த பிறகு டாக்டர் R. சந்தானம் என்ற அன்பர் வந்து இவற்றைத் தொகுத்து எழுதி 'பிரார்த்தனை நூறு' என்று பெயரிட்டார். ஆயினும் இத்துடன் திருப்தியுறாத டாக்டர்

---

[1] இக் குடும்பத்தினர் அனுபவித்த வறுமையும் பிற இன்னல்களும் நிறைந்த வாழ்க்கையில் ஸ்ரீ சுவாமிகளும் பங்கு கொண்டு அனுபவித்த அந் நிலையைப் பாடல்கள் 29ம் 30ம் குறிப்பிடுவதாயமைந்துள்ளன.

R. சந்தானமும் ஸ்ரீ C.P. நாதனும் ஸ்ரீ சுவாமிகளை மேலும் தொடர்ந்து நாள் ஒன்றுக்கு ஒரு வெண்பா வீதம் எழுதுமாறு வேண்டிக் கொள்ளவே ஸ்ரீ சுவாமிகளும் அவ்வாறே எழுதிவந்தார். 1965ஆம் ஆண்டிற்குள் எழுதப்பட்ட வெண்பாக்கள் 500ஐ எட்டின. அக் கட்டத்தில் ஓர் இளம் அன்பர் இப் பாடல்களைத் தக்க தலைப்புகள் கொடுத்து நூல் வடிவில் அமைக்குமாறு வேண்டினார். இந்த வேலை நடந்து கொண்டிருக்கும் போது அவ் வன்பரின் வாழ்க்கையில் ஒரு பெரிய சோதனை ஏற்பட்டது. அவர் ஸ்ரீ அருணாசல தரிசனமும் ஸ்ரீ சுவாமிகளின் சற்சங்கமும் பெற முடியாதபடி பலவந்தமாகத் தடுத்து வைக்கப்பட்டார். இதனால் அவ்வன்பரின் மனத்தில் ஸ்ரீ அருணாசல தரிசனத்திற்காகவும் ஸ்ரீ சுவாமிகளின் சற்சங்கத்திற்காகவும் ஏக்கமும் தாபமும் கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது. இந்த தாபமும் ஏக்கமும் பளிங்கு போன்ற ஸ்ரீ சுவாமிகளின் மனத்தில் பிரதி பலித்தன. ஸ்ரீ சுவாமிகள் அவ் வுணர்வுகளுக்குப் பிரார்த்தனை வடிவங் கொடுத்து வெண்பாக்களாக வடித்து 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரத்'தை ஆயிரம் பாக்களாகப் பூர்த்தி செய்தார்.

ஆறுமாதம் பிரிந்திருந்த அவ் வன்பர் அருணாசலத்திற்கும் ஸ்ரீசுவாமி களிடமும் மீண்டும் வரும் சூழ்நிலை ஏற்பட்டு அவர் வர ஆரம்பித்தார். இதன் பின்னர் ஸ்ரீ சுவாமிகள் தாம் எழுதி முடித்த ஆயிரம் வெண்பாக்களையும் தக்க தலைப்புகளில் சீரமைத்து அவற்றிற்கு 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் என்னும் ஞானப் பிரார்த்தனை' என்ற தலைப்பு கொடுத்து அவற்றை ஒரு நூல் வடிவாக்கினார்[2].

பிக்ஷை எடுக்கும் போது பாடுவதற்காகத் தகுந்த ஒரு பாடல் பாடித் தருமாறு சாது அன்பர்கள் வேண்டியதற்கிணங்க ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை' யைப் பாடினாலும், அவ்வாறு அவர் பாடும்போது அவர் உள்ளத்திலிருந்து பொங்கிப் பெருகிய சொற்கள் யாவும் அருணாசலப் பெருமான் மீது தமக்குள்ள பேரன்பின் வெளிப்பாடான காதல் மொழிகளாகவே வெளிவந்தனவே யன்றி சாது அன்பர்களுக்காக அவை பாடப்பட்டவை போன்று தோன்றுவதில்லை. இவ்வாறே ஸ்ரீ . C.P.நாதன் மற்றும் ஏனைய நண்பர்களின் வேண்டுகோளுக் கிணங்கவே ஸ்ரீ சுவாமிகள் 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' எனும் இந் நூலை எழுத முனைந்தாலும், வெண்பாக்கள் அவர் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் போது தம் உள்ளத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் தம் இதய நாதனான ஸ்ரீ பகவான் மீதே தம் மனம் முழுதும் நிஷ்டையுற் றிருக்க அவர் செவிமடுத்துக் கேட்பதற்காகவே பாடப்பட்ட காதல் மொழிகளாக அவை அமைந்தன. எனவே இந் நூல் பாடி முடிக்கப்பட்டதும் அவற்றைப் படித்துப் பார்த்து அவற்றின் அழகில் தங்கள் உள்ளத்தைப் பறி கொடுத்த அன்பர்கள் இந் நூலை அச்சிட வேண்டுமென்று யோசனை தெரிவித்த போது, ஸ்ரீ சுவாமிகள் கீழேவரும் பாடலைப் புனைந்தார்:

[2] 1964 முதல் 1967 வரையிலான காலத்திலே பெரும்பான்மையான பாடல்கள் பாடப்பட்டனவாயினும், இவற்றை நூல் வடிவில் தொகுக்கும் போது தாம் ஏற்கனவே சில ஆண்டுகளுக்கு முன் பாடி வைத்திருந்த 21 பாடல்களையும் (அதாவது, 15-1-1949ல் பாடப்பட்ட 182, 161, 798, 652, 81, 300, 306, 314, 597, 689 ஆகிய 10 பாடல்களையும், 11-4-1953ல் பாடப்பட்ட 426,213, 497, 535, 836, 108, 797, 746, 441 ஆகிய 9 பாடல்களையும், 27-4-1956ல் பாடிய 983, 99 ஆகிய இரு பாடல்களையும்) சேர்த்துக்கொண்டார்.

*அச்சுக்கோ அங்கீ கரிப்புக்கோ அன்புளர்செய்*
*மெச்சுக்கோ அல்லஇந்த வெண்பாக்கள் — இச்சித்துள்*
*என்னிதய நாதனுடன் யான்முறைசெய் காதல்மொழி*
*இன்னொருவர் கேட்டல் இழுக்கு.* (பாயிரம் — 1)

இவ் வெண்பாவைக் கண்டதும், அன்பர்கள் ஸ்ரீ சுவாமிகளைப் பார்த்து "அப்படியானால் இவ் வெண்பாக்களை நாங்கள் படிப்பதுங்கூட தவறா?" என்று வினவினர். இதற்குப் பதிலாக ஸ்ரீ சுவாமிகள் கீழ்க்கண்ட வெண்பாவை எழுதிக் காட்டினார்:

மற்றவர்கட் கென்றேநான் வாய்திறக்க மாட்டேன்காண்!
உற்றவரெல் லாம்என்னோ டொன்றேகாண் சொற்றதெலாம்
என்னெஞ்சுக் கேரமண னின்அடிகள் சந்நிதிக்கே
இன்னொருவர்க் கேது மிலை. (பாயிரம் — 2)

இதன் கருத்து என்னவெனில், ஸ்ரீ பகவானருளால் இவ் வெண்பாக்களைப் படிக்க நேரும் அன்பர்கள் இவ்வெண்பாக்கள் என்ன பாவத்துடன் பாடப்பட்டனவோ அதே பாவத்தையே தம் உள்ளத்தில் ஏற்றிக் கொண்டார்களானால், அத்தகையோரெல்லாம் என்னுள்ளத்தோடு ஒன்றியவர்களேயன்றி முதல் பாயிரத்தில் குறிப்பிடப்பட்ட 'இன்னொருவர்' ஆக மாட்டார் என்பதாகும். ஆகையால் இப் பாடல்களை ஓதும்போது ஸ்ரீ சுவாமிகள் இவற்றை எந்த பாவத்துடன் பாடினாரோ அதே பாவநிலையில் மூழ்க வேண்டும் என்பது மிக முக்கியம். அதாவது, ஸ்ரீ பகவானுக்காகவே அவர் கேட்பதற்காகவே பாடப்பட்ட நம்முடைய காதல் மொழிகளாகவே இவற்றை பாவித்துப் பாடவேண்டும்.

சில ஆண்டுகட்குப் பின்னர் ஓர் அன்பர் முதல் பாயிரத்தைச் சுட்டிக் காட்டி ஸ்ரீ சுவாமிகளைப் பார்த்து "அப்படியானால் இப் பாடல்களை அச்சிடக் கூடாது என்பது தான் உங்கள் எண்ணமா?" என்று வினவியபோது, ஸ்ரீ சுவாமிகள் "அவை அச்சிடப்படவே கூடாது என்று நான் கூறவில்லை. நான் சொன்னது என்னவெனில், அவை அச்சிடப்பட வேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டு பாடப்பட்டவை அல்ல. ஸ்ரீ பகவான் மீது எனக்குள்ள பக்தியால் எழுதப்பட்ட காதல் மொழிகளே அவை; எனவே அவை ஸ்ரீ பகவானின் பாதங்களில் அர்ப்பணிக்கப்பட்டவை. இவ்வாறாக அர்ப்பணிக்கப்பட்ட பிறகு ஏதாவதொரு நேரத்தில் அவை அச்சிடப்பட வேண்டும் என்பது அவர் அருளிஷ்டமானால், அவரிஷ்டத்திற்கு மறுப்பு சொல்ல நான் யார்?" என்று பதிலிறுத்தார்.

ஸ்ரீ சுவாமிகளின் மற்றப் பாடல்களைவிட 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ர' வெண்பாக்கள் உயர்ந்த நடையில் எழுதப்பட்டிருந்தாலும், தமிழ் இலக்கிய அறிவு அதிகம் இல்லாதவர்களாலும் இவ் வெண்பாக்களைச் சுலபமாகப் புரிந்துகொள்ள முடியும். என்றாலுங்கூட இப் பாடல்களில் அரிய உயர்ந்த கருத்துக்கள் பலவும் நுட்பமான முறையில் பொதிந்திருப்பதால், ஸ்ரீ சுவாமிகளே எளிய தமிழில் இவ் வெண்பாக்களை உரைநடைப் படுத்தி

எழுதினால்தான் அவற்றை நன்கு விளக்கிக்கொள்ள முடியும் என்று பல நண்பர்களும் தெரிவித்தனர். எனவே, இவ் வன்பர்களின் விருப்பதிற் கிணங்க ஸ்ரீ சுவாமிகள் 1980ல் ஆயிரம் வெண்பாக்களுக்கும் பொழிப்புரை வழங்கினார். இவற்றைப் பாடல்களுடன் சேர்த்துப் படிக்கும் போது இவை பொழிப்புரையாக மட்டும் அப்படியே அமையாமல், பாடல்களில் உள்ள சில நுட்பக் கருத்துக்கள் நன்கு விரிக்கப்பட்டும் புது விளக்கம் கொடுக்கப்பட்டும் இவ் வசன வடிவம் உருப்பெற்றிருப்பதை அறியலாம். பின்னர் அமெரிக்காவில் உள்ள அன்பரின் விருப்பத்திற்கிணங்க இவ் வெண்பாக்கள் அனைத்தையும் ஸ்ரீ சுவாமிகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க ஆரம்பித்து, 14-3-1985 அன்று, அதாவது தாம் விதேக கைவல்யம் அடைய மூன்று தினங்களுக்கு முன்னதாக, அதைப் பூர்த்தி செய்தார். இந்த ஆங்கில மொழிபெயர்ப்பில் ஸ்ரீ சுவாமிகளால் தரப்பட்டுள்ள சிற்சில புதிய விளக்கங்களையும் இப்போது அச்சிடப்படுகின்ற தமிழ் நூலில் ஆங்காங்கே தக்க இடங்களில் சேர்த்துக் கொண்டுள்ளோம்.

ஒருசமயம் ஸ்ரீ சுவாமிகள் “ 'ஸ்ரீ ரமண வழி' என்னும் நூல் ஒரு preliminary textBook (பூர்வாங்க அடிப்படை நூல்) ஆக அமைந்திருக்க, 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ர'மோ ஓர் advanced textbook (மேல்நிலை விளக்க நூல்) ஆக அமைந்துள்ளது” என்று கூறினார். அதாவது, 'ஸ்ரீ ரமண வழி' எனும் நூல் மனிதகுலத்திற்கு இருக்க வேண்டியதான குறிக்கோளைத் தெளிவாக விளக்கி அதை அடைவதற்கான வழிமுறையைக் காட்டுகிறது. ஆனால் நாம் அவ்வாறு அவ்வழியில் செல்ல முயற்சிகள் மேற்கொள்ளும் போது, நம்முடைய ஜீவ முயற்சியின் வரம்புகளை உணரும் நிலைக்கு வந்து உலகினின்றும் நம் மனத்தைத் திருப்பி ஆன்மாபிமுகமாக்கி மனத்தின் உற்பத்தி ஸ்தானத்தில் அதை நிரந்தரமாக ஒடுக்கும் முயற்சியில் மீண்டும் மீண்டும் தோல்வியையே காண நேரலாம். உலகத்தின்மீது நமக்கு ஏற்படும் வைராக்கியமும், ஆன்மாவை அடைய நமக்குள்ள அன்பும் போதிய அளவு இல்லாது குறைபாடுடையதாக இருப்பதே இத் தோல்வி களுக்குக் காரணம். நம்முடைய வைராக்கியமும் ஸ்வாத்ம பக்தியும் பக்குவப்பட்டு முழுமையடையும் வரை குருவருள் நாம் நம் ஆன்ம அறிவை அடையும் முயற்சியில் தோல்வியையே மீண்டும் மீண்டும் அனுபவிக்குமாறு செய்து கொண்டிருக்கும். ஏனென்றால், அகங்கார நாசமே சர்வ சாதனைகளின் நோக்கமுமாகையால், சாதகன் ஒருவனது முயற்சியில் வெற்றிபோல் தோன்றுமாயின், 'நான் தவம் செய்து வெற்றி பெற்றேன்' என்ற வடிவிலாவது அவ்வகங்காரம் மீண்டும் துளிர்த்து மிக வலிவுடன் கிளம்பிவிட இடமேற்பட்டுவிடு மன்றோ? அவ்வாறாகாதபடி தடுக்கும் இறைவனது கருணையினாலேயே அவனது நன் முயற்சிகளிலுங்கூடப் பலமுறை தோல்வி யுண்டு பண்ணப் படுகின்றது என்று அறிவுறுத்துகின்றார். இதையேஸ்ரீ பகவான்:

ஆண்டான் திருவருளால் அன்றித்தன் ஆள்வினையால்
ஈண்டாது சித்தி யெனஅறிவித்(து) - ஆண்டான்செய்
தண்ணருளை நாடத் தயாரிப்பே தோல்வியுண்டு
பண்ணு முயற்சிப் பயன்.

என்ற 'குருவாசகக் கோவை' 794வது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

நாம் ஒரு ஜீவனாக இருந்து வரும் வரையிலும் நம் கவனம் முழுவதையும் ஆன்மாவை நோக்கியே திருப்பி, விழிப்பு நிலை முழுவதிலும் ஒவ்வொரு கணமும் அகந்தையின் எழுச்சியை மறுத்தும் நாம் தொடர்ந்து பழகியே தீர வேண்டும். நம்முடைய முயற்சிகள் தோல்வியைத் தழுவும் போது, மேற்கண்ட பாடலில் கூறியவாறு குருவின் அருளுதவியை நாடிப் பிரார்த்திக்க வேண்டும். ' ஸ்ரீ ரமண வழி' என்னும் நூலை ஆழ்ந்து கற்று, அதைக் கற்றவாறு நிற்கப் பழகும் போது, அம் முயற்சியில் தேக்கமும் தோல்வியும் ஏற்பட்டால், அக் கட்டத்தில் அந் நிலையில் ஸ்ரீ பகவானின் அருளுதவியை நாடிப் பிரார்த்திக்கும் வழியையும் முறையையும் போதிக்கும் உயர்நிலை போதனை நூலாக 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' நமக்குக் கைகொடுத்து உதவுகிறது.

கர்த்துருத்துவ புத்தி நம்மிடம் இருக்கும் வரையிலும் ஆன்ம சாதனையிலும் முயற்சி தேவையே. சுவடு ஏதுமின்றி நம்முடைய ஜீவ வியக்தி ஞானாக்கினியால் முழுதும் எரித்து அழிக்கப்படாதவரை நம்மிடமிருந்து வரும் கர்த்ருத்துவ புத்தி முற்றும் நீங்காது. வெளிப் பொருள்களில் சுகம் நாடும் லௌகீகன் ஒருவனிடம் கர்த்துருத்துவ புத்தி பலமாக இருக்கும். எனவே, அவன் தன் ஆசைகளைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்காக சதா புறமுகத்திலேயே முயன்று உழைத்துக்கொண் டிருப்பான். இத்தகைய ஒருவன் குருவருளால் சுகம் வெளிப் பொருள்களில் இல்லை யென்றும், தன் இதயத்தில்தான் உள்ளது என்றும் உணர்ந்து ஆன்மசாதனை செய்யத் துவங்கும்போது, தான் இதுகாறும் போன்றே ஆன்ம விசாரத்தையும் அதே பாவத்தோடு தொடங்குவான். எனவே ஆன்ம சாதன தொடக்க காலத்தில் மனத்தை ஆன்மாவில் மூழ்க வைப்பதில் அடைகின்ற முன்னேற்றம் பெரும்பாலும் தன் முயற்சியின் வல்லமையையே பொறுத்தது என்று நினைப்பது இத்தகைய மனத்தின் சுபாவமாகும். இத்தகைய முயற்சி இன்றியமையாததே; ஏனெனில், மனத்தை ஆன்மாவில் மூழ்கடிக்கும் முயற்சியில் ஈடுபடுத்தாவிட்டால், அது முன் போலவே சுகத்தை நாடி வெளியில் அலையும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருக்கும். கர்த்துருத்துவ பாவம் இருக்கும் வரையில் மனம் ஏதாவதொரு வழியில் சென்று முயன்றுகொண்டே தானிருக்குமே யன்றி சும்மா இருக்க அதனால் இயலாது. இருப்பினும், நாம் ஆன்ம விசாரம், ஆன்ம சமர்ப்பணம் என்ற இரு வழிகளிலும் முயன்று முயன்று முன்னேற முன்னேற நம்முடைய கர்த்ருத்துவ புத்தி தேய்ந்து தேய்ந்து மெலிய, நமக்கும் மேலாக ஒரு திருவருட்சக்தி இருப்பதையும் அதுவே நம்மினும் மேலாக நம்பொருட்டு வேலை செய்துகொண்டிருப்பதையும், உண்மையில் அதுவே நாம் செய்வதாக நினைத்துக்கொண்டிருக்கின்ற இந்தச் சாதனைகளை யெல்லாம் நம்மைச் செய்யத் தூண்டிக் கொண்டிருப்பதையும் மேன்மேலும் தெளிவாகக் கண்டு கொள்கிறோம். இவ்வாறு தெளிவு பெற்ற மனம் தன் சொந்த முயற்சியை விட திருவருட்சக்தியையே மேன்மேலும் சார்ந்து நிற்கப் பழகுகிறது.

"ஜீவன் தான் இழந்த அப் பரிபூரண நிலையை விரும்பி (இச்சை) ஆனால் அதை அடையத் தன் அசக்தத்தை உணர்ந்து (ஞானம்), அதனால் ஆண்டவனின் உதவியை நாடி (கிரியை)ப் பிரார்த்திக்கும் போது, அவனது அற்ப இச்சா-கிரியா-ஞானச் சுதந்திரமானது தக்க வழியில், அளவில், நன்கு செயற்படுத்தப்படுவதால், தன்னை நம்பிப் பிரார்த்திக்கும் அந்த பக்தன், 'நான்' என்னும் அகந்தையைச் சமர்ப்பிக்கும் உள்முயற்சியில் அவனது சரணாகதியைச் சம்பூரணமாக்கி வைக்கத் தேவையான அபரிமிதமான அருட் சக்தியாக அப் பரம்பொருளின் எல்லையற்ற திருவருளுதவி தாமே பொழியப்படுகின்றது" என்று ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் 'ஸ்ரீ ரமண வழி' என்ற நூலில் கூறியுள்ளார்.

இவ்வாறு திருவருட்சக்தி பேருதவியாகத் தாமே பொழியத் தொடங்கியதும், இதுவரை சுருண்டு கட்டுண்டு கிடந்த பாய்மரம் கட்டு விட்டு விரிந்துகொள்ளவும், படகு நீரில் விரைந்து ஓடுவதைப் போன்று சாதகனின் ஆன்ம முன்னேற்றம் விரைவுபடுகிறது. வீசத் தொடங்கிய காற்றின் உதவியாலேயே வேறு முயற்சியின்றி படகு நீரில் விரைந்து செல்வதே போன்று, சாதகனும் தன்னுடைய முயற்சி என்பதாக யாதொன்றுமின்றி வீசும் அருட்சக்தியின் வேகத்தாலேயே தான் நடத்திச் செல்லப்படுவதை உணர்கிறான். இதுவரை, குட்டிக் குரங்கு தாய்க் குரங்கைப் பற்றி நின்றது போன்று, தானே முயன்று தன்னாட்டச் சாதனை செய்து வந்தது போக இப்போது குட்டிப் பூனை தாய்ப் பூனையால் கவ்வி எடுத்துச் செல்லப்படுவது போன்று தன்னுடைய தோற்ற மாத்திர முயற்சியுமின்றி, அருளுதவியி னாலேயே தன் மனம் ஆன்மாவின்பால் ஆன்மாவாலேயே கவர்ந்து செல்லப்படுவதை உணர்கிறான். இவ்விதம் அவனிடம் இருந்து வந்த மர்க்கடபாவம் மார்ச்சாலபாவமாக மாற்றமடைகிறது.

கணக்கற்ற எண்ணங்களின் ஒரு தொகுதிக்கே 'மனம்' என்ற பெயர் பொதுவாக வழங்கப்படுகிறதாயினும், உண்மையில் தன்மை யொருமை யுணர்வாகிய 'நான்' என்னும் எண்ணமே 'மனம்' என்ற சொல்லுக்கு மூலமும் முக்கியமுமான பொருள். இத்தன்மையுணர் வாகிய 'நான்' என்னும் முதலெண்ணம் 'நான்' என்பதும் 'இன்னார்' என்பதுமான இரு அம்சங்களைக் கொண்டதாகும். 'நான்' என்னும் அம்சத்தை ஒளியுரு என்றும், 'இன்னார்' என்னும் அம்சத்தை நிழலுரு என்றும் சொல்லலாம். ஒளி, நிழல் ஆகிய இரு அம்சங்களும் சேர்ந்ததே மனத்தின் உருவாகும். இந்த மனம் சுயவொளியற்றதோர் ஜடம். சூரியனது ஒளியைப் பெற்று பிரதிபலித்துப் பிரகாசிக்கும் சந்திரனைப் போல சுயமே அறிவற்ற மனமானது தானாகவே யாதொன்றையும் அறிய இயலாதது. அதற்கு அறிவொளி வருவது ஆன்மாவிடமிருந்தே. ஆன்மாவே சுயம்பிரகாசப் பொருள். மனத்திற்கு ஆன்மாவிடமிருந்து ஒளி வரும்போது மட்டுமே, மனம் ஓர் அறிவுச் சக்தியாக விளங்கும். மற்றபடி அது ஒரு அறிவேயல்ல; வெறும் ஜடமே.

மேலும் இப்பிரதிபலன ஒளியாகிய மனத்தின் சுபாவம் அன்னியப்

பொருள்களை அறிவதே. அன்னியப் பொருள்களை அறிவதைத் தவிர, மனம் தன்னையேதான் அறிய உதவாது — பயன்படாது. தன்னை அறியக்கூடியது சுயம்பிரகாசமான ஆன்மாவே; பிரதிபலன ஒளியாகிய மனமல்ல. இந்த மனமானது தனது பிரதிபலன ஒளியைக் கொண்டு அவ்வொளி வரும் மூலமான ஆன்மாவை அறிவதற்கென்று உள்ளே திரும்புமாயின், அது தன் உருவை யிழந்து தன் மூலத்தில் (ஆன்மாவில்) ஒடுங்கிவிடும். இதுவே அதன் சுபாவம்.

சூரிய ஒளியை வாங்கிப் பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடியை சூரியனை நோக்கி அப் பிரதிபலன ஒளி சூரியனின் மேலேயே படும்படித் திருப்பினோமானால், அப்போது அப் பிரதிபலன ஒளியின் இருப்பையே காண முடிவதில்லை. அது தன் மூல ஒளியிற் பதிந்து உருவழிந்து விடுகிறது. மற்ற பொருள்களைக் கண்ணாடியிலிருந்து வந்த சூரியனின் பிரதிபலன ஒளியைக் கொண்டு பார்த்தோம். ஆனால் அப் பிரதிபலன ஒளி சூரியன் மேல் திருப்பப்பட்டிருக்கிற போது அப் பிரதிபலன ஒளியைக் கொண்டா சூரியனைக் காண்கிறோம்? பிற பொருள்களைக் காணப் பயன்பட்ட பிரதிபலன ஒளி சூரியனையே காணப் பயன்படுவதில்லை; சூரியன் சுயம்பிரகாசமானதால் அதைக் காண பிரதிபலன ஒளி தேவையற்றதாகிறது. இதே போன்று மனத்தின் அறிவொளியைக் கொண்டு மற்ற முன்னிலை படர்க்கைப் பொருள்களை அறிகிறோமானாலும், அம் மனத்திற்கு ஒளிதரும் ஆன்மாவை மனத்தைக்கொண்டு அறிவதில்லை; அறியவும் முடியாது. ஆன்மாவை அறிய இம் மனவொளி பயன்படாது; அது அவசியமுமில்லை. இதனையே ஸ்ரீ பகவான் “மதியினை உள்ளே மடக்கிப் பதியில் பதித்திடுதல் அன்றி, பதியை மதியால் மதித்திடுதல் எங்ஙன்? ” என்று கேட்கிறார். இதற்கான விளக்கவுரையை ஸ்ரீ சுவாமிகள் கீழ்வருமாறு தருகிறார்:

“ 'மதியினை உள்ளே மடக்கி' என்றது கண்ணாடியைச் சூரியன்மேல் பிரதிபலனம் படும்படித் திருப்புதலைப் போன்றதே; அதாவது, 'பிற பொருள்களை அறியும் நான் என்ற தன்மையுணர்வு எது? என்ற நோக்கத்துடன் தனது கவன சக்தியைப் பிற பொருள்களை நாடாதபடி தடுத்துத் தன்மீது ஊன்றுவதாம். 'பதியில் பதித்திடுதல்' என்றது தன் இருப்புணர்வில் மட்டும் கவனமுள்ளவனாய், நிற்கும் நிஷ்டை. 'இப்படிச் செய்வதாலுங்கூட, ஆன்மாவை அறிய மனத்தால் (மனிதனால்) முடியுமா?' என்றால், அதுவும் முடியாததே. அங்கு நிகழ்வது என்ன? தன்னை நோக்கித் திரும்பிய மனம் என்னும் பிரதிபலன அறிவு இருப்பற்று மறைகிறது. அது ஆன்மாவை அறிகிறதில்லை; தானே அழிகிறது. இதுவே அகந்தை நாசம் அல்லது மனோநாசம் எனப்படும் மோக்ஷமாகும்... ஆன்மீக சாதனைகளோ, யோகங்களோ செய்து மனிதனாகிய இம்மனம் ஆன்மாவையோ கடவுளையோ காண்பதோ, அடைவதோ, அறிவதோ போன்ற காரியம் ஒன்றும் முடிவில் நடப்பதே இல்லை. அம் முயற்சியிற் கிளம்பி முனைந்த முமுட்சுத்துவ மனம் (அது ஸத் விருத்தி யாகையால்) உண்மைப் பொருளில் கரைந்துபோய், அவ்வுண்மை ( பிரம்மம்) மட்டும் எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கிறது. இக் கருத்தை:

தகுந்த விசாரமெனும் சாதனை செய்துள்ளே
புகுந்தறிந்தே னென்றுரைத்தால் பொய்யாம் — அகந்தை
யறிவதொன்று மில்லை; அழிவதது! தன்னை
யறிவ தருணா சலம்.

என்று 'ஸ்ரீ அருணாசல வெண்பா'வின் 39வது பாடல் குறிப்பிடுகிறது."

மனம் அல்லது அகந்தையானது உண்மையான சுயம் பிரகாசமான அறிவல்ல வென்றும், அது ஆன்மாவிலிருந்து ஒளி வருகிற போது மட்டும் இயங்கக் கூடிய ஒரு போலி அறிவு சக்தி என்றும் மேலே கண்டோம்; அகந்தைக்கு ஆன்மாவின் அறிவொளி தூக்கம், மூர்ச்சை, மரணம் போன்ற சமயங்களில் வருவதில்லை. அப்போது மனம் செயல் படுவதில்லை. எனவே அகந்தைக்கு ஆன்மாவின் அறிவொளி வருவது அகந்தையின் இஷ்டத்தில் இல்லை; அது ஆன்மாவாகிய இறைவனால் அனுமதிக்கப்படும் போது மட்டுமே வருவது. ஆன்மாவினால் வழங்கப்பட்ட இந்த அறிவொளியை வைத்துத் தான் அகந்தை புறமுகத்திலும் சரி அகமுகத்திலும் சரி தொழில்படவோ சாதனை செய்யவோ முடியும். இதனால்தான் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பர் ஆன்றோர்.

தனக்கு ஆன்மாவிடமிருந்து அறிவொளி வந்ததும் இயங்க ஆரம்பிக்கின்ற அகந்தை தானே ஒரு அறிவு சக்தி என எண்ணிக்கொண்டும், அதனால் 'நான் செய்கிறேன்' என்ற கர்த்துருத்துவ புத்தியோடு அவ் வகந்தையாகிய ஜீவன் செயல்படுகிறான். இதுஎவ்வாறு உள்ளதெனில், தன்னையும் கோபுரமே தாங்கிக்கொண்டிருக்க, அந்தக் கோபுத்திலுள்ள ஒரு பதுமை தானே அக் கோபுரத்தைத் தாங்குவதாக நினைப்பது போன்றதாகும். இவ்வாறு அவன் கர்த்ருத்துவ புத்தியோடு தொழிற்படும் போது பற்பல பிறவிகளிலும் தான் அடைந்த ஏமாற்றங்களாலும், துயரங்களாலும், இன்னல்களாலும், தான் விரும்பியவற்றை யெல்லாம் விரும்பியவாறு செய்ய இயலாது போவதாலும் அவனது கர்த்துருத்துவ புத்திக்குப் பலமான அடி பலமுறை கிடைக்கவே, அவன் தனது அறிவு சக்தியின் வரம்புகளைக் காணவும் தனக்கும் மேலான ஈசுவர சக்தியை உணரவும் ஆரம்பிக்கின்றான்.

ஒன்றை நினைக்கின்அது ஒழிந்திட்டு ஒன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் — ஒன்று
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்.

- ஔவையார்.

இவ்வாறு கடவுள் சிந்தனை பெற்றவன் ஸ்ரீ பகவான் வழிக்கு வந்து ஆன்ம விசார மார்க்கத்தைக் கைக்கொண்டு சாதனை செய்யும்போது, தனது கர்த்துருத்துவ புத்திக்குக் காரணமான பிரதிபலன் அறிவொளியின் துணை கொண்டே சாதனையைத் தொடங்க வேண்டியிருக்கிறது. மனத்திற்கு வருகின்ற ஒளியைக் கொண்டே பிறவற்றை நாடாமல் ஒளியின் மூலத்தை நாடுகிறான். இவ்வாறு பிறவற்றை நாடாத வைராக்கியத்தோடும் தன்னை நாடும் ஸ்வாத்ம பக்தியோடும் அவன் செய்யும் சாதனையினால் என்ன

நிகழ்கிறது என்றால், நாம் ஏற்கனவே கண்டவாறு மனத்தின் நிழல் பகுதி, ஒளிப் பகுதி ஆகிய இரு அம்சங்களும் பெரிய மாற்றத்துக்கு உட்படுகின்றன. அதாவது, பிறவற்றை நாடாத வைராக்கியத்தால் நிழல் பகுதி தேயவும், தன்னை நாடும் ஸ்வாத்ம பக்தியால் ஒளிப் பகுதி மேலும் ஒளி சிறக்கவும் ஆரம்பிக்கிறது. ஒளிப்பகுதி அதன் மூலமாகிய ஆன்ம ஒளியை நோக்கி நெருங்க நெருங்க, நிழல் பகுதியின் கழற்சியும், ஒளிப் பகுதியின் ஒளிச் சிறப்பும் ஓங்குகின்றன. இதனால்தான் தன் மூலத்தை நோக்கி திரும்பிய மனம் மனமே அல்ல, அது ஆன்மாவே ஆகிறது என்று சொல்லப்படுகிறது. "நானாரோவென நாடிடும் போதே நாடுவோன் மயம் நீ ஞானேசா" (ஸ்ரீ ரமண கீதம்); அதாவது, சென்று சென்று அணு அணுவாய்த் தேய்வதால் மனத்தின் ஜீவபோதம் தேய்ந்து தேய்ந்து அதற்கு ஆன்ம சுபாவம் கூடுகிறது. இதையே "மனம் மனமெனுங் கல்லில் மறு அறக் கடைய நின் அருளொளி மேவும்" என்று ஸ்ரீ பகவான் 'ஸ்ரீ அருணாசல அஷ்டகத்'தில் கூறுகிறார்.

மனத்தின் சுபாவமாகிய கர்த்துருத்துவ புத்தி கழல கழல அருளொளி மேவுகிறது. அந் நிலையில் சாதகன் தன்னுடைய கர்த்துருத்துவ புத்தியின் கழற்சியை உணர்வதால், 'செய்பவன் நானல்ல; சிற்சக்தியே' என்பதைக் காண்கிறான். கர்த்துருத்துவ புத்தியின் கழற்சியே உண்மையில் அகந்தையின் கழற்சியாவதால், இதுவரை தன்னுடைய தன்மை யுணர்வாக நடித்து வந்த அகந்தையின் போலித் தன்மையைக் கண்டுபிடித்துக் கொள்கிறான். ஆயினும் ஆன்மாவின் சந்நிதானத்தில் இருக்கும்போது மட்டும் இது கழல்வதையும், அச் சந்நிதானத்தை நீங்கி புறமுகப்படும் போது அது மீண்டும் வந்து தொத்திக்கொள்வதையும், அதுவே தன்னை இத்தனை காலமும் கெடுத்துக்கொண்டு வந்த திருடன் என்றும் கண்டு கொள்கிறான். தன்னை இதுகாறும் அச்சுறுத்தியும் வாட்டியும் வந்த புறமுகம் துன்பமே நிறைந்தது என்றும், அகமுகமே — சந்நிதிவாழ்வே — நிரந்தர இன்பம் என்றும் அவன் காண்பதாலும், அச் சந்நிதியிலேயே என்றும் நிஷ்டையுற்று நிற்க முடியாதபடி தனது பழைய வாசனைகள் தன்னைப் புறமுகத்தில் இழுப்பதையும் காண்கிறான். புறமுகத்திற் செல்ல நடுநடுங்கி, அருளின் சந்நிதியில் வாழ்வே மிக மிக விரும்பி அவன் தாளா தவிப்பால் வாடுகிறான். தான் ஜீவனாகப் பிரமித்து கர்த்துருத்துவ புத்தியோடு செயல்பட ஆரம்பித்த அந்த ஆதி நாட்களிலிருந்தே தன்னை இமைப்போதும் நீங்காது தன்னுடனேயே இருந்து தன்னைப் புறமுகத்தில் ஆட்டுவித்து வந்ததும் அருட்சக்தியே என்றும், அச் சக்தியே தன்னைத் தக்க காலத்தில் தடுத்து மடக்கி உண்முகமாக இப்போது திருப்பியுள்ளது என்றும், தானே இதுவரை செய்து வந்த சாதனைகளை யெல்லாம் அதுவே தன்னைச் செய்ய வைத்தது என்றும், இவ்வாறு இதுவரை மறைமுகமாக செயல்பட்ட அவ் வருட்கரமே இனி நேரிடையாகவே வெளிப்பட்டு தன்னை ஆன்மாவிடம் நடத்திச் சென்று அதனில் நிரந்தரமாக இணைக்க வேண்டும் என்றும், இக்காரியம் அவ் வருட்சக்தி யினால்தான் சாத்தியம் என்றும், தான் ஒரு பொருள் அல்லவென்றும் தனது பயனின்மையையும் கண்டு செயல் ஓய்கிறான்.

என்னாலே நடக்க வேண்டு
மென்றெண்ணி யெதுவுஞ் செய்யேல்;
நின்னாலொன் றாவ தில்லை;
நீயொரு பொருளு மில்லை!
முன்னாலே யிதனை யோர்ந்து
முனைப்பெலாந் தவிர்வா யாகில்
தன்னாலே யாவு மாகும்;
சாந்தியுங் குறைவு றாதே

- சாதனை சாரம் —248.

அருளின் மாட்சியை உணர்ந்ததும், அவன் உள்ளத்தில் அருளின்பால் அன்பு பொங்குகிறது. "அருளும் வேணுமே; அன்பு பூணுமே; இன்பு தோணுமே" என்று ஸ்ரீ பகவான் 'ஆன்மவித்தைக் கீர்த்தனத்'தில் கூறியவாறு அவ் வருளுக்காக அன்பு பூணுகிறான். அருளின் மேலிட்ட அன்பினால் அழன்மெழுகாய் உருகுகிறான். 'நான் உன்னை நினையாத போதும், நீ என்னை நினைந்து உதவி வந்தனையே! என்னினும் என் பொருட்டாய் கவலை மிகக் கொண்டனையே! என்னே உன் அவ்வியாஜக் கருணைத் திறன்!' என்று அருளை நினைந்து நினைந்து, வியந்து வியந்து, அதனைப் போற்றி போற்றி அழுதும் தொழுதும், விம்மி வெதிர்த்தும் அவ் வருளுதவியையே மேலும் மேலும் வேண்டி நிற்கின்றான். 'அனாதி காலமாகத் தன்னிடம் குவிந்திருந்த வாசனைகளை யெல்லாம் எழுப்பி அழித்து நிர்மூலமாக்கும் அருட் போராட்டத்தில் நீயே வெற்றி பெற முடியும்; எனவே அப் போராட்டத்தைச் சீக்கிரம் முடித்து நீயே விரைவில் வெற்றிவாகை சூடுவாயாக' என்றும் வேண்டுகின்றான்.

நிழலற்ற ஞானஒளி நீயோங்கி லன்றி
நிழலொத்த நானோங்கி நிற்பேன் — அழலொத்த
பாழ்முயற்சி யுற்றுப் பரிதவிப்பேன்; உன்னுள்நான்
ஆழ்முயற்சி கொள்ள அருள்." (251)

தானே இதுவரை ஆன்மாவைப் பற்றி நின்று சாதனை செய்து வந்ததாக நினைத்த சாதகன் ஆன்மாதான் தன்னைப் பற்றிக்கொண்டு தன்னை உள்ளே உள்ளே இழுக்கிறது என்றும் உணர்ந்து வியப்புறுகிறான். இந் நிலையில் அவனது மர்க்கடபாவம் மாறி மார்ச்சாலபாவம் அவனை ஆட்கொள்கிறது. அகந்தையாகிய தன்னை ஆன்மாவாகிய வேங்கைப்புலி கவ்விக் கொண்டுள்ளதையும் உணருகிறான். இனி தான் செய்ய வேண்டியதாக யாதொரு சாதனையும் தோற்றமாத்திரமாகவும் இல்லை என்றும், அப் புலிவாயினின்றும் திமிறி வெளிப்பட முயலாது அப்படியே அடங்கிக் கிட ந்து அதற்கு ஊணாகவேண்டியதே இனி நடந்தேற வேண்டியது என்றும் அறிகிறான்.

இறையுனை நினையும் எண்ணமே நண்ணா
எனையுன தருட்கயிற் றால்ஈர்த்(து)
இறையுயி ரின்றிக் கொன்றிட நின்றாய்
என்குறை யியற்றினன் ஏழை
இறையினிக் குறையென் குற்றுயிர் ஆக்கி
எனைவதைத் திடல்எதற்(கு) இங்ஙன்
இறைவனாம் அருணா சலஎண(ம்) முடித்தே
எகனா வாழிநீ டூழி.

[ (பொழிப்புரை: தலைவனாகிய அருணாசலா! கடவுளாகிய உன்னை நினைப்பது என்ற எண்ணமே கொள்ளாத என்னை உன்னுடைய அருளாகிய கயிற்றால் கட்டி இழுத்து வந்து, 'ஈசுவரன்-ஜீவன்' என்ற பேதமில்லாமல் போகும்படி கொல்வதற்கு நிற்கிறாயே! இப்படி என்னை ( ஒரேயடியாக முற்றும் கொன்றுவிடாமல்) குற்றுயிராகும்படி அரைகுறையாகக் கொன்று சித்திரவதை செய்வது எதற்காகவோ? ஏழையாகிய நான் உனக்கு என்ன தவறு செய்துவிட்டேன்? (என்னை முற்றும் அழிக்க) இனிமேல் கொஞ்சமும் தடை என்ன இருக்கிறது? உன் எண்ணத்தைப் பூர்த்தி செய்து (அதாவது, இறை உயிர் இன்றி முற்றிலும் என்னைக் கொன்று ) நீ ஒருவனாகவே வாழ்ந்து போவாயாக!) ]— ஸ்ரீ அருணாசல பதிகம் — 3

எனவே தீனருள் தீனனாய், 'அருளரசே, நன்னிதியே, ஞானநடத்தரசே, என்னுரிமை நாயகனே' என்று வனைந்து வனைந்து ஏத்துகிறான். 'சக்தியிலேன், உன்னைச் சரணடைகின்றேன்' எனக் கைகூப்பி, நெஞ்சங் கனிந்து, கரைந்துருகி, மெய்வேர்த்து, உரோமம் விதிர்ப்பெய்தி, 'என்னை ஆண்டு நடத்தியருள்க' என்றும், 'என்னை உண்டு உய்வித்தருள்க; உன்னில் இருத்தி யருள்க' என்றும் இறைஞ்சுகிறான்.

இன்றுவ ரும்சில நாளில்வ ரும்திரு
வின்னருள்' என்(று)எளியேன்
நின்றழ நீநெடு நாளதை நீட்ட
நினைந்தனை யோ அறியேன்
கன்றுவ ரும்வழி யைக்கற வைப்பசு
காப்பது கண்டிலையோ?
நன்றிது! நானுனக் கின்றிது கூறுதல்
நாடில் நகைப்பலவோ?

'தகதக' வென்றொளி வீசுமுன் தண்ணுரு
தாரணி வாழ்பொழுதே
முகமுக மோடொரு நோக்கிலெ னக்கருள்
மூட்டிய மெய்முறையால்
மிகமிக சீக்கிர மேயொளி ஞானமும்
வீசுமெ னத்தெளிந்தேன்;
'அகமக' மென்றருள் ஆடல் புரிந்திட
அன்பொ டெழுந்தருளே! [1]

என்று வேண்டுகிறான்.

புறமுகத்தை நோக்கித் திரும்பக் கிஞ்சித்தும் இச்சையற்றும், அதே சமயத்தில் உண்முகத்தில் மேற்கொண்டு ஆன்மாவை நெருங்க சற்றும் சக்தியற்றும் மனம் நின்று செயலற்று ஓய்ந்து கிடக்கிறது. மனம் இவ்வாறு செயலோய்ந்து அடங்க அடங்க ஆன்மாவின்மீது அன்பு அபரிமிதமாகப் பொங்கி எழுகிறது. கங்கு கரையற்றுப் பொங்கியெழும் அவ்வன்பின் விளைவை, வேகத்தை, தாளா தாபத்தை, ஏக்கத்தை, துடிதுடிப்பை, உருக்கத்தை, ஆற்றாமையை,

[1] 'ஸ்ரீ ரமண கீதம்' என்னும் நூலில் பக்கம் 17ஐக் காண்க.

இருப்பின் மீதுற்ற பெரு விருப்பத்தை, உயரிய உணர்வுகளைப் பிரார்த்தனை வடிவாக்கி ஆயிரம் பாக்களாக ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் வடித்துள்ளார். ஊற்றாய்ப் பெருகி தடாகமாய் நிறைந்து நிற்கும் அவ் வன்புத் தடாகத்தில் பிரார்த்தனைப் பூக்களாக அழகும் மணமும் மிக்க ஆயிரம் பூக்கள் மலர்ந்து, அவை யாவும் அன்று பிரம்ம விஷ்ணுக்களின் அகந்தையை அழித்து ஞானம் நல்க எழுந்தருளிய அருணாசலமே தாமாகவும், அகத் தொளிரும் ஆன்மாபால் இவ் வுலகத் தோரை ஆற்றுப்படுத்தவே இங்குடலம் ஏற்றுத் திகழ்ந்த ரமண பெருமானின் அருட்பாதங்களுக்கு அர்ச்சிக்கப்படுகின்றன.

அருள் வேட்கையும் அருள் விழைவும் உணர்ச்சிப் பிழம்புகளாகவும் உன்னத உணர்வுகளாகவும் வெளிப்படும் அழகைப் பின்வரும் 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ர'ப் பாடல்களில் காணலாம்:

கைகூப்பி நெஞ்சங் கனிந்து கரைந்துருகி
மெய்வேர்த்(து) உரோமம் விதிர்ப்பெய்தி — செய்வேற்றுக்
கன்மமறந்(து) உன் கழலே காமுறுநிட் டானுபவச்
சென்மமா என்வாழ்வைச் செய். (318)

ஏதொன்றும் இல்லை இனிஇயற்ற என்வலத்தால்
சூதொன்றும் என்னளவில் சூழற்க — வாதொன்றுஞ்
செய்யற்க தீனருள் தீனன்எனை மாயையில்
வையற்க இன்னும் மறித்து. (751)

நடுங்குகின்ற(து) உள்ளம்இந்த நானிலத்தைக் காண
ஒடுங்குகின்ற(து) அந்தோ உடலும் — கொடுங்குணமே
கொண்டவர்க்கே இந்தக் குவலயம்ஓர் இன்பநிலம்;
தொண்டருக்(கு)எங் கேஇடம்நீ சொல். (808)

நம்பிக்கை வைத்து ரமண திருவடியே
கும்பிட்டு வாழுங் கொடியேற்குத் — தம்பற்றே
தந்(து)அயலைச் சாராத் தவமூட்டி நின்னடியே
வந்தடையச் செய்வாய் வலிந்து. (832)

அகந்தை விடத்தினுக்(கு) அஞ்சும்நான் அந்த
அகந்தையின் வேறோ? அலனேல் — அகந்தையே
தன்னழிவுக் காஉன் தயவைநா டும்போ(து)இங்(கு)
என்னதடை சொல்வாய் இனி? (865)

எல்லோரும் கைவிடலாம் எந்தாய் எனைஎனினும்
பொல்லான் எனநீ புறந்தள்ளின் — நல்லோர்
வியப்பர் 'இறைதன் விதிமீறி னான்'என்(று)
அயர்ப்பர் அதனால் அருள். (886)

பக்குவமின் றேனும் பணிந்தோர் அகந்தைஇன்று
தற்கொலைக்குச் சம்மதித்துன் தாளடைந்து — மிக்கவிழைந்(து)
'என்னைக்கொன்(று) உண்'என்(று) இரந்தும் எழாயேல்ஏச்(சு)
உன்னைப்பே சாதோ உலகு? (890)

நம்பிக் கிடந்து ரமண திருவடியில்
கும்பிட் (டு) அழுது குறைகூறித் — தம்பற்(று)
அகலுவதை யன்றிஒன்றும் ஆசியேன் தோற்றால்
புகலரும்இ ழுக்(கு)உன் புகழ்க்கு (896)

உண்டருள்க என்(று)ஓர் உலர்ந்தசோற் றுப்பருக்கை
விண்டழுது கெஞ்ச விருந்துண்டோன் — கண்டு
சிரிக்கின்றாற்போன்(று)உளதுஇச் சேயேனுன் பால்கை
விரித்தழநீ வேண்டா விதம். (904)

காட்டித் தராவிடில்நான் காணகில்லேன் என்(று) உனிடம்
ஏட்டில் எதிரில் இசைத்தழுதும் — நாட்டம்அகங்
கொண்டிழுத்துப் போயுள் குவிக்கா(து) அலையவிட்டுக்
கண்டிருப்ப தோகருணைக் கண்? (910)

இட்டத்தால் என்மேல் இரக்கத்தால் கொண்டுவந்தாய்
கட்டத்தால் இன்று கசக்குகின்றாய் — தொட்டுத்தான்
ஏற்றஅரு ளாளஎனக்(கு) இன்பமோ துன்பமோநீ
ஆற்றுவதென் பாக்யம் அறி. (942)

நின்னையன்றி நானோர் நிழல்போலும் மீந்திருக்க
என்ன விதத்தும் இனிவேண்டேன் — உன்னருளால்
பொய்யுருவாம் நானொருகால் போதரவோர் ஏதுவின்றி
மெய்யுருவன் நீயே விளங்கு. (951)

பூரணத்தை யன்றிப் பொருள்ஒன்று மில்லாத
காரணத்தால் நான்என் அகங் காரத்தைச் — சீரணித்து
நீயொன்றே யன்றி நிழல்போலும் நான் எனும்அப்
பேயொன்(று) எழாமல் பிறங்கு. (952)

அன்னியமா ஓர்சடமும் அன்னியமா ஓர் இடமும்
மன்னாத பேரொளியாம் வஸ்துவுக்கு — எந்நாளும்
எங்கேனும் ஓர்நிழல்உண் டாகுமோ? உன்னையன்றி
எங்கேநான்? ஏதென் இருப்பு? (953)

மற்றொன் றிலாதசுப மங்கலப் பூரணமா
உற்(று)எங்கும் ஓங்கும் உயர்பொருளே — மற்றிங்(கு)
ஒருவன்நான் என்றே உதிக்கின்றான்; போலி
யுருவனைக் கொன்றுநீ யோங்கு. (954)

அன்னியம்ஒன் றில்லா அருளாட்சிக் குள்ஒருவன்
என்னதுநான் என்றிங்(கு) எழுகின்றான் — என்னவிது!
நீயிருப்ப(து) அன்றி நினைப்புருவ நான்எனும்ஓர்
நோயிருக்க லாமோ நுவல். (955)

எல்லாம் மறைந்துண்மை ஏகநா னேமிஞ்சி
இல்லாத(து) உள்ள(து) எனும்இருமை — புல்லா(து)
இருந்த(து) இருந்தவா றேயாக என்றும்
இருந்தா யிருந்தருள் வாய். (959)

இவ்வாறெல்லாம் நெஞ்சங் கரைந்து பாடியபின் குருவருள் மூண்டு தன்னை முற்றிலும் ஆட்கொள்வதையும், அதன்பின் தனக்கு நேர்ந்ததென்ன என்றறியாததையும், இத்தகைய அருளின் தன்மையை வியந்தும், அருளின் தன்மையை யறிந்து தேற்றமுறுவதையும் பின்வருமாறு ஸ்ரீ சுவாமிகள் பாடுகின்றார்:

இறந்தேனா இன்னும் இருந்தேனா உன்னை
மறந்தேனா ஒன்றும் அறியேன் — திறந்துவாய்
என்னைப் பிடித்த இறைவேங்கை யேரமணா
பின்னை நடந்ததென்ன பேசு. (960)

நானற்ற வாழ்வே ரமணவாழ்(வு) என்றஉண்மை
மேல்நற் றவர்க்கும் விளங்காமல் — ஊனிற்பல்
ஊழிவாழ்(வு) அட்டசித்தி உம்பர்வாழ்(வு) ஆசிப்பர்;
ஏழைக்(கு) உணர்த்தினை;என் னே! (961)

ஈதே சிறப்பென்(று)உன் இன்னருளால் என்புத்தி
மீதே யமர்ந்துவலை வீசினோய் — யாதேனுஞ்
சற்றும் பிறழாச் சரணா கதியென்னுள்
முற்றும் படிநீ முடி. (962)

வல்லோன்எல் லாமறிவோன் வாலருளோன் வண்மையோன்
நல்லோன் குருரமண நாதன்எனக்(கு) — எல்லோரின்
இன்றியமை யாதவனா யிங்கிறைவன் நீயுள்ளாய்
என்றே கவலை யிலேன். (979)

தமது சற்குருவாகிய ஸ்ரீ ரமண பிரானின் அருளுக்கு தமது அகந்தை முற்றிலும் ஊனாகி ஒழிந்து நானற்ற ரமண வாழ்வு சித்தித்ததையும், இனி தான் செய்யவேண்டியதாக யாதொன்று மில்லை யென்றும், இப்போது இருப்பவன் நானல்ல, நீயே என்று வியந்தும் களித்தும் பாடுகின்றார்:

அண்டங் களைக்குவித்தொன் றாக்கினதி னும்பெரிதா
மண்டுதவஞ் செய்துநீ வைத்திருக்க — உண்டு
பிதிரார்ச் சிதம்புசிக்கும் பிள்ளையெனக்(கு) ஏன்ஓர்
விதிநொந் திடத்தவத்தால் வெந்து? (984)

விட்டதொன்றும் இல்லை! விடவேண் டியதுமில்லை!
கட்டமொன்றும்இல்லை! களிப்பில்லை! நட்டமொன்றும்
நண்ணியதே யில்லை!யொரு நானில்லை! ஸ்ரீ ரமணப்
புண்ணியனே நீயணைக்கும் போது. (985)

எவ்வா(று)உதிக்கின்றேன் என்(று)என் உதிப்பில்நான்
செவ்வே கவனஞ் செலுத்துங்கால் — அவ்வா(று)
உதித்திருந்து நோக்குநான் ஓய்கின்றேன் நீயே!
அதிக்கிரமித்(து) உள்ளாய்மற் றங்கு. (986)

மூவவத்தை முப்பாழே முக்குணமும் முப்பாழே
மூவுலகும் முப்பாழுன் முன்னிலையில் — ஆவியாய்
அப்பாழுக்(கு) அப்பாலாய் ஆன்மபரி பூரணமாய்
எப்போது நீயே யிருப்பு. (988)

ஸ்ரீ பகவானின் அருளையே முழுவதும் நம்பி அதற்காகவே பிரார்த்திக்கும் ஞானப் பிரார்த்தனையாக 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' அமைந்திருந்தாலும், இப் பாக்கள் பலவும் ஞானக் கருத்துக்களின் செறிவும் ஆன்மசாதனைக்குத் தேவையான அரிய உளவுகளும் நிறைந்தனவாய் இருப்பதைக் கீழ்வரும் பாடல்களிலிருந்து காணலாம்.

துக்கமயமான இந்த சொப்பனம் போன்ற நனவுலக வாழ்வு தோன்றுவதற்கு மூலகாரணம் ஆன்ம மறதி என்னும் அஞ்ஞானத் தூக்கமே.

கனவுக்கு மூலமோர் காட சுழுத்தி
நனவுக்கு மூலம்அஞ் ஞானம்... (500)

தோன்றி யிருந்துமறை சொப்பனமே யாஞ்சீவ
நான்தெரிந் துள்ள நனவுலகை — ஈன்றமுன்
தன்மறப்புத் தூக்கந் தவிர எழுப்பிவைத்தல்
நின்மர(பு)அன் றோ?நீ நிகழ்த்து. (892)

ஆகவே, இவ் வான்ம மறதி என்னும் தூக்கத்தை நீக்கி சுகமயமான ஞான விழிப்பை யடைய வழியாவது 'நான் யார்?' என்று தன்னுள்ளே நாடும் ஆன்மநாட்டம் ஒன்றே யாகும்.

விழிப்புக்(கு) இணையாக வேறொன்று மில்லை
பழிப்புக் கிடம்சொப் பனங்கள் — விழிப்படைய
நானாரென் றுள்நாடும் நாட்டமே தான்;எழுப்பு
வோனாங் குருநீ யுணர்த்து. (386)

இத் தன்னாட்டமே மானிடராய்ப் பிறந்தோர் செய்யத் தக்க காரியங்கள் யாவற்றுள்ளும் உயர்ந்த நல்ல காரியமாகும்.

விலகா(து) அகநாட்டம் மேவும்ஈ தொன்றே
உலகோர் தொழிலுள் உயர்ந்த — நலவினை... (534)

உத்தமத்துள் உத்தமம்தன் னுள்ஊன்றி நிற்ப(து)... (346)

ஏனைய யோக நெறிகளெல்லாம் இத் தன்னாட்ட நெறியில் அடக்கம்.

நான்உதி யாதிருக்கும் நாட்டமே நல்லநெறி;
ஏனைய வெல்லாம் இதில் அடக்கம்... (239)

தன்னை நாடி தன்னில் அன்போடு ஒடுங்கி நிற்பதே உண்மையான குருபக்தி யாகும்.

எந்தமுன்னி லைப்பொருளு மீசனல்ல வுள்வெளியில்
தொந்தவுணர் வுற்றென்முன் தோன்றுபவை; — சொந்த
சொரூபத்தி லன்பாலுள் தோய்வதன்றோ உண்மை
குருபக்தி? யஃதே கொடு. (349)

என்னிருப்பி லேயே யெழாதிருக்கும் பேராசை
உன்னிடத்திற் கொள்ளும் உயர்பக்தி... (848)

நினைப்பெழுஉ மூலம் நினைக்கப் படலே
நினைத்தழுவ நெஞ்சங்கொள் நேசம்; — தனைத்துருவி
நானா ரெவண்இருந்தென் நாட்டமுமாம்; இப்பக்தி
ஞானா சிரியனே நல்கு. (342)

என்னைக் கருதி எழுச்சியற ஆழ்ந்துநான்
உன்னில் கரைந்தொழிவ(து) ஒன்றன்றோ — உன்னையான்
உண்மையாய் என்றும் உபாசித்தல்? அந்தர்முகத்
திண்மையே பக்தித் திறம். (353)

இவ் வுண்மையான பக்தி யுபாசனையை விட்டு விட்டு, சொந்தமாக உள்ளே யுள்ள ஆண்டவனை வெளியேற்றி வேற்றானைப் போன்று ஒரு தெய்வமாக்கி உபாசிப்ப தெல்லாம் தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் குற்றமாகும்.

உண்மையாம் உன்னில் இரண்டற ஒன்றிநிற்குந்
திண்மையே பக்தித் திறமன்றிக் — கண்மயங்கி
வேற்றானா உன்னை வெளியேற்றி நான்தவிப்ப(து)
ஆற்றேன்; அருளால் அணை. (352)

அறிவொன்றே தானான அத்துவித மோனச்
செறிவன்றோ நீரமண தேவே — பிறவொன்றா
உன்னைக் கருதி உபாசிப்ப(து) எல்லாம்நான்
என்னைஏ மாற்றும் இழுக்கு. (354)

தான் தன்னைப் பற்பல அன்னியப் பொருள்களாகக் காண்பதற்கு மூலகாரணமாவது இந்த ஸ்வாத்ம பக்தியினின்றும் நழுவுவதே யாகும்.

காணுலகப் பொய்ப்படத்திற் காண்போன்நா னேமுதலில்
தோணுகின்ற பொய்ப்படம்;இத் தோற்றத்துக்(கு) —ஆணிவேர்
தன்ஆன்ம நேயம் தவிர்வதன்றோ? சற்குருநீ
என் ஆன்மா என்னை இழு. (240)

இவ்வன்னியப் பொருள்களைக் காண்போனாகிய மனம் ஆன்மாவைக் காண்பதற்காக உயர்ந்த பிரியம் ( ஸ்வாத்ம பக்தி) கொள்ளுமாயின், அப்போதே அது அழிந்துவிடும்.

உள்ளத்தில் 'நான்'என்னும் உண்மைப் பொருளாக
விள்ளற்(கு) இலாது விளங்கும்உனைக் — கள்ளப்
பழிமனம் காணப் பரபக்தி உற்றால்
அழிவுறுமாம்; அஃதே அருள். (348)

மனம் இவ்வாறு ஸ்வாத்ம பக்தியோடு 'நான் யார்?' எனத் தன்னை நாடுவதால் 'நான்' எழுச்சி அழிந்தபிறகு, அந்நிலையில் மிஞ்சி நின்றிருப்போன் 'நான் நான்' என்று விளங்கிக்கொண்டிருக்கும் ஆன்மாவாகிய சற்குருவாகுமே தவிர 'நான் இன்னார்' என்ற தனிவியக்தி யல்ல.

நானார் எனத்தன்னை நாடுவதால் நானெழுச்சி
தானாகக் குன்றித் தலைசாய — நீ'நான் நான்'
என்றிருப்ப தன்றிநான் எங்கிருப்பேன்? அந்நிலையில்
நின்றிருப்போன் நான்அன்று நீ. (987)

பகிர்முகப்பட்டு விஷயங்களில் ஓடியலையும் மனத்தை உள்ளே இழுத்து ஆன்மாவில் நிறுத்துவது பலவந்தம் போலவும் மிகவும் உழைப்புள்ளது

போலவும் காணப்படுவது ஏன்? ஸ்வாத்ம பக்தியின் குறைபாடுதான் இதற்குக் காரணமாகும்.

ஓடும் மனத்தையிழுத் துள்ளே நிறுத்தவெகு
பாடுளதாய்க் காணப் படுவதேன்? — ஈடிலாப்
பேரன்பு வெள்ளப் பெருக்கெடுத்தால் உன்பதத்தில்
வேறெங்கு செல்லும் விரைந்து? (322)

உன்னிடத்தில் அன்பிருந்தால் ஓடுமோ நெஞ்சம்? உள்ளே
தன்னிடத்(து)இ ருந்தாலும் தாவாதாம்: அன்னியத்தின்
பற்றினால் அன்றோ பறக்கின்ற(து)? இவ்வலைச்சல்
அற்றிருக்க உன்னன்(பு) அருள். (325)

மெய்யான பக்திகொண்டால் மீண்டும் உனைவிடுத்தோர்
பொய்யாய் எழுந்தகன்று போவேனோ? ஐயாஎன்
போலிப் பணிவின் புரைநீக்கி மெய்யன்பு
பாலித்(து) அருள்க பதம். (326)

மனத்தை அது போகும் போக்கில் விட்டுப்பார்த்தால், அது ஐம்புலன்களின் வழியே அலைய, அதன் பகிர்முக வலிமையே அதிகரிக்கின்றதல்லாமல் வேகம் குறைந்து அது உண்முகமாக எப்போதும் திரும்புவதேயில்லை.

போகவிட்டுப் பார்க்கின் புலன்வலிமை விஞ்சலன்றி
வேகமற்(று)என் றென்றும்அது மீள்வதில்லை: — ஆகசற்றும்
ஐம்புலன்வாய்ப் போகா(து) அகமுகமா மீளஅருள்
எம்பெருமான் செய்க இனி. (144)

எண்ணங்களாக அலைந்த இந்த மனம் சலனமற்று நின்றால், அதுவே ஆன்மாவாகின்றது.

அலைந்தால் அலை;சற்(று) அமைந்தால்அஃ(து) ஆழி;
அலைந்தமனம் நின்றால்அஃ(து) ஆன்மா: — குலைந்தமைதி
ஏனோ அலைவேன்? இறைவா நினதருளால்
யானோய வைத்(து)அதுவாய் ஆக்கு. (428)

ஆனால் 'நான்' என்று முதலில் எழுந்த மனமே ஓர் எண்ண மாகையால், அது எழுந்த பிறகு எண்ணாமல் சும்மா நிற்பது அம் மனத்தால் முடியாத காரியமாகும்.

எழுந்தநா னேமுதலில் எண்ணமத னாலே
எழுந்தபின் எண்ணாமல் நில்லேன் — விழுந்(து)எனது
மூலமாம் உன்னில் முடிவுறலே எண்ணம்அற்ற
சீலமாம்; ஈதெனக்குச் செய். (206)

ஆகையால், எண்ண வடிவமான மனம் ஆன்மாவை விட்டுவேறாக எழுந்து வெளிமுகப்பட்ட பிறகு, அம் மனத்தால் செய்யப்படும் எந்த முயற்சியும் குருவருள் வந்தாலன்றி எந்த நன்மையையும் செய்துவிட முடியாது.

கானலென்றும் பொய்யாம் கனவென்றும் இவ்வுலகம்
ஈனம்என்றும் எண்ணிஎண்ணி என்னபயன்? — நான் எழுந்த

பின்செய் முயற்சியுன்றன் பேரருள்வந் தாலன்றி
என்செய்யு(ம்) நன்மை எனக்கு? (686)

மனத்தால் செய்யப்படும் எந்த நன்முயற்சியும் ஏக அகண்ட இயல்பு இல்லாததாகையால், அத்தகைய முயற்சியால் மட்டும் ஏக அகண்ட சகஜமாக நிற்கும் ஆன்ம நிஷ்டையை யடைய முடியாது.

தேக மனத்தால் செய்யப்படூஉம் நற்றவங்கள்
ஏக அகண்ட இயல்பிலதால் — ஏக
சகஜமா நிற்கும்அகச் சார்பாம் தவமே
தகவிலே னும்பெறநீ தா. (429)

ஆகையால் நன் முயற்சியைச் செய்யக் கிளம்பிய மனம் ஒடுங்கி நிற்கும் சகஜாத்ம நிஷ்டையை ஏக அகண்ட இயல்பான சற்குருவின் அருட்சக்தியினாலேயே நாம் அடைய முடியும். எனவே நாம் நம் உண்மை சொரூபத்தை உணருவதற்கு முதலில் நடந்தேற வேண்டிய காரியமாவது சற்குருவே நம்மிடம் கருணை செய்ய வேண்டிய காரியமே யாகும்.

தன்சொரூபம் காணா வரையில் சகமயலை
என்செயினும் நீத்தல் இயலாதால் — முன்செய்யுங்
காரியம்என் பாற்பெய் கருணையாம் நின்கடனே
ஓரஎன் உண்மை யுரு. (868)

ஆன்ம சாதனைக்கு முதலில் வேண்டியதாகிய உண்மையான முமுட்சுத்துவமுங்கூட குருவருளால்தான் ஏற்பட முடியும்.

உண்மை முமுட்சுத்வம் உ ண்டாக நின்னருளின்
வண்மையே வேண்டுமன்றி மற்றென்றன் — உண்மையிலா
நெஞ்சத்தால் ஆகுமோ நித்தியா நித்தியத்தைக்
கொஞ்சத்துங் கண்(டு)உட் கொள. (676)

நின்னருளால் அன்றோ நினையடைய வேண்டுமென்ற
பொன்அனைய ஆவல் பொருந்தினேன்? — என்அறிவுக்(கு)
ஏது நலம்தீமை ஏ(து)என்(று) அறியவலி
ஏ(து)உண்(டு) இறைவா இசை. (216)

நம்மை உய்விக்க எண்ணங் கொண்டு ஸ்ரீ பகவான் அவனருளாலே அவன் தாளில் நம்மைச் சேர்த்த பிறகு, நாம் இனி நமது செயலாகச் செய்வதற்கு என்ன இருக்கின்றது? செய்ய வேண்டியவை எல்லாவற்றையும் ஸ்ரீ பகவானே நேரடியாகச் செய்தருள்வார்.

செய்வதற்(கு) என்னுண்(டு) எனது செயலாக
உய்வதற்(கு) என்றே உனதடியில் — இவ்வடியேன்
சீரார் திருவருளால் சேர்க்கப்பட் டானபின்பு?
நேரா எலாம்நீ நிகழ்த்து. (219)

குருவருளே எல்லாவற்றையும் நடத்தி வந்திருக்கின்றது என்பதையும் தற்போதும் நடத்திக்கொண்டிருக்கின்றது என்பதையும் மறந்துவிட்டு 'நானே செய்தேன்' என்று பெருமை கொள்ளும் கர்த்துருத்துவ புத்திக்குச் சிறிதும் இடம் கொடாது இருப்பதே நாம் செய்யவேண்டிய காரியமாகும்.

உன்னிடமே வந்தேன்;வே றோரிடமும் சேரேன்'என்(று)
என்னதுபோல் இச்செயல்கள் எண்ணுகின்றேன்; — உன்னருளால்
நீயேஉள் நின்று நிகழ்த்தி யெனைக்கொணர்கின்
றாய்!ஏன் மறந்தேன் அதை? (966)

குருவருளுதவி யில்லாமல் அஞ்ஞான இருள்மயமான மனத்தின் சக்தியா நம்மை முக்திக்கு அழைத்துச் செல்லும் ஒரு துணையாகிவிட முடியும்? முடியாது.

செய்யும் கருணைத் திருவருள்வந் தாலன்றி
உய்யும் வழியெனக்கிங்(கு) ஒன்றில்லை; பொய்யும்
புரையும் நிறைந்தஇருள் புந்திவலி யோமெய்த்
துரியநிலை சேர்க்கும் துணை? (685)

ஈடெடுப்பில் லாநின் இயல்பாம் கருணையே
வீடளிக்க வேண்டுமன்றி வீணனேன் — பீடைமனப்
பக்குவமோ சாதனையோ பற்றாத தால் கருணை
மிக்கருள்க என்பால் விரைந்து. (687)

இவ்வாறு குருவருளின் உதவியாலன்றி நாம் எந்தத் தவத்தையும் செய்ய முடியாது என்ற பேருண்மையை நன்றாக உணர்ந்து, குருவருளின் உதவியைக் கொண்டே 'உன் திருவருளே வேண்டும்' என்று கெஞ்சி உருகி அழுது நிற்பதைத் தவிர நாம் வேறு என்ன செய்ய முடியும்?

அருளால் அலாமல் அனுபூதி ஞானத்
தெருளார்வ தில்லை சிறிதும்; — குருநாத
நின்னருளை வேண்டி நினைந்துருகி நிற்பதலால்
என்னசெய வல்லேன் யான்? (688)

நின்னருளால் அன்றி நிகழ்த்தவொணார் எத்தவமும்
மன்னுயிர்கள் என்றபெரும் வாய்மையுணர்ந்(து) —உன்னருளால்
உன்னருளைக் கெஞ்சி உருகித் துதிக்கலுற்ற
என்னுரையும் ஏற்க இரங்கு. (994)

திருவருளால் அன்றி ஒன்றும் செய்வதற்கில் லாது
குருபதமே நற்றுணையாய்க் கூவி — உருகஎனை
வைத்தாய்; அதுவும் உண்மை வாரமின்றி வாயளவாய்ப்
பொய்த்தாய் விடாது புர. (332)

மனம் மிக ஆழ்ந்து தடித்த அஞ்ஞான இருளையுடையதே யானாலும், குருவருள்ஒளி அருளப்பெற்றால், அக்கணத்திலேயே அவ் வஞ்ஞான இருள் அடியோடு நீங்கி விடுகிறது.

சூழ்ந்தடர்ந்த தொல்லிருளா னாலும் சுடரொன்று
போந்ததுமே தான்பறந்து போகாதோ? — ஆழ்ந்து
தடித்தஅறி யாமையிருள் சார்ந்தேனா னாலும்
நொடிப்பொழுதில் ஞானமுற நோக்கு. (602)

குருவருள் ஒளியாலன்றி அஞ்ஞான இருள்மயமான மனத்தாற் செய்யப்படும் எந்த முயற்சியாலும் அவ் வஞ்ஞான இருளை நீக்கமுடியாது.

பல்லூழி காலம் பயிற்றிடினும் என்சித்தம்
நல்லாம் எனச்சிறிதும் நம்புகில்லேன்! — வல்லாய்
இருளுக்(கு) ஒளிபோல் இமைப்போதில் போம்நின்
அருளுக்கு முன்என் அழுக்கு! (683)

குருவருள் சக்தியால் நடத்தமுடியாத காரியம் யாதொன்றுமே யில்லை.

இயலாமை ஏதொன்றும் இல்லானென்(று) உன்றன்
செயலாண்மை நன்கறிவேன் தேவா — மயலால்நான்
எத்துணைதான் பின்பட்(டு)இருந்தாலும் நின்னருட்கை
வைத்திடில்மெய் வாழ்வுற்றேன் வா. (586)

அருள்மோனத் தால்உனக்கிங்(கு) ஆகாத துண்டோ?
கருவா தனையேன் கருத்தும் — வெருவா(து)
அகமுகமா காதோ அருள்மோனத் தாலே
பகிர்முகமாம் பாசம் அகன்று? (612)

குருவருள் செயலை எதிர்த்து எதுவும் தடுக்க முடியாது; என்னுடைய அஞ்ஞான இருளும் அதற்கு ஒரு தடையாகிவிட முடியாது. நீ சங்கற்பித்தால் அதைத் தடுக்க ஏழுலகுக்கும் வலிமை கிடையாது.

அருள்வலியால் ஆட்டி அமைக்களன் நெஞ்சத்(து)
இருள்வலிஎன் னேஓர் எதிர்ப்போ? — மருள்வலிய
ஈனர்தம் நெஞ்சும் இறைரமணா நின்னருளால்
ஞானமுறும் நாளிந்த நாள். (597)

இலகு சுதந்தரன்நீ எற்கருள எண்ணில்
விலகுமன்றி எத்தடையும் மேவா(து); — உலகங்கள்
ஏழுக்கும் இல்லை எதிர்க்கவலி; என்னுடைய
ஊழுக்கும் இல்லை உரன். (587)

ஆகவே, குருவருள் நம்மை ஆன்மாவோடு அணைத்தால், அப்படிக் கூடாதார்தான் யாருண்டு?

காட்டினால் காண்கின்றேன்; கண்புதைத்தால் தூங்குகின்றேன்;
பாட்டினால் பாடுவித்தால் பாடுகின்றேன்; — ஆட்டினால்
ஆடாதார் ஆருண்(டு)? அருளால் அகத்தணைத்தால்
கூடார்ஆர் உண்டு?நீ கூறு. (584)

குருவருளால் எல்லாக் காரியமும் பிறழாமல் இயங்கி வந்து கொண்டிருக்க, யாதொரு சக்தியுமில்லாத இம் மனம் மட்டுமே திருவருளாணைக்கு அடங்காமற் போய்விட முடியுமோ? முடியாது.

கோடானு கோடியண்ட கோளங்கள் உன்னருளால்
கோடா(து) இயங்கிவந்து கொண்டிருக்கக் — கோடான
அற்பனேன் புத்தி அருளுக்(கு) அடங்காதோ?
நிற்பிப்பாய் உன்வசம்என் நெஞ்சு. (543)

சருவசக்தி யானஎன்றன் தாயும்எதிர் ஆடாள்;
நிருவிகற்பம் உற்றொடுங்கி நிற்பாள்! — அருணசைலத்

தந்தையே நீவிரும்பிற் சக்தியொன்றும் இல்லாஎன்
சிந்தையோ நிற்காது? செப்பு. (544)

எனவே. மனம் முற்றும் அடங்கி பேரமைதி யடைய இருவழிகளே உண்டு: ஒன்றுகுருவின் அருளை முழுதும் நம்பி அதனையே முற்றிலும் சார்ந்து நின்று. யாதொரு முயற்சியும் செய்ய எழுச்சி யடையாது மனம் ஓய்வது; இரண்டாவது தன்னை 'நான் யார்?' என்று ஆராய்வது.

நேராய் உனைநம்பும் நெஞ்சும் தனையாரென்(று)
ஆராயும் நெஞ்சும் அமைதியுறும் — ஓராறும்
ஊன்றிக் கடைப்பிடியா(து) ஓரப்புல் மேய்வேன்பால்
ஈன்றகடன் உண்டே இரங்கு. (508)

மேலே கண்ட பாடல்கள் சாதனைக்குச் சகாயமான பல உளவுகளை அளிக்க, ஆறுதலும், வாக்குறுதியும், உற்சாகமும் சாதகனுக்கு அளிக்கும் செய்திகளைக் கொண்டனவாயுள்ளன கீழ்வருவன போன்ற பாடல்கள்:

அருளரசே அண்ணா மலைரமணா நீநின்
திருவுளத்தால் எண்ணிவிட்டால் தீயோர் — இருள்வினையின்
வாசனையும் எவ்வாறோ மாறி மகாபுனித
நேசதவம் செய்தல் நிசம். (970)

பாரம் தரிக்கும் பலமுடையாய்! உன்புகலாச்
சேரன்பர் எத்தனைதான் தீவினைமேற் — கூரினும்உன்
தண்ணோக்கால் தாபந் தணிந்து பகிர்முகம்நீத்(து)
உள்நோக்(கு) உறாரோ உணர்ந்து? (599)

அசகாய சூர அருளரசே! என்னைத்
தசகோடி மாயைதடுத் தாலும் — மசகதம்போல்
ஒட்டி யகற்றிஎனை உன்கைப்பிடிக்குள்இட்டுக்
கூட்டிவரக் கூடுமன்றோ? கூட்டு. (605)

அருள்தந் திரம்உன்பால் ஆயிரம் கோடி
இருக்கின்ற(து) என்னைஉய்விக்க — இருட் பிலத்துள்
எத்தனைதான் ஆழ்ந்த எளியேனான் ஆயினுமென்
பத்தமனம் எல்லாம் பறித்து. (548)

இன்னும் பல முக்கியமான ரமணோபதேசக் கருத்துக்கள் 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' முழுவதும் விரவிக் கிடக்கின்றன. கீழ்வரும் சில பாக்களை இதற்கு உதாரணமாய்க் காணலாம்.

ஆன்மாவை விட்டு மனம் வெளிப்படும் நேரத்தைத் தவிர மற்றப் பொழுதில் அன்னியப் பொருள்கள் இருக்கின்றன என்ற அறிவு உண்டாகாது.

தன்னின் அகலும் தருணத்தில் அல்லாமல்
அன்னியங்கள் உண்டென்(ற) அறிவுளதோ? — முன்னிலைமேல்
கூரும் விருத்தி குவிந்திதயம் விட்டகலா(து)
ஆரும் படிநீ யருள். (205)

ஆகவே இவ் வுலகம் மனோமயமனதே; அதாவது, ஐம்புலன்களின் உருவே.

மன்னுலகம் அன்று; மனஉலகம் ஈது;புலன்
தன்னுருவே; ஐம்புலனும் தன்மனமே; — உன்னுமனம்
சித்தின்ஆ பாசஅணுச் சித்தமே; சித்தம்அறுத்(து)
உத்தமா நீஅகமா ஓங்கு. (122)

ஐம்புலன்கள் காட்டிக் கொடுக்கும் இவ் வுலகத் தோற்றமானது தன்னுள்ளே சித்தத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருந்த வாசனைகளின் ஸ்தூல வடிவமே.

கண்வாய்மெய் நாசிசெவி காட்டிக் கொடுப்பதெலாம்
உள்மீந்த சித்தத்(து) உருவடிவென்(று) — எண்ணாது
மெய்யுலகா எண்ணி விரும்பி வெறுத்தழியச்
செய்யுமிதோ நின்னருளின் தீர்ப்பு? (855)

சித்தத்தின் நுட்பத் திரள்வா தனையுலகச்
சித்திரமாய்க் காணல் தெரியாமல் — சத்தியமாய்
இவ்வுலகை எண்ணியதில் இச்சை அனிச்சைகொண்(டு)
எவ்வளவு கெட்டேன் யான்! (732)

எனவே எல்லா வாசனைகளின் மூலமாகிய 'இவ் வுடலே நான்' என்ற அஞ்ஞான அறிவே இவ் வுலகக் காட்சிக்குக் காரணமாகும்.

சித்திரமாத் தோன்றும் செகத்திற்(கு) உடலில்அகம்
புத்தியே காரணம்... (625)

வானாதி தோன்ற மலவுடலாத் தோன்றுமொரு
நான்ஆதி காரணம்... (958)

ஆகையால் 'நான் இத் தேகம்' என்னும் அகந்தையாகிய தான் எழுந்தால் சகலமும் எழும்.

தானொன்(று) எழுந்தால் சகலமுந் தான்எழும்;நான்
ஊனென்(று) எழுவ(து) ஒழித்தருள்வாய்... (200)

எனின் இந்த அகந்தையாகிய 'நான்' எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மையாகவேதான் அன்னிய உணர்வுகளாலாகிய இவ் வுலகமும் அமையும்.

இந்த அகந்தையுண்மை எவ்வாறோ அவ்வாறே
தொந்தங் களின்உண்மை தோன்றுவதால்... (367)

வெளியில் தோன்றும் இவ் வுலகம் இவ்வாறு வெறும் மனக்கற்பனை யாகையால், நம் கவன சக்தி புறமுகப்படுவதை அடியோடு விட்டு ஆன்மாவை நோக்கி நிற்பதே உண்மையான துறவாகும்.

புறமுகம் நீத்த பொழுதேமெய் யான
துறவறம்சித் தித்ததாச் சொல்வேன்; — அறிவறிவித்(து)
அன்னிய ஞானம் அகற்றி அடியேன்வாழ்(வு)
உன்னுடைய தாக உயர்த்து. (356)

உலகோர் புகழிகழை யுன்னுமட்டும் முற்றும்
உலகு துறத்தலொண் ணாது; — விலகியிவை
உள்நோக்கி நிற்பதே உண்மைத் துற(வு); அதற்குன்
கண்ணோக்கம் வைத்திதயம் காட்டு (357)

இவ் வெளி யுலகை முற்றும் துறக்காத வரையிலும் எழக்கூடியதாகிய புகழாசையை ஒழிக்கவேண்டுமாயின், 'இவ் வுடலே நான்' என்ற அகந்தையை ஸ்திரமாக அழித்தல் ஒன்றுதான் வழி யாகும்.

புரையாசை மூன்றுள் புகழாசை மிக்க
உரமாம்; ஒழிக்க உடலில் — திரமாக
நானென்று எழுவோன் நசிப்பித்த லேவழி;நீ
தான்இன்று செய்வாய் தயவு. (168)

ஆன்மாவுக்கு அன்னியமாக எழுந்துள்ள 'நான்' என்னும் அகந்தை இருக்கும் வரையிலும், விருப்பு, வெறுப்பு, பயம் போன்ற விகற்பங்கள் இருந்தேதீரும்.

அன்னியநான் உள்ளவரை அச்சம் விருப்புவெறுப்(பு)
என்னும் விகற்பம் இருந்தாகும்; — உன்னையலால்
யானொன்(று) இலாப்போது யாருக்(கு) இவை?அதனால்
யானென்(று) எழாமை அருள். (208)

என்னைஎவ் வாறோநான் இன்னொன்றாப் பாவிக்கும்
தன்மை யடைந்து தடுமாறி — முன்னுள்ள
என்னையுல காய்வெறுப்பாய் இச்சையாய் அன்னியமாய்
உன்னும்என் மோகம் ஒழி. (376)

நின்னைவிட் டேஅயல்போல் நீங்கும்பொய்ந் நெஞ்சத்தால்
அன்னியமும் அன்னியத்தில் ஆசையுமே — உன்னப்
படுவதன்றோ? நீங்கப் படாதவாறு ஆழ்ந்து
விடுவதென்றோ நின்னருளில் வீழ்ந்து? (204)

நம் இயல்பான ஸ்வாத்மப் பிரியமானது எப்படியோ திரிபு அடையும் போதே, அது பிற பொருள்களின் மேல் ஆசையாகப் பாய்ந்து அவற்றின் மேல் விருப்பு வெறுப்பு என்னும் இரட்டை வடிவாக விபரீதமாகப் பிரிந்துவிட்டது.

இருப்பின் விருப்(பு)எவ் விதமோ திரிந்து
பருப்பொருளின் ஆசையாய்ப் பாய்ந்து — விருப்புவெறுப்(பு)
என்னும் விபரீதம் எய்தியதே! நின்னருளால்
அன்னதைமீட்(டு) உள்ளே அமிழ்த்து. (225)

தன்னிடத்தில் உள்ள தனிப்பிரியம் காரணமாய்
அன்னியங்க ளைத்தேட ஆவலெழும்; — தன்னிடத்தில்
நிற்கும்போது ஆவல் நிகழாத தாலெனையுள்
நிற்கும் படியருள்செய் நீ. (411)

இவ் விருப்பு வெறுப்புகளின் விளைவுகளே சுகமாகவும் துக்கமாகவும் அனுபவிக்கப்படுகின்றன. ஆகையால், 'இவை யாருக்குத்

தோன்றுகின்றனவோ அந்த அகந்தை உண்மையில் உண்டா?' என்று தன்னை நாடும் புத்தியை ஸ்ரீ பகவான் நமக்குக் கொடுப்பாராகில், பிறகு சுகமோ துக்கமோ அனுபவிக்கப்படுமோ?

விருப்பு வெறுப்பின் விளைவுசுக துக்கம்
இருப்பனவாய் இன்மையாய்ப் புத்திக்(கு) — உருப்படன்மேல்;
'நானுண்டா?' என்றுபுத்தி நாடஅருள் வாயேல்பின்
ஏனுண்டு துன்(பு)இன்(பு) எனக்கு. (75)

'நான் இவ் வுடல்' என்று எழும்புகின்ற அகந்தை யெழுச்சியே துக்கத்தின் எழுச்சி யாகையால், துக்க வடிவான அவ் வகந்தையினின்றும் தோன்றும் உலகச் சுகங்களெல்லாங் கூட துக்கமயமே யாகும்.

எழும்பும்நான் துக்க எழுச்சியே; துக்கம்
எழும்பும் எனக்கே; எனாலே! — செழும்பரமா
நிற்கும் அசல நிலையில் திரியாமை
கற்க அருளால் கணி. (104)

தோன்றும் எழுச்சியே துக்கமதால் அஃதினின்றும்
தோன்றுஞ் சுகங்களெலாந் துக்கமே; — தோன்றும்அகம்
ஏன்தோன்றும் ஆயினும்உன் இன்பவசம் ஆக்கிஅந்தத்
தான்தோன்றி தன்னைத் தறி. (166)

'இவ் வுடலே நான்' என்னும் அகந்தை யெழுச்சி யினின்றும் எழுகின்ற எல்லாவித நினைவுகளும் உண்மையான இன்பத்தின் சத்துருக்களே தவிர சிறிதும் சுகந்தருவன வல்ல.

எல்லா நினைவுகளும் இன்பத்தின் சத்துருவே
அல்லால் சுகந்தருவ ஆகாதால் — பொல்லா
எழுச்சியொன்றி னின்றெழுமிவ் வெல்லா நினைவும்
அழித்ததனை உள்ளே அழுத்து. (224)

உள்ளே ஆன்மாவை நாடி யடங்கும் சுகமாகிய லாபத்தைவிட வெளிப் பொருள்களில் ஓடி யுழன்று இந்த மனம் அடைகின்ற இன்பம் என்ன இருக்கின்றது?

ஓடி யுழன்றுமனம் உற்றிடும்இன்பு என்னுளதுஉள்
நாடி யடங்குசுக லாபத்தின்? — பாடிப்
பரவி பணிந்துன் பதவருளே நாடும்
இரவலன் எற்(கு) ஈவாய் இது. (458)

'இந்த உடலும் மனமும் நானல்ல' என்ற உண்மையை அனுபவமாக அறியாமல், நமக்கென்று ஒரு தனி இருப்புணர்வு ('நான் இத் தேகம்' என்ற அகந்தையுணர்வு) தோற்ற மாத்திரமாக இருக்கும் வரையிலும், மனக் குறைகளாகிய துன்பங்கள் சிறிதளவும் நீங்கா.

உடல்மனம்நான் அல்லாத உண்மையுணர்ந் தன்றிக்
கெடல்அரிது துன்பக் கிரந்தி; — உடனடியா
உண்மை உணர்வருளி ஓட்டுவாய் ஆசையச்ச
எண்ணவடி வாம்பேய் இதை. (366)

எனக்கென்(று) இருப்பொன்(று) இருக்குமட் டும் துன்ப
மனக்குறைகள் கொஞ்சமெனும் மாறா; — உனக்(கு)ஊணா
என்னையுண்டு தீர்ப்பா யெனில்பின் மனக்குறையார்க்(கு)
என்னையுண் டாகும்? இலை. (484)

எல்லாவிதப் பற்றுக்களுக்கும் காரணம் பற்றுவதற்குத் தனக்கு அன்னியமானப்பொருள்களின் தோற்றமே. இவ்வன்னியத் தோற்றத்துக்குக் காரணம் 'தேகமே நான்' என்ற மயக்கமே யாகும்.

பற்றறநான் வேண்டுமெனில் பற்றுவதற்(கு) அன்னியமே
யற்றநிலை யெய்தினால் அல்லாமல் — பற்றறுதல்
வாய்க்குமோ? சற்குருநின் வல்லருள்வந்(து) என்பொருட்டா
மாய்க்குமோ தேக மயக்கு? (477)

நமது சற்குரு நாதனாகிய பகவானிடமே இணங்கியிருக்கும் அருள் இணக்கத்தாலன்றி இத்தேகாபிமானம் அழிவுறாது.

உன்னிணக் கத்தால் உடலிணக்கம் ஓயினன்றி
யென்னெனத்தான் செய்வேன் இயலாதேன்? — தன்னிடத்தில்
தானே யிழுத்துச் சலனமறுத்(து) ஆண்டருள்க;
ஏனோ விடுப்பாய் எனை? (237)

ஆகவே நாம் போற்றிப் பேணவேண்டிய நினைவு ஸ்ரீபகவானின் அருட்சீர்பாத நினைவே யாகும்.

ஏது நினைப்பதிலும் எந்தாய் உனதருட்சீர்
பாதம் நினைப்பதுவே பாவனமாம்; — மீதியெலாம்
வீண் நினைப்பே; ஓயா வினைக்குவிப்பே! ஆகலின்நின்
தாள் நினைப்பே மாறாது தா. (529)

நின்னைவிட்டு வேறெந் நினைவாலு மேபுதிதாய்
என்னையுறப் போகும்பே(று) ஏதுமில்லை; — உன்னைவிடா(து)
எண்ணி யிருக்க இசைவாய்;மற் றெல்லாமே
பண்ணுகநின் இச்சைப் படிக்கு. (938)

உன்னையன்றி வேறொன்றும் உன்னாத தால்குறைவாய்
என்ன நடந்துவிடும் இவ்வாழ்வில்? — தன்னைவிடா(து)
என்றும் இருக்க எனக்கருளிச் சித்தமலம்
வென்(று)இதயம் நீவீற் றிரு. (949)

அன்னியத்தை எண்ணல் அவமாகும்; நான்உதிக்கும்
தன்னிடத்தை நாடல் தவமாகும்; — என்னியற்கை
அன்னியத்தின் நீங்கி அகமுகமா தற்பொருட்டே
உன்னடிக்கன்(று) ஈர்த்தோய் உதவு. (639)

ஆகவே. ஸ்ரீ பகவானுடைய ஒப்பற்ற அருளாட்சியின் கீழ் இங்கு எல்லா உலகங்களிலும் ஞாயமே நடக்கின்றது என்று தெரிந்து, அவனுடைய அருள் திருவடிகளை நினைப்பதாகிய ஆன்ம சிந்தனையை விட்டுவிட்டு மறுபடியும் 'இது நல்லது', 'இது கெட்டது' என்றவாறு எந்த நிகழ்ச்சியையும் பற்றித் தீர்ப்புக் கூறி உளறுகின்ற அற்ப சிந்தனை கிளம்பு வதற்குச் சற்றும் இடங் கொடுக்கக் கூடாது.

உலகம்எலாம் உன்றன் ஒருகுடைக்கீழ் ஞாயம்
இலக விளங்கல்உணர்ந்(து) இன்னும் — நலம்அல(து)என்
றேயுளறும் அற்ப விருத்தியெழா(து) என்னையிருத்
தாயெனில்என் செய்வேன் தளர்ந்து? (228)

மனம் ஒன்று இருக்கும் வரையிலும் விருப்பு-வெறுப்பு போன்ற அற்ப விருத்திகள் இருந்தே தீரும். இவ் விருப்பு-வெறுப்புகள் யாவும் நிறைவேறுமாறு குருவருள் அனுமதிக்குமாயின், மனத்தின் புறமுக ஓட்டம் ஒருநாளும் ஓயாது. எனவே, 'என் இச்சைப்படி எதுவும் செய்யற்க; உன் இச்சை வழியே யாவும் நடக்கட்டும்' என்று குருவருளுக்குப் பூரண சுதந்தரம் கொடுத்துவிட வேண்டும்.

அந்தர்முகம் அன்றிவரம் ஆயிரம்நான் கேட்டாலும்
எந்த பிறவரங்கள் என்னையுள்ளே — உந்தியிழுத்(து)
ஓய்வுதரச் சற்றும் உதவா(து) இடையூறாய்
ஆவதோஅஃ(து) ஈயா(து) அருள். (138)

மேலே கண்ட உதாரணங்களைப் போன்று ஸ்ரீ பகவானின் நடைமுறைக் குகந்த உபதேச மொழிகள் பலவும் பிரார்த்தனை வடிவில் இந் நூலில் வெகு நேர்த்தியாக இழை இழையாகப் பின்னிப் புனைந்து வழங்கப்பட்டுள்ளது என்பதற்கு இன்னும் பல உதாரணங்களை எடுத்துக்காட்ட இயலும். ஸ்ரீ சுவாமிகள் ஒரு முறை "ஸ்ரீ ரமண பகவான் நாம் செய்ய வேண்டியதாகப் பணித்திருக்கும் அனைத்தையும் நான் செய்யுமாறு அவரே செய்விக்க வேண்டுமென்று 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' எனும் இந் நூலில் அவரைக் கேட்டுள்ளேன்" என்று கூறினார். இதனால்தான் இப் பாக்களில் 'நான் செய்கிறேன், நான் செய்வேன்' என்று ஒரு இடத்திலும் மறந்தும் கூறப்படாமல், 'என்னை நீயே செய்வித்தருள்க' என்றவாறே பாக்கள் அனைத்தும் பிரார்த்தனை வடிவம் பெற்றுத் திகழ்கின்றன என்பதை வாசகர்கள் படித்து அறிந்துகொள்ளலாம்.

என்னசெயச் சொன்னாலும் செய்வேன்நான்' என்றெழும்பும்
அன்னவர்க்கே நால்யோகம் ஆற்றவைத்தாய்; என்னவொன்றும்
நீயன்றி என்னால் நிகழா(து)என்(று) ஓரவைத்தாய்!
ஈயின்(று) எனக்கஃ(து) எலாம். (525)

அரிய கருத்துக்கள் தக்க உதாரணங்களுடன் நுட்பமான முறையில் விளக்கப்பட்டிருக்கும் அழகையும் பாடல்களில் அடங்கியுள்ள நயத்தையும், வாதாடுவதில் முன்னுரை மிக விரிந்துவிடும். ஆயினும், ஒரு சில உதாரணங்களைக் கீழே காணலாம்:

அடியேன்மேல் நீகொள் அருட்பார்வை யேதான்
அடியேன் அகங்காணும் பார்வை; -- முடிவான
மூலஅருட் பார்வைஎன்மேல் மூண்டருள்வாய் அப்பார்வை
யால்உனையே நான்காண ஆழ்ந்து. (9)

இப் பாடலின் விளக்கக் குறிப்பில் கையாளப்பட்டுள்ள முகம் பார்க்கும் கண்ணாடி உதாரணம் மிக்க பொருள் பொதிந்தது. குருவாகிய ஆன்மாவே நிஜவஸ்து என்றும், ஜீவன் அதன் பிரதிபிம்பமே என்றும், எனவே பிரதிபிம்பமாகிய ஜீவன் நிஜவஸ்துவாகிய ஆன்மாவைப் பார்க்கவேண்டுமானால் ஆன்மா ஜீவனைப் பார்க்கவேண்டும் என்றவாறு கூறும் கண்ணாடி பிரதிபிம்ப உதாரணம் "சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால், அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்ற மணிவாசகப் பெருமானின் புகழ்மிக்க அருள் மொழியின் உண்மையை நன்கு தெளிவுபடுத்துவதாய் அமைந்துள்ளது.

உன்னை நினைப்பதுநான் தன்னை நினைப்பதுவே;
என்னை நினைப்பதெண் ணாமையை; — அன்ன தூஉம்
நானென் றெழாதிருக்கும் நாட்டமே; நாடுவதும்
ஏன்? என் இருப்பே அது! (990)

'கடுகைத் துளைத்து அதனுள் எழுகடலைப் புகுத்தினாற் போன்று' இவ்வொரு வெண்பாவில் தன்னாட்டப் பயிற்சியின் மாண்பு, தன்னாட்டத்தின் ஆரம்பம், நடு, முடிவு ஆகிய வழிமுறை, உளவுகள், ரகசியங்கள் யாவும் அடங்கியுள்ள அழகைக் காணலாம்.

கர்த்துருத்துவ புத்தியோடு செய்கின்ற சாதனை முயற்சியால் மாயையினின்றும் மீள இயலாது என்பது அழகிய உதாரணத்துடன் கீழ்வரும் பாடலில் விளக்கப்படுகிறது:

ஏறுவதாய் மேலேநான் எண்ணிக்கொண்(டு)இன்னும்இன்னும்
சேறடியி லேயழுந்திச் சிக்குகின்றேன்... (279)

வாதாடுவதிலுள்ள சதுரப்பாட்டை பின் வரும் பாடல்களில் காணலாம்:

கடமை கடந்த கடவுள் உனக்கோர்
கடமை விதிக்கக் கடவேன்!... (507)

மண்பொன் பணந்தொடுதல் மாத்திரந் தான்கடனோ?
கண்தொட்ட தென்னைக் கடனன்றோ?... (512)

சமான மிலாரமண சற்குருவே யானும்
சமானமிலேன் கீழ்மைத் தரத்தில்! -- புமானன்றி
யாராலும் ஆகா(து) அடிக்கசடேன் புன்மையெலாம்
வேறொ(டு) அறுத்தருள வேறு. (579)

மறைவினில்நீ நின்றுமன வாலியுடன் என்னை
அறைகூவிப் போர்செயவைத் தாயே! — இறைவா

அருட் கணைஏ வாமல் அதிகாலந் தாழ்த்தின்
உருக்குலைவேன் அந்தோ உதவு. (618)

ஆற்றாமை யால்தான் அலர்த்துவையோ? பாமலர்வாய்
ஊற்றா உவகையினால் ஓடாதோ? — ஈற்றாள்
அடித்தால்தான் அம்மாஎன் பேனோ மதலை?
பிடித்தணைத்தால் பேசேனோ பின்? (918)

கெஞ்சும்செம் சொற்கள்இனிக் கிட்டா விதம்தமிழில்
பஞ்சம்உண் டாம்வரையில் பாடிவிட்டேன்! —உய்ஞ்சவைத்த
பின்துதிக்கும் சொற்களே பேரளவில் மிஞ்சின:உன்
இன்பளித்துப்பாடவைப்ப(து) என்று? (922)

ஆண்டவன், குரு, ஆன்மா, அருள், திருவடி ஆகியவை சொற்களால் வேறாகத் தோன்றினும் முடிவில் ஒரே பொருளேயாகும் (அதாவது, சப்த பேதமே யன்றி அர்த்த பேதமன்று). ஆண்டவனாகிய அருணாசலமும், குருவாகிய ஸ்ரீ ரமண பகவானும், அனைவர் இதயத்திலும் 'நான் நான்' என்று விளங்கிக்கொண்டிருக்கும் ஆன்மாவும், அதன் சக்தியாகிய அருளும் 'போதலற்ற, ஒன்றைப் பொருந்தலற்ற, மற்றொன்றா யாதலற்ற, சற்றும் அலுக்கலற்ற, சாதலற்ற, ஏதுக்கும் சற்றும் எழுச்சியற்ற இருப்பாம் பாத'முமாகிய அந்த ஒரு முழுமுதற் பொருளே 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ர'மாகிய ஆயிரம் பாக்களுக்கும் பாட்டுடைத்தலைவனாக விளங்குவதை வாசகர்கள் கண்டு கொள்ளலாம்.

ஒரு பளிங்குக் கண்ணாடி தன் அண்மையுற்ற பொருள்களின் நிறத்தையே வாங்கிப் பிரதிபலிக்கும்; சிவப்பு பூவை வைத்தால் சிவப்பு நிறமும், மஞ்சள் பூவை வைத்தால் மஞ்சள் நிறமுமே அதில் பிரதிபலிக்கும். ஆனால், மாணிக்கமோ தன் அண்மையுற்ற பொருள்களின் வண்ணத்தைப் பிரதிபலிக்காமல் தன்னிறத்தையே அதன்மேல் பாய்ச்சும். இதுவே மாணிக்கத்தின் மகத்துவம். இதே போன்று 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ர'மாகிய இவ் வாயிரம் பாக்களையும் ஆழ்ந்து படித்து தினமும் ஓதிவந்தால், அவர்தம் மனப்பாங்கு எத்தரத்ததாயினும், எவ் வகைப்பட்டதாயினும் அவர்கள் உள்ளத்தை யெல்லாம் தன் வயப்படுத்தி தன் மயமாக்கும் ஆற்றல் வாய்ந்த மாணிக்கப் பரல்களாக இவ் வாயிரம் பாக்களும் ஒளிர்கின்றன என்று கூறி இத்துடன் இம் முன்னுரையை முடிக்கிறோம்.

ஸ்ரீ பகவான் ரமணர்
திருஅருணைப் பிரவேச நன்னாள்
1-9-2017

அருணாசலரமண புக் டிரஸ்ட்
திருவண்ணாமலை

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய



# ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்

# என்னும்

# ஞானப் பிரார்த்தனை

## ஸ்ரீ ரமண
## சற்குரு வணக்கம்

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

சீர்மைநிறை நன்மனமுஞ் செயல்சொல்லி
லமைதியுறுந் திறமு மென்றுந்
தாமயலார் கருமமதிற் றலையீடல்
லாதிறைவன் றனையே நாடிச்
சேமமுறும் பண்பாடுந் திடமுயற்சி
யுடனிதயத் தேர்வுஞ் சேர
நாமரம ணேசகுரு நனியருளை
மிகவேண்டி நமஸ்க ரிப்பாம்.

பொருள்: உயர் குணங்கள் நிறைந்த நல்ல மனமும், அமைதியான செயலையும் சொல்லையும் இயல்பாகப் பெற்றிருக்கும் திறமையும், அன்னியர் காரியத்தில் ஒருபோதும் தலையிடாமல் இறைவனையே நாடி நின்று க்ஷேமமடையும் பண்பாடும், திடமுயற்சியோடு ஆன்மாவை நாடி அறிவதுமான இப் பேறுகளெல்லாம் நாம் அடைய 'ஸ்ரீ ரமணேசன்' என்ற நாமம் தாங்கிய சற்குருநாதனின் பேரருளை மிகவும் வேண்டி வணங்குவோம்.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பாயிரம்

## 1. நூனோக்கம்

## (வெண்பா)

1. அச்சுக்கோ அங்கீ கரிப்புக்கோ அன்புளர்செய்
மெச்சுக்கோ வல்லவிந்த வெண்பாக்கள் — இச்சித்துள்
ளென்னிதய நாதனுடன் யான்முறைசெய் காதன்மொழி
யின்னொருவர் கேட்ட லிழுக்கு.

இந்த வெண்பாக்கள் ஆயிரமும் அச்சிட வேண்டுமென்றோ, அல்லது மற்றவர்கள் அங்கீகரிக்க வேண்டுமென்றோ, அல்லது மித்திரர்கள் மெச்ச வேண்டுமென்றோ இயற்றப்பட்டவை யல்ல. உள்ளே உள்ள எனது இதயநாதனான ஸ்ரீ ரமண பகவானை நேசித்து அவரிடம் நான் முறை செய்கின்ற காதல் மொழிகள் இவை. ஆகையால் இவற்றைப் பிறர் யாரும் கேட்பது குற்றமாகும்.

2. மற்றவர்கட் கென்றேநான் வாய்திறக்க மாட்டேன்காண்
உற்றவரெல் லாமென்னோ டொன்றேகாண் — சொற்றதெலாம்
என்னெஞ்சுக் கேரமண னின்னடிகள் சந்நிதிக்கே
யின்னொருவர்க் கேது மிலை.

நான் மற்றவர்களுக்குச் சொல்வதற்காக வாயே திறக்க மாட்டேன். ஆனால் திருவருளால் என்னை வந்து உற்றவர்களெல்லாம் என்னோடு ஒன்றானவர்களே யாகும். ஆதலால் இந்த 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரத்'தில் சொல்லப்பட்ட தெல்லாம் என் நெஞ்சை முன்னிலைப்படுத்தி ஸ்ரீ ரமண பகவானது திருவடிச் சந்நிதியிற் கூறப்படுவனவே தவிர, இன்னொருவர்க்கு ஏதும் இல்லை.

3. அயலார் பொழுதழிப்போ ராத்திரத்தோ டென்னைச்
சுயநலனென் றேசொலினுஞ் சொல்க — மயலகன்று
நெஞ்சப் பரிசுத்த(ம்) நேருங்காற் காண்பரெனை
வஞ்சமிலாச் செஞ்சொல்லா னென்று.

வீண்பொழுது போக்கும் மற்றவர்கள் நான் இவ்வாறு கூறுவதைக் கேட்டு ஆத்திரமடைந்து என்னை 'சுயநலக்காரன்' என்று கூறினாலும் கூறிக்கொள்ளட்டும். அவர்கள் தமது அறிவு மயக்கம் நீங்கிச் சித்தசுத்தி உண்டாகும் போது என்னை வஞ்சமில்லாத செஞ்சொல்லான் என்று (அப்போது) காண்பர்.

## 2. தோற்றுவாய்

4. ஒன்றெழுத வேண்டுமெந்தா யொவ்வொருநா ளுங்கவிதை
இன்றெழுது மஃதென்ன வென்பாயேற் — கன்றழுதுந்
தானிரங்காக் கற்றாப்போற் சற்குருநீ யென்னளவி
லேனிருந்தா யென்றவெண்பா வே.

என் தந்தையே! நான் ஒவ்வொரு நாளும் ஒரு கவிதை எழுதவேண்டும். அதன்படி நான் இன்று எழுதுவது என்ன வென்று கேட்பாயாகில், 'சற்குருவே, ஒரு கன்று அழுதும் இரக்கமடையாத தாய்ப்பசுவைப் போல் நீ என்னளவில் ஏன் இருக்கின்றாய்?' என்ற வெண்பாவே யாகும்.

## 3. காப்பு

5. நாளுமொரு வெண்பா ரமண பிரானருட்செந்
தாளி லெழுதிச் சமர்ப்பிக்கக் — கோளெதுவும்
மற்றத் தடையொன்றும் வாராமற் றந்திமுக
முற்றரம ணப்பா வுதவு.

தினந்தோறும் ஒரு வெண்பா எழுதி ஸ்ரீ ரமண பிரானது திருவடியில் நான் சமர்ப்பிப்பதற்கு கிரகங்கள் முதலிய யாதொரு தடையும் வாராதபடி, யானைமுகம் படைத்த ஸ்ரீ ரமணப்பாவே, நீயே உதவுக

6. ஞானகுரு நாத ரமண பிரானடியின்
மோன வொளிக்கடலின் மூழ்கிப்போய் — நானற்ற
மெய்ந்நிலையின் போரசிவ வேழமுக நின்னருளைக்
கைந்நெலியாத் தந்துதவிக் கா.

சிவ வேழமுகனாகிய கணபதியே! ஞான குருநாதனாகிய ஸ்ரீ ரமண பிரானது திருவடியின் மோன வொளிக்கடலின் ஆழத்தில் மூழ்கிப்போய் அகந்தையற்ற உண்மை நிலையின் பேரானந்தத்தை அனுபவிப்பதற்கு உனது அருளை உள்ளங்கை நெல்லிக்கனி போல் எனக்குத் தெளிவாகத் தந்து காப்பாற்றுவாயாக.

# நூல்

## வேண்டல் அதிகாரம்

### 1. குருகடாட்சம் வேண்டல்

1. அண்ணா மலையா மறிவுக் கனலுமெனை
யுண்ணா விடிலெவரா லொண்ணுமோ — விண்ணோர்க்கும்
மெய்யறிவு போதிக்க வெந்தழலாத் தோன்றியநீ
நொய்யனெனை யுங்கடைக்கண் ணோக்கு.

அண்ணாமலையாகிய ஞானாக்கினி கூட என்னை விழுங்க முடியா தென்றால், வேறு யாரால்தான் முடியுமோ சொல்க. பிரும்ம விஷ்ணுக்களாகிய தேவர்களுக்கும் மெய்ஞ்ஞானத்தைப் போதிக்க நீ அக்கினி வடிவாகத் தோன்றியவ னல்லவா? அத்தகைய நீ அற்பனாகிய என்னையும் கடைக்கண்ணால் நோக்குவாயாக.

2. சுத்த சுதந்தரனாஞ் சோணா சலரமண
சத்தி மயனே தயைவடிவே — முத்தி
நினைப்பார்க் கெலாந்தருவோய் நிர்க்கதிய னான
வெனைப்பார்த் தருள்வா யினி.

பூரண சுதந்தரனான சோணாசலரமண சக்திமயனே, தயையே வடிவானவனே, உன்னை நினைப்போர்க் கெல்லாம் முக்தி யளிப்பவனே, கதியற்றவனாகிய என்னை இனியாவது பார்த்தருள்வாயாக.

3. தன்னையன்றி யில்லாத் தனுவுஞ் செகமுமெண்ணி
முன்னிலைபா விச்சைபய மோகமுற்றுக் — கொன்னே
நிலைதடுமா றிப்புலம்பு(ம்) நீசனென்மே லண்ணா
மலைவடிவே நீகடைக்கண் வை.

தானில்லாவிட்டால் இல்லாததான உடலையும் உலகத்தையும் எண்ணி, அந்த முன்னிலைப் பொருள்களிடத்தில் ஆசை, பயம், மோகம் இவைகள் உண்டாகி, வீணே நிலை தடுமாறிப் புலம்புகின்ற நீசனாகிய என்மேல், அண்ணாமலையின் வடிவேயாகிய ரமணா, நீ உன் கடாக்ஷத்தை வைப்பாயாக.

4. ஒன்று மியலா துனது துணைநாடி
யென்று மிருக்கு மெனைக்காண்பாய் — அன்றருண
மாமலையா நின்றசிவ மங்கலனே சீரமண
நாமகுரு ஞானக்கண் ணால்.

முன்பு அருணாசலமாக எழுந்தருளிய சிவமங்கலனே! ஸ்ரீ ரமண நாமம் தாங்கிய குருதேவனே! தன்னால் ஒன்றுமே இயலாதவனாய் உன் துணையையே என்றும் நாடி யிருப்பவனான என்னை நீ உன் ஞானக் கண்ணாற் காண்பாயாக.

5. காணப் படுமுலகைக் காண்பானின் வேறாகக்
காணு மறிவே கனமாயை — காணுமது
காண்பானை நோக்கக் கடவதாச் செய்யவெனைக்
காண்பா யருட்கடைக் கண்.

காணப்படும் உலகத்தைக் காண்பானாகிய தனக்கு வேறான ஒரு பொருளாய்க் காணும் அறிவேதான் பெரிய மாயை யாகும். அப்படி உலகத்தைக் காணும் அறிவைத் திருப்பி, அது காண்பானையே காணக்கூடியதாகச் செய்ய நீ உன் அருட் கடைக் கண்ணால் என்னைக் காண்பாயாக.

6. தன்னாட்ட(ம்) நீங்கிச் சகநாட்டங் கொள்வதற
வுன்னாட்ட மென்மே லுறைக்காதோ — பன்னாட்கள்
வீணா யெழுந்து வெளியலையு மென்னிலைமை
காணாய் பரிவாற் கனிந்து.

ஆன்ம நாட்டத்தை விட்டுவிட்டு உலக நாட்டம் கொள்ளும் தன்மை என்னை விட்டு நீங்குமாறு உன்னுடைய அருள்நாட்டம் என்மேல் ஆதிக்கம் செலுத்தாதோ? பன்னெடுங் காலமாக 'நான்' என்று வீணாக எழுவதும், வெளிமுகத்தில் அலைவதுமான என் அவல நிலைமையை நீ பரிவோடு காண்பாயாக.

7. வாணாளை யெல்லாம் மனம்போன வாறலைந்து
வீணாளா கக்கழித்து விட்டேனைக் — காணா
யருணைப் பெருந்தெய்வ மேரமணா வுன்றன்
கருணைக் கடைக்கண்ணி னால்.

திருவருணையின் பெருந்தெய்வமே ரமணா! வாழ்நாள் முழுவதையும் மனம் போனவாறு அலைந்து வீண் நாளாகக் கழித்துவிட்ட என்னை உனது கருணைக் கடைக்கண்ணினால் காண்பாயாக.

8. அடங்க வடங்க வபரிமித மாகத்
தொடங்குபே ரின்பத்திற் றோய்ந்தத் — தடங்கடலி
லாழ்ந்தாழ்ந்து மூழ்கி யடிக்குங்கீ ழேயடியேன்
வாழ்ந்தோங்கு மாறருட்கண் வை.

மேன்மேலும் அடங்க அடங்க அளவற்றுப் பொங்கும் பேரின்பத்தில் தோய்ந்து, அப் பேரின்பக் கடலில் ஆழ்ந்து முழுகி அதன் அடிப்பாகத்தில் மிகக் கீழே படிந்து நான் வாழ்ந்து அதனால் ஓங்கும்படி, உன் அருட்கண் பார்வையை என்மேல் வைப்பாயாக.

## 2. அருட்பார்வை வேண்டல்

9. அடியேன்மே னீகொள் ளருட்பார்வை யேதா
னடியே னகங்காணும் பார்வை — முடிவான
மூலவருட் பார்வையென்மேன் மூண்டருள்வா யப்பார்வை
யாலுனையே நான்காண வாழ்ந்து.

அடியேன் மேல் நீ கொள்கின்ற அருட்பார்வையே தான் அடியேனாகிய நான் ஆன்மாவைக் காணும் பார்வையாகும். பார்வை யனைத்துள்ளும் முடிவானதும் மூலமானதுமான உனது அந்த அருட்பார்வையால் நான் உள்ளத்தில் ஆழ்ந்து உன்னையே காணுமாறு என்மேல் அவ் வருட்பார்வையைச் செலுத்துவாயாக.

குறிப்பு: - கண்ணாடியில் தெரியும் நமது முகத்திலுள்ள கண்கள் நம்மைப் பார்க்க வேண்டுமாயின், நாமே அந்தப் பிரதிபிம்பக் கண்களைப் பார்க்க வேண்டு மல்லவா? நம் பிரதிபிம்பம் நம்மைப் பார்ப்பது என்பது நாம் அதைப் பார்ப்பதே; தனித்தனி இருவேறு செயல்களல்ல. அந்தப் பிரதிபிம்பம் நம்மைப் பார்க்க வல்லதாவதற்குக் காரணம் நாம் அதைப் பார்ப்பதே யன்றோ? அவ்வாறே, நிஜ பரம்பொருளாகிய சற்குரு (ஆன்மா)வின் பிரதிபிம்பமே 'நாம்' என்னும் அசத்திய ஜீவன். நாம் ஆன்மாவை அல்லது குருவைக் காண வேண்டுமாயின், அவர் நம்மீது கருணை கொண்டு நம்மை

அருட்பார்வை யிட்டாலொழிய அது நடவாது. அதற்காகவே அவரது அருட்பார்வை யாசிக்கப்படுகின்றது.

10. பார்வையென்றாற் றன்னையே பார்ப்பதுதான் அன்னியந்தேர்
பார்வை குருடன்றிப் பார்வையோ — ஆர்வமோ
டென்று மகமுகமா யின்பவருட் பார்வையுட
னின்றிடுமா றென்னைப்பார் நீ.

பார்வை என்றால் தன்னைப் பார்க்கும் ஆன்ம திருஷ்டி ஒன்றுதான் சரியான பார்வை யாகும். பிற பொருள்களைப் பார்க்கும் பார்வை குருட்டுப் பார்வையே தவிர, அது சரியான பார்வையாகுமா? (ஆகாது.) ஆகையால் மிகுந்த பிரியத்தோடு எப்பொழுதும் அகமுகப்பட்டு அந்த இன்பமான அருட்பார்வையிலேயே நிஷ்டையுற்று நான் இருக்கும்படி நீ என்னை பார்ப்பாயாக.

11. நான்றோன்றத் தோன்றுமிந்த நானாவும் பொய்யாக்கி
நான்றோன்று மூலத்தே நாட்டமுற்று — நான்றோன்றா
தோங்கருண சைலரம ணோத்தமனே யுன்னருட்கே
யேங்குமெனக் கின்முகங்காட் டின்று.

'நான்' என்ற அகந்தை தோன்றாமல் ஓங்கி விளங்கும் அருணாசல ரமணோத்தமனே! உன் அருளுக்காக ஏங்கி நிற்கும் எனக்கு, 'நான்' என்ற அகந்தை தோன்றுவதால் அதன் பிறகு தோன்றிக் காணப்படும் இந்த நானா நாமரூபப் பிரபஞ்சத்தைப் பொய்யாகக் கண்டு, 'நான்' என்று தோன்றும் அகந்தையின் மூலஸ்தானமாகிய ஆன்மாவிலேயே நாட்ட முற்று 'நான்' தோன்றாதிருக்க நீ உன் இனிய முகத்தை இப்பொழுதே காட்டுவாயாக.

12. கையகன்று போகக் கடவே னலேனுலக
மையலறுத் தற்கே வரவழைத்தா — யுய்யவழி
யின்றுநீ செய்யா தினுங்காலந் தாழ்த்துவது
நன்றோ வருட்பார்வை நாட்டு.

நான் உன்னாற் கைவிடப்பட்டு அகன்று போக வேண்டியவன் அல்லன். ஏனெனில், என்னிடமிருந்து உலக மயக்கத்தை அறுப்பதற் காகவே என்னை உன் திருவடிக்கு வரவழைத்தா யல்லவா?அப்படிப்பட்ட நீ இன்று நான் உய்ய வழி செய்யாமல் இன்னும் காலந் தாழ்த்துவது நல்லதோ? (அல்ல.) ஆகையால் உன் அருட்பார்வையை என்மேல் நாட்டுவாயாக.

## 3. குருபாத தூளி வேண்டல்

13. எந்நினைவும் போய்நா னிருக்கின்றே னென்றவியற்
றன்னுணர்வா மட்டுந் தனித்திருக்கும் — முன்னைநிலை
மீட்டுத் தரு(ம்)ரமண வீர னடித்துகளே
வேட்டுப் பெறலென் விருப்பு.

எல்லா நினைவுகளும் அழிந்து 'நான் இருக்கிறேன்' என்று இயல்பாக விளங்கும் ஆன்ம உணர்வாக மட்டும் தனித்திருக்கும் எனது யதார்த்த ஆதிநிலையை எனக்கு மீட்டுத் தருகின்ற வீரனாகிய ரமண குருவின் பாத தூளியை வேண்டிப் பெறுவதுதான் எனது விருப்ப மாகும்.

14. நின்றொருகாற் பின்பொருகா னீங்கா தியல்பாக
வென்று மொருபடித்தா மின்பறிவு — மன்றவள

ருன்பாத தூளியொன் றுள்ளத் தெனக்களித்தா
லென்போற் சுகிய ரிலர்.

ஒருகால் இருந்து பின்பொருகால் நீங்கிவிடுகின்ற தன்மை யில்லாமல், இயல்பாகவே எப்போதும் ஒரே விதமாய்ப் பிரகாசிக்கும் பேரின்ப ஞானம் (சிதானந்தம்) ஓங்கி வளர்கின்ற உன் பாத தூளியில் ஒன்றை எனக்கு என் உள்ளத்தில் நீ அளிப்பாயாகில், என்னைப் போன்று இன்பந் துய்ப்போர் யாருமே இல்லை எனலாம்.

## 4. நிரந்தர சாந்நித்தியம் வேண்டல்

15. என்னழிவே யுண்மையா மென்னிருப்பாத் தேறிநா
னென்னழிவுக் கீடிலா விட்டமுற்றே — யுன்னருளா
லென்னழிவா மென்னிருப்புற் றென்னிருப்பால் யானழிந்துன்
சன்னிதிவாழ் வாமுணர்வைத் தா.

'நான்' என்னும் அகந்தையின் அழிவே என் உண்மையான இருப்புநிலை என்று அறிந்து, அந்த அகந்தை அழிவில் நான் இணையில்லாத ஆசை கொண்டு, அந்த பக்தியால் விளையும் உன்னருளால் என் அழிவாகிய என் இருப்பு நிலையை அடைந்து, அந்த என் இருப்பாகிய ஆன்மாவிலேயே நிஷ்டையுற்று இருப்பதால், 'நான்' என்னும் அகந்தை இனி என்றுமே எழாதபடி அழிந்துள்ள ஆன்ம வுணர்வாகிய உன் சந்நிதி வாழ்வை எனக்குத் தருவாயாக.

16. எங்குமுன் சந்நிதியா வெல்லாமு முன்னுருவாத்
தங்குமோ ருண்மை தடையின்றிப் — பொங்கு
முணர்வளித்தா யாகிலரு ளுண்மையறி வின்ப
வுணர்வளித்தா யாவா யுகந்து.

எங்கும் உன்னுடைய சந்நிதியே யாகவும், எல்லாப்பொருள்களும் உன்னுடைய உருவங்களே யாகவும் விளங்குகின்ற பாரமார்த்திக உண்மை தடையின்றிப் பிரகாசிக்கும் படியான உணர்வை நீ யளித்தால்தான், சச்சிதானந்த அருளுணர்வை நீ சந்தோஷத்தோடு எனக்கு அளித்தவனாவாய்.

17. என்னுள் ளிருந்தென்ற னெண்ணமெலாம் பார்ப்போனென்
றுன்னை மறவா துணர்ந்துநா — னெந்நாளு(ம்)
நிற்பேனே யாகி னெருங்குமோ வென்வாழ்விற்
றப்பான மாயைத் தடை.

நீ என்னுள்ளத்தில் இருந்துகொண்டு, நான் எண்ணும் எண்ணங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பவன் என்பதை நான் எப்போதும் மறவாமல் அறிந்து நிற்பேனேயாகில், என் வாழ்வில் மாயைத் தடையால் ஏற்படும் பாவங்கள் என்னை நெருங்குமோ? (நெருங்காது என்க.)

18. காராக் கிருகவகங் காரப் படுகுழியிற்
பேரா தழுந்தியழும் பேதையேன் — ஆரா
வமுதேநின் பேரருளா லான்மவீ டுற்றுன்
சமுகமக லாதவரந் தா.

ஆராவமுதே! சிறைச் சாலையாகிய அகங்காரப் படுகுழி யினின்றும் கரையேறாது, அதிலேயே அழுந்தி அழுது கிடக்கும் பேதையேன் உன்னுடைய பேரருளால் ஆன்ம வீடாகிய மோக்ஷமடைந்து, உன் சந்நிதியாகிய அந் நிலையை விட்டு அகலாத வரத்தை எனக்குத் தருவாயாக.

## 5. அடியா ரிணக்கம் வேண்டல்

19. அற்ப ரிடைவாழ் வழியாது நின்னடிமைப்
பொற்பரிடை வாழப் பொருத்தாயோ — தற்பரமாஞ்
சோணா சலரமணத் தோன்றலே யென்னிலைமை
காணாயோ நீகருணைக் கண்.

பரம்பொருளான சோணாசலரமண சற்குருவே! நான் அற்பர் களிடையே வாழ்ந்து வாழ்வை வீணாக்காமல் உன்னுடைய அடியார் களாகிய மேலோர்கள் நடுவில் வாழும்படி என் வாழ்வை அமைக்கமாட்டாயோ? நீ உன் கருணைக் கண்ணினால் என்னுடைய நிலைமையைக் காணமாட்டாயோ? (காண்பாயாக என்றவாறு.)

20. கவலை யகன்று கனவகன்று மோக
வவல மகன்றுன் னடியிற் — றவமுயன்று
சித்தியுற்ற நல்லோர் திருவடித்தூ ளென்கண்ணி
லொத்திநா னுய்ய வுதவு.

கவலை யகன்று. இந்த ஜாக்கிரமாகிய கனவும் அகன்று, பயனற்ற மோகங்க ளெல்லாம் அகன்று. உனது திருவடியிலேயே நிற்கும் தவமாகிய நிஷ்டையில் முயன்று ஆன்ம சித்தியடைந்த நல்லோர்களது திருவடித்தூசியை என் கண்ணில் நான் ஒற்றிக்கொண்டு உய்யுமாறு எனக்கு உதவுக.

21. முன்பென்றுங் காணாத முற்ற முதிர்ந்தபர
வன்பின் சுவையா லகத்தழுந்தி — யென்புநெக
வுன்னிற் கரைந்த வுனதடியர் தம்முணர்வி
லென்னைக் கரைத்தங் கிருத்து.

இதற்கு முன் என்றுமே காணாததும் பூரணமாக முதிர்ந்ததுமான பரபக்தியின் சுவையால் இதயத்தில் அழுந்தி, எலும்பும் உருகும் வண்ணம் பெருகும் அன்பால் உன்னிடம் கரைந்து போன உனது மெய்யடியார்களது உண்மை யுணர்வில் என்னையும் கரைத்து அங்கேயே இருத்துவாயாக.

## 6. இன்சொல் வேண்டல்

22. செயல்சொல்லென் சிந்தை திருவருளா லாட்டிப்
பயனிலவற் றின்பாற் படாதுன் — வயமாயித்
தேகவா ணாண்முழுதுஞ் செய்தருள வேண்டுகின்றேன்
மாகுருவே நின்னடியேன் மாட்டு.

மகா குருவே! என் மனோவாக்குக்காயங்களை உன் திருவருளாலேயே இயக்குவித்து, அவை பயனற்றவற்றில் ஈடுபடாமல் என்னுடைய இந்த தேக வாழ்நாள் முழுவதும் உன் வசமாகவேயாகி இயங்கும்படி உன் அடியவனாகிய என் விஷயத்திற் செய்தருள வேண்டுகின்றேன்.

23. எச்சீவ ருள்ளமு மிம்சையடை யாதநற்
சொற்சீர்மை வாக்கிற் சுரந்தருள்வாய் — சற்சீட
னாக்கி யடியேற் கடையாள மாயமைதி
வாக்கிலுறத் தாராய் வரம்.

எந்த ஜீவனுடைய உள்ளமும் நோகாதவாறு இன் சொல் கூறுகின்ற சீர்மையை என் வாக்கிற் சுரந்தருளுவாயாக. என்னை உன் சற்சீடனாக ஆக்கி, அதற்கு அடையாளமாக வாக்கில் அமைதி யுண்டாகும்படியான வரம் தருவாயாக.

24. நல்லோ ருள(ம்)நோக நாமனதி லென்செயலாய்ச்
செல்லா வகர்த்தத்வஞ் சேர்ப்போனே — பொல்லாத
வீண்பொருளை யீயா விதமா யுரையாடும்
மாண்புதரு வாய்நின் மகற்கு.

நல்லோர்களுடைய உள்ளம் நோகும்படி என் நாவிலும் மனத்திலும் என் செயலாக எக்கிரியையும் உண்டாகாதவாறு என்னை அகர்த்தத்துவத்திற் சேர்ப்போனே! உன் மகனாகிய எனக்குக் கொடியதும் வீணானதுமான பொருளைக் கொடுக்காத விதமாக உரையாடும் பெருமையைத் தருவாயாக.

25. எண்ணிச் சொலவொன்றஃ தின்னோர் பொருடந்துப்
புண்ணில்வே லாய்ப்பொசுக்கப் புண்ணியரை — யுண்ணெகுமா
றெச்சூழ் நிலையு மினியென்பா னேராவா
றச்சமற்ற சொல்லே யளி.

நான் ஒரு பொருளை எண்ணி ஒரு சொல்லைச் சொல்ல, அது மற்றொரு பொருளைக் கொடுத்து புண்ணிய புருஷர்களைப் புண்ணிற் பாய்ந்த வேலைப் போலத் துன்புறுத்தவும், அதைக் கண்டு நான் உள்ளம் நோகும்படியாகவும் நேருகின்ற எவ்விதச் சூழ்நிலையும் இனி என் வாழ்நாளில் நேராதவாறு அச்சமற்ற சொல்லையே நான் சொல்லுமாறு அருள்வாயாக.

26. நீநடத்துஞ் சொன்மனமெய் நேர்மைக்கீழ் வாழுமெனக்
கேனவற்றா லோர்பாவ மெய்துமாம் — ஆனவற்றா
லீனமன்றி மற்றோர்க் கிதமுண்டா காதேல்வாய்
மோனமுற்றே னும்வாழ மூட்டு.

உன்னால் நடத்தப்படும் மனோவாக்குக்காயங்களின் நேர்மைக்குட்பட்டு வாழும் எனக்கு அத் திரிகரணங்களால் எந்த ஒரு பாபமும் வந்து சேர்ந்துவிடாது, அல்லவா? ஆயினும், அவைகளைக் கொண்டு நீ இயக்கும்பொழுது மற்றவர்களுக்கு ஈனமே யன்றி இதம் உண்டாகாதவாறு நேரும் பக்ஷத்தில், என் வாய் மோனமுற்றாவது வாழுமாறு செய்வாயாக.

## 7. சுபகுணம் வேண்டல்

27. ஏழைக் குடிலுக் கிராச னெழுந்தருண்முன்
பேழைப் பொருளனுப்பிப் பின்போமா — றேழையெனைத்
தெய்வசம் பத்தாற் றிருத்தி யுனக்கேற்பச்
செய்வதுமுன் செய்கையன்றோ செய்.

ஓர் ஏழையின் குடிசைக்கு ஓர் அரசன் விஜயம் செய்வதற்கு முன்பே தன்னைச் சிறப்பாக வரவேற்பதற்கு வேண்டிய பொருளைப் பெட்டி நிறைய அனுப்பி வைத்து, அவ்வரசன் அதன்பின் அங்கு விஜயம் செய்வது போல, குணவறியவனாகிய என்னை உனது தெய்வீக சம்பத்துக்களால் முதலில் திருத்தி யமைத்து நீ என் உள்ளத்தில் எழுந்தருள்வதற்கேற்ப சித்த சுத்தி செய்ய வேண்டியதும் உன் அருட்செய்கையே யன்றோ? ஆகையால், அவ்வாறே செய்க.

28. ஆழ்ந்தபே ரன்பு மமைதியுள மும்பணிவுந்
தாழ்ந்துவின யஞ்சேர் தமிழ்ச்சொல்லுஞ் — சூழ்ந்தவர் பாற்

கொண்டு நடந்தென குருவுன் பெருமைக்கோர்
மிண்டறநான் வாழ் விதி.

என்னைச் சூழ்ந்துள்ளவர்களிடம் ஆழ்ந்த பேரன்பும், அமைதியான உள்ளமும், பணிவோடு தாழ்ந்து வினயமாய் உரையாடும் தமிழ்ச்சொல்லும் உடையவனாய் நான் நடந்து, எனது சற்குருவாகிய உன்னுடைய பெருமைக்கு எவ்வித கேடும் உண்டாக்காதவனாய் வாழுமாறு நீ விதித்தருள்க.

29. அருளி னடையாள மாவந் தமையும்
பொருளின்மை முற்றும் பொறுத்தே — யொருசிறிது
மன்னியர்க ளஃதை யறியவிடா தன்புமுக
மென்னியல்பாக் காயோ வினி.

அடைந்த அருளுக்கு ஓர் அடையாளமாக வந்து அமைகின்ற பொருளின்மையை (வறுமையை) முழுவதும் பொறுத்துக்கொண்டு, அந்த என் வறுமையில் ஒரு சிறிதுங் கூட அன்னியர்கள் அறிந்துகொள்ள முடியாதபடி அவர்களிடம் அன்பு முகத்தோடு வாழ்வதையே எனது சுபாவமாக எப்போதும் செய்தருள்வாயாக.

30. தெய்வீகச் சின்னமாத் தேறும் வறுமையிடை
மெய்வீறு கண்ணில் விகசிக்கச் — செய்வாய்
திருவருளாஞ் சேமிப்பிற் சிந்தைரமித் தின்பம்
பெருகி வளர்வதன்றோ பேறு.

உள்ளம் தெய்வீக முற்றதற்கு அடையாளமாக எனக்கு வந்து சேரும் வறுமையின் இடையிலுங் கூட, கண்ணில் உண்மையான பெருமிதம் பிரகாசிக்கும்படிச் செய்வாயாக. உன் திருவருளாகிய பொக்கிஷத்தில் மனம் ரமித்து இன்பம் பெருகி வளர்வதல்லவா உண்மையான பாக்கிய மாகும்?

31. தன்கண்ணாற் காணுஞ் சகல வுயிரிடத்துந்
தன்னின்மே லானதோர் சற்குணங்கண் — டன்னோ
ரனைவர்க்குந் தான்றாழ்ந்தோ னாவடங்கு(ம்) மேன்மை
யெனைவிட்டுப் போகா திருத்து.

என்னுடைய கண்ணால் நான் பார்க்கின்ற ஒவ்வொரு உயிரினிடத்திலும் என்னைவிட மேலானதோர் சற்குணம் இருப்பதைக் கண்டு, 'அவ் வுயிர்கள் ஒவ்வொன்றிற்கும் நான் தாழ்ந்தவனே' என்று உணர்ந்து அடங்கும் மேன்மை என்னை விட்டு ஒரு பொழுதும் நீங்காதவாறு அதை இருத்தி யருள்வாயாக.

32. உன்னருளா லென்பா லுயரன்பு பூண்டசிலர்
நன்னயஞ்செய் போததுவென் னாயகநின் — றன்னருளே
யன்றி யவைகட் கடியே னிடந்தகுதி
யொன்றுமிலை யன்றோ வுரை.

என் நாயகனே! உன்னுடைய அருளால் என்னிடம் உயர்ந்த அன்பு பூண்ட சிலர் எனக்கு நல்லுதவி செய்யும் பொழுது, அது உன்னுடைய திருவருளால் நடக்கின்றதேயன்றி அவைகளுக்கேற்ற தகுதி இவ் வடியேனிடம் ஒன்றுமே இல்லை யல்லவா? நீயே சொல்க.

33. மன்னிப்ப தோடு(ம்) மறந்துவிடும் வல்லமையு
மென்னிட த்தி லீவா யிகலாரை — யுன்னிடத்தி

[4]லொன்றிநா னின்றியவ் வொப்புயர்வில் லாநிலையி
னின்றிடநீ யென்னை நிறுத்து.

என்னைப் பகைப்பவர்களை மன்னிப்பதோடும் அவர்களது கொடிய செயலை மறந்துவிடவுங் கூடிய வல்லமையை என்னிடத்தில் அருள்வாயாக. உன்னிடத்தில் ஒன்றாகக் கரைந்து நானற்றுப்போய் அந்த ஒப்புயர்வில்லாத நிலையில் நழுவாது நிற்கும்படி நீ என்னை நிறுத்துவாயாக.

34. அருட்பாது காப்புன் னருட்டுணையால் யானிங்
கிருக்கின்றே னீதை மறந்தே — யொருக்கணமு
மென்சீர்மை யென்றவமென் றெண்ணி யகங்கரிக்காப்
பொன்னான தாழ்மை பொருத்து.

உனது அருட்பாதுகாப்பாகிய அருட்டுணையால் தான் நான் இங்கு வாழ்ந்திருக்கின்றேன். இதை மறந்துவிட்டு, 'இது என் சீர்மையாலும் என் தவத்தாலும் ஏற்பட்ட நல்வாழ்க்கை' என்றெண்ணி ஒருக்கணமும் அகங்கரிக்காத பொன் போன்ற தாழ்மையை எனக்குப் பொருத்துவாயாக.

## 8. வேண்டாமை வேண்டல்

35. வேண்டாக் கொடிய விடயங்க ளைப்பெறவே
வேண்டும் மதியெனக்கு வேண்டாமென் — றாண்டாய்க்
கடியேன் முறையிட் டழுதழுது கேட்ட
படியே யருள்க பரிந்து.

வேண்டத்தகாத கொடிய விஷயாதிகளையே பெற வேண்டும் என்று விரும்பும் புத்தி எனக்கு வேண்டவே வேண்டாம் என்று என்னை யாட் கொண்ட சற்குருவாகிய உன்னிடம் உன் அடியேன் இதுவரையில் முறையிட்டு அழுதழுது கேட்டதை இரக்கத்தோடு அவ்வாறே அருள்வாயாக.

36. இடமு முணவுடையு மின்னுமெலா மீயுங்
கடவுளுனைப் பெற்றேன் கடையேன் — உடல்வாழ்வில்
வேண்டுங் குணமா(ம்) மிடிமை யெனைநீங்க
வேண்டும் வித(ம்)நீ விதி.

வசிக்கும் இடமும், உண்ணும் உணவும், உடுக்கும் உடையும் இன்னும் வாழ்வுக்கு வேண்டிய யாவற்றையும் நான் கேளாமலேயே அளிக்கும் கடவுளாகிய உன்னை இக் கடையேன் அடைந்து விட்டேனல்லவா? ஆகையால், உடல் வாழ்வின் தேவைகளை உன்னிடம் வேண்டிக் கொள்ளும் தரித்திர குணம் என்னை விட்டு நீங்குமாறு நீ விதிப்பாயாக.

37. இல்லாமை யெண்ணி யிரப்பார்பால் யானிரந்து
செல்லாத வாறுனருட் செல்வனாய்ப் — பல்லாற்றும்
வந்திரப்பார்க் குன்னருளின் வாய்க்காலாய் வாழ்ந்திருக்குஞ்
செந்திறந்தா லென்னைத் திகழ்த்து.

தனது பற்றாக்குறையை யெண்ணி வருந்தி பிறரிடம் கெஞ்சி நிற்கும் மக்களிடம் சென்று நான் அவர்கள்பால் யாசித்து நிற்காதவாறு உன் அருளாகிய செல்வம் படைத்தவனாய், பற்பலவாகிய வேண்டுதல்களைக் குறித்து என்னை வந்து யாசிப்பவர்களுக்கு உன் அருள்பாயும் ஒரு வாய்க்காலாய் நான் வாழ்ந்திருக்கின்ற செம்மையை அளித்து என்னை விளக்குவாயாக.

[4] 'நான் இன்றி ஒன்றி நின்றிட நிறுத்து' எனக் கொண்டு கூட்டுக.

## 9. புகழிகழில் உதாசீனம் வேண்டல்

38. தாழ்வேற்ற மென்றுலகோர் சாற்று மிகழ்புகழோர்
வாழ்வேட் டிருபக்க வாசகங்கள் — ஊழேட்டில்
ஒன்றின்றி யொன்றின்றா மொன்றுமிலா நின்னடிக்கே
ஒன்றரம ணேசவரு ளூட்டு.

தாழ்வென்றும் உயர்வென்றும் உலகோர் சொல்லுகின்ற இகழும் புகழும் வாழ்க்கை என்னும் ஓர் ஏட்டின் இரு பக்கங்களில் எழுதப்பட்ட வாசகங்களே யாகும். அந்தப் பிராரப்தமாகிய ஏட்டின் இரு பக்கங்களிலும் இகழ் புகழ் ஆகியவற்றுள் ஒன்றில்லாமல் இன்னொன்று இராது. ஆகையால், இப்பிராரப்தக்கட்டுப்பாடே இல்லாத உனது திருவடியில் (ஆன்மாவில்) நான் ஒன்றாகிவிடுமாறு, ரமணேசனே, உன்னுடைய அருளை யூட்டுவாயாக.

39. போற்றியவர் கோடியருட் போதரம ணேசநினைத்
தூற்றிடவுங் கூடசிலர் தோன்றியகான் — மாற்றமுள
ஈதிரண்டாற் பேரா வியல்பா விருந்தவருட்
போதிரண்டே யென்றன் புகல்.

அருள்ஞான ரமணேசனே! கோடிக்கணக்கான பக்தர்களால் போற்றப்பட்ட உன்னைத் தூற்றவுங் கூட சிலர் கிளம்பிய போது, மாற்றமுள்ள இந்த புகழ்இகழ் இரண்டாலும் பாதிக்கப்படாத ஆன்ம இயல்பாக இருந்த உன் இருஅருட்பாத தாமரைகளே எனக்குப் புகலாகட்டும்.

40. இன்மை யுலகை யெனக்கயலா வோரிருப்பாப்
புன்மைமனங் கண்டு புகழிகழாச் — சொன்மொழியி
லின்பதுன்ப மெய்தா தியல்பா யுறரமண
நின்பதமே யான்கொண் ணிழல்.

உண்மையில் இருப்பற்றதாகிய உலகத்தை எனக்கு அயலான இருப்புள்ள ஒரு பொருளாக இந்த அற்ப மனங்கண்டு, அவ் வுலகத்தாரால் புகழ் இகழ் என்று இருவிதமாகச் சொல்லப்படும் மொழிகளில் முறையே இன்பமும் துன்பமும் அடையாமல் இயல்பாக நடுநிலையுற்றிருப்பதற்கு, ஸ்ரீ ரமண பகவானே, உன்னுடைய பாத நிழலையே நான் புகலாகக் கொள்கின்றேன்.

41. பாராட் டிழிவிரண்டாற் பாதிக்கப் பட்டமனப்
போராட்ட மோய்ந்துனது போதவருள் — நீராட்டப்
பட்டுச் சலனப் படாத சகசநிலைக்
கிட்டுச்சென் றென்னை யிருத்து.

தன்னைப் பிறர் பாராட்டல், பழித்தல் ஆகிய இவ்விரண்டாலும் பாதிக்கப்பட்ட மனத்தின் போராட்டம் ஓய்ந்து, உனது அருள் ஞானத்தால் நீராட்டப்பட்டுச் சலனப்படாத சகஜ நிஷ்டையில் என்னை யழைத்துச் சென்று இருத்து வாயாக.

## 10. விவேக வைராக்கியம் வேண்டல்

42. என்னி லிருப்பதையே யின்பமென வோராதென்
முன்னி லிருப்பனபான் முந்துகின்றேன் — அன்னியங்கள்
தானன்றி யில்லாத சத்தியங்கண் டோய்வுறுமா
றேனெற் கறிவீந் திலை.

நானாகிய ஆன்மாவில் நிஷ்டையுற் றிருப்பதே உண்மையான இன்பம் என்று அறிந்துகொள்ளாமல், என் முன்னிலையில் இருப்பனவாகிய உலகப் பொருள்களை யடையவே முந்துகின்றேனே! அவ் வன்னியப் பொருள்கள் நானின்றி இல்லாதவை என்ற உண்மையைக் கண்டுணர்ந்து, அவ் வறிவின் தெளிவால் அவைகளை நோக்கி யோடாமல் ஓய்வுற்று நிற்குமாறு எனக்கு நீ ஏன் நல்லறிவைக் கொடுக்கவில்லை?

43. ஒன்றுமிலா தான வுடல்வாழ்வை யென்வாழ்வா
நன்று நினைத்ததற்கே நாண்முழுதுஞ் — சென்றுசென்
றேங்கு மனத்தெழூஉ மெண்ணப் படுகுழியி
னீங்குமா றேயருள்செய் நீ.

உண்மையில் ஒரு சிறிதும் இருப்பே யில்லாத இவ்வுடல் வாழ்வை என் மெய் வாழ்வாகத் திடமாக நினைத்து, அதற்காகவே நாள் முழுவதும் மனத்தால் ஏங்கி அலைந்தலைந்து, அதை முன்னிட்டு எழும் பல்வேறு எண்ணங்களாகிய படுகுழியில் வீழாது நீங்குமாறு நீ எனக்கு அருள் செய்வாயாக.

44. உண்மையின்ன தென்றே யுணரா துலகமெனுங்
கண்மயக்கக் காட்சிக் கடிமையாய்த் — திண்மையிழந்
தோடும் பகிர்முகத்தோ டொன்றி யுருமறந்த
கேடுங் கெடநீ கிளர்.

உண்மைப் பொருள் எது என்றே தெரியாமல் கண் மயக்கக் காட்சியாகக் காணப்படும் இவ் வுலக வாழ்க்கைக்கு அடிமையாகி, திடமிழந்து ஓடுகின்ற பகிர்முகத் தன்மையோடு நான் ஒன்றாகி, இருக்கின்ற என் அசலத் தன்மையாகிய ஆன்மாவை மறந்த கேடு (பிரமாதம்) அழியுமாறு நீ விளங்கியருள்க.

45. உண்மைப் பெருமை யுயர்சுகமெக் காலுமிக
அண்மைப் பொருளு னடிமலரித் — திண்மை
யறிவைப் பெறுநெஞ் சலையுமோ வீணில்
பெறவிவ் வறிவருளே பெய்.

எப்போதும் உண்மையான பெருமையும் உயர்ந்த பேரின்பமும் எதுவெனில், எனக்கு மிகச் சமீபத்திலிருக்கின்ற பொருளாகிய உன் பாத தாமரைகளே (ஆன்மாவே). இந்த திட அறிவைப் பெற்ற நெஞ்சு பிறகு வீணே உலகத்தில் எந்தப் பெருமையும் சுகமு மடைவதற்காக அலையுமோ? ஆகவே இவ் வறிவைப் பெற நீ அருள் செய்வாயாக.

46. ஓய்ந்துவிடு மிந்த வுலகக் கனவொருநாள்
மாய்ந்துவிடுந் தேக(ம்) மறைந்துவிடும் — ஆய்ந்தறியும்
ஆன்மாப ரோட்ச வறிவே யனந்தசத்தென்
றேன்மேவா துள்ளே னினும்.

இந்த உலகக் கனவு ஒரு நாள் மறைந்து விடும்; இந்த தேகமும் ஒரு நாள் மடிந்து மறைந்துவிடும். ஆனால் இத் தேக வாழ்நாளில் விசாரத்தால் ஆராய்ந்து அறியும் அபரோக்ஷ ஆன்ம ஞானமே அழிவற்ற சத்பொருள் என்று ஏன் இன்னும் உணர்ந்து அதை அடையாமல் இருக்கின்றேனோ?

47. உள்ளமா யுள்ள வுணர்வேமெய் யின்பமென்றுங்
கள்ளப் புலனின்பங் கானலென்றுந் — தெள்ளத்
தெளிந்தவிவே கத்தாற் றிருவருளுக் கூணா
விளிந்துள்ள [5]மாக விளங்கு.

---

[5] ஆக — ஆகும்படி.

தான் ஆன்மாவாக இருக்கும் அறிவே பேரின்பம் என்றும், வஞ்சகமான புலனின்பங்கள் கானல் நீர் போன்று உண்மையல்ல வென்றும் மிகத்தெளிவாகக் கண்ட விவேகத்தால் அகந்தை உன் திருவருளுக்கு ஊணாக்கப்பட்டு அழிந்து, நான் அவ் வான்மாவாக ஆகும்படி நீ விளங்குவாயாக.

48. நச்சி யிதயமே நாடி யடங்கலின்றி
யெச்செயலும் வீணென் றினியுரமாய் — நிச்சயித்தத்
தீரமிகு புத்தி திருவருளாற் றந்துவிட்டால்
ஓரணுவும் வேண்டேன்மற் றொன்று.

மிகுந்த பிரியத்தோடு ஆன்மாவையே நாடி அதிலேயே ஒடுங்கி விடுவதைத் தவிர வேறு எந்தச் செயலும் வீண்தான் என்று இனி திடமாக நிச்சயித்துவிடுகின்ற இந்த தீரம் மிகுந்த புத்தியை நீ எனக்குத் திருவருளால் தந்துவிட்டால், மற்ற எதையும் ஓரணுவளவு கூட வேண்ட மாட்டேன்.

49. உடலின்பந் தேடாம லுண்மையறி வின்பக்
கடலன்பி னெஞ்சங் கரையக் — கடவதுண்டோ
ஏதுமிய லாதவனா யெந்தா யுனைத்தஞ்சஞ்
சார்தலுற்ற சேயேன் றனக்கு.

என் தந்தையே! ஒன்றுமே ஆற்ற இயலாதவனாய் உன்னைத் தஞ்சம் புகுந்த உன் சேயாகிய எனக்கு இவ் வுடலின்பம் தேடாமல் சச்சிதானந்தக் கடலாகிய ஆன்மப் பிரியத்தில் நெஞ்சம் கரையும்படிநீ அருள் செய்யப் போவதுண்டோ?

50. ரமண குருபதமே ரட்சையென் றெல்லாச்
சமயமுமுன் றன்னினைவே சார்ந்தே — யிமையும்
வெளிமுகத்தி லேதும் விரும்பா விராகத்
தெளிவிலுயிர் வாழவெனைச் செய்.

'ஸ்ரீ ரமண சற்குருவினுடைய பாதங்களே எனக்கு ரக்ஷையாகட்டும்' என்றவாறு உடல் வாழ்வின் எல்லாச் சமயங்களிலும் உன்னுடைய நினைவையே சார்ந்தவனாய், இமைப் பொழுது கூட வெளிமுகத்தில் எந்தப் பொருளையும் விரும்பாத வைராக்கியத் தெளிவிலேயே நான் உயிர் வாழும்படிச் செய்தருள்க.

51. தூயமெய் யன்புச் சுடரா யகத்தெழுமென்
தாயகமாஞ் சற்குருபா தாரவிந்தந் — தோயா
தனியவா ரோப வசத்தியத்தை நாட
லினியேனு மோய வியக்கு.

பரிசுத்தமான மெய்யன்புச் சுடராக என் உள்ளத்தில் எழுகின்ற ஒன்றும், என் தாயகமும் (பிறந்த இடமும்) ஆகிய ஸ்ரீ ரமண சற்குருவின் பாதாரவிந்தங்களிலேயே எப்போதும் தோய்ந்து இருக்காமல், எனக்கு அன்னியமானதும் கற்பனையானதும் பொய்யானதுமான உலகத்தை நாடும் தன்மை இனியாவது என்னிடமிருந்து ஓய்ந்துவிடுமாறு நீ செய்தருள்க.

52. உன்பதத்தி னின்றன்றி யொன்றிலிருந் தேனுமுயிர்
இன்பம் பெறுவதே யில்லையென்ற — பொன்பொறித்த
மெய்யுரையைக் கேட்டும் விருப்பமித யத்திலுறாப்
பொய்மனவன் மைகெடநீ புல்.

உன்னுடைய பாதங்களில் (ஆன்மாவில்)இருந்தன்றி வேறு எதிலிருந்தும் உயிர்கள் இன்பம் பெறுவதே இல்லை என்று நீ அருளிச்செய்த பொன்னாற் பொறிக்கப்பட்ட

சத்திய வசனங்களாகிய உபதேசத்தைக் கேட்டபிறகுங் கூட, ஆன்மாவில் விருப்பம் ஏற்படாத என் பொய் மனத்தின் தீய சக்தி அழிந்து போகுமாறு நீ என்னைச் சேர்ந்தருள்வாயாக.

53. காணப் படுவதெல்லாங் கற்பனைச் சித்திரமாத்
தோணு மனோஜாலத் தோற்றமென்றே — காணும்
அறிவின் றெளிவா லசத்தியத்தி லாசை
யறவே யொழிய வருள்.

காணப்படும் பிரபஞ்சம் முழுவதும் எழுதாமல் கற்பனையாக மாத்திரம் கற்பிக்கப்பட்டச் சித்திரங்களாக மனோஜாலத்தால் தோன்றிக் கொண்டிருக்கும் தோற்றங்கள் என்று அறியும் மெய்யறிவின் தெளிவால் அவ் வசத்தியப் பொருள்களில் எனக்கு அறவே ஆசை ஒழியுமாறு அருள் செய்வாயாக.

54. கண்ட பனம்பழத்தைக் காமுற்றோன் கற்கண்டை
யுண்டபின்ன ரஃதை யொதுக்குதல்போன் — மண்டுபுலங்
கூட்டின்ப முள்ளங் குமட்டுமா றுன்னருளால்
வீட்டின்ப முண்ண விதி.

ஒரு பனம்பழத்தைக் கண்ட ஒருவன் அதை உண்ண விரும்பினாலும், அதற்கிடையில் ஒரு கற்கண்டைச் சுவைப் பானாகில், பிறகு அப் பனம்பழத்தை உண்ண வேண்டாமென்று ஒதுக்கிவிடுவது போல், புலன்கள் கூட்டி வைக்கும் எண்ணிறந்த இன்பங்களை யெல்லாம் என் உள்ளம் உன்னருளால் குமட்டுமாறு (வெறுக்குமாறு) மோக்ஷ இன்பத்தை நான் முதலில் உண்ணும்படி விதித்தருள்வாயாக.

55. திருசியமா மெண்ணமுதற் றேகமுல கெல்லாம்
உருசியுள்ள தென்றகருத் தொன்றே — விரிசலன
மெய்துகின்ற காரணமிவ் வீனக் கருத்தையறக்
கொய்தருள்வாய் நின்பொறுப்பிற் கொண்டு.

திருசிய நுட்பப் பொருளாகிய எண்ணங்கள் முதற் கொண்டு தூலப் பொருளாகிய தேகம் உலகம் ஈறாக உள்ள எல்லாப் பொருள்களும் ருசியுள்ள பொருள்கள் என்ற கருத்து ஒன்றுதான் மனச்சலனங்கள் மிகவும் விரிவடை வதற்குக் காரண மாகும். ஆகையால், நீயே பொறுப் பேற்றுக் கொண்டு இந்த ஈனமான கருத்தை அறவே அழித்தருள்வாயாக.

56. கந்தைநா ரானவொற்றைக் கௌபீன முங்கிழியக்
கந்தைநூன் முள்ளூசிக் கட்டிணைத்தே — யெந்தைநீ
வாழ்ந்தெமக்குக் காட்டியமா வைராக் கியத்தின்முன்
தாழ்ந்தேனவ் வைராக்யந் தா.

முன்பே நைந்துபோய் கந்தை நாராகக் காணப்பட்ட உன்னுடைய ஒற்றைக் கௌபீனமும் மிகவும் பெரிதாகக் கிழிந்து போன ஒருசமயம் அக் கந்தைத் துணியிலிருந்தே எடுக்கப்பட்ட நூலாலும் காட்டு முள்ளாற் செய்யப்பட்ட ஊசியாலும் அக் கௌபீனத்தைத் தைத்து உடுத்திக்கொண்ட என் தந்தையே! நீ எமக்கு வாழ்ந்து காட்டிய இத்தகைய மகா வைராக்கிய வாழ்வின் முன் நான் தாழ்ந்து நமஸ்கரிக்கின்றேன். எனக்கு அவ் வைராக்கியத்தைத் தருவாயாக.

57. கேட்டா லலாது கிடைக்கரிது மோட்சமென்று
நாட்டார் புகன்மொழியு(ம்) நாணமுற — மீட்டான்ம

வீடுதவு முன்பாலிவ் வீண்வாழ்வின் றேவைகளை
நாடுவதன் றோநன் னகைப்பு.

சாதகன் மோக்ஷத்தை விரும்பிப் பிரார்த்தித்தாலன்றி அது கிடைப்பது அரிது என்று உலகில் இருக்கும் வழக்குங் கூட (சொல்கூட) நாணமுறும்படி, உன் அன்பர்களுக்கு அந்த மோக்ஷத்திற்குப் பிரியத்தையுங் கொடுத்து, அவர்களை மீட்டு மோக்ஷத்தையும் வலியவே கொடுக்கும் வள்ளலாகிய உன்னிடம் என் அற்ப வாழ்வில் ஏற்படும் தேவைகளைக் கொடுப்பாய் என்று நான் நாடுவது அல்லவா பெரும் சிரிப்புக்கிட மாகும்?

58. உன்னருளி னம்பிக்கை யூன்றி யுறைக்காத
வென்னெளிய நெஞ்சுபல வீனத்தால் — இன்னதொன்று
தேவையுள தென்றென் சிறுவாழ்வுக் குன்னுமதை
ஈவதுமீ யாததுமுன் னேற்பு.

உன்னுடைய அருளில் பூரணமான நம்பிக்கை யூன்றி திடப்படாத காரணத்தால், என்னுடைய எளிய மனம் பலஹீனமானதாய் 'என்னுடைய சிறிய வாழ்வுக்கு இன்ன ஒரு பொருள் தேவையாக உள்ளது' என்று நினைக்கும். ஆனால், அதை ஈவதும் ஈயாததும் உன்னிஷ்டப்படியே செய்க.[6]

59. இஃதொன்று தேவைமற் றஃதொன்று தேவையென்
றெஃதொன் றினுஞ்சிறிது மெண்ணமுறா — தெஃதொன்றென்
வாணாளிற் றானாக வந்தடைவ தஃதுவக்கும்
மாணார் விராகம் வழங்கு.

'இந்த ஒரு பொருள் எனக்குத் தேவை; மற்றும் அந்த இன்னொரு பொருளும் தேவை' என்றவாறு எந்த ஒரு பொருளிலும் சிறிதும் விருப்பெண்ணம் உண்டாகாதவாறு, எந்த ஒன்று என் வாழ்நாளில் தானாக வந்தடைகின்றதோ, அதில் திருப்தி யடையும் சிறந்த வைராக்கியத்தை எனக்குக் கொடுத்தருள்க.

60. புத்தியைநீ யெற்குப் பொருத்தியது புன்புலத்தின்
பித்தினைமேன் மேலு(ம்)நான் பேணவோ — இத்தகைய
வீண்வேலை நீக்கி விவேகமோ [7]டுன்பதத்தைப்
பேண்வேலை தாராய் பிடித்து.

நீ எனக்குக் கூர்மையான புத்தியைக் கொடுத்தது அற்பப் புலன்கள் வழியே அனுபவிக்கும் புலச் சுவைகளின் பைத்தியத்தை நான் மேலும் மேலும் விருத்தி செய்வதற்குத் தானோ? இப்படிப்பட்ட வீண் வேலைகளை யெல்லாம் நான் விட்டு விட்டு, நல்ல விவேகத்தோடு உன் பாதங்களையே பிடித்துப் பேணுகின்ற சிறந்த வேலையை என் புத்திக்குக் கொடுப்பாயாக.

61. ஐம்புல வின்ப வனுபவிப் பென்பதகத்
தின்பமலா தில்லை யெனவுணர்ந்து — மைம்புலனுக்
காகாரந் தேடா தகத்தோய்வைத் தேடியுள்ளே
போகாதோ புந்திப் புலம்.

ஐம்புலன்களின் வழியாக அனுபவிக்கப்படும் சுகங்கள் என்பவை உள்ளே உள்ள ஆன்மசுகமே தவிர வேறில்லை என்று உணர்ந்துங்கூட, சுகத்தை முன்னிட்டு

[6] இந்நூலின் பாடல் 138ஐ இங்கு நோக்குக.

[7] 'டுண்முகமே காண்வேலை தாராய் களித்து' எனவும் பாடம். இதன் பொருள்: '...உண்முகமாகித் தன்னையே திரும்பிக் காணும் காரியமாகிய யோகத்தையே களிவோடு எனக்கு அருள் செய்க.'

ஐம்புலன்களுக்கு ஆகாரந் தேடக் கிளம்பாமல் என் புத்தியானது அகங்காரத்தின் ஓய்வைத் தேடி உள்ளே திரும்பாதோ?

62. உண்டி யுறையுளுடை தேட லுயிருடலி
லண்டியிருந் தான்மஞா னானுபவங் — கொண்டிடவே
யன்றி யுடல்வளர்க்க வன்று பிறந்தபய
னென்றறிந் துய்ய விரங்கு.

'உணவு வீடு உடை இவைகளைத் தேடுவது ஏனென்றால், உயிரானது உடலை யண்டியிருந்து இந்த வாழ்வில் ஆன்ம ஞானானுபவம் அடைவதற்காகவே; இதுவே பிறந்த பயன்; தவிர, உடலை வளர்ப்பதற்காக அல்ல' என்று அறிந்து நான் உய்வடையும்படி இரங்குக.

63. ஊழிற் கணித்தன்மே லோரணுவு மின்பதுன்பம்
வாழ்வின் முயன்றுபெற வாகாதென் — றாழப்
பதிந்தவிவே கத்தாற் பகிர்முகப்பாய் வின்றி
யெதிர்ந்தவையேற் றின்புறச்செய் யெற்கு.

பிராரப்தத்திற் கணிக்கப்பட்டதற்கு மேல் இவ் வாழ்வில் நாம் செய்யும் முயற்சியால் ஓரணுவளவு கூட இன்பத்தையோ துன்பத்தையோ நாம் அதிகமாகப் பெற்றுவிட முடியாது என்ற விவேகம் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து, அதனால் மனம் இன்ப துன்பங்களுக்காக வெளிமுகத்திற் பாய்வதை விட்டுத் தாமாகவே வந்து அடைபவை எவையோ, அவற்றை ஏற்று இன்புற்றிருக்க எனக்கு அருள் செய்க.

64. எழுதாப் படிக்கோ ரிடையூ றுறாதென்
[8]றெழுதர(ம்) நீ கூறி யிருந்தும் — முழுதுஞ்
சரணான நெஞ்சானான் சாந்தியிற்றோ யாது
முரணாத லென்னோ முறை.

பிராரப்தப்படி விளைவதே யன்றி எந்த ஒரு துன்பமும் ஒருவனுக்கு வந்துவிடாது என்று நீ பலமுறை உபதேசித்திருந்தும், உன்னிடம் முழுதும் சரணான நெஞ்சத்தால் நான் சாந்தியில் தோய்வுற்று இருக்காமல் மாறுபடுவது (அந்தத் துன்பங்களைக் கண்டு நொந்துகொள்வது) எப்படி முறையாகும்? (முறையாகா தல்லவா?)

65. அருளுத் தரவின்றி யாருமணு வேனும்
வெருவியெனக் கின்னா விளைக்கும் — உரனிலரென்
றுன்னி யடியே னுவர்ப்புறா மெய்யறிவை
யின்னே யருள்க வினிது.

உன்னுடைய திருவருளின் உத்தரவில்லாமல் எந்த ஜீவரும் ஒரு அணுவளவு கூட என்மேற் கோபித்துத் துன்பம் விளைவிக்கும் சக்தியுடையவர் களல்லர் என்றறிந்து, அடியேன் அவர்களிடம் வெறுப் படையாத மெய்யறிவை இப்போதே இனிதருள்வாயாக.

66. பெயப்படுந்தீ மைக்கென் பிராரத்த மன்றி
யயற்படுவோ ராளலரென் றாய்ந்து — வயப்படுஉம்
நெஞ்சத்தா லுள்ளடங்க லன்றி நிலைகுலையும்
வஞ்சத் துறாமலருள் வாய்.

[8] எழுதரம் — பலமுறை; ஏழு -- அளவின்மையைக் குறிக்க வந்ததோர் அளவு.

என்மேல் சுமத்தப்படும் தீமைகளுக்கு என் பிராரப்தமே காரணமன்றி மற்ற யாரொருவரும் காரணர் ஆகார் என்று அறிந்து, அதனால் கோபாதிகளிற் செல்லாமற் என் வசப்பட்ட நெஞ்சத்தால் உள்ளத்தில் ஒடுங்குகின்றதை விட்டு, கோபாதிகளால் தன் ஸ்திரநிலை குலையும் வஞ்சகத்திற்கு உட்படாதவாறு நீ அருள்வாயாக.

67. தொல்லைமுற்றுஞ் செய்யுஞ் சுபாவத்தார் தம்மிடத்தும்
எல்லையற்ற நற்பொறுமை யெய்திநடந் — தல்லலற்று
வாழும் வலிமை வழங்கியரு ணின்னடிக்கே
தாழுந் தமியேன் றனக்கு.

எப்போதும் நிறைந்த துன்பங்களையே பிறருக்குச் செய்யும் சுபாவமுடைய கொடியோரிடத்துங் கூட எல்லையற்ற நல்ல பொறுமையையே கையாண்டு நடந்துகொண்டு, அதனால் அல்லலற்று வாழும் வலிமையை, உன் திருவடியிலேயே தாழ்ந்து வணங்கும் அடியேனாகிய எனக்கு நீ வழங்கி யருள்வாயாக.

68. பகுத்தறிவீ தென்றுந் தொகுத்தறிவீ தென்றும்
இகத்தறிவி லேமாப் புறாமல் — அகத்தறிவாய்
மிஞ்சும் பரமார்த்த வெற்றறிவா மின்பமுனைக்
கெஞ்சுநா னெய்தக் கிளர்.

'இது விஷயங்களைப் பகுத்துப் பகுத்து அறிகின்ற அறிவு' என்றும், 'இது பலவான விஷயங்களையும் ஒன்றுபடுத்தித் தொகுத்து அறிகின்ற அறிவு' என்றும் சாமர்த்தியத்தோடு அறிகின்றஇவ் வுலக அறிவில் நான் பெருமை கொள்ளாமல், 'நான்' என்று விளங்கும் ஆன்ம அறிவாய், பரமார்த்த ஞானமான வெற்றறிவாய் மிஞ்சி நிற்கும் பேரின்பத்தை, உன்னைக் கெஞ்சுகின்ற நான் அடையுமாறு ஸ்புரித்தருள்க.

## 11. விசாரத்துதவ வேண்டல்

69. இருந்த படிநா னிராம லெழுந்தே
வருந்தும் வகைகண்டு கொண்டேன் — மருந்திதற்குன்
வாய்மலர்ந்த நானாரென் வாசகமே யானுட்கொண்
டோய்வுறநீ யேயருளா லூட்டு.

'நான் நானே' என்று விளங்குகின்ற சச்சிதானந்த ஆன்ம சொரூபமாக இருந்தபடியே இராமல், 'நான் ஒரு தேகம்' என்ற வடிவில் எழுந்ததனால் துன்புறுகின்றேன் என்ற உண்மையைக் கண்டுகொண்டேன். இத் துக்க நிவிருத்திக்கு மருந்து யாதெனின், நீ திருவாய் மலர்ந்தருளிய 'நான் யார்?' என்ற உபதேச வாசகமே யாகும். இவ் விசார மருந்தை உட்கொண்டு நான் துக்கத்தினின்று ஓய்வுறுமாறு உன்னருளால் நீயே எனக்கு அம் மருந்தை யூட்டுவாயாக.

70. இந்ததே கத்தைநா னென்றபிமா னிக்குமுன்
எந்தப் பொருணா னிறந்தபின் — சொந்தமாய்
எவ்வா றெதாவிருப்பே னேதுநா னிக்குழப்பம்
ஒவ்வா துடனே யுணர்த்து.

இந்த மானிட சரீரத்தை 'நான்' என்று அபிமானிக்கும் முன் நான் யாராயிருந்தேன்? இந்தச் சரீரம் இறந்தபின் எந்தப் பொருளை என் சொந்த சொரூபமாய் எவ்வாறு உணர்ந்திருப்பேன்? அப்போது 'நான்' எது? இத்தகைய குழப்பங்கள் தகாதன வல்லவா? ஆகையால் நீ உடனே எனக்கு இதன் உண்மையை உணர்த்துவாயாக.

71. நாற்றப் புலைச்சுமையை நானென்றெவ் வாறுதா
னேற்றுக் கொளச்சம்ம தித்தேனோ — ஏற்றபின்னர்

தீர்ந்திவ் வபிமானச் சேர்க்கையற நான்யாரென்
றோர்ந்திடவே னும்வந் துதவு.

துர்நாற்றம் பொருந்திய இம் மாமிச மூட்டையை 'இது தான் நான்' என்று ஏற்றுக் கொள்வதற்கு எவ்வாறுதான் நான் சம்மதித்தேனோ? அவ்வாறு தேகாத்ம புத்தியை ஏற்றுக் கொண்டு விட்டதால், இவ் வபிமானச் சேர்க்கை அறவே தீர 'நான் யார்?'என்று விசாரித்து அறிந்துகொள்ளவாவது நீ அருளோடு வந்து உதவுக.

72. இவ்வுடலைக் காண்போ திதுவோநா னென்றைய
மொவ்வொருகான் மட்டு முதித்தென்ன — செய்வதைத்
தீரவிசா ரித்துத் திரமா யனுபவித்துள்
ளோரபர பத்தியெனக் கூட்டு.

இவ் வுடலைப் பார்க்கும் பொழுது ஏதோ ஒவ்வொரு சமயத்தில் மட்டும் 'இந்த உடம்பா நான்?' என்ற சந்தேகம் உதிப்பதால் மட்டும் என்ன பிரயோசனம்? அதைத் தீர விசாரித்து, நான் இவ் வுடலல்ல வென்றால் பிறகு எது நானோ, அதை ஸ்திரமாக உள்ளே அனுபவித்து அறிய எனக்குப் பரபக்தியைநீ ஊட்டுவாயாக.

73. சொற்றவறாச் சீடர் சொரூப விசாரமுற்றுக்
கற்றடையுங் கல்விக் கடலிலோர் — சிற்றணுவை
யானு முறுமா றகவிசா ரத்திதிப்புத்
தேனுருசி காட்டியருள் செய்.

உனது உபதேசங்களைப் பின்பற்றுவதில் சிறிதும் தவறாத சற்சீடர்கள் ஆன்ம விசாரத்தில் ஈடுபட்டு கற்று அடையும் ஆன்மானுபவக் கல்வி யென்னும் கடலில் ஒரு சிறு அணுவளவாவது நானும் அடையுமாறு ஆன்ம விசாரத்தேனின் தித்திப்பு ருசியைக் காட்டி யருள்வாயாக.

74. அருளா லலாம லகந்தை யழிக்குந்
தெருளெங்ங னேழையேன் சேர்வேன் — பொருளேதென்
[9]னாய்வாவுள் ளந்தர்முக வாவலா வல்லமையாப்
பாய்வா யருளாற் பரிந்து.

உன்னுடைய திருவருளால் அல்லாமல் அகந்தையை அழிக்கக் கூடிய சக்தியை ஏழையாகிய நான் எவ்வாறு அடைவேன்? ஆகையால், நீ உன்னுடைய அருளால் என்னுள் 'மெய்ப்பொருள் எது?' என்ற விசார ரூபமாகவும், ஸ்வாத்ம பக்தி ரூபமாகவும், தன்னிலேயே நிலைத்து நிற்கும் வல்லமை வடிவாகவும் பரிவோடு பாய்வாயாக.

75. விருப்பு வெறுப்பின் விளைவுசுக துக்கம்
இருப்பனவா யின்மையாய்ப் புந்திக் — குருப்படன்மேல்
நானுண்டா வென்றுபுத்தி நாடவருள் வாயேற்பின்
னேனுண்டு துன்பின் பெனக்கு.

இருக்கக் கூடிய பொருள்களாகவும் இல்லாத பொருள் களாகவும் என் புத்திக்குக் காணப்படும் உலகப் பொருள்களின் மேல் விருப்பமாகவும் வெறுப்பாகவும் உண்டாகும் உணர்ச்சிகளே முறையே சுகமாகவும் துக்கமாகவும் அனுபவிக்கப்படுகின்றன; ஆகையால், "இவை யாருக்குத் தோன்றுகின்றனவோ, அந்த 'நான்' உண்மையில் உண்டா?" என்று தன்னை நாடும் புத்தியைக் கொடுப்பாயாகில், பிறகு எனக்கு இன்பமோ துன்பமோ ஏன் இருக்கப் போகின்றது?

[9] 'ஆய்வு ஆ' — விசார ஆய்வின் வடிவாகவும்.

76. வெருளுறவே சிந்தை வெளிமுகமா காமல்
ஒருமுகமா யுள்ளே யுசாவித் — திருவருளால்
உள்ளபொரு ளுன்னிடத்தி லொன்றாகிப் பேரின்ப
வெள்ளவடி வாக விதி.

என் புத்தி மிரண்டு வெளிமுகப்படாமல் ஒருமுகப்பட்டு உள்ளே விசாரித்து, உள்ளபொருளாகிய உன்னிடத்தில் திருவருளால் ஒடுங்கி ஒன்றாகிப் பேரின்ப வெள்ள வடிவ மாகுமாறு நீ பணித்தருள்க.

77. விளங்கு முனையே விடாப்பிடியாய் நானென்
றுளங்கொண்டு பற்றியமிழ்ந் துள்ளே — வளங்கொண்ட
மோனமுற வைத்தருள்வாய் முன்னயன்மான் முன்னருண
ஞானமலை யானரம ணா.

முன்னொரு காலத்தில் பிரம்ம விஷ்ணுக்களின் முன்னே 'அருணாசலம்' என்னும் ஞானமலையாக எழுந்தருளிய ரமணா! 'இருக்கிறேன்' என்று எப்போதும் விளங்குகின்ற உன்னையே 'நான்' என்று உள்ளத்தில் அறிந்துகொண்டு, விடாப்பிடியாய்ப் பற்றிக் கொண்டு, உள்ளே அமிழ்ந்து திடமான மோன நிலை பெறுமாறு என்னை வைத்தருள்வாயாக.

78. ஒன்றுமறி யாதுமே லொன்றுமிய லாதுனைவந்
தின்று சரணடைந்த வென்னையா — ரென்று
விசாரிக்க நீவிதித்தால் வீறெனக்கே தென்மேல்
நிசாதிக்க முள்ளோய் நிகழ்த்து.

ஒன்றுமே யறியாமலும், மேலும் யாதொன்றுமே செய்ய சக்தியற்ற அசக்தனாகவும், நான் இன்று வந்து உன்னைச் சரணடைந்தேன். அத்தகைய என்னை 'நான் யார்?' என்று விசாரிக்கும்படி நீ விதித்தால், விசாரிக்க எனக்கு சக்தி ஏது? என்மேல் நிஜ ஆதிக்கம் உள்ளவனாகிய நீயே என்னுள் இவ் விசாரத்தை நடத்துவாயாக.

## 12. ஊழை வெல்ல வேண்டல்

79. இருட்பிரா ரத்தத் திருவினையா காதுன்
னருட்பிரசா தத்தா லமையுந் — தெருட்பொலிவா
யேழையேன் றேக விகவாழ் விருத்துகநீ
யூழையேன் கொள்வ தொதுக்கு.

ஏழையேனாகிய எனது இப் பிறவியின் தேக வாழ்க்கை அஞ்ஞானத்தால் உண்டான நல்-தீ வினைகளாலாகிய பிராரப்தத்தின்படி நடக்கக் கூடிய ஒரு வாழ்க்கையாகாமல், உன் அருட்பிரசாதத்தால் அமைக்கப்படுகின்ற ஞானத் தெளிவோடு கூடிய பொலிவுடைய வாழ்க்கையாகச் செய்தருள்க. என் பிராரப்தத்தை நீ ஏன் அனுசரிக்க வேண்டும்? அதை ஒதுக்கிவிடுக.

80. ஊழ்வினையின் றுன்பமகன் றுய்ய வருணகிரிச்
சூழ்வலம்வந் துன்னைத் துதிப்போரப் — பாழ்வினையின்
ஓரடை யாளமெனு முண்ணா தழிக்குமுன்
பேரருளென் மீதும் பெருக்கு.

ஊழ் வினையின் துன்பங்களினின்றும் தப்பிக்க எண்ணி அருணகிரியை வலம் வந்து உன்னைத் துதிக்கும் அடியார்கள் அந்தப் பாழான பிராரப்த வினையின் ஒரு சிறு அடையாளத்தைக் கூட அனுபவிக்கத் தராமல் அழித்துவிடுகின்ற உன்னுடைய பேரருளை என் மீதும் பொழிவாயாக.

81. உனைப்பிடி கொள்ள வுரனிலா னென்றே
யெனைப்பிடி யேன்விடுவை யெந்தாய் — வினைப்படி
யாக விடாதே யருள்ரமணா வுன்பொருட்டுச்
சாகவர மொன்றேனுந் தா.

எந்தையே! தன் முயற்சியால் உன்னைப் பிடித்துக் கொள்ளும் சக்தியற்றவன் என்றுகூறி என்னை நீ எப்படிக் கைவிடலாம்? என் வாழ்வு பிராரப்தப் பிரகாரம் ஆகும்படி விடாதே. அருள் ரமணா! நான் உன் பொருட்டுச் சாகும் ஒரு வரத்தையாவது கொடு.

82. என்விருப்பத் தாலே யெழுந்தகன்ம மூழாயிற்
[10]றென்விருப்ப மோவுனையின் றெய்துவதே — முன்விருப்பம்
பாழ்பட் டழிக பரம்பொருளுன் னாசைமிக்கு
வாழ்வுற் றமர்க மனம்.

முன் ஜன்மங்களில் நான் விரும்பிச் செய்தவைகளின் பலனே இந்த ஜன்மத்தில் பிராரப்தமாக ஆகிவிட்டது. ஆயினும், இந்த ஜன்மத்திலோ என் விருப்பம் உன்னை அடைவதே யாகும். என் பூர்வ ஜன்ம விருப்பங்கள் பாழ்பட்டு அழியட்டும். என் மனம் பரம்பொருளாகிய உன்மேல் பக்தி மிகுந்த வாழ்வில் நிலைபெறட்டும்.

83. புன்னிரும்பும் வேதிகையைப் புக்கிற் பொலிவுடைய
பொன்னெனவே யாதற் புதுமையோ — என்னுடைய
வூழுன் னருளா லுருமாறி யுன்பாத
வாழ்வென் றமைய வருள்.

அற்ப இரும்பும் ஸ்பரிசவேதியைப் பெறுமேயானால், அது பிரகாசமுடைய பொன்னாக மாறிவிடுவதில் ஆச்சரியம் என்ன இருக்கின்றது? அதுபோலவே, என்னுடைய ஊழால் அமைந்த இப் பிறவியும் உன்னை யடைந்ததால் உன் அருளாகிய ஸ்பரிசவேதியால் மாற்றப்பட்டு குருபாத வாழ்வு என்றவாறு உருமாறி அமையும்படி அருள்வாயாக.

84. உயிர்க்கொலைசெய் வோன்றன் னுடைவாளா னாலும்
வயித்தியன்கை வந்தபின்னர் வன்னோய் — பெயர்த்துதவும்
துன்பூழு முன்னருட்கை தொட்டுவிட்டால் ஞானப்பே
ரின்பூழா மாறு மெனக்கு.

உயிர்களைக் கொலை செய்யும் ஒரு கொடியோனிடமிருந்த உடைவாளே யானாலும், அது ஒரு வைத்தியன் கைக்கு வந்து விட்டால், பின்னர் உயிர்களைக் கொடிய நோய்களினின்றும் காப்பாற்றுகின்ற சிகிச்சை செய்யுங் கருவியாக மாறி அவர்களுக்கு உதவும். அதுபோலவே, துன்பத்தையே கொடுக்க முற்பட்டதான என் பிராரப்தமும் உன் அருட்கையால் தொடப்பட்டுவிட்டால், எனக்கு ஞானப் பேரின்பத்தைக் கொடுக்கும் பிராரப்தமாக மாறிவிடும்.

85. [11]நீயுத் தரவளித்தா லன்றி நெடுவினைதா
மேயுற் றொபலனு மீயாநீர் — பாய்தற்கு
வல்லான் வகுத்ததே வாய்க்காலன் றோவெல்லாம்
வல்லாய் வகுப்பாய்வழி.

---

[10]'இன்று என் விருப்பமோ உனை எய்துவதே' எனக் கூட்டுக.

[11]'கர்மம் பயன்றரல் கர்த்தன தாணையால்' என்ற விதிப்படி வேண்டப் பெற்றது.

எந்தப் பெரிய ஊழ்வினையானாலும், நீ உத்தர வளித்தாலன்றி அது தாமாகவே வந்து எந்தப் பலனையுங் கொடுத்து விட முடியாதல்லவா? நெல் வயல்களுக்குப் பாயும் நீர் ஓட வேண்டிய வாய்க்காலின் வழி யொன்று வல்லவனாகிய ஒருவன் வகுத்தவாறே அமைகின்ற தல்லவா?அது போலவே, எல்லாம் வல்லவனே, என் வினைகள் ஞானப் பிராரப்தமாகப் பாய்வதற்கு நீயே வழி வகுப்பாயாக.

86. எப்போது(ம்) நம்பி யிருக்கும் பெருந்துணையென்
னப்பாநின் பாத வருண்மலரே — தப்பாக்
குருவருளாம் வேங்கைக் குறிப்பிலகப் பட்டு
முருவழியா தோவடியே னூழ்.

என் அப்பாவே! நான் எனக்குப் பெருந்துணையாக எப்போதும் நம்பி யிருப்பது உன் அருட் பாதங்களாகிய மலர்களையே அல்லவா? தப்பிக்க முடியாத குருவருளாகிய வேங்கைப் பிடியாம் உன் குறிப்பில் அகப்பட்டுங் கூட, அடியேனுடைய பிராரப்தம் உருவழியாதோ?

87. தானன்றி யொன்றுந் தலைதூக்க வொட்டாத
கோனன்றோ நீயென் குருரமணா — ஏனென்
றெதிருரைப்போ ராருண்டிங் கீசசத்தி யாலென்
விதியையருட் கீழடக்கி மீறு.

என் குரு ரமணா! உன்னைத் தவிர யாரும் 'தான்' என்று தலைதூக்கிக் கிளம்பவொட்டாத அருட் பேரரசனல்லவா நீ? ஆகையால், உனது ஈசுவரசக்தியால் என் விதியை உன் அருளின் கீழ் அடக்கி மீறுவாயாக. 'ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?' என்று உன் ஆணைக்கு எதிர்த்துப் பேசுவார் இங்கு யாருண்டு?

88. எந்தப் பிராரத்த மேனும் பலன்றருதல்
எந்தையுன் கையுள் ளிருப்பதாற் — சொந்தமுடன்
என்னை யடிமையா யேற்ற வுனதருண்முன்
என்னவினை யென்செய் திடும்.

நன்மையோ தீமையோ ஆகிய எத்தகைய பிராரப்தமும் பலன் கொடுத்தல் என் தந்தையாகிய உன் கைவசத்திலேயே இருப்பதால், மிகுந்த உரிமையோடு என்னை உன் அடிமையாக ஏற்றுக்கொண்ட உன்னுடைய திருவருளுக்கு முன் என்னுடைய எந்த வினைதான் எந்தப் பலன் தான் தந்துவிட முடியும்? (முடியா தென்க.)

## 13. பிரமாத மற வேண்டல்

89. கண்ணா லறிவுதருங் கண்ணா மனித்தவுரு
வண்ணா மலைரமண வண்ணலே — யுண்ணாடும்
பேரூக்கந் தந்து பிரமாதப் பேய்விருட்சம்
வேரோ டழிய விதி.

உனது அருட்பார்வையாலேயே ஞானத்தைக் கொடுக்கும் கண்ணனே! மனித உருவத்தை எடுத்துக்கொண்ட அண்ணாமலையாகிய ரமண அண்ணலே! ஆன்மாவை நாடும் பேரூக்கத்தை எனக்குத் தந்து, ஆன்மாவினின்றும் நழுவும் பிரமாதமாகிய (சலிப்பாகிய) பேய் விருக்ஷம் வேரோடு அழியும்படி விதிப்பாயாக.

90. பிரமாத மென்னும் பெரும்பேய்ப் பிடிப்பால்
உரமா யகவுணர்வி லூன்றேன் — வரமாய்
அருளத் திரம்விட் டருள்வாயப் பேய்தன்
கருவற் றழியக் கடிது.

பிரமாதம் என்னும் பெரிய பேயால் பீடிக்கப்பட்டதால் தான் ஆன்மவுணர்வில் ஸ்திரமாக ஊன்றிக்கொள்ள (நிஷ்டையுற) முடியவில்லை. அந்தப் பேய் தன் மூலத்தோடு அழியுமாறு உன் அருளஸ்திரம் விடுதல் என்ற வரத்தை நீ எனக்கு விரைவில் அருள்வாயாக.

91. விழிப்புக் குதவாத வீண்வேலை யெல்லாம்
ஒழித்துன் னுபதேச மூட்டும் — [12]வழிப்புக்கிவ்
வாழ்வுபய னாகவருள் வல்லமையாற் சோம்பலெனும்
ஏழ்மையற வென்னை யியக்கு.

மெய்ஞ்ஞான ஆன்ம விழிப்புக்குச் சாதகமாகாத எல்லாவித வீண் காரியங்களையும் நான் ஒழித்துவிட்டு, உன் உபதேசம் காட்டும் விசார வழியில் புகுந்து இவ் வாழ்வைப் பயனுள்ளதாகச் செய்துகொள்ளத் தடையாக வரும் சோம்பல் என்னும் ஏழ்மையை உன் அருள் வல்லமையால் அழித்து என்னை விசார வழியில் இயக்குக.

92. உடைந்து தளர்ந்துலரு முள்ளமினி யேனும்
அடைந்துன் னருளடிகட் கன்பு — தொடர்ந்தயராப்
பேரூக்கங் கொண்டு பிரமாதந் தீரவரு
ணீருற்றித் தூக்கி நிறுத்து.

சாதனையில் மனமுடைந்து தளர்ந்து வற்றிப் போகும் என் உள்ளமானது இனியாவது உன் அருள் திருவடிகளில் அன்படைந்து அயராத பேரூக்கங் கொண்டு விசாரத்தைத் தொடருமாறு என் பிரமாதத்தைத் தீர்ப்பதற்காக அருளாகிய தண்ணீரை என் உள்ளத்தில் ஊற்றி என்னைத் தூக்கி நிறுத்துவாயாக.

93. பிரமாதத் தாலே பெயர்ந்தகலுஞ் சிந்தை
யுரமாக வுன்னிடமே யூன்றி — நிரந்தரமாய்
அன்புபூண் டைக்கியமுற் றானந்தங் கொள்ளுமா
றெம்பெருமான் சற்றே யிரங்கு.

எம்பெருமானே! பிரமாதத்தாலே ஆன்ம லக்ஷியத்தை விட்டுப் பெயர்ந்து பிற எண்ணங்களாக அகலும் சிந்தையானது அவ்வாறின்றி உன்னிடத்திலேயே வலிவோடு ஊன்றி, அன்பு பூண்டு, நிரந்தரமாக ஐக்கியமுற்று, ஆனந்தங்கொள்ளுமாறு நீ சிறிது இரக்கங் கொள்வாயாக.

## 14. கலைமோக மற வேண்டல்

94. காணுலகு தன்னுட் கவிந்திருந்த வாதனையின்
மாணுருவல் லாதுண்மை வாய்ந்திலதால் — வீணுழல்வு
பூண்டு பலகலைதேர் பூவுலக ஞானமெலாம்
மாண்டிதய வாழ்விலுற வை.

நான் பார்க்கின்ற இவ் வுலகம் என் உள்ளத்திற் கூடியிருந்த நுட்பமான வாசனைகளின் ஸ்தூல உருவங்களேயல்லாமல், அது சத்தியமற்ற தாகையால், இவ் வுலக வாழ்வில் பற்பலவிதக் கலைஞானங்களைக் கற்றுத் தேர்ச்சியுறுவதற்காகச் செய்யும் வீண் உழைப்புக்க ளெல்லாம் அழிந்து, இதயத்தில் மூழ்கும் ஆன்ம வாழ்வில் நான் ஈடுபடும்படி என்னை வைப்பாயாக.

95. சொப்பனத்தி லீட்டிவைத்த சொத்துபோற் பல்கலைகள்
கற்பதனா லாம்பயனான் கண்டுகொண்டேன் — நற்பயனாம்
உண்மை விழிப்புக் குதவாத கல்வியெலாந்
திண்மைவிலங் கீதைத் தெறி.

[12]'விழிப்புற்றிவ் வாழ்வு' எனவும் பாடம்.

பற்பல கலைகளையும் கற்பதனால் கிடைக்கின்ற பயன் ஒருவன் சொப்பனத்தில் சம்பாதித்து வைத்த சொத்துக்களைப் போல் உண்மையில் நிஷ்பலனே என்பதை நான் கண்டு கொண்டேன். நல்ல புருஷார்த்தமாகின்ற மெய்ஞ்ஞான விழிப்புக்கு உதவாத இந்த பூலோகக் கல்வி யெல்லாம் பெருத்த விலங்கே யாகின்றன. ஆகையால் இவ் விலங்கை உடைத்தெறிவாயாக.

96. வெற்றிருப்பா நானா விளங்குஞ் சுகானுபவம்
பெற்றிருப்பே யான்கேன் பெருநிதியம் — கற்றிருப்ப
தித்தனைநா ளேதோ விவைதா னெனைத்தடுக்குஞ்
சித்தமல மாயைத் திரை.

நான் உன்னிடம் யாசிக்கும் பெருஞ்செல்வம் யாதெனில், உபாதிக் கலப்பற்ற 'நான்' என்னும் இருப்பு மாத்திரமாக விளங்கும் சுகானுபவ நிலையே யாகும். ஆனால், இத்தனைக் காலமாக நான் எவையெவைகளைக் கற்றிருக்கின்றேனோ, அந்தக் கலையாகிய செல்வங்களே மேற்சொன்ன என் சுகானுபவத்தைத் தடுக்கின்ற சித்தமல மாயையாகிய திரையாக நிற்கின்றனவே!

97. வித்தை பலவாம் விரிவை யுணருங்காற்
புத்தி கலங்கிப் புலனோய்ந்து — சத்திதருஞ்
சித்திகளிற் பாயுஞ் சிரத்தையெலா முட்டிருப்பிச்
சத்தியத்தி லூன்றவுரந் தா.

அபர வித்தைகள் எண்ணிறந்தவைகளாய் விரிவதைப் பார்க்கும் போது, அவை யாவற்றையுங் கற்றுத் தேற வேண்டும் என்று விரும்பிய புத்தி மலைப்புற்றுக் கலங்கி, புலன்கள் ஓய்ந்து, அவைகளில் தேறுவதற்கான சக்தியைக் கொடுக்கக் கூடிய சித்திகளை முதலிற் பெறுவோம் என்ற தீர்மானத்தோடு சித்தி வழியிற் பாயும் சிரத்தையை யெல்லாம் தடுத்து, உள்ளே திருப்பிச் சத்திய வஸ்துவாகிய ஆன்மாவில் ஊன்றுவதற்கு நீ அருட்சக்தியைத் தருவாயாக.

98. எல்லா வறிவு மிருப்பறிவின் மாயமவை
கல்லா திருப்பறிவைக் கற்றடங்கி — நில்லா
தெழுந்துகலை யாவ லிருட்குழியி லேழை
விழுந்தழிவ தைத்தடுத்து [13]மீள்.

எல்லா அறிவுகளும் 'இருக்கிறேன்' என்கிற சச்சித்தின் திரிபுகளே யாகும். ஆகையால், மாயத் திரிபுற்ற அந்த அறிவுக் கலைகளைக் கற்க முயலாமல் இருப்பறிவை (சச்சித்தை, ஆன்மாவைக்) கற்று, அதிலேயே, அடங்கி நிஷ்டையுற்றிருப்பதை நீத்து, 'நான் ஒரு ஜீவன்' என்றெழுந்து, கலைகளின் ஆவலாகிய இருட்குழியில் இவ் வேழையேன் விழுந்து அழிவதை நீ தடுத்து என்னை மீட்டுக்கொள்வாயாக.

## 15. ஆன்மக் கல்வி யருள வேண்டல்

99. செத்தும் பிறந்துந் திரும்பித் திரும்பிவரும்
பித்த மயக்கமெனும் பேய்ப்பிடிவிட் — டெத்தால்
அருள்ஞான மாமோ வனுபவமா யஃதை
குருரமணா சொல்லிக் கொடு.

குரு ரமணா! ஜனன மரணம் என்னுஞ் சுழலிலே சிக்கி மீண்டும் மீண்டும் பிறப்பதும் இறப்பதுமான வெறி மயக்கப் பேயின் பிடியிலிருந்து விடுபட்டு, எதனால் அருள்ஞானமடைய முடியுமோ. அந்தக் கல்வியை எனக்கு அனுபவமாகச் சொல்லிக் கொடுப்பாயாக.

---

[13] மீள் — மீட்டருள்

100. அற்புதமாக் கண்ட வருணா சலரமணப்
பொற்பதத்தை யன்றிப் புகலறியேன் — கற்பதொரு
கல்வி வெளிமுகத்திற் காட்டா தகமுகமே
புல்விப்ப துன்றன் பொறுப்பு.

எப் பிறப்பிலும் தரிசிப்பதற்கு அரிய அற்புதமாக இப் பிறப்பில் நான் கண்ட அருணாசலரமண சற்குருவின் பொற்பாதங்களைத் தவிர வேறு புகல் அறியேன். ஆகையால், நீ எனக்கு வெளிமுகத்திற் கற்கும் எந்த ஒரு கல்வியிலும் வசீகரத்தைக் காட்டாமல் ஆன்மாபிமுகமாகவே திரும்பும்படி என்னைச் செய்வது உன் பொறுப்பே யாகும்.

101. பார்த்தும் படித்தும் பழகியும் பல்விதமா
வோர்த்தவறி வெல்லாமின் றுண்மையிலுன் — சீர்ப்பதம்விட்
டென்னைநெடுந் தூர மிழுத்தலைப்ப தென்றறிந்தேன்
உன்னையுறுங் கல்வியெனக் கூட்டு.

இவ்வளவு காலமாக நேரில் பார்த்தும், நூலகளிற் படித்தும், பயிற்சி செய்து பழகியும் பல்வேறு துறைகளில் நான் அடைந்த அறிவெல்லாம், இன்று யோசித்துப் பார்க்குமிடத்து, உண்மையில் உன்னுடைய அருட்பாதங்களை விட்டு என்னை நெடுந்தூரம் அகற்றி அலைய வைப்பது அவைகள் தான் என்று அறிந்துகொண்டேன். ஆகையால் இனிமேலேனும் உன்னை வந்து அடையும் ஆன்மக் கல்வியையே எனக்குப் போதிப்பாயாக.

102. தன்மை யொருமையி னுண்மையாய்த் தங்கியென்றும்
பன்மையா காத பரம்பொருளே — புன்மையேன்
பல்விகற்ப ஞானமாம் பாழைக் கடக்கவைக்குங்
கல்விகற்ற டங்கவொளி காட்டு.

தன்மை ஒருமையாகிய அகந்தைக்கு மூலஸ்தானமும் உண்மையான தன்மைப் பொருளுமாக விளங்கி, என்றுமே இந்தப் பிரபஞ்ச ரூபப் பன்மை வடிவை எடுக்காத (அஜாத) ஆன்மப் பரம்பொருளே! அற்பனாகிய நான் பல வேறுபட்ட ஞானமாகிய கலைகள் என்னும் பாழைக் கடந்து செல்வதற்கு உதவக் கூடிய ஆன்மக் கல்வியைக் கற்று, அதைக் கூட 'கற்றேன்' என்று உணர எழும்பாமல் அடங்கிவிட உனது அருளொளியைக் காட்டுக.

103. விண்டு விளக்காத வித்தையை வேற்றவைபோற்
கண்டறியக் கூடாத காட்சியை — தொண்டுபட்டு
முற்றூணா நானழிந்த மோனத்தை யுள்ளபடி
கற்றுக்கண் டுண்ணவைத்துக் காட்டு.

சொல்லி விளக்க முடியாத பரவித்தையை, கண்டு அறியும் பிற பொருள்களைப் போலக் காணமுடியாத அருட்காட்சியை, உனக்கு அடிமைப்பட்டு, உனக்கே ஊணாகி நான் முற்றும் அழிந்து போன மோனத்தை முறையே உள்ளபடி கற்றும், கண்டும், உணர்ந்துங் கொள்ளக் காட்டுவாயாக.

104. எழும்பு(ம்)நான் றுக்க வெழுச்சியே துக்கம்
எழும்பு மெனக்கே யெனாலே — செழும்பரமா
நிற்கு மசல நிலையிற் றிரியாமை
கற்க வருளாற் கணி.

'நான் இன்னார்' என்றவாறு எழும்புகின்ற 'நான்' துக்கத்தின் எழுச்சியே யாகும். அந்தத் துக்கமுங் கூட எழும்பிய எனக்கே தவிர, என் மூலப்பொருளாகிய ஆன்மாவுக்கு அல்ல. அவ் வகந்தை எழுச்சிக்குக் காரணமும் அகந்தையாகிய நானே. ஆனால், இவ் வெழுச்சிக்கும் துக்கத்திற்கும் அப்பாற்பட்ட செழும் பரமாத்மாவாக நிற்கும் அசல நிலையில் நான் மாறுபடாமல் நிற்கும் நிஷ்டை நிலையை உன்னருளால் நான் கற்கும்படி விதிப்பாயாக.

105. துக்கசுகந் தோன்றாச் சுழுத்தி யறிவொளிரின்
மிக்கததின் வேறு விழிப்பிலுண்டோ — எக்குறையும்
அற்றறிவா நிற்கு மகண்ட சுழுத்தியியற்
கற்றதுவா நிற்கக் கணி.

சுகதுக்கங்கள் தோன்றாத தூக்கத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற அறிவு அனுபவமாகுமாயின், அதைவிடச் சிறந்த நிலை விழிப்பில் என்ன இருக்கிறது? ஆகவே, எந்தக் குறையும் இல்லாது அழிந்து வெறும் அறிவு மாத்திரமாக நிற்கும் அகண்ட சுழுப்தி யனுபவத்தைக் கற்று, அதுவே நானாக நிற்கவும் நீ கணிப்பாயாக.

## 16. வாசனாக்ஷயம் வேண்டல்

106. அருளா லலாம லனாதிமல வாதைத்
திரணின் றகலுந் திறனோர் — நரனாலு
மாகாதென் றெந்தா யறிந்தேனின் னாளாநீ
யேகாக்க வேண்டு மினி.

திருவருளின் உதவி யில்லாமல், அனாதியாய் இருந்து வரும் மலவாதனைகளின் கூட்டத்தினின்றும் விடுபடும் சக்தி எந்த மனிதனுக்கும் இல்லை என்று அறிந்து கொண்டேன். ஆகையால், எந்தையே, நீயே என்னை உனக்கு ஆளாக்கி இனி என்னை அம் மலவாதனைகளினின்றும் காத்தருள வேண்டும்.

107. தூலவுடற் சாவாற் சுகமில்லை சித்தமெனு
மூலவுடற் சாவெனக்கு மூட்டுகவே — ஆலமிடற்
றன்றேற்றா யென்னுள் ளனாதிமல வாதைவிட
மின்றேற்றா லில்லை யிடர்.

இந்த ஸ்தூல உடல் இறந்து போவதால் என் துக்கங்கள் நீங்கி சுகம் உண்டாகிவிடாது. வாசனைகளின் கூட்டமாகிய சித்தம் என்னும் மூல உடல் எனக்குச் சாகும்படி உன் அருளை மூட்டுக. முன்பொரு காலத்தில் நீ ஆலகால விஷத்தை உன் கண்டத்தில் ஏற்றுக் கொண்டாயல்லவா? அது போன்று இன்று என் சித்தத்திலுள்ள அனாதி மலவாதனைகளாகிய விஷத்தையும் உண்டு ஜீரணித்துவிடுவா யெனில், எனக்குத் துன்பமே இல்லை.

108. உறையாநின் றுள்ளே யுழல்வா சனையை
யிறைவாநீ யென்பா லெரித்தே — நிறைவான
ஞானானு பூதியெற் கீந்து ரமணமயம்
ஆனானென் றன்னை யலர்த்து.

இறைவா! என்னுள் நிறைந்திருந்து என்னைச் சுகதுக்கங்களில் உழலும்படிச் செய்கின்ற வாசனைகளை யெல்லாம் நீ என்னிடம் இல்லாதபடி எரித்துச் சாம்பலாக்கி, பூரண ஞானானுபூதியை எனக்கு அளித்து, 'இவன் ரமணமய மானான்' என்று ஆசீர்வதித்து என்னை மலர்த்துக.

109. வெளிமுத்தி லாசை விதவிதமாக் காட்டித்
தெளிவழித்துச் சீர்மையெலாந் தேய்த்துக் — களிவிடயக்
காட்டிலடை வித்த கடுவா தனைப்பேயை
யோட்டிவிடு விப்பா யுயிர்.

வெளிமுகப் பொருள்களில் எனக்கு விதவிதமான ஆசையைக் காட்டி மனத்தெளிவை அழித்து, சிறப்புக்களை யெல்லாம் தேய்த்து, ஐம்புலக் களிப்பாகிய விஷயக் காட்டில் என்னைச் சிறைசெய்து வைத்த கொடிய வாசனைகளாகிய பேயை நீ உன் அருளால் ஓட்டி என் உயிரை விடுவிப்பாயாக.

110. அழுக்கி லசங்கியத்தி லாயிரஞ்சென் மங்கள்
வழுக்கி விழுந்த மனத்தாற் — கொழுத்துள்ள
வாசனைக ளெல்லாம் வடிவற் றொழியவருள்
வாசனையை யென்பால் வழங்கு.

பல்லாயிரம் ஜன்மங்களாக அழுக்கும் அசுத்தமுமாகிய நினைவுகளிலேயே வழுக்கி விழுந்து கிடக்கும் மனத்தால் சேகரிக்கப்பட்டுக் கொழுத்துள்ள வாசனைக ளெல்லாம் தான் இருந்த வடுகூட (இடங்கூட)த் தெரியாதபடி அழிந்து போகுமாறு உன் அருள் வாசனையை (சத்வாசனையை) என்னிடம் நீ வழங்குவாயாக.[14]

111. கோடிக் கணக்கிற் குவிந்துள்ள வாசனையான்
மூடிக் கிடந்துமகா மோகவிருள் — வாடிப்
பலகா லரற்றிப் பணிந்தழைக்கு மென்னை
விலகா தகமெய் விளக்கு.

கோடிக்கணக்கிற் குவிந்து கிடக்கின்ற வாசனைகளின் நெருக்கத்தால் ஏற்பட்ட மகாமோக இருளினால் மூடப்பட்டுக் கிடந்து துன்புற்று, பலமுறை உன்னைப் பணிந்து பிரார்த்தித்து அழைக்கும் என்னை விட்டு நீ விலகாமல், எப்போதும் இருந்து ஆன்ம சத்தியத்தை விளக்கித் தருவாயாக.

112. எங்கு மிருக்கு மியல்பானீ யென்னுள்ளுந்
தங்குகின்றா யென்பதனாற் சாந்தியில்லை — சங்கமுறுஞ்
சித்த விருத்தியெலாஞ் செற்றெனையுன் னேகாதி
பத்தியவாட் சிக்குட் படுத்து.

நீ எல்லா விடங்களிலும் சமமாக விரவி யிருக்கின்றாய் என்னும் கொள்கைப்படி நீ என்னுள்ளத்திலும் தங்கியிருக்கின்றாய் என்பதனால் மட்டும் எனக்குச் சாந்தி யுண்டாகி விடாது. பற்றுக்களை உண்டாக்கி வைக்கக் கூடிய என் சித்த விருத்திகளை யெல்லாம் அழித்து, உன் ஏகாதிபத்திய அருளாட்சிக்கு என்னையும் உட்படுத்த வேண்டும். (அப்போது தான் எனக்குச் சாந்தி உண்டாகும்.)

113. அகந்தையின் வாசனைக ளைம்பொறிக ளூடே
மிகுந்து வெளியே விரிந்து — செகந்தனுவாக்
காணப் படுமாயக் காட்சி யறவெனக்குச்
சோணமலை யாய்செய் துணை.

சோணமலையானே! நானாகிய அகந்தையின் வாசனைகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளின் வழியே மிகுதியாக வெளியே விரிந்து இவ்வுலகமாகவும், அதில் நான் ஓர் உடலாகவும் காணப்படுகின்ற மாயக்காட்சி அற்றுப்போகும்படி எனக்குத் துணை செய்வாயாக.

---

[14] "பூமண மாமனம் பூரண மணங்கொள ..." என்னும் 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'யின் 69வது பாடல் இங்கு ஒத்த நோக்கத் தக்கது.

114. இருப்பி லிருக்கவிடா வாசனைக ளெல்லாம்
விருப்பு வெறுப்புவடி வெய்தி — யுருப்பெருகுந்
தோற்றக் கனாவிற் சுழல்விப் பதையருளான்
மாற்றற் குரியாய்நீ மாற்று.

சும்மா 'இருக்கிறேன்' என்ற ஆன்ம இருப்பிலேயே நான் இருந்துவிட முடியாதபடி வாசனைகளெல்லாம் எனக்கு விருப்பு வெறுப்பாகிய துவந்த உணர்வுகளை யுண்டாக்கிக் கணக்கற்ற நாமரூபத் தோற்றங்களாகிய இவ் வாழ்வுக் கனவில் என்னைச் சுழல வைப்பதை உன் அருளால் நீ மாற்றக் கூடியவனன்றோ? ஆதலால் நீயே அதை மாற்றி யருள்க.

115. சித்தப் பவக்குழியாஞ் சேற்றின் முழுகிவிடப்
பித்தமயக் கேறிப் பிதற்றுகின்றேன் — முத்தியெனுஞ்
செங்கரைமே லேற்றித் திருவருணீ ராமோனக்
கங்கையினா லென்னைக் கழுவு.

பிறவிக்கு வித்தாகிய சித்தம் எனப்படும் சேற்றில் மூழ்கி விஷ சமான விஷயங்களின் பித்தமயக்கம் தலைக்கு ஏறிப்போய், 'நான்' , 'எனது' என்று பிதற்றுகின்றேன். இப்படிப்பட்ட என்னை இப் பந்தச் சேற்றினின்றும் தூக்கி யெடுத்து முக்தி யென்னும் சிறந்த கரைமே லேற்றித் திருவருள் நீராகிய மோன கங்கையினால் என்னைக் கழுவி நீராட்டுவாயாக.

116. சித்தத்தி னின்றுந் திடுக்கிடச்செய் தோங்கிதிட
புத்தியையுஞ் சோரம் புரிந்தழிக்கும் — மெத்தவலி
வேய்ந்தபழ வாதனையும் வீய விசாரத்தால்
ஆழ்ந்தக(ம்)நான் மூழ்க வருள்.

திடபுத்தியுள்ளவர்களையும் திடுக்கிடச் செய்து சித்தத்தின் ஆழத்திலிருந்து மேலே திருட்டுத்தனமாகக் கிளம்பி விவேகத்தை அழிக்கின்ற மிகுந்த சக்தி வாய்ந்த பண்டை வாசனைகளெல்லாம் அடியோடு அழியும்படி நான் ஆன்ம விசாரத்தால் இதயத்துள் ஆழ்ந்து முழுகுமாறு அருள் செய்வாயாக.

117. உதவாத வீணெண்ண மோயா தலைபோ
லெதனா லெழுமோ விறைவா — வதனைவே
ரோடுகளைந் தென்னை யுனதடியி லென்றென்றும்
பீடுபெறு மாறே பிணை.

இறைவா! பயனற்ற வீணான எண்ணங்கள் ஓயாமல் அலைபோல் எதனால் எழுமோ, அந்த வாசனைகளை வேரோடு களைந்தெறிந்து, என்றென்றும் நான் சிறப்பில் உறும்படி உனது திருவடிகளில் என்னைப் பிணைப்பாயாக.

118. சிந்தையே யற்ற சிவநிலையில் வீற்றிருக்க
மந்தமதி யேனெங்ஙன் வல்லேனோ — எந்தாய்
திருவருளா லென்னுட் செறிவா தனைக
ளொருவிடவே நீவந் துதவு.

யாதொரு சிந்தையுமே இல்லாமல் சிவநிலையில் சமாதி யுற்றிருக்க மந்தாதிகாரியாகிய என்னால் எப்படி முடியும்? ஆகையால், எந்தையே, என் உள்ளத்தில் குவிந்து கிடக்கும் வாசனைக ளெல்லாம் அழிந்து போகுமாறு நீயே வந்து உன் திருவருளால் உதவுக.

119. வாசனைகள் யாவும் மனவடிவ நானொன்றை
யாசரித்தல் லாம லமையுமோ — ஈசனீ
யிவ்வா ணவநானை யின்றே யழித்தருளின்
எவ்வா சனைமிஞ் சிடும்.

எல்லா வாசனைகளும் இந்த தேகத்தில் 'நான்' என்ற வடிவில் கிளம்பும் மனமாகிய அகந்தையை ஆசிரயிக்காமல் இருப்புக்கொள்ள முடியுமோ? (முடியாது). எனவே, சர்வேசுவரனாகிய நீயே இந்த ஆணவமாகிய 'என்னை' இன்றே அழித்தருள்வாயானால், பின் எந்த வாசனை எவ்வாறு மிஞ்சி நிற்கும்?

120. எடுத்த வுடலி னிளமைதொட் டேழை
யெடுத்த முயற்சிதடை யெய்தக் — கெடுத்துவரும்
வாசனைக ளுன்னருளான் மாய்ந்தாலல் லாதுரம
ணேசவென் செய்வே னியான்.

இவ் வுடலெடுத்த இளமையிலிருந்தே ஏழையாகிய நான் மேற்கொண்ட எல்லாவித முயற்சிகளும் தடைப்படுமாறு கெடுத்து வருகின்ற வாசனைகள் உன் அருளால் அழிந்தாலன்றி, ரமணேசனே, நான் என்ன செய்வேன்?

121. வாசனைக ளெத்தனைதான் வண்ணிப்பே னென்னுள்ளத்
தீசனே சற்று மியலேனான் — நாசமுறப்
பேரருளால் வென்றணுவும் பேதமற்ற மெய்ஞ்ஞானச்
சீரடியி லொன்றவெனைச் செய்.

ஈசனே! என் உள்ளத்திலுள்ள எத்தனை வாசனைகளைத் தான் நான் வர்ணித்துச் சொல்ல முடியும்? கொஞ்சமும் முடியாது. இவை யாவும் நாசமுற்று அழியும்படி நீ உன் பேரருளால் அவற்றை வென்று, அணுவளவு கூட பேதமில்லாத மெய்ஞ்ஞான நிலையாகிய உனது திருவடியில் நான் ஒன்றிவிடுமாறு என்னைச் செய்வாயாக.

122. மன்னுலக மன்று மனவுலக மீதுபுலன்
தன்னுருவே யைம்புலனுந் தன்மனமே — உன்னுமனஞ்
சித்தினா பாசவணுச் சித்தமே சித்தமறுத்
துத்தமா நீயகமா வோங்கு.

இந்த உலகம் நிலைபெற்ற உலகமல்ல; இது மனோமயமான உலகமே; அதாவது, ஐம்புலன்களின் உருவே. அந்த ஐம்புலன்களும் தன் ஒரு மனமே. நினைக்கும் அந்த மனமும் ஆன்ம சித்ரூபத்தின் அணுமாத்திரப் பிரதிபிம்பமாகிய சித்தமே. பரமான்மாவாகிய உத்தமனே! நீ சிதாபாசமாகிய இச் சித்தத்தை அழித்து ஆன்மா மாத்திரமாய் ஓங்கி ஒளிர் வாயாக.

123. எழும்பு மகந்தைக் கெதுகா ரண(ம்)முன்
தழும்பா கியவா சனையே — தொழும்பனேன்
நின்னைத் துணையா நினைக்கின்றேன் வேண்டுகின்றேன்
என்னைக்காப் பாற்றி யிரு.

அகந்தையின் எழுச்சிக்கு எது காரணம்? பண்டைக் காலத்திலிருந்து வேரூன்றிக் கிடக்கும் வாசனைகளே. உன் அடிமையாகிய நான் இவ் வாசனைகளை யழிக்க உன்னையே துணையாக நினைக்கின்றேன், வேண்டுகின்றேன். ஆகையால், நீ என் வாசனைகளை அழித்து காப்பாற்றப்பட்ட 'நா'னாக எப்போதும் இருப்பாயாக.

## 17. வேதித் தருள வேண்டல்

124. சுத்தீ கரித்த சுடர்ப்பசும்பொன் னாஞான
மெய்த்தீயிட் டென்னைநீ வேதிப்பாய் — அத்தீ
யதிசீ தளவமுத வாழியாக் கோடிக்
கதிரொளியும் விஞ்சக் கடந்து.

அதிசீதள அமுதக் கடலானதும், கோடி சூரியப் பிரகாசத்தையும் மிஞ்சிக் கடந்ததுமான உன் மெய்ஞ்ஞானத் தீயிட்டு சுத்தப்படுத்தப் பட்டுப் பிரகாசிக்கும் பசும் பொன்னாக என்னை நீ வேதிப்பாயாக.

125. தொட்டதெலாந் தங்கஞ் சுடர்விழியாய் நீயுன்கண்
பட்டதெலா(ம்) ஞானப் பயிரன்றோ — [15]கட்டுணர்வே
யற்றவருட் பேரின்ப வாழியிலே யான்முழுக
மற்றுனரு ணீயே வழங்கு.

ஞானச் சுடர்விழியாளனே! நீ தொட்ட தெல்லாம் தங்கமாகும்; உன் கண் பட்ட ஜீவர்க ளெல்லாம் ஞானம் விளைவிக்கும் பயிராவர் அல்லவா? ஆகையால், பந்த வுணர்வே யில்லாத அருட்பேரின்ப சமுத்திரத்தில் நான் முழுகும்படி நீயே உன் அருளை வழங்குக.

126. கல்லைப் பிசைந்து கனியாக்கு முன்கருணை
வல்லாண்மைக் கேது வரையறையொன் — றல்லே
வடிவான வென்மதியை வல்லருளால் ஞான
விடிவான வெல்லாய் விளக்கு.

கடினமான கல்லையும் பிசைந்து இனிய கனியாக்கக் கூடிய உன்னுடைய கருணை சக்திக்கும் ஓர் எல்லை ஏது? ஆகையால் இருளே வடிவான என் மதியை உன் அருட்சக்தி யால் ஞானப்பகலாக விடியும் சூரியனாய் விளக்குவாயாக.

127. ஞான நிதிமலையே நானா ரெனவறியா
தூன வுடலா முபாதியையே — நானென்
றறியாமைக் காரா லகங்கரிக்கு(ம்) மோக
வறியேனைச் செல்வனா மாற்று.

மலைப்போல் குவிக்கப் பெற்றுள்ள ஞான ஐஸ்வரிய வள்ளலே! நான் யார் என்று அறியாமல் உபாதியாகிய மாமிச உடலையே 'நான்' என்று அஞ்ஞான இருளால் அகங்கரிக்கும் மோகத்தால் வறியோனாகிய என்னை உன் அருட் கொடையாற் செல்வனாக மாற்றுக.

128. ஞானக் கடலடியின் நன்முத்தாய் வாதமிடும்
மானிடவர் கைக்கே வராததாய் — ஆனகுரு
நாதரம ணாவுனக்கு நானோ ருடைமையாய்ப்
பாதகம லத்தொளிரப் பார்.

என் குருநாதனாகிய ஸ்ரீ ரமண பிரானே! நான் ஞானக் கடலின் அடியிற் பதிந்து கிடக்கும் சிறந்த முத்தாகவும், வாதப் பிரதிவாதங்களைச் செய்யும் மனிதர்களின் கைக்கே அது கிடைக்காததாகவும், உனக்கு ஓர் உடைமைப் பொருளாகவும் உன் பாதாரவிந்தத்தில் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும்படியாக நீ பார்த்துக்கொள்க.

---

[15] 'சுட்டுணர்வே' எனவும் பாடம்.

## 18. பக்குவமாக்கி யருள வேண்டல்

129. இன்னுமென்ன சொல்லி யிரப்பே னிறைவாநான்
உன்னடியி லென்னடத்தி லுள்ளகுறை — யன்னையினு
மாதரவு மிக்க வருளாள பக்குவமு(ம்)
நீதரநான் கொள்ள னெறி.

இறைவனே! என்னிடத்தில் உள்ள குறைகளை இன்னும் எவ்வளவுதான் சொல்லி உன் திருவடியில் நான் யாசித்து நிற்பேன்? பெற்ற தாயை விடப் பெரிதும் ஆதரவு செய்யும் அருளாளனே! எனக்கு வேண்டிய பக்குவத்தையும் நீயே கொடுக்க நான் பெற்றுக் கொள்வது தான் முறை யாகும்.

130. சிந்தித் துனதருளைச் சீவ சுபாவமெனும்
பந்தத்தி னீங்கிப் பயனுறுவான் — வந்துற்ற
பக்குவமில் லாதேன் பதரே னெனினுமெனைப்
பக்குவமாக் காயோ பரிந்து.

நான் பக்குவமில்லாத அற்பனே யாயினும், உனது அருளை நம்பி ஜீவசுபாவ மென்னும் பந்தத்தினின்றும் விடுபட்டு மோக்ஷ முறுவதற்காக உன்னை வந்தடைந்த என்னை அதற்கேற்ற பக்குவ முள்ளவனாகப் பரிவோடு செய்தருள மாட்டாயோ?

131. விரும்புவார்க் கன்றி விடுதலைதா மீயார்
அருங்குருவு மீசனுமா னாலும் — விரும்பியுனைக்
கேட்கின்றே னுள்ளங் கிளர்வன்மை தானில்லேன்
ஆட்கொண் டதனை யருள்.

அரிய குருவானாலும், ஈசுவரனானாலும், மோக்ஷத்தை விரும்புகின்ற ஜீவர்களைத் தவிர மற்றவர்களுக்கு அதைக் கொடுக்க மாட்டார்கள். ஆனால் நானோ அந்த மோக்ஷத்தை விரும்பி உன்னைக் கேட்கின்றேனே தவிர, அதைப் பெறுவதற்கேற்றவாறு உள்ளம் மலரும் சக்தியில்லாதவனாய் இருக்கின்றேன். ஆகையால், நீயே என்னை ஆட்கொண்டு அந்த உள்ள மலர்ச்சியையும் அருள்வாயாக.

132. தானதுவா நிற்கத் தவறித் தவறிவிழும்
ஈனமன வன்மையே னென்சிறுமைக் — கானமருந்
தென்ன வெனவறிந்தீந் தென்னைநிற் பிக்கவல்ல
மன்னனீ யன்றோ வழங்கு.

தான் அந்தப் பிரம்மமாகவே நிற்கும் நிஷ்டை கூடாமல் பிரமாதத்தால் தவறித் தவறி விழுகின்ற, மனவலிமை யில்லாத என் சிறுமைக்கு எது தகுந்த மருந்து என்று அறிந்து, அதைக் கொடுத்து என்னை நிற்கச் செய்யவல்ல சக்திமான் நீ யல்லவா? ஆதலின், அந்த மருந்தை நீ எனக்கு வழங்குவாயாக.

133. அடைந்து கிடக்கு மகவா சனையைக்
கடைந்தெழுப்பி முற்றுங் களைவா — யிடையில்
நிகழ்வைப் பொறுக்கவிய லாதவென் னெஞ்சத்
தகவையுநீ யேயுயர்த்தித் தா.

பல்லூழி காலமாக சேகரிக்கப்பட்டு உள்ளத்தில் அடைந்து கிடக்கும் வாசனைகளை யெல்லாம் உன் திருவருளால் கடைந்து எழுப்பி, அவைகளை முற்றும் அழித்தருள்வாயாக. நீ அருளால் அவ்வாறு கடையும் பொழுதும், அலை மேலெழும் பொழுதும் உண்டாகும் சிரமங்களை யெல்லாம் பொறுத்துக் கொள்ள முடியாத

மனத்தேனாகிய என்னுடைய தகுதியையும் அதற்கேற்ற அளவு நீயே உயர்த்தித் தருவாயாக.

134. இவனொருவ னுள்ளா னிவனிருப்பாற் கோடி
நவநவமாய்க் காண்ப நவைசே — ரவனிவாழ்
வத்தனையு மின்னோ னழுக்கியல்பே நின்னருளாற்
சுத்திசெய் துண்மை துலக்கு.

'நான் இன்னார்' என்று இங்கு ஒருவன் எழுந்துள்ளான். தீமையும் துன்பமும் நிறைந்த கோடிக்கணக்கான புதுப்புது உலக வாழ்க்கைகள் இவன் இருப்பதால் இவனுக்குக் காணப்படுகின்றன. அவை யாவும் இவனது அசுத்த இயல்பேயான வாசனைகளே. நீ உன் அருளால் இவனைச் சுத்தி செய்து, நீ ஒருவனே உண்டு என்ற உண்மையை விளக்கி யருள்வாயாக.

135. ஆளாகா நின்றுன் னடியார்மீண் டென்றென்று
மீளாவா றார்ந்தார் விடுதலையே — கேளா
அறிவிலனா னன்பிலனா னாயினுமென் மோக
வெறியகற்றி வீட்டுள் விடு.

உனக்கு ஆளாகி எத்தனையோ அடியார்கள் இனிமேல் என்றென்றும் பந்தத்திற்குத் திரும்பாதபடி விடுதலை யடைந்தார்களல்லவா? நான் நீ உபதேசித்தவற்றைக் கேட்டு ஒழுகும் அறிவில்லாதவன்; மேலும் உன்னிடத்தில் அன்பும் இல்லாதவன். ஆயினும், நீ உன் அருளால் என் மோக வெறியை நீக்கி மோக்ஷத்தினுள் சேர்ப்பாயாக.

136. இவ்வுடலில் வாழ்ந்தநா ளெல்லா முனைப்பிரிந்து
பவ்வி யுணும்விலங்காப் பாழாயிற் — றெவ்விதமோ
ஈர்த்துன் றரிசனமு மீந்தரம ணேசாநீ
பார்த்தென் பவவேர் பறி.

நான் பிறந்தது முதல் இவ் வுடல் உயிர்த்திருக்கும் இன்று வரை வாழ்ந்த நாளெல்லாம், மலத்தை யுண்ணும் பன்றியைப் போல் உன்னைப் பிரிந்து பாழாக்கப்பட்ட நாட்களே யாயின. அப்படிப்பட்ட என்னையும் உன்னுடைய திருவருளால் எவ்வாறோ இழுத்துக் கொண்டு வந்து சற்குருவாகிய உன் தரிசனமும் கொடுத்த ஸ்ரீ ரமணேசா! நீயே பார்த்து என் புனர்ஜன்ம வேரைப் பறித்தருள்வாயாக.

137. சித்தசுத்தி யின்றித் திருவருளை யாசிக்கும்
மத்த னெனினுமுனை வந்தித்தே — சித்தசுத்தி
நின்னருளா லெய்த நினைக்கின்றே னெந்தாய்நீ
யென்னையுமுய் விப்பா னிரங்கு.

நான் சித்தசுத்தி யில்லா நிலையிலும் உன் திருவருளை யாசிக்கின்ற பைத்தியக்காரன் என்றாலுங்கூட, உன்னைத் தோத்திரம் செய்தே உன்னருளாற் சித்தசுத்தியையும் அடைந்து விடலாம் என்றே நினைக்கின்றேன். எந்தையே! நீ இப்படிப்பட்ட என்னையும் உய்விக்க இரக்கங் கொள்வாயாக.

## 19. அகமுகம் வேண்டல்

138. அந்தர்முக மன்றிவர மாயிர(ம்)நான் கேட்டாலு
மெந்த பிறவரங்க ளென்னையுள்ளே — யுந்தியிழுத்
தோய்வுதரச் சற்று முதவா திடையூறா
யாவதோவஃ தீயா தருள்.

அந்தர்முக வரம் ஒன்று தவிர நான் உன்னிடம் வேறு ஆயிரக்கணக்கான வரங்கள் கேட்டாலும், அந்தப் பிற வரங்களுள் எவை எவை என்னை நீ உள்ளே உந்தி இழுத்து ஓய்வு தருவதற்கு இடையூறாகவும் சற்றும் உதவாததாகவும் இருக்குமோ, அவைகளை நீ எனக்குக் கொடுக்காது இருந்தருள்க.

139. பற்றுடைய பாமரரும் பல்லுயிருந் தம்மியல்பாஞ்
சுற்றுவழி யாலச் சொரூபமே — லுற்றபே
ராவலுடை யாரேனு மந்தர்முகி மட்டுமன்றோ
மேவுகின்றான் பேரின்ப வீடு.

உலகப் பற்றுடைய பாமரர்களும் இன்னும் பலவித ஜீவராசிகளுமாகிய அனைவரும் ஆன்ம சொரூபத்தின் மேல் பெரிய ஆவலுடையவர்களே யென்றாலும், பக்குவமற்ற அவர்களுடைய இயல்பாகிய சுற்று வழியிலேயே முன்னேறுகிறார்கள். ஆனால், அந்தர் முகப்படும் சாதகன் மட்டுமே உடனடியாகப் பேரின்ப வீட்டை யடைகின்றா னல்லவா? (ஆகையால், மேற்கூறிய பிரார்த்தனைப்படி, அந்தர்முகத்திற்கு உதவாத எந்தவொரு வரமும் எனக்குக் கொடுக்காது இருந்தருள்க.)

140. இந்தபே ரின்ப வியல்பாந் திருவடியைத்
தந்தையே தாவென் றழுதழுது — முந்தைநா
டொட்டடியேன் கேட்டாலுஞ் சுத்தபத்தி யின்றியதா
லெட்டுணையு முன்னே றிலேன்.

'தந்தையே! உன் திருவடியாகிய இந்த இயல்பான பேரின்ப நிலையைக் கொடுத்தருள்க' என்று பல்லாண்டுகட்கு முன்பிருந்தே நான் அழுதழுது கேட்டுங் கூட, பரிசுத்தமான பக்தி இல்லாத காரணத்தால் எள்ளவுங்கூட முன்னேறாதவனா யிருக்கின்றேன்.

141. உன்னருளா லன்றி யொருக்கணமும் வாழகில்லா
வென்னெளிமை காண்பா யிறைரமணா — முன்னிலையே
பாய்ந்தலையு(ம்) நெஞ்சம் பகிர்முக(ம்)நீத் துண்முகம்வந்
தோய்ந்திடச்செய் யாயோ வுவந்து.

இறைவனாகிய ரமணா! உன்னுடைய அருளில்லாமல் ஒரு கண நேரங்கூட வாழ முடியாத என்னுடைய எளிய நிலையை நீ காண்பாயாக. முன்னிலைப் பொருள்களின் மேலேயே பாய்ந்து அலைகின்ற என் மனம் அந்தப் பகிர்முகப் பாய்வை விட்டுவிட்டு உண்முகமாகத் திரும்பி வந்து ஓயும்படி நீ மகிழ்வோடு அருள் செய்ய மாட்டாயா?

142. கடந்த வுடல்வாணாட் காலமெலாம் வீணாய்
முடிந்த தகந்தை முனைப்பாற் — படர்ந்த
விகமுகத் தாவ லினியேனு(ம்) நீக்கி
யகமுகத் தாவ ளளி.

இவ் வுடல் வாழ்நாட்களில் கடந்துபோன காலமெல்லாம் அகந்தையின் முனைப்பால் வீணான காலமாகவே முடிந்தது. பலவாறு விரிந்துள்ள இவ் வுலக வாழ்க்கையின் ஆவல்களை இனிமேலும் நீக்கிவிட்டு அகமுகப்படுவதற்கான ஆவலை அளிப்பாயாக.

143. என்னைவிட்ட தாலென் னெதிரிற் றெரிகின்ற
வன்னியத்தை நாடா தகமுகமே — மன்னிநிற்க
வெவ்வா றெதையெனக் கீயி னெளிதாமோ
வவ்வா றதைநீ யருள்.

நான் என்னை நாடுவதாகிய ஆன்ம நாட்டத்தை விட்ட காரணத்தாலேயே அன்னியங்களாகிய உலகத் தோற்றம் என் எதிரில் தெரிகின்றது. அவ் வன்னியத் தோற்றத்தை நாடாது தன்னையே நாடி நிற்பதற்கு நீ எதை எவ்வாறு எனக்கு அளித்தால் எளிதாக இருக்குமோ, அதை அவ்வாறே அளித்தருள்வாயாக.

144. போகவிட்டுப் பார்க்கின் புலன்வலிமை விஞ்சலன்றி
வேகமற்றென் றென்றுமது மீள்வதில்லை — ஆகசற்றும்
ஐம்புலன்வாய்ப் போகா தகமுகமா மீளவரு
ளெம்பெருமான் செய்க வினி.

மனத்தை அது போகும் போக்கில் விட்டுப் பார்த்தால், அது ஐம்புலன்களின் வழியே அலைய அலைய, அதன் பகிர்முக வலிமையே அதிகரிக்கின்றதல்லாமல் வேகம் குறைந்து அது உண்முகமாக எப்போதும் திரும்புவதே இல்லை. ஆகவே, மனோவிருத்திகள் ஐம்புலன்கள் வழியே சற்றும் வெளிப் போகாமல் ஆன்மாவை நோக்கி உண்முகமாகத் திரும்பும்படி, எம்பொருமானே, இனியாவது செய்தருள்க.

145. வழங்குவா ருண்டோ வயிற்றுக்கு மாடை
முழங்களோ ரீரிரண்டென் றேங்கி — யழுங்காமல்
அப்பொறுப்பு முன்னடிக்கே யாக்கி யகநோக்கோ
டெப்பொழுதும் வாழ வியக்கு.

'வயிற்றுப் பசிக்கு உணவும், உடலுக்கு உடுக்க நான்கு முழ ஆடையும் யாராவது கொடுப்பார்களா?' என்று ஏங்கி மனம் பகிர்முகப்பட்டு வருந்தாமல், அந்தப் பொறுப்பையும் உனது திருவடிகளுக்கே யாக்கி, எப்பொழுதும் உண்முகப் பட்டு நான் வாழுமாறு உன் அருளால் இயக்குக.

146. கனவைவாழ் வாகக் கருதி யுழலு
மனமயக்கந் தீர வருள்வாய் — உனதருளால்
உண்முகமா மீட்டிவ் வுலகுமுக(ம்) நீக்கவல்ல
வண்மையுன தன்றோ வழங்கு.

கனவைப் போன்ற இந்த நனவுலகு வாழ்வை என்னுடைய உண்மையான வாழ்வு என்றும், ஆகவே இது முக்கியம் என்றும் கருதி உழலும் மனமயக்கம் நீங்கும்படி யருள்வாயாக. இப் புறவுலக நோக்கத்தினின்றும் நீக்கி என்னை உன்னுடைய அருளால் உண்முகமாக மீட்டுத்தரும் ஈகை உன்னுடையதே யல்லவா? ஆதலால் அவ்வாறு வழங்குவாயாக.

147. ஆன்மாவி லேயே யனவரத மூன்றிநிற்க
மேன்மேலு நெஞ்சம் விரும்பாமல் — ஏன்மாறாச்
சுற்றித் திரியச் சுவைகொள்வ தாண்டவநின்
பற்றடையப் பண்ணாய்ப் பரிந்து.

ஆண்டவனே! என் மனம் எப்போதும் ஆன்மாவிலேயே ஊன்றி நிற்பதற்கு மேன்மேலும் விருப்பம் ஓங்கப் பெறாமல், அதற்கு மாறாக ஏன் வெளியுலகில் சுற்றித் திரிவதற்கு விருப்பம் கொள்கின்றதோ? அந்தோ! என் மனம் உன் பற்றை யடையும்படி நீ பரிவினோடு செய்தருள்வாயாக.

148. நானற்ற வுண்மை நலந்தருவா யென்றுன்னை
நானுற் றிரந்தேன் ரமணாவோ — [16]வானுற்ற

வாசைப் பெருந்தருவே ரற்றகத்தை நோக்கும்பே
ராசைப் பெருந்திருதந் தாள்.

ஸ்ரீ ரமண பிரானே! 'நான்' என்னும் அகந்தை யற்ற உண்மைப் புருஷார்த்தத்தைத் தருவாய் என்று நான் உன்னை யடைந்து யாசிக்கின்றேன். வேரை வானுலகெங்கும் பரப்பி இப் பூலோக வாழ்க்கை முழுவதிலும் பரந்து வியாபித்திருக்கின்ற பேராசையாகிய விருக்ஷத்தை நீ அடியோடு அழித்து, ஆன்மாவை நோக்கும் பேராசையாகிய சிறந்த ஐசுவரியத்தைத் தந்து ஆட்கொள்வாயாக.

149. அருளுடையா யென்னையுனக் காளுடையாய் ஞானப்
பொருளுடையாய் நின்னடியேன் புந்தி — மருளடையா
துன்முகமே நாடி யுபசாந்தி மேவச்சற்
றென்முகம்பார்த் தின்னே யிரங்கு.

அருளுடையவனே! என்னை உனக்கு அடிமையாக உடையவனே! ஞானநிதியை உடையவனே! இவ் வடியேனுடைய புத்தி மாயையால் மயக்கமடையாமல் உன்னையே நோக்கி நின்று உபசாந்தி யடையுமாறு இப்போதே என் முகத்தைப் பார்த்துச் சற்று இரங்குவாயாக.

150. இருக்கின்றே னென்ற வியலறிவா நீயுள்
ளிருக்கின்ற தேயருளென் றோர்ந்தேன் — பெருக்கும்
அயல்விருத்தி நீக்கி யகவிருத்தி யாக்குஞ்
செயலுந் திருவருளாற் செய்.

'இருக்கிறேன்' என்ற இயல்பான சித்ரூபமாய் நீ ஒவ்வொருவருள்ளும் விளங்கிக் கொண்டிருப்பதே உன் பேரருள் என்று உணர்ந்தேன். அவ்விதம் 'நான்' என்று விளங்கும் உன்னை நோக்கி நாடி நிற்கவும், பெருகும் அயல் விருத்திகளை நீக்கவும் உன் திருவருளால் நீயே மேலும் செய்வாயாக.

151. வெளிமுகத்திற் காட்டும் விருப்பின் மிகுதி
எளியனுக்கிங் குண்முகத்தி லில்லை — தெளிவழிக்கும்
முன்னதினும் பன்மடங்கு மூண்டுவிருப் புண்முகமாந்
தன்னிலைக்கென் செய்வேன் றவம்.

எளியவனாகிய எனக்கு வெளிமுகப்படுவதில் உண்டாகும் விருப்பம் எவ்வளவோ, அவ்வளவு அதிகமான விருப்பம் உண்முகத்தில் உண்டாவதில்லை. தெளிவை அழிக்கக் கூடிய வெளிமுகத்தி லேற்படும் ஆவலைவிட உண்முகமாகிய தன் நிலையில் நிற்பதற்குப் பலமடங்கு ஆவல் மிகுவதற்கு இனி நான் என்ன தவம் செய்வேன்?

152. உன்னதமா மேன்மேலு மோங்குமதி தீவிரத்தால்
என்னதுநான் சற்று மெழாமலே — முன்னிலையைக்
காண விரும்பக் கடுகளவு(ம்) நேராத
மாணவக நோக்கிலெனை வை.

மிகச் சிறப்பாக மேன்மேலும் ஓங்குகின்ற அதிதீவிரத்தால் 'நான்', 'எனது' என்னும் அகந்தை மமதைகள் கொஞ்சங்கூட எழாமலும், முன்னிலைப் பொருள்களாகிய இவ்வுலகைக் காணவோ விரும்பவோ ஒரு கடுகளவு கூட அவசியம் நேராமலும் உள்ள சிறப்பான ஆன்ம நோக்கில் என்னை வைத்தருள்வாயாக.

---

[16] 'வானுற்ற ஆசைப் பெரும் தரு' = வானளாவிய ஆசாபாச விருக்ஷம். கீழ்வருமாறு மற்றொரு பொருளும் கொள்ளலாம்: 'வேர் வானுற்ற ஆசைப் பெரும் தரு' = வேரை வானுலகிலுடைய மாயையாம் விருக்ஷம்; "ஊர்த்வ மூலம் அத: சாகம் அச்வத்தம்" என்று ஸ்ரீ மத் பகவத் கீதை (15.1)யிலும் கூறப்பட்டுள்ளதைக் காண்க.

153. சும்மா விருக்குஞ் சுகவேட்கை மீக்கூர்ந்து
வெம்மமாயப் பீழை வெளிமுகத்தில் — இம்மியும்
இச்சை யெழாம லிதயத் திருத்திடிலென்
னச்சமறு மிஃதே யருள்.

சும்மா இருப்பதாகிய சுபேச்சை மிக அதிகமாகி, கொடிய மாயப்பீடையாகிய வெளிமுகத்தில் துளிகூட விருப்ப மெழாமல் என்னை நீ இதயத்திலேயே நிஷ்டை கூட்டிவிட்டால், என் பயம் முழுவதும் அற்றுப் போகும். இதையே கொடுத்தருள்வாயாக.

154. ஈததுவென் றிச்சையுட னெண்ணியெண்ணி யிவ்வுடலிற்
போது கழித்ததெலாம் போதுமினி — ஏதுமயல்
எண்ணா துளேதிரும்பி யெந்தாயுன் னோடிருக்கப்
பண்ணா யருளாற் பரிந்து.

இவ் வுடல் வாழ்நாளில் 'இதைச் செய்ய வேண்டும்; அதைச் செய்ய வேண்டும்' என்று ஆசைப்பட்டு எண்ணி யெண்ணி நாட்களைக் கழித்த தெல்லாம் போதும். இனி மேலாவது வெளிமுகத்தில் யாதோ ரெண்ணமுங் கொள்ளாமல் உள்ளே திரும்பி, எந்தையே, உன் அருளால் நீ பரிந்து எப்போதும் நான் உன்னோடிருக்கும்படிப் பண்ணுவாயாக.

155. புறமுகமே யோயாமற் போயலையும் புந்தி
யுறவகமே யென்செய் குவேனான் — துறவறத்தின்
மெய்ப்பொருளா வாழ்வு மிளிர வகமுகத்துன்
கைப்பிடிக்கு ளென்னைவைத்துக் கா.

வெளிமுத்திலேயே ஓயாமல் ஓடி யலையும் என் புத்தி ஆன்மாவிலேயே ஓய்ந்திருப்பதற்கு நான் என்ன செய்வேன்? துறவறத்தின் மெய்ப்பொருளாக இவ் வாழ்வு விளங்குமாறு என்னை உன் கைப்பிடிக்குட் கொண்டு சென்று அகமுக நிஷ்டையில் என்னை வைத்துக் காப்பாற்றுவாயாக.

## 20. அகந்தை யழிவு வேண்டல்

156. சத்தியஞ் சத்தியஞ் சத்திய மென்றுமுச்
சத்தியங் கூறுவேன் சற்குருவே — செத்துநான்
உன்னி லொழிய வுதவுகவே றொன்றுமே
யென்னிடத்தி லீயா திரு.

சத்தியம், சத்தியம், சத்தியம் என்று மூன்று முறை உன் சந்நிதியிற் சத்தியம் உரைக்கின்றேன். யாதெனில், சற்குருவே, 'நான் செத்து உன்னில் ஒழிந்து போவதற்கே நீ உதவி செய்வாயாக; வேறு எதுவுமே என்னிடத்தில் நீ கொடுக்காமல் இருப்பாயாக' என்பதே என்னுடைய ஒரே பிரார்த்தனை யாகும்.

157. பிணைக்குமே தொன்று பிணவுடலோ டென்னைப்
பணைக்குநிகர் தேகான்ம பாவந் — துணிக்கரிய
வஃதுன் றிருவருளா லற்றொழியு(ம்) நல்வரமா
மிஃதொன்றே யீவா யெனக்கு.

என்னை இந்தப் பிணவுடலோடு 'நான்' என்றுணரும் படி எதுவொன்று பிணைக்கின்றதோ, அறுப்பதற்கரிய அந்த விஷநாகம் போன்ற கொடிய தேகான்மபாவம் உன் திருவருளால் அடியோடு அற்றொழிகின்ற மிகச் சிறந்த வரமாகிய இதை மட்டுமே எனக்கு ஈவாயாக.

158. எனக்கொன்று வேண்டு மெனினுமது நின்றன்
மனப்படியல் லாதவித மாக — நினைத்தன்று
நின்னடிமை யாம்பேர் நிசமா நிலைத்திடநான்
என்னதென வெண்ணாமை யே.

எனக்க ஒரு வரம் வேண்டும். என்றாலும், அது உன்னிஷ்டத்திற்கு மாறான விதமாக நினைக்கப்பட்ட வரமுமல்ல. அதாவது, நான் உன்னுடைய அடிமை என்ற பெயர் நிஜமாகவே நிலைக்குமாறு 'நான்' என்றோ 'எனது' என்றோ சிறிதும் நினைக்காமலிருக்கும் நிலையே அந்த வரமாகும்.

159. புறந்தெரிய வோர்நான் புறப்படா தாழ்ந்துள்
ளிறந்தொழிய வேண்டு மிறைவா — அறந்தழையும்
இன்பவருட் பாதத் திரந்திறைஞ்சு மோர்வரமாம்
என்பதிது வேதா னெனக்கு.

இறைவா! வெளியுலகத்தைக் காணுகின்ற ஒரு 'நான்' இனிக் கிளம்பாமல் ஆன்மாவில் ஆழ்ந்து இறந்து ஒழிய வேண்டும். சர்வ தர்மங்களும் தழைக்கின்ற உனது பேரின்பத் திருவடிகளில் நான் யாசித்து வேண்டுகின்ற ஒரே வரம் என்பது எனக்கு இதுவேதான்.

160. வாசனைக ளைச்சேர்த்த வல்லரக்க னானெனது
நாசமதை வேண்டியின்று நாடுகின்றேன் — ஈசனே
நின்னிட்டத் தாலிந்த நேரியசற் புத்திவந்த
தென்னிட்ட மென்னொழிவே யீ.

கணக்கற்ற பிறவிகளிற் கணக்கற்ற வாசனைகளைச் சேர்த்துக் குவித்த வலிய அரக்கனாகிய நான் எனது நாசத்தையே இப்பொழுது உன்னிடம் நாடி வேண்டுகின்றேன். ஸ்ரீ ரமணேசுவரனே! நீ அருள் கூர்ந்து இஷ்டப்பட்டதால் எனக்கு இந்த நேர்மையான சற்புத்தி யுண்டாயிற்று இப்போது என்னுடைய இஷ்டம் 'நான்' அழிவது ஒன்றே. இதை அருள் வாயாக.

161. நானா மகந்தையற நாசமுற்று நின்னடிமை
யானா லலாமலெனக் காசையெது — தீனர்
முழுத்துணையே சீரமண மூர்த்தியே விந்தப்
புழுக்கடையேற் குன்றாள் புகல்.

தீன பக்தர்களின் முழுத்துணைவனே! ஸ்ரீ ரமண மூர்த்தியே! 'நான்' என்னும் அகந்தை அடியோடு நாசமடைந்து உன்னுடைய அடிமையாவதைத் தவிர வேறு எனக்கு என்ன ஆசை இருக்கின்றது? புழுவிலும் இழிந்த கடையேனாகிய எனக்கு உன் திருவடிகள் தான் புகலாகும்.

162. அகந்தையுரு வாயினுமொன் றாசைப்பட் டேற்றால்
உகந்தருள்வ தீசனியல் பன்றோ — அகந்தையுரு
வற்றொழிந்து நின்ற னருளா லமைதியுறச்
சற்றருள்க வீதென்னா சை.

ஜீவர்களெல்லாம் அகந்தையின் உருவங்களே யாயினும், அவர்கள் எவ்வொன்றை ஆசைப்பட்டு வேண்டுகின்றார்களோ, அதை யெல்லாம் பரிவோடு கொடுத்தருள்வது ஈசுவரனுடைய இயல்பான கடமை யல்லவா? மேற்கூறப்பட்ட அவ் வகந்தை உருவங்களுள் ஒன்றாகிய எனது ஆசை யென்ன வென்றால், உன்னுடைய அருளால் என் அகந்தையுரு முற்றும் அழிந்து, அமைதியுறும்படி சற்றே யருள வேண்டும் என்பதே.

163. நானென் றொருவ னரவுடலிற் றோன்றுகின்றேன்
ஊனென்ற வாறே யுழல்கின்றே — னேனென்
றறியா தெழுமெழுச்சி யற்றிருக்க நீதான்
குறியாத தென்னோ குறை.

இந்த மானிட சரீரத்தில் 'இதுவே நான்' என்று ஒருவனாகத் தோன்றுகின்றேன். 'இந்த சரீரமே நான்' என்ற வாறே வாழ்நாள் எல்லாம் வியவகரிக்கின்றேன். ஏன் இப்படி எழுகின்றேன் என்று கூட அறியாமல் எழுகின்ற இந்த அகந்தை யெழுச்சி அற்று, உண்மை நானாகிய நீ மட்டும் இருக்கும்படி நீ குறிக்கொள்ளாதது என்ன குறையோ?

164. இகன்மனமித் தேகத் திருக்க விருக்கச்
செகமயலின் கைவசமே சிக்கிச் — சுகமென்றே
இல்லாப்பொய்த் தோற்றத் தினிப்புற் றுனைமறக்கும்
பொல்லா திதைக்கொன்று போடு.

நான் இந்த தேகத்தில் அதிக நாள் இருக்க இருக்க, கேடு செய்கின்ற இந்த மனம் உலக மயக்கத்தின் கைவசத்திலேயே மேலும் மேலும் சிக்கிக்கொண்டு, உண்மையற்ற இப்பொய்த் தோற்றத்தையே மிகச் சுகமானது என்று நினைத்து அதில் இனிப்புற்று, உன்னை மறந்தே போய்விடும். ஆகையால், மிகப் பொல்லாததாகிய இவ் வகந்தை மனத்தை நீ கொன்று போடுவாயாக.

165. மனமென்றோர் சித்தெழுச்சி வந்தவுடன் றேகச்
சினையொன்று தோன்றும் செகம்பின் — வினையதன்பின்
மூலமன மான முனைப்பை முழுதழித்துக்
காலகா லாரமணா கா.

மனம் என்ற ஓர் அறிவு எழுச்சி யுண்டாகும் போதே, தேகம் என்ற ஓர் உபாதியும் தோன்றிவிடுகின்றது; பிறகு உலகத் தோற்றமும் உண்டாகி விடுகின்றது; அதன் பிறகு அவ் வுலகத் தோற்றத்தில் விருப்பு வெறுப்பால் கர்மங்கள் தோன்றிவிடுகின்றன. ஆகையால், காலகாலனாகிய ஸ்ரீ ரமணா, இவை அனைத்திற்கும் மூலமான அகந்தை முனைப்பை முற்றிலும் அழித்துக் காத்தருள்வாயாக.

166. தோன்று மெழுச்சியே துக்கமதா லஃதினின்றுந்
தோன்றுஞ் சுகங்களெலாந் துக்கமே — தோன்றுமகம்
ஏன்றோன்று மாயினுமுன் னின்பவச மாக்கியந்தத்
தான்றோன்றி தன்னைத் தறி.

'நான் உடல்' என்று தோன்றுகின்ற முதலெழுச்சி யாகிய அகந்தையே துக்க வடிவம் தான்; ஆகையால், அவ் வகந்தையினின்றும் பிறகு தோன்றும் இவ் வுலகச் சுகங்களெல்லாங்கூட துக்கமயமே யாகும். எனவே, இந்த எழும்பும் அகந்தை எக்காரணத்தை முன்னிட்டுத் தோன்றினாலும் சரி, அந்தத் தான் தோன்றியாகிய அகந்தையைத் தோன்ற விடாமல் உன் பேரின்ப வசப்படுத்தி அழித்தருள்க.

167. மக்களென்று மன்னார் மதிப்பென்று மேச்சென்றுந்
தக்கதென்று மீது தகாதென்று — மிக்கவெளிப்
போந்துணரும் புத்தி புறப்படா துள்ளழுந்தி
ஓய்ந்தழிய வைத்துநீ யோங்கு.

'இவர்கள் உலக மக்கள்' என்றும், 'இது இவர்கள் எனக்குச் செய்யும் இழிவு' என்றும், 'இது தக்கது' என்றும், 'இது நடக்கத் தகாதது' என்றும் வெளிமுகத்தில் வெகுவாக எழுந்து உணரும் புத்தி அவ்வாறு புறப்படாது உள்ளே அழுந்தி ஓய்ந்து அழியும்படிச் செய்து நீ மாத்திரமே ஓங்கி நிற்பாயாக.

168. புரையாசை மூன்றுட் புழாசை மிக்க
வுரமா மொழிக்க வுடலில் — திரமாக
நானென் றெழுவோ னசிப்பித்த லேவழிநீ
தானின்று செய்வாய் தயவு.

மிகக் கொடியவைகளான மூவாசைகளுக்குள்[17] புகழாசையே மிகவும் வலிமையுடையதாகும். அதை ஒழிக்க வேண்டுமாயின், இவ் வுடலில் 'நான்' என்று எழுவோன் எவனோ, அந்த அகந்தையை ஸ்திரமாக அழித்தல் ஒன்று தான் வழியாகும். ஆகையால், அதற்கு நீதான் இன்று தயவு செய்ய வேண்டும்.

169. நானா னெனவிளங்கும் ஞானகுரு பாதவிருப்
பானா னிதயப் பரவெளியாழ்ந் — தூனா
ருடலுருவாத் தோன்று முபாதி சமூலங்
கெடவருளென் கெஞ்சுமொழி கேட்டு.

'நான் நானே' என்று விளங்கும் ஞானசற்குருவின் பாதத்தின் மீதுள்ள அன்பால் நான் இதயாகாசத்தில் ஆழ்ந்து, 'இம் மாமிச உடலுருவே நான்' என்ற வடிவில் தோன்றும் என் உபாதி முழுவதும் வேரோடு கெட வேண்டிக் கெஞ்சி அழுகின்ற என் பிரார்த்தனையையும் கேட்டருள் வாயாக.

170. பணம்பதவி சத்தி பலர்பாற் புகழோ
டிணங்கக் கிடைக்கு மிகத்தால் — அணுவும்
அகந்தை யடங்கா தனேகமுகங் கொண்டு
மிகுந்ததிதை மாய்த்து விடு.

இந்த ஜன்மத்தில் பணத்தினாலும், பதவியினாலும், சக்தியினாலும், மேலும் என்னைப் புகழும் பலபேர் என்பால் வந்து சேர்வதாலும், அகந்தையானது அணுவளவு கூட அடங்காமல், அனேக முகங் கொண்டு மிகுந்துவிடுகின்றது. இவ் வகந்தையை நீயே அருளால் மாய்த்து விடுக.

171. இப்போ திருக்கு மெழுச்சிநா னுன்னருளால்
எப்போது(ம்) மூலத் தெழாதழிய — அப்பாவே
வல்வழியில் லாதுன் மதுரவச மாக்கியெனைக்
கொல்வையேற் றீருங் குறை.

அப்பாவே ஸ்ரீ ரமணா! இப்போது வாழ்ந்திருக்கும் அகந்தை யெழுச்சியாகிய நான் மீண்டும் எழாதபடி உன்னருளால் எப்போதும் மூலஸ்தானத்திலேயே அழிந்து கிடக்கும்படி, பலாத்கார வழிகளைக் கையாளாமல், இனியதான உன் பக்தி வசமாக்கி என்னைக் கொல்வாயாகில், என் குறை தீரும்.

172. தூக்கத் தெழாத துவித வகவிருத்தி
நீக்கித் தருவாயெந் நேரமும் — ஊக்கத்தோ
டான்மாப ரோட்ச வனுபவப்பே ரின்பமே
நான்மேவு மாறருளே நல்கு.

தூக்கத்தில் இல்லாத அகம்விருத்தியாகிய 'நான்' என்ற துவித பாவத்தை எல்லா அவஸ்தைகளிலும் நீக்கித் தருவாயாக. நான் அபரோக்ஷ ஆன்மானுபவப் பேரின்பத்தையே மிகுந்த ஊக்கத்தோடு அடையுமாறு அருள் தருவாயாக.

[17] *பொருளாசை, உறவாசை, புகழாசை எனும் இவையே மூவாசைகளாகும் என்பது 'சாதனை சாரம்' பாடல்கள் 101-109ல் கூறப் பட்டுள்ளதைக் காண்க.

173. உடலளவா நானென் றுதிக்குமபி மானங்
கெடவருள்வா யென்றிறைஞ்சிக் கேட்டுங் — கொடைவள்ளால்
வாளா விருப்பையேன் மற்றெந்த வாறுனக்கோ
ராளாவே னோநா னலேன்.

அருட்கொடை வள்ளலே! "உடல் அளவாக 'நான்' என்று உதிக்கும் தேகாபிமானம் கெடும்படி அருள்வாயாக" என்று உன்னைப் பலமுறை யாசித்துக் கேட்டுங்கூட நீ சும்மாவே இருப்பாயாகில், மற்றபடி நான் எவ்வாறுதான் உனக்கு ஓர் ஆளாவேன்? நான் உன் அடியவனாக ஆகவே முடியாது.

174. நல்ல விவேகமுட னானெனதாம் பேய்முனைப்பை
வெல்லவரு ளீயா விடிலெந்தாய் — எல்லாப்
பழிக்குமிட மாகிப் பவமரணப் பாழாங்
குழிக்கடைவே னன்றோ கொடு.

எந்தையே! நீ 'நான்', 'எனது' என்னும் அகங்கார மமகாரப் பேய் முனைப்பை நல்ல விவேகமுடன் நான் வெல்லுதற்கு அருள் தராவிட்டால், எல்லாவித பழிகளுக்கும் இடமாகி நான் பாழான ஜனன மரணக் குழியிலேயே வீழ்ந்துகிடப்பே னல்லவா? ஆகையால், நீ அருள் கூர்ந்து அந்த விவேகத்தைக் கொடுப்பாயாக.

175. தன்னிருப்பி னீங்கித் தனுவாய்ச் சகவுணர்வாய்
முன்னிருப்ப தோருமொரு மூடமனம் — என்னவிதத்
திவ்வா றெழுமோ விறைவா வெழுச்சியெனக்
கொவ்வா ததைநீ யொழி.

தன் உண்மை இருப்பாகிய ஆத்ம ஸ்திதியை விட்டு நீங்கி, 'உடலே நான்' என்னும் ஒரு மூட மனமாய், பிறகு 'உலகம் சத்தியம்' என்னும் உணர்வுடையதாய் என் முன்னால் இருப்பவற்றையே அறிகின்ற இவ் வகந்தை எப்படி இவ்வாறு எழுகின்றதோ? அவ்வெழுச்சி எனக்குச் சற்றுங் கூடாததே யாகும். ஆகையால், இறைவா, அதை நீ ஒழித்தருள்வாயாக.

176. புலையறிவின் மோகப் புலப்ப மடங்கி
நிலையறிவான் மாவா நிகழும் — விலையறியா
மாகோன் னதவாழ் வடையத் தடையாமென்
தேகோகம் புத்தி சிதை.

இந்தப் புலையுடலையே 'நான்' என்றுணரும் அகந்தை அறிவின் மயக்க வியவகாரங்கள் யாவும் அடங்கி, என்றும் சாசுவதமான ஆன்ம அறிவாய் மட்டும் நிற்கும் நிஷ்டையாகிய விலைமதிப்பறியாத மகா உன்னத வாழ்வை நான் அடைவதற்கு ஒரு தடையாக இருக்கின்ற எனது தேகான்ம புத்தியை நீ சிதைத்தருள்வாயாக.

177. எழுநா னிலாம லிருக்கு(ம்)நா னா(ம்)நீ
முழுநா னதிலெழு(ம்)நான் மூழ்கத் — தொழுநாண்
முழுதுமன மார முறையிட்டுக் கெஞ்சி
யழுதுநிற்கு மென்பா லருள்.

எழுகின்ற இந்த அகந்தை 'நான்' இல்லாமல் எப்போதும் இருக்கும் 'நான்' ஆகிய நீயே பரிபூரண 'நான்'. எழுந்த 'நான்' ஆகிய அகந்தை அந்தப் பரிபூரண ஆன்மாவில் மூழ்கிவிட வேண்டும் என்று உன்னைத் தொழுது வணங்கி ஒவ்வொரு நாளும் முழுவதும் மனமாரக் கெஞ்சி முறையிட்டு அழுது நிற்கும் என்னிடம் இவ் வகந்தையின் ஒழிவையே அருள்வாயாக.

178. இங்கோ ரிகவாழ்வாத் தோற்ற மெழுப்பியுடற்
பொங்கபிமா னத்தாற் புறப்பொருள்வாய் — வெங்காமக்
கோபாதி வாசனைகள் கூட்டிக் கொழுத்தலைசித்
தாபா சனைநீ யழி.

இங்கே என்னுடைய ஒரு பிறவி வாழ்வாக ஒரு பொய்த்தோற்றத்தை எழுப்பித் தந்து, உடலிற் பொங்கும் அபிமானத்தால் புறத்தேயுள்ள உலகப் பொருள்களிடத்தில் எனக்குக் கொடியகாமக் குரோதாதி வாசனைகளைச் சேர்த்துக் கொடுத்து, மிகக் கொழுத்து அலைகின்ற சிதாபாசனாகிய அகந்தையை நீ அழித்தருள்வாயாக.

179. கலக்கச் சுழலறிவாற் காயமாத் தோன்றும்
மலக்கற்றை நானா மதித்துப் — புலக்கழிவாய்ப்
போதலையே யின்பாய்ப் புசிக்கு மவவாழ்வின்
சாதலையே தாவென் றனக்கு.

இயல்பு நிலையிற் கலங்கி சுழன்று அலையும் மயலறிவாற் சரீரமாகத் தோன்றும் ஒரு மலக்குவியலை 'நான்' என்று அபிமானித்து, அதிலுள்ள ஐம்புல வழியாக வெளியில் அலைவதையே இன்பம் என்று அனுபவிக்கும் வீணான இவ் வகந்தை வாழ்வின் சாவையே எனக்கு வரமாகக் கொடுத்தருள்வாயாக.

180. நீயன்றி நானில்லா நின்மலவாழ் வெய்துவதே
யாயி னறிவுடைமை ஆணவமாம் — பேயின்றுன்
மோன வருட்கணையான் முற்றழிவு சேருமேல்
யானெனதென் றெஞ்சுவதி யாது.

ஆராயுங்கால், ஆன்மாவாம் உன்னைத் தவிர அகந்தையாகிய 'நான்' இல்லாது அழிகின்ற பரிசுத்த வாழ்வை எய்துவதுதான் அறிவுடைமை யாகும். இந்த ஆணவமாகின்ற பேய் உன் மோனமாகிற அருளஸ்திரத்தால் இப்போதே முற்றிலும் அழிந்துவிடுமேயானால், பிறகு 'நான்' என்றோ 'எனது' என்றோ எது எஞ்சி நிற்க முடியும்?

181. ஆளனீ யன்றி யடிமைநா னென்றெதிலும்
மூள வெழுந்தன் முனைப்பொழிந்து — மாளத்
திருவருளின் சத்தியாற் செய்தருள வேண்டுங்
குருரமண வுள்ளங் குளிர்ந்து.

குரு ரமணா! ஆண்டவனாகிய நீ யன்றி உன் அடிமையாகிய நான் கர்த்துருத்துவம் மூண்டு எதிலும் 'நான் செய்வேன்' என்றெழும் தன் முனைப்பு அழிந்து சாகுமாறு உன்திருவருட் சக்தியால் நீ திருவுள்ளங் குளிர்ந்து செய்தருள வேண்டும்.

182. செத்தோனே யாகித் திரியவிந்த சென்மத்தே
அத்தா வருள்புரிந்தா லாகாதோ — முத்த
முடிவேந்தே சீரமண மூர்த்தியே யுன்றன்
அடியேன்ற னாவ லறி.

முக்தர்களின் சக்கரவர்த்தியே! இந்த ஜன்மத்தில் நான் வாழ்நாளில் அகந்தை செத்தவனேயாகி, ஆனால் உடலில் வாழ்ந்திருக்க நீ அருள்புரிந்தால், தந்தையே, அது உன் திருவருள் மகிமைக்கு ஆகாத செயலா? ஸ்ரீ ரமண மூர்த்தியே! உன் அடியவனாகிய எனது இந்த ஒரே ஆவலை யறிவாயாக.

## 21. வியத்தித்துவ மற வேண்டல்

183. நானொருவ னில்லா நலம்பெறுவே னாகிலிவ்வா
றானொருகா லுற்ற வுயர்பயனாம் — வானுலகோ

டேழுலகி னாட்சி யெனக்களித் தாலுமிந்தப்
பாழகந்தை வாழ்ந்தென் பயன்.

அகந்தையாகிய 'நான்' ஒருவன் இல்லாமல் இறந்து விடுஞ் சிறப்பைப் பெறுவேனேயாகில், இவ்வாறு ஒரு மானிட சரீரத்தை யடைந்த சிறந்த பிறவிப்பயனை (புருஷார்த்தத்தை) யுற்றவனாவேன். இது தவிர, நீ சுவர்க்கம் முதல் ஏனைய ஏழு உலகங்களையும் நான் ஆட்சி செய்யும் பேற்றை எனக்கு அளித்தாலுங் கூட, இந்தப் பாழான அகந்தை உயிர்த்திருக்கும் வரையில், அதனால் என்ன பயனுண்டு?

184. வேண்டுமோ நானோர் வியத்தி யெனையிலனாக்
காண்டலா னட்டமுனக் காவதென்ன — மீண்டு
முதியா தொரேமுறையா யுன்னிலியா னாழ்ந்து
பதியாத தென்னோ பயன்.

இறைவா! 'நான்' என்னும் ஒரு வியக்தி இன்னும் இருக்க வேண்டுமோ? என்னை இல்லாதவனாகக் காண்பதால், உனக்கு என்ன நஷ்டமாகிவிடும்? ஆகவே, நான் மீண்டும் உதிக்காதபடி ஆன்மாவாகிய உன்னில் ஒரே முறையில் ஆழ்ந்து பதிந்துவிட அருள் செய்க. அவ்வாறு ஆகாவிடில், யாருக்கு என்ன பயன் உண்டு?

185. இனியொன்றை யென்ற னிருப்பா யயலிற்
றனிநின் றெணாத [18]தவமே — நனியார்ந்து
சென்று திரும்பாத் திருவடியில் வாழ்வெனக்கு
நன்றருள வேண்டாமோ நல்கு.

இனிமேல் எந்த ஓர் உடலிருப்பையும் ஆன்மாவுக்கு வேறாகிய என் இருப்பாக ஒரு தனிப்பட்ட ஜீவத் தன்மையோடு நின்று அபிமானிக்காத உயர்ந்த தவத்தையே நான் நன்கு அடைவதான, பிறப்பு இறப்பாகப் போக்குவரவு இல்லாத உனது திருவடியின் அருள் வாழ்வை எனக்கு நீ நன்றாக அருள வேண்டாமோ? அவ்வாறே அருள்க.

186. சும்மா விருக்குஞ் சுகச்சுவையி னான்கரைவுற்
றிம்மா னிடத்துமற்றை [19]யேதிடத்தும் — எம்மானுன்
னாண்ட திருவடியா லன்னியம்போ னானொருவன்
மீண்டு மெழாது மிதி.

என்னை யாட்கொண்ட பெருமானே! சும்மா இருக்கும் ஆத்ம சுகத்தின் சுவையிலே நான் கரைந்துபோய் இந்த மானிட சரீரத்தில் மட்டுமின்றி மற்ற எவ்வித சரீரத்திலும் ஆன்மாவுக்கு அன்னியம் போல் நான் ஒருவன் மறுபடியும் எழுச்சியுறாதபடி உன் திருவடியின் கீழ் என்னை மிதித்தருள்வாயாக.

187. உன்னிருப்பி லொன்றி யுருவழித லன்றிநான்
என்னிருப்பென் றொன்றையுமே யேற்காது — தன்னிருப்பாம்
உண்மையறி வின்ப வுறுதியுரு வாகவருள்
வண்மை புரிந்தருளு வாய்.

உன் இருப்பாகிய ஆன்ம சொரூபத்திற் கலந்து 'நான் இன்னார்' என்ற தனியிருப்புரு அழிவதைத் தவிர, மற்றபடி என்னுடைய தனியிருப்பாக எது ஒன்றையுமே நான் ஏற்காமல், உறுதியான சச்சிதானந்த ஆன்ம இருப்புரு வாகு மாறு அருட் கொடை புரிந்தருள்வாயாக.

188. தன்வியத்தி நட்டஞ் சகஜ மடைவதன்றி
யென்விருப்பம் வேறொன்றிங் கேதுளது — நின்விருப்பம்

---

[18] 'தவமே' "அது தான் நற்றவம்" எனவரும் 'உபதேசவுந்தியார்' 30வது பாடல் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

[19] 'ஏதி த்தும் மீண்டும் நானொருவன் அன்னியம்போல் எழாது திருவடியால் மிதி' எனக் கொண்டு கூட்டுக.

இஃதொன்றே யீய விசையுமே லெவ்வுலகில்
எஃதுண் டெனக்கினியோ ரின்பு.

'நான் ஒருதனிப்பட்ட ஜீவன்' என்ற வுணர்வின் அழிவு சகஜானுபவமாவதைத் தவிர வேறொரு விருப்பம் இங்கு எனக்கு ஏது உண்டு? உன் விருப்பமும் இது ஒன்றையே எனக்குக் கொடுக்க இசையுமானால், எனக்கு இனி வேறொரு இன்பம் எந்த உலகில் என்ன இருக்கப் போகின்றது?

189. பெற்றொன்று துய்க்கவுனைப் பேணுவார்போ லின்றியான்
அற்றின் றழியவா சிக்கின்றேன் — மற்றொன்று
கேளே னிதையளித்தாற் கேட்பதற்கு நானென்றோர்
ஆளே ததன்பின் னருள்.

ஏதோ ஒரு காமியத்தை உன்னிடமிருந்து அடைந்து அனுபவிப்பதற்காக உன்னைத் துதிப்பவர்கள் போலல்லாமல், நான் இன்று என் இருப்பற்று அழிவதற்கே உன்னிடம் வேண்டித் துதிக்கின்றேன். வேறு ஒன்றுமே உன்னிடத்திற் கேட்க மாட்டேன். இதை நீ எனக்கு அளித்துவிட்டால், அதன் பிறகு உன்னிடம் எதுவும் கேட்பதற்கு 'நான்' என்று ஓர் ஆள் எங்கே இருப்பான்? ஆதலின் அவ்வாறே அருள்க.

190. அனைத்திற்கு மாதார மாயிருக்கு முண்மை
யினைத்தென் றறிவி லிலக்கி — முனைத்தென்றும்
மேலெழும்பு(ம்) மாய வியத்தி யுறாவகைநின்
பாலணைந்த யானடையப் பார்.

இந்தப் பிரபஞ்சத் தோற்றம் எல்லாவற்றிற்கும் ஆதார மாயிருக்கும் ஆன்ம உண்மை இப்படிப்பட்டது என்று என் அறிவில் அனுபவமாக விளங்க வைத்து, 'நான்' என்று உந்தி மேலெழும்பும் அகங்கார மாய வியக்தி இனி என்றென்றுமே எனக்கு உண்டாகாதபடி உன்னிடம் வந்தடைந்த அடிமையாகிய நான் பேறு அடையும்படி நீ பார்த்துக் கொள்வாயாக (செய்தருள்க).

191. நீயே யிருப்பதன்றி நீசவுட னான்போலோர்
தீயோ னெழவுந் திருவுளமோ — தாயே
யருணா சலரமண வப்பாவே யாண்ட
குருவே யெனையழித்துக் கூடு.

தாயே, அருணாசலரமண அப்பாவே! நீ மட்டுமே இருப்பதன்றி 'இந்த நீச உடலே நான்' போல் ஒரு கொடியவன் எழவிடுவதும் உனக்குத் திருவுளமோ? என்னை யாட்கொண்ட குருவே! என்னை அழித்து நீ ஒருவனே யாகக் கூடுவாயாக.

192. உலகப்பொய்த் தோற்ற முதிக்க விடந்தந்
துலகைக்காண் கின்றநா னுன்னின் — விலகித்
தனிவியத்தி யாகுந் தடுமாற்ற(ம்) நீங்கி
நனியகத்துள் ளாழ நசுக்கு.

இந்த உலகமாகிய பொய்த்தோற்றம் உதிப்பதற்கு ஹேதுவாய், இவ் வுலகைக் காண்பானாகின்ற நான் ஒருவன் உன்னிடமிருந்து எழுந்து விலகி ஒரு தனி வியக்தியாகின்ற தடுமாற்ற நிலை நீங்கி, நான் இதயத்துள் நன்றாக அமிழ்ந்து விடும்படி நசுக்குவாயாக.

193. வேதவே தாந்தமெலாங் கற்றமதி வித்தகமும்
போதமுறுங் காலழிந்து போவதனால் — வேதம்
அவேதமே யாவஃ தறிந்தவறி யாமை
நிவேத்னமாக் கொண்டருள்வாய் நீ.

வேத வேதாந்தங்களை யெல்லாம் கற்ற புத்தி சாமர்த்தியமுங் கூட ஆன்ம ஞானம் உண்டாகும் போது அழிந்தே போவதால், வேதம் அவேதமேயாகவும் (அறிந்த தெல்லாம் அறியாமையாய்ப் போகவும்), அவ் வேத வேதாந்தங்களை யறிந்த அறியாமை வடிவான அகந்தையை நீ உனக்கு நிவேதனமாகக் கொண்டருள்வாயாக.

194. இல்லாத வொன்றை யிருப்பதா வெண்ணுமவன்
இல்லாதான் றானே யிருக்கு(ம்)நீ — யில்லாமல்
இல்லாதாற் கேதுசத்தி யெண்ண விறைவாநான்
இல்லா தொழிய வியற்று.

இல்லாத பொருளாகிய இப் பிரபஞ்சத்தை இருப்பதாக எண்ணுகின்றவன் உண்மையில் இருப்பற்றவனான அகந்தை தானே! எப்போதுமுள்ள பொருளாய் இருக்கும் நீ யில்லாமல், இந்த இருப்பற்ற அகந்தைக்கு ஒன்றை இருப்பதாக எண்ணுவதற்குச் சக்தி யேது? ஆகையால், இறைவா, 'நான்' என்ற இவ் வகந்தை இல்லாமல் ஒழியும்படிச் செய்வாயாக.

195. வன்னி மலைக்குடலின் மானங்கற் பூரமா
வென்னைமிஞ் சாமனீ யேற்றருள்க — பன்னிப்
பலமுறையு முன்னைப் பணிந்துநான் வேண்டும்
பலனிதுவே யன்றோ பகர்.

ஞானாக்கினி மலையாகிய உனக்கு (அருணாசலத்திற்கு) தேகாபிமானமாகிய என்னைக் கற்பூரமாக நீ ஏற்றுக்கொண்டு, யாதொன்றும் மிஞ்சாமற் செய்தருள்வாயாக. பலமுறையும் உன்னை நான் பணிந்து துதித்து வேண்டும் லாபம் இதுவே யல்லவா? சொல்க.

## 22. எழுச்சி யற வேண்டல்

196. இவ்வா றுலகி லிருக்கின்றே னென்றொருநான்
எவ்வாறு முன்னா லெழுகிறதோ — அவ்வா
றிதனையினி யேனு மெழாதிருத்து வாயேல்
அதுபோது மேழைக் கருள்.

'நான் உலகில் இன்னாராக, இவ்வாறாக இருக்கின்றேன்' என்று ஓர் அகந்தை 'நான்' முதலில் எவ்வாறு எழுகிறதோ, அதை இனிமேலேனும் அவ்வாறு எழாதபடி உன் திருவடியிலேயே (ஆன்மாவிலேயே) இருத்தி விடுவாயானால், அது ஒன்றே ஏழையாகிய எனக்குப் போதும்; அருள்க.

197. தோற்ற வொடுக்கமின்றிச் சும்மா விருப்பதெனக்
காற்றித் தருகவெனை யாண்டவா — போற்றிப்
பணிந்தழுது கெஞ்சியிந்தப் பாக்கியம்பெற் றேனேற்
றணிந்தனன்வெந் தாபத் தணல்.

என்னை ஆண்டவனே! அகந்தை 'நான்' என்று தோன்றுவதும் ஒடுங்குவதும் (விழிப்பும் தூக்கமும்) இல்லாமல் சும்மா இருக்கும் நிஷ்டை நிலையை எனக்குச் செய்தருள் வாயாக. உன்னைப் போற்றி, பணிந்து, அழுது, துதிகளிற் கெஞ்சி இந்தப் பாக்கியத்தைப் பெற்றுவிடுவேனானால், கொடிய மூவாசைத் தாபாக்கினி நீங்கிக் குளிர்ச்சி யடைந்தவன் ஆவேன்.

198. எக்கா ரணத்தா லெழினு மகவெழுச்சி
தக்கா றிலாவதனைத் தான்றடுத்தாள் — மிக்காம்
பரங்கருணை யாலுலகிற் பாமரர்க்கு முய்யும்
வரந்தருவான் வந்தபெரு மான்.

மிகுந்த பரமகருணையால் பாமர மக்களுக்கும் உய்யும் வரத்தைத் தருவதற்காக இவ் வுலகில் உருவெடுத்து வந்த பெருமானே! அகங்காரயெழுச்சி எக் காரணத்தால் எழுந்தாலும், எழத் தகாததான அதை நீதான் தடுத்து ஆள வேண்டும்.

199. இருக்க விருக்கபே ரின்பூட்டு முன்பால்
இருக்கா தெதற்கோ வெழுந்தேன் — திருக்கணோக்
கார்ந்த ரமணகுரு வாவென்னை யாண்டோயீ
தோர்ந்தொடுங்க வுள்ளே யுதவு.

திருவருட் கண்ணோக்கோடு ஸ்ரீ ரமண சற்குருவாக வந்து என்னை ஆட்கொண்டவனே, உன்னிடமே மேன்மேலும் இருக்க இருக்க நீ பேரின்பத்தை யூட்டுகின்றாய். அப்படிப்பட்ட உன்னிடத்திலேயே எப்போதும் இருக்காமல் எதற்காக 'நான்' என்று எழுந்தேனோ? இந்த சூட்சுமத்தை அறிந்து மறுபடியும் எழாதபடி உள்ளே ஒடுங்குமாறு எனக்கு உதவி செய்க.

200. தானொன் றெழுந்தாற் சகலமுந் தானெழு(ம்)நான்
ஊனென் றெழுவ தொழித்தருள்வாய் — வானென்
றெலாவற்று மென்று மியல்பா யிருந்து
நிலாவுற்ற சற்குருவே நீ.

ஆகாயத்தைப் போல எல்லாப் பொருள்களினுள்ளும் எப்போதும் இயல்பாகவே இருந்து விளங்குபவனாகிய சற்குருவே, 'நான்' என்று எழுவேனாகில் சகலமும் எழுகின்றன. ஆகையால், 'நான் இத் தேகம்' என்று எழுகின்ற எழுச்சியை நீ ஒழித்தருள்வாயாக.

201. அங்குள்ள நீயே யலாம லயலாநா
னிங்கொருவ னேன்பின் னெழுகின்றேன் — புங்கவா
நானற்ற போதுவாழ் நாயகா மீண்டு(ம்)நா
னூனத் தெழாம லொழி.

அங்கு விளங்கும் ஆன்ம சொரூபமாகிய நீ மாத்திரமே யல்லாமல், உனக்கு வேறானவன் போல் இங்கு 'நான்' என்று ஒருவனாக (அகந்தையாக) ஏன் இனிமேலும் எழுகின்றேன்? இறைவனே, 'நான்' அற்ற போது வாழ்கின்ற நாயகனே, இந்தச் சரீரத்தையே மீண்டும் 'நான்' என்று கொண்டு எழாமல் என்னை ஒழித்தருள்க.

202. எழுந்து குதிக்கு மெனக்கோர் முடிவிட்
டழுந்துவித் தென்னை யழிப்பா — யுழன்றடைந்த
லாபமெலாம் போதுமந்த லாபத்தா னான்சேர்த்த
பாபமெலாந் தீரருட்கண் பார்த்து.

'நான் இவ் வுடல்' என்று எழுந்து எண்ணற்ற கர்மப் பிரவிருத்தியிற் குதிக்கும் எனக்கு ஒரு முடிவிட்டு, என்னை உன்னுள் அழுத்தி யழிப்பாயாக. பகிர்முகப்பட்டு நான் அடைந்த லாப மெல்லாம் போதும்; அந்த இகபர லாபங்களால் நான் சேர்த்த பாபங்க ளெல்லாம் தீரும்படி உன் அருட்கண்ணாற் பார்த்தருள்க.

203. இருக்கு முனக்கயலா வெவ்வாறா ரோர்நான்
பொருக்கெனவுட் பொங்கியெழப் போகும் — அருக்கனாம்
உன்னிலிருந் தோரிருளு முற்பத்தி யுண்டோபின்
னென்னை யெழவிடுவ தேன்.

உண்மையில் இருப்புள்ள ஒருவனாகிய உனக்கு வேறாக 'நான்' என்ற ஒருவனாக யார், எவ்வாறு திடீரென உன்னிடமிருந்து எழுந்துவிட முடியும்? ஞானசூரியனாம் உன்னிடத்திலிருந்து அஞ்ஞான வடிவமாகிய என்போன்ற ஓர் இருள் உற்பத்தியாக முடியுமோ? அங்ஙனம் முடியாத போது, பிறகு நீ என்னை எழவிடுவது ஏன்?

204. நின்னைவிட் டேயயல்போ னீங்கும்பொய்ந் நெஞ்சத்தால்
அன்னியமு மன்னியத்தி லாசையுமே — யுன்னப்
படுவதன்றோ நீங்கப் படாதவா றாழ்ந்து
விடுவதென்றோ நின்னருளில் வீழ்ந்து.

உனக்கு வேறான ஒரு பொருள் போல் உன்னை விட்டு நீங்கி எழும் ஒரு பொய்யான மனத்தினாலல்லவா, அன்னியப்பொருள்களும், அவைகளின் மேல் ஆசையும் நினைவு வடிவாக உண்டாகின்றன? ஆகையால், மனம் உன்னை விட்டு நீங்காத படி உன் திருவருளில் வீழ்ந்து ஆழ்ந்து விடுவது என்றைக்கோ?

205. தன்னி னகலுந் தருணத்தி லல்லாம
லன்னியங்க ளுண்டென் றறிவுளதோ — முன்னிலைமேற்
கூடும் விருத்தி குவிந்திதயம் விட்டகலா
தாரும் படிநீ யருள்.

ஆன்மாவை விட்டு மனம் வெளிப்படும் சமயத்தைத் தவிர, மற்ற பொழுதில் அன்னியப் பொருள்கள் இருக்கின்றன என்ற அறிவு உண்டாகுமோ? ஆகையால், முன்னிலை களாகிய இவ் வன்னியப் பொருள்களின் மேல் விரியும் விருத்திகளெல்லாம் குவிந்து இதயத்தை விட்டு அகலாமல் மனம் அங்கேயே பொருந்திக் கிடக்கும்படி நீ அருள் செய்வாயாக.

206. எழுந்தநா னேமுதலி லெண்ணமத னாலே
யெழுந்தபின் னெண்ணாம னில்லேன் — விழுந்தெனது
மூலமா முன்னின் முடிவுறலே யெண்ணமற்ற
சீலமா மீதெனக்குச் செய்.

'இவ் வுடம்பு நான்' என்று முதலில் எழுந்த அகந்தை யாகிய நானே ஓர் எண்ண மாகும். அதனால், நான் எழுந்த பிறகு எண்ணாமற் சும்மா நிற்க என்னால் முடியாது. ஆகையால், நான் எழுந்த எனது மூலமாகிய உன்னில் விழுந்து அழிவடைவதே எண்ணமற்றிருக்கும் சீல மாகும். இதை நீ எனக்குச் செய்தருள்க.

207. எண்ணவடி வாகா திருப்பா யிருக்குமுயர்
திண்ணமெனக் கீவாய் திருவருளால் — அண்ணலே
சும்மா விராமையாற் சூழ்ந்ததுய ரம்போதும்
வெம்மாய நெஞ்சம் வெகுண்டு.

அண்ணலே! நான் அகந்தையாகிய முதல் எண்ண வடிவத்தையே அடையாதபடி சத்ரூபமான ஆன்மாவாய் இருக்கின்ற உயர்ந்த திண்ணமான நிலையை எனக்கு உன்திருவருளால் அளிப்பாயாக. அவ் விருப்பிலேயே நான் சும்மா இராமல், கொடிய மாயமான நெஞ்சம் எழுந்து பரபரப்படைந்ததால் சூழப்பட்ட துயரங்கள் போதும்.

208. அன்னியநா னுள்ளவரை யச்சம் விருப்புவெறுப்
பென்னும் விகற்ப மிருந்தாகும் — உன்னையலால்
யானொன் றிலாப்போது யாருக் கிவையதனால்
யானென் றெழாமை யருள்.

உனக்கு அன்னியமாக எழுந்துள்ள நான் ஒருவன் இருக்கும் வரையிலும், பயம், ஆசை, குரோதம் என்னும் விகற்பங்கள் இருந்தே தீரும். சத்வஸ்துவாகிய நீ இருப்பதைத் தவிர அகந்தையாகிய 'நான்' ஒன்று இல்லாத போது, இவ்விகற்பங்க ளெல்லாம் யாருக்கு உண்டாக முடியும்? ஆகையால், 'நான்' என்ற அகந்தை யெழுச்சி எழாத நிலையை அருள்வாயாக.

209. ஏனெழுந்தே னேனெழுந்தே னந்தோ வினிமீண்டு(ம்)
நானெழுவ தில்லா நலந்தருவாய் — ஊனெழுந்த

காரணத்தாற் சேர்த்த கனவா தனையெல்லாஞ்
சேர வழியவருள் செய்து.

அந்தோ! நான் ஏன் எழுந்தேன்? நான் ஏன் எழுந்தேன்? இவ் வுடலில் 'நான்' என்று எழுந்த காரணத்தாற் சேர்த்துக் குவித்த அளவற்ற வாசனைகள் எல்லாம் ஒருங்கு சேர்ந்து அழிய அருள் செய்து, இனிமேலாவது மீண்டும் நான் எழாத நலத்தைச் செய்தருள்வாயாக.

## 23. நடத்தி யருள வேண்டல்

210. கல்வி மனவலிவு காஷ்டவை ராக்கியத்தில்
வல்லமையில் லாத வறியனெனை — அல்விலக்கி
யூக்கியரு ளூட்டி யுபநிடதத் தேயுரைத்த
வாக்கியமெய் யாக்க வரி.

கல்வியறிவிலும், மனோபலத்திலும், காஷ்ட சமாதியில் நிலைப்பதற்குரிய திட வைராக்கிய குணத்திலும் சாமர்த்திய மில்லாத ஏழையாகிய என்னை இருளை விட்டு அகற்றி, ஆன்ம நிஷ்டையில் ஊக்கப்படுத்தி உனது திருவருளை யூட்டி, தகுதியடையவனாகச் செய்து, உபநிடதத்தில் நீ யுரைத்த "நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ..." என்ற வாக்கியம்[20] மெய்யாகும்படி என்னை வரித்துக் கொள்வாயாக.

பொருள்: இவ் வான்மா வேதமோதலால் கிடைக்கப் பெறாது; புத்தி நுட்பத்தாலும் எய்தப் பெறாது; ஏராளமான கல்வி கேள்விகளாலும் பெறக் கிடைக்காது. இது யாரை விரும்பித் தேர்ந்தெடுக்கிறதோ, அவனால்தான் அடையப் பெறுகிறது. அவனுக்கு இவ் வான்மா தனது சொரூபத்தை விளக்குகிறது.

211. சத்தா யிருக்குமுயர் சௌக்கியத்தை விட்டுடலாம்
பித்தாகி யாடலென்ன பேதைமையென் — னத்தா
வருணா சலரமண வான்மபரஞ் சோதித்
திருவாளா வென்னைத் திருத்து.

என் தந்தையே, சத்தாகிய ஆன்மாவாக நிலைத்திருக்கின்ற பேரின்ப லாபத்தை விட்டுவிட்டு, நான் ஓர் உடலாக மாறி வினையாட்டம் புரிவது எவ்வளவு மடமை யாகும்! ஸ்ரீ அருணாசலரமணா, ஆன்மபரஞ்சோதித் திருவாளா! என்னைத் திருத்தி யருள்வாயாக.

212. இருப்பின் சுபாவம்விட் டேனோ வெழுமோர்
விருப்பெனக்குண் டாகநீ விட்டாய் — திருப்புமுறை
நன்கறிந்த நீயே நடத்தி யபிமுகமா
யுன்கணுற வைப்பா யுகந்து.

'இருக்கிறேன்' என்னும் ஆன்ம சுபாவத்தை விட்டு விட்டு ஓர் அகந்தையாக எழுவதற்கு ஒரு விருப்பம் எனக்கு உண்டாகும்படி நீ ஏனோ என்னை விட்டுவிட்டாய்? என்னை அந்தர்முகமாகத் திருப்பி உன் திருவடிக்குக் கொண்டுவரும் முறையை நன்கறிந்த சற்குருவாகிய நீயே என்னை உன்னை நோக்கி வருமாறு நடத்தி, உன்னிடமே இருக்கும்படி விருப்பத்தோடு செய்தருள்வாயாக.

213. இணைகரங்க ளேந்தி யிரக்கின்றே னுன்பால்
துணைபுரிய வேண்டுந் துரியா — குணநலங்கள்
வேண்டியதெல் லா(ம்)நீ விரைந்தளித்துன் ஞானநிலை
யீண்டடைய வென்னை யியக்கு.

---

[20] உபநிஷத வாக்கியமாவது:

"நாயமாத்மா ப்வசனேன லப்யோ ந மேதயா
ந பஹுனா ச்ருதேன
யமேவைஷ வ்ருணுதே தேன லப்யஸ்தஸ்யைஷ
ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம்."

- கடோபநிஷதம் — 1.2.23

துரீய சொரூபனே! உன்னிடம் நான் என் இரு கரங்களையும் ஏந்தி யாசிக்கின்றேன். நீ துணை புரிய வேண்டும். வேண்டிய எல்லா நற்குணங்களையும் நீ விரைவில் எனக்கு அளித்து, நான் இங்கேயே உன் ஞானநிலையை அடையுமாறு என்னை இயக்கியருளுக.

214. உடலு(ம்) மனமு முவந்துன் கரத்துற்
றிடுநற் கருவியா யேற்றே — கடவுள்
ரமண பகவனே நானின்றி நீயே
யிமையும் பிரியா தியக்கு.

இறைவனாகிய ஸ்ரீ ரமண பகவானே! நீ சந்தோஷத்தோடு என் உடலையும் மனத்தையும் உன் கையில் உள்ள நல்ல கருவியாக ஏற்றுக்கொண்டு, அவைகளின் இயக்கத்திற்கு நான் கர்த்தாவாகாத படி, இமைப்பொழுது கூட நீ என்னை விட்டு நீங்காமல் அவற்றை நீயே இயக்கி யருள்வாயாக.

215. உன்னருளான் மட்டுமே யுந்தப் படுமெனிலித்
துன்னுமுடற் புத்தி தொழிற்படட்டும் — அன்னவையோர்
அற்ப சுதந்திரமு மற்றுன் னருள்வழிக்கே
நிற்கும் படிநீ நிகழ்த்து.

இங்கு வாழ்ந்திருக்கும் இந்த உடலும், புத்தியும் உன் திருவருளால் மட்டுமே இயக்கப்படுமேயானால், அவை தொழிற்படட்டும். கர்த்தாவாகத் தன்னை அகங்கரித்து, அவை தமக்கு ஓர் அற்ப சுதந்திரங்கூட எடுத்துக்கொள்ளாமல், உன் திருவருள் நடத்தும் வழியிலேயே அவை நிலைபெறும்படி நீ செய்தருள்வாயாக.

216. நின்னருளா லன்றோ நினையடைய வேண்டுமென்ற
பொன்னனைய வாவல் பொருந்தினேன் — என்னறிவுக்
கேது நலந்தீமை யேதென் றறியவலி
யேதுண் டிறைவா விசை.

இறைவா! 'நான் உன்னை யடைய வேண்டும்' என்ற பொன் போன்ற ஆவலை உன்னுடைய திருவருளினா லல்லவா பெற்றேன்? அன்றி, எது நலம், எது தீமை என்று அறிய என் அறிவுக்குச் சக்தி ஏது இருக்கின்றது? நீ சொல்வாயாக.

217. இந்நிலத்தித் தேக மிருக்குமட்டு மெள்ளளவு(ம்)
நின்னுளத்துக் கொவ்வா நிகழ்வெதுவு — முன்னசொலச்
செய்ய வியலாத் திடப்பிடியுன் கைக்குளெனை
வையருளா லென்குருதே வா.

என் குருதேவனே! இவ் வுலகில் என் தேகம் வாழ்ந்திருக்கும் கடைசி நேரம் வரையிலும், உன் திருவுள்ளத்திற்குப் பிடிக்காத எதையும் எள்ளளவும் நினைக்கவோ, சொல்லவோ, செய்யவோ என்னால் முடியாதபடி திடமான உன் கைப்பிடிக்குள் உன்னருளால் என்னை வைத்துக் கொள்வாயாக.

218. எட்டுணையு மேதகுதி யில்லே னெனவறிந்தேன்
தொட்டுனருட் பேற்றைச் சுமப்பதற்குக் — கெட்டுழலும்
புன்மதியே னேனும் புகலறியே னின்னையன்றி
யென்மதியை நீயே யியக்கு.

உன் திருவருட்பேற்றைப் பெற்றுத் தாங்குவதற்கு நான் எள்ளளவு கூடத் தகுதியில்லாதவன் என்று அறிந்துகொண்டேன். நான் அவ்வளவு கெட்டு உழலும் அற்பமதி யுடையவனே என்றாலும், உன்னைத் தவிர வேறு புகல் அறியேன்! ஆகையால், என் புத்தியை நீயே இயக்குவாயாக.

219\. செய்வதற் கென்னுண் டெனது செயலாக
உய்வதற் கென்றே யுனதடியி — லிவ்வடியேன்
சீரார் திருவருளாற் சேர்க்கப்பட் டானபின்பு
நேரா வெலா(ம்) நிகழ்த்து.

'நான் உய்ய வேண்டும்' என்ற நோக்கத்துடனேயே இவ் வடியேன் உனது திருவடியில் உன் சிறந்த திருவருளாலேயே சேர்க்கப்பட்ட பிறகு, நான் இனி எனது செயலாகச் செய்வதற்கு என்ன இருக்கின்றது? (ஒன்றுமே யில்லை). ஆகையால், செய்ய வேண்டியவை எல்லாவற்றையும் நேரடியாக நீயே செய்தருள்வாயாக.

220\. புறமுகத்தி லொன்றும் பொருட்படுத்தா ஞானத்
திறமளித்தென் வாழ்வைத் திருத்தித் — துறவறத்தின்
உண்மைப் பயனான யோகானந் தக்கடலின்
றண்மையிலென் வெப்பந் தணி.

புறமுகப்பட்டு, இப் பிரபஞ்ச வாழ்க்கையில் எதையும் பொருட் படுத்தாத ஞானவலிமையை நீ எனக்கு அளித்து என் வாழ்வைத் திருத்தி, துறவறத்தின் மெய்ப்பயனான யோகானந்தக் கடலின் குளிர்ச்சியில் என் ஆசை வெப்பங்க ளெல்லாந் தணியும்படிச் செய்தருள்க.

221\. அருள்வசத்தி னீங்கி யவசமா யோடும்
பெருவலத்தை யெவ்வித(ம்)நான் பெற்றேன் — குருரமணா
தக்கா றிலாதவித் தற்சுதந்த ரத்தையருட்
சுக்கானா லுன்வழிக்கே தூண்டு.

குரு ரமணா! உன்னுடைய அருட்பிடியினின்றும் நீங்கிக் கட்டுப் பாடின்றி வெளியில் ஓடுகின்ற அவ்வளவு பெரிய அடாத சக்தியை நான் எவ்வாறு பெற்றேன்? தகாததாகிய இத் தற்சுதந்திர சக்தியை உன் அருட்சுக்கானால் திருப்பி உன் வழிக்கே வரும்படித் தூண்டுவாயாக.

## 24. இருத்தி யருள வேண்டல்

222\. அருட்கை வசத்திலென் னற்பமனம் புத்தி
யிருக்கப் பெறும்வர(ம்)நீ யீந்தாற் — பெருக்கமாய்
வேறென்ன யாசிக்க வேண்டு மெனக்கிதனிற்
பேறென்ன வுண்டு பிற.

உன்னுடைய அருட்கைவசத்திலேயே என்னுடைய அற்ப மனமும் புத்தியும் இருக்கப்பெற்ற அரிய வரத்தை நீ எனக்குக் கொடுத்து விட்டால், வேறு பலவிதமாகப் பெருகிய எந்த வரங்களை நான் உன்னிடம் யாசிக்க வேண்டும்? இதைவிடச் சிறந்த பாக்கியம் எனக்கு வேறு என்ன இருக்கின்றது?

223\. தன்னையன்றி யொன்றில்லாச் சன்மாத் திரநிலையில்
என்னை யிருத்து(ம்)நா ளெந்நாளோ — அன்னியமா
வென்னையு(ம்) மற்ற வெதனையுமே காணாது
மன்னுமறி வாயிருக்க வை.

'எந்தப் பொருளும் ஆன்மாவைத் தவிர இல்லை' என்று உணரும் சன்மாத்திரநிலையில் நீ என்னை இருத்துவது எந் நாளோ? அங்கு ஆன்மாவுக் கயலாக என்னையோ, எனக்

கயலாக மற்ற எந்தப் பொருளையுமோ பார்க்காமல் நிலை பெற்று இருக்கும் அறிவு மாத்திரமாய் இருக்கும்படி என்னை வைப்பாயாக.

224. எல்லா நினைவுகளு மின்பத்தின் சத்துருவே
யல்லாற் சுகந்தருவ வாகாதால் — பொல்லா
வெழுச்சியொன்றி னின்றெழுமிவ் வெல்லா நினைவும்
அழித்ததனை யுள்ளே யழுத்து.

எல்லாவித நினைவுகளும் உண்மையான இன்பத்தின் சத்துருக்களே தவிர, அவை சிறிதும் சுகந் தருவனவல்ல. ஆகையால், பொல்லாத அகந்தை யெழுச்சியாகிய ஒன்றினின்றும் எழுகின்ற இவ் வெல்லா நினைவுகளையும் அழித்து, அவற்றின் மூலமாகிய அகந்தையையும் உன்னுள்ளே அழுத்தி விடுவாயாக.

225. இருப்பின் விருப்பெவ் விதமோ திரிந்து
பருப்பொருளி னாசையாய்ப் பாய்ந்து — விருப்புவெறுப்
பென்னும் விபரீத மெய்தியதே நின்னருளால்
அன்னதைமீட் டுள்ளே யமிழ்த்து.

ஆன்மாவாக மாத்திரம் இருக்கின்ற இருப்பின் மேல் இருக்கும் விருப்பமானது (ஸ்வப்பிரியமானது) எப்படியோ திரிபு அடைந்து, பிரபஞ்சத்திலுள்ள ஸ்தூலப் பொருள்களின் ஆசையாகப் பாய்ந்து, அவைகளின் மேல் விருப்பு வெறுப்பு என்னும் இரு வடிவில் விபரீதமாகப் பிரிந்துவிட்டதே. இதை உன்னுடைய அருளால் மீட்டு, உன்னுள்ளேயே முழுகும்படிச் செய்வாயாக.

226. உள்ளோனீ யன்றி யொருசிறிது மொன்றுமிலா
விள்ளற் கரியநிலை மேவாமற் — கள்ள
மனவெழுச்சி நானாய் மயங்கி வருந்தும்
எனையுனக்கு ளொன்றா யிருத்து.

'எப்போது முள்ள பரமான்மாவாகிய நீ யன்றி வேறு எந்தப் பொருளும் ஒரு சிறிதுமே இருப்பு உள்ளனவல்ல' என்ற வாக்கு, மனம் கடந்த அஜாத நிலையை அடையாமல், கள்ளத்தனமாக எழுந்துள்ள இந்த மனவெழுச்சியே 'நான்' என்று மயங்கி வருந்துகின்ற என்னை உனக்குள் ஒன்றாக இருத்திவிடுக.

227. ஆற்றுப் படுத்த வகத்தொளிரு மான்மாபால்
ஏற்றுத் திகழ்ந்தனையே யிங்குடல(ம்) — மாற்றுணர
வொண்ணாப் பசும்பொன்னே யென்றுமுனை யன்றிபிற
வெண்ணா திருத்தென்னை யே.

மாற்று அறிய முடியாத பசும் பொன்னே! இவ் வுலகத் தவரை உள்ளத்தில் ஒளிரும் ஆன்மாவை நோக்கித் திருப்பி விடுவதற்காகவே நீ இங்கு ஒரு திருமேனி தாங்கி விளங்கினாய் அல்லவா? ஆகையால், நான் என்றும் உன்னைத் தவிர வேறு எண்ணாதிருக்கும்படி என்னை இருத்தி யருள்வாயாக.

228. உலகமெலா முன்ற னொருகுடைக்கீழ் ஞாய
மிலக விளங்கலுணர்ந் தின்னு(ம்) — நலமலதென்
றேயுளறு மற்ப விருத்தியெழா தென்னையிருத்
தாயெனிலென் செய்வேன் றளர்ந்து.

உன்னுடைய ஒப்பற்ற அருளாட்சியின் கீழ் இங்கு எல்லா உலகங்களிலும் ஞாயமே நடக்கின்றது என்று தெரிந்திருந்தும், மறுபடியும் 'இது நல்லது', 'இது கெட்டது' என்ற வாறு எந்த நிகழ்ச்சியையும் பற்றித் தீர்ப்புக் கூறி உளறுகின்ற அற்ப விருத்தி எழாதபடி என்னை இருத்தி வைக்கா விட்டால், உண்மை உணர்வினின்றும் தளர்ந்து போகின்ற நான் என்ன செய்வேன்?

229. அணுவளவி னீங்கி யலையெண்ண மாகிக்
கணமளவிற் கோடிசென்மங் கண்டு — குணமிலாப்
புன்னீர்மை மேவும் புரைமாயந் தீருமா
றென்னுண்மை யுன்னி லிருத்து.

ஆன்மாவாகிய உன்னை விட்டு ஓர் அணுமாத்திரமாக நீங்கி, அலைகின்ற அகங்கார எண்ண வடிவமாகி, நான் ஒரு கணநேரத்திற்குள் கோடி ஜன்மங்கள் எடுத்ததாகக் கண்டு, பயனற்ற அற்பத் தன்மையை அடையும் தீய மாயம் நீங்குமாறு என்னுடைய உண்மை நிலையாகிய உன்னில் என்னை இருத்தி யருள்வாயாக.

230. கண்ணின் விதமேதான் காட்சி யமைவதால்
எண்ணமற்ற வின்ப விதயமாங் — கண்ணா
யிருக்கு மியலிருப்பி லேகமா வேநான்
இருக்க வருளா லிருத்து.

கண் எப்படியோ காட்சியும் அப்படியே அமைவதால், எண்ணமற்றதும் பேரின்ப நிறைவுமான 'இதயம்' என்னும் ஆன்மாவாகின்ற கண்ணாகவே விளங்கும் சகஜ இருப்பில் நான் அவ் வேகவஸ்து வாகவே இருக்கும்படி உன் அருளால் இருத்தியருள்க.

231. கற்பனையாய் நான்றோன்றிக் காலதே சத்தினுள்ளோர்
அற்ப மனமுடலா யாங்கரித்துப் — பற்பலவா
துக்கசுக முற்றயருஞ் சூதினியுஞ் சூழாம
லிக்கணமே யுன்னி லிருத்து.

நான் ஒரு கற்பனைப் பொருளாகிய அகந்தையாகத் தோன்றி, காலதேச எல்லைக்குட்பட்ட ஓர் அற்ப மன, உடலாக என்னை அபிமானித்து, அதனால் பற்பலவாகிய சுகதுக்கங்களை அடைந்து வருந்தும் மாயச் சூது இனிமேலாவது என்னைப் பீடிக்காமல் இந்தக் கணத்திலேயே உன்னிடத்தில் இருத்தியருள்க.

232. சுகநாட்ட மான சொரூபநாட் டந்தோய்ந்
தகவாட்ட மெல்லா மகன்று — செகநாட்டம்
என்றுமே தோன்றா திதயத் திதயமா
வொன்றுமா றென்னை யொடுக்கு.

சுகவுணர்வாகிய ஆன்ம சொரூப நாட்டத்திலேயே நான் தோய்ந்துபோய், என்றுமே இந்தப் பிரபஞ்ச நாட்டம் தோன்றாது, மனக்கவலை யெல்லாம் நீங்கும்படி இதயத்தோடு இதயமாய் ஒன்றாகிவிடுமாறு என்னை ஒடுக்கியருள்க.

233. போதலற்ற வொன்றைப் பொருந்தலற்ற மற்றொன்றா
யாதலற்ற சற்று மலுக்கலற்ற — சாதலற்ற
ஏதுக்குஞ் சற்று மெழுச்சியற்ற வுன்னிருப்பாம்
பாதத் திருக்கப் பணி.

உன்னுடைய இருப்பு நிலையான திருவடி எங்கும் போகாதது; போய் எதனோடும் பொருந்தாதது; தன் இயல் இருப்பைத் தவிர மற்றொன்றாய் ஆகாதது; அதனால் சற்றும் அலுக்காதது; என்றும் சாகாதது; எதற்காகவும் கொஞ்சமும் எழுச்சியற்றது; அப்படிப்பட்ட உன் திருவடியில் நான் இருக்கும்படி நீ பணித்தருள்வாயாக.

## 25. கவர்ந் திழுத்தருள வேண்டல்

234. பார்க்கப் படுபொருளிற் பாயாம லிங்கவற்றைப்
பார்க்குமென்மே னாட்டம் பதியுமா — றூக்கமளித்
துன்னைநே சிக்குமுய ருண்மைவழிக் குன்னருளால்
என்னைக் கவர்வா யிழுத்து.

பார்க்கப்படும் உலகப் பொருள்களின் மேல் எனது நாட்டம் வெளிமுகமாய்ப் பாயாமல், இங்கே அவற்றைப் பார்க்கின்ற என்மேல் திரும்பி நாட்டம் பதியும்படி ஊக்கமளித்து, உன்னிடம் உண்மையாக பக்தி செய்யும் இந்த உயர்ந்த வழிக்கு நான் வருமாறு உன்னுடைய அருளால் என்னைக் கவர்ந்து இழுப்பாயாக.

235. அன்னியமா வொன்று மறியா வறிவொளியாம்
உன்னிடமே நீங்காம லூன்றிநிற்க — வன்னி
மலைரமணா வென்னை வசீகரிக்கும் பாத
மலரழகுள் ளத்தே மலர்த்து.

தன்னைத்தவிர வேறொன்றும் அன்னியமாக அறியாத அறிவொளியாகிய உன்னிடத்திலேயே நீங்காமல் எப்போதும் நாட்டம் ஊன்றி நிஷ்டை அடையும்படி, அக்கினி மலையாகிய ஸ்ரீ அருணாசலரமணா, என்னை உன்பால் வசீகரிக்கின்ற உன் திருவடித் தாமரை அழகை என் உள்ளத்தில் மலர்த்துவாயாக.

236. உள்ளத் துணர்வா முனது திருவடிக்கென்
கள்ள மனத்தைக் கவர்ந்திழுத்துத் — துள்ளலெலாம்
அற்றகமா வாரு மமைதிப் பெருவாழ்வின்
முற்றழியு மாறே முழுக்கு.

'நான் இருக்கிறேன்' என்று உள்ளத்தில் விளங்கும் ஆன்ம உணர்வாகிய உன் திருவடிக்கு வசமாகுமாறு என் கள்ள மனத்தை நீ கவர்ந்து இழுத்து, அதனால் அது தன் துள்ளல் எல்லாம் அழிந்து ஆன்மாவாக ஒன்றாகி, அந்த சாந்தியாகிய பெருவாழ்வில் முழுவதும் அழிந்துபோகுமாறு அதை முழுக்கியருள்க.

237. உன்னிணக் கத்தா லுடலிணக்க மோயினன்றி
யென்னெனத்தான் செய்வே னியலாதேன் — தன்னிடத்திற்
றானே யிழுத்துச் சலனமறுத் தாண்டருள்க
ஏனோ விடுப்பா யெனை.

மேன்மேலும் உன்னிடமே இணங்கியிருக்கும் அருள் இணக்கத்தால் தான் எனக்கு உடலோடு ஏற்பட்டிருக்கும் இணக்கமாகிய தேகாபிமானம் ஓயவேண்டுமே தவிர, ஒன்றும் முடியாத நான் என்னுடையதாக என்ன சாதனை தான் செய்வேன்? ஆகையால், நீயே உன் திருவருளால் தானாகவே என்னை உன்னிடத்திற்கு இழுத்து, என் மனச் சலனங்கள் எல்லாவற்றையும் அழித்து ஆண்டருள்வாயாக; அன்றி, என்னைக் கைவிடுவது ஏனோ?

238. தோல்வியறி யாதமிகத் தொன்னெறியா(ம்) மோனமெனும்
வேல்வலத்தா லாளும் விறலோனே — மால்விகற்பம்
எல்லா மகற்றி யிதயத் தெனையிழுத்துப்
புல்லாத தேனோ புகல்.

என்றுமே தோல்வியை யறியாததும் ஆதிகுரு ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தியால் கையாளப்பட்ட மிகப் பழைய நெறியுமாகிய மோனம் எனும் வேலாயுதத்தால் அடியார்களை ஆட்சி செய்யும் வீரனே! என்னிடமுள்ள மயக்க (அஞ்ஞான) விகற்பங்கள் எல்லாவற்றையும் நீக்கி, என்னை இதயத்துள் இழுத்துச் சென்று ஐக்கியப்படுத்தாதது ஏனோ? சொல்வாயாக.

239. நானுதி யாதிருக்கு(ம்) நாட்டமே நல்லநெறி
யேனைய வெல்லா மிதிலடக்கம் — மோனமுறென்
றெம்பா லருளு மிறைவா விதயத்துள்
ளன்பா லிழுத்தே யணை.

"'நான்' என்ற அகந்தை உதிக்காமல் இருக்கும் தன்னாட்டமே எல்லா யோகங்களிலும் சிறந்த நெறி; ஏனைய யோகங்கள் எல்லாம் இதில் அடக்கம்; ஆகையால், மோனமுற்று இருப்பாயாக" என்று எங்களுக்கு உபதேசித்தருளும் இறைவா! உன்னிடத்திற் கொள்ளும் அன்பால் என்னை இதயத்துள் இழுத்து அணைப்பாயாக.

240. காணுலகப் பொய்ப்படத்திற் காண்போனா னேமுதலிற்
றோணுகின்ற பொய்ப்படமித் தோற்றத்துக் — காணிவேர்
தன்னான்ம நேயந் தவிர்வதன்றோ சற்குருநீ
யென்னான்மா வென்னை யிழு.

இங்குப் பிரபஞ்சமாகக் காண்கின்ற பொய்ப்படங்களுள், காண்போனாகின்ற நானே முதலில் உண்டாகித் தோன்றுகின்ற பொய்ப்பட மாகும். 'நான்' என்ற அகந்தை இவ்வாறு தோன்றுவதற்கு மூலகாரணமாவது தன் ஸ்வாத்ம பக்தியினின்றும் நழுவுவதே யல்லவா? ஆகையால், என் ஆன்மாவாகிய சற்குருவே, நீயே என்னை உன்பால் கவர்ந்து இழுத்தருள்க.

241. முக்கா லமுமுன்றன் மோன வருளுபதே
சக்கார் முகில்பொழிசிற் சத்திவெள்ளம் — நிற்காது
தன்னன் பரைமோட்ச சாகரமே தானாக்கும்
வன்மையுள தென்னைவச மாக்கு.

உன்னுடைய மௌன அருளுபதேசமாகிய கார்மேகங்கள் முக்காலமும் சிற்சக்தி வெள்ளத்தைப் பொழிந்து, நதியாக ஓடி, தன்னுடைய அன்பர்களை வழியில் எங்குமே தேங்கி நிற்காதபடி இழுத்துச் சென்று, அவர்களை மோக்ஷ சாகரமாகவே ஆக்கிவிடும் வலிமையுள்ள தல்லவா? அத்தகைய சிற்சக்தி வெள்ளத்திற்கு என்னையும் வசமாக்குவாயாக.

242. உள்ளமுற் றூன்றி யுதியாமை முத்தியென்ற
கள்ளமற்ற வுண்மையைநீ கற்பித்தாய் — கொள்ளமுற்றும்
என்னைக் கவர்ந்துள் ளிழுத்தே யழுத்திவைப்பாய்
உன்னைக்கெஞ் சுற்றே னுதவு.

'நான்' என்ற அகந்தை ஆன்மாவாம் உள்ளத்தில் முழுதும் ஊன்றப்பட்டு என்றும் மீண்டும் எழாது இருப்பது தான் முத்தி யாகும் என்ற கள்ளமற்ற உண்மையை நீ உன் அடியார்களுக்குப் போதித்தாய். இவ் வுண்மையை அனுபவத்தில் நான் முற்றும் கொள்வதற்கு என்னைக் கவர்ந்து உள்ளே இழுத்துச் சென்று ஆன்மாவிலேயே அழுத்தி வைப்பாயாக. உன்னைக் கெஞ்சி நிற்கும் எனக்கு இவ்வாறு உதவுக.

## 26. எழுந்தருள வேண்டல்

243. உள்ளபர வுள்ளமா யுள்ளலற் றுள்ளவுனை
யுள்ளு முபாதிமன முள்ளவெனக் — குள்ளபடி
யுள்ளாழ்ந் துளேனென்றே யுள்ளாம லுள்ளுமா
றுள்ளுணர்வா லுள்ளத் துணர்த்து.

எப்போதுமுள்ள பரமாத்மாவாய் எண்ணங்களற்று விளங்கும் உன்னை உள்ளபடி தியானிக்கும் முறையாகிய 'இருக்கிறேன்' என்ற உணர்வோடு நான் உள்ளத்தில் ஆழ்ந்து நினைப்பற்றுத் தியானிக்கும் படி, எண்ணங்களாகிய உபாதி மனம் உள்ள எனக்கு உள்ளத்தில் உள்ளுணர்வால் உணர்த்துவாயாக.

244. மருளாய் மருளான் மருளு(ம்) மனமா
யிருளா லிருப்புளதா யென்போ — லொருவியத்தி
யென்றென்றுந் தோன்றா வியலறிவா னந்தமா
வின்றிங்கின் னேநீ யெழு.

தானே மாயையாகவும், அந்த மாயையால் மயங்கும் மனமே தானாகவும், இந்த மயக்கமாகிய இருளாலேயே தனக்கோர் இருப்புள்ளதாகவும் என்னைப் போலவே தோன்றும் ஒரு ஜீவவியக்தி இனி என்றென்றுந் தோன்றாதவாறு சச்சிதானந்தமாகிய நீயே இங்கேயே, இன்றே, இப்பொழுதே எழுந்தருள்வாயாக.

245. அருளுடைய வள்ளா லருணா சலத்திற்
குருவடிவி லென்னையாட் கொண்டோய் — பொருளுணர்த்தும்
போத வடிவிற் புரித்தருள வேண்டுகின்றேன்
ஏதமற வென்னுள் ளெழுந்து.

அருளுடைய வள்ளலே! அருணாசலத்தில் குருவடிவாக எழுந்து என்னை யாட்கொண்டவனே! அப்படி யெழுந்த நீ ஆன்மப் பொருளை யுணர்த்தும் போதவடிவிலும் என்னுள் ஸ்புரித்து என் குற்றங்களெல்லாம் அறும்படி எழுந்தருள வேண்டுகின்றேன்.

246. அற்பத் தனம்போ யமைதிப் பெருந்தனமாம்
பொற்புற் றிருக்கப் புரித்தருள்வாய் — சற்பத்தி
யோகத்தா லென்னைநீ யுண்ணுதற் கேற்றபரி
பாகத்தா னாகப் பணித்து.

ஸ்வாத்ம பக்தி யோகத்தால் நீ என்னை உண்ணுவதற்கேற்ற பரிபக்குவ மடைந்தவனாகச் செய்து, என்னிடமுள்ள அற்பத்தனங்கள் எல்லாம் நீங்கி, அமைதியாகிய பெரும் பொன் தனம் நான் பெற்றிருக்குமாறு நீ ஸ்புரித்தருள்வாயாக.

247. எழுவா யகமகமென் றீன வகந்தை
யெழுவா யினிமே லெழாமல் — புழுவாய்த்
துடித்தழுது கெஞ்சித் துதிக்குமடி யேனைப்
பிடித்தருளாற் பாதம் பிணை.

"சகல தோற்றங்களுக்கும் எழுவாயாகிய (மூலமாகிய) அற்ப வகந்தை இனிமேல் எழாதபடி நீயே 'நான் நான்' என்று எழுவாயாக" என்று இவ்வாறு பிரார்த்தித்து, புழுவாகத் துடித்து, அழுது, கெஞ்சித் துதிக்கும் அடியேனை உன்னருளாற் பிடித்து உன் பாதங்களோடு பிணைத்தருள்வாயாக.

248. தோற்றமனைத் திற்குமொரு தோற்றுவா யானநான்
மாற்றமிலா நின்னிருந்து வந்ததெவன் — கூற்றனைய
வென்னெழுச்சி மாய்க்க விறைரமணா நானானென்
றுன்னிருப்பைக் காட்டி யொளிர்.

காணப்படும் இவ் வுலகத் தோற்றங்கள் எல்லாம் எதிலிருந்து தோன்றுமோ, அந்த மூலஸ்தானமாகிய அகந்தை 'நான்' ஒரு மாற்றமும் அடைய முடியாத உன்னிடமிருந்து வந்தது எப்படி? மரணமேயாகிய (இயமனாகிய) இந்த என் அகந்தை யெழுச்சியை மாய்ப்பதற்கு, ஸ்ரீ ரமணக் கடவுளே, நீயே 'நான் நான்' என்று எழுந்து உன் ஆன்ம இருப்பை ஸ்புரித்து உணர்த்தி விளங்குவாயாக.

249. நன்மையாய்த் தீமையாய் நானொன் றெழுந்துணர்வ
தின்மையாய்ப் போக வெழுந்தருள்வாய் — பன்மையாய்ப்
பார்க்கு மறிவகன்று பார்ப்பானா யேகமாய்ப்
பார்க்க வளிப்பாய் பதம்.

'நான்' என்று ஓர் அகந்தை எழுந்து 'இது நன்மை' யென்றும், 'இது தீமை' யென்றும் உணர்கின்ற அறியாமை இல்லாமல் அழிந்து போகும்படி நீ எழுந்தருளுவாயாக. நானா வஸ்துக்களாகப் பார்க்கும் அஞ்ஞான நோக்கு அகன்று, எல்லாவற்றையும் பார்ப்பவனாகிய அகந்தையின் பொய்த் தோற்றமாகவே நான் பார்க்கும் ஏகான்ம திருஷ்டியாம் ஞான நிலையை எனக்கு அளிப்பாயாக

250. கர்த்தாபோக் தாவாய்க் கடையேனோர் நானெழுந்திங்
கர்த்தமிலாப் பேயாட்ட மாடுகின்றான் — நர்த்தனனீ
நானா னெனநடன மாட வெழுந்தாற்றான்
போனா னகந்தை பொடிந்து.

கடையேனாகிய ஓர் அகந்தை எழுந்து 'நானே கர்த்தா', 'நானே போக்தா' என்றவாறு இங்கு அர்த்தமில்லாத ஒரு பேயாட்ட மாடுகின்றான். ஞான நடராஜனாகிய நீ 'நான் நானே' என்றவாறு ஆன்ம நடனமாட எழுந்தால் தான், இவ் வகந்தை அழிந்து பொடிந்து போவான்.

251. நிழலற்ற ஞானவொளி நீயோங்கி லன்றி
நிழலொத்த நானோங்கி நிற்பேன் — அழலொத்த
பாழ்முயற்சி யுற்றுப் பரிதவிப்பேன் உன்னுணான்
ஆழ்முயற்சி கொள்ள வருள்.

நிழலே இல்லாத ஞானவொளியாகிய நீ ஓங்கிப் பிரகாசித்தாலன்றி, நிழலுக்குச் சமானமான அகந்தையாகிய நானே ஓங்கி நிற்பேன்; அதனால், தீயைப் போல் வாட்டுகின்ற வீண் முயற்சிகள் பலவற்றை மேற்கொண்டு மிகவும் தவித்துத் துன்புறுவேன். அவ்வாறின்றி, நான் ஆன்மாவாகிய உன்னுள் ஆழ்ந்துவிடுவதற்கான முயற்சியை மேற்கொள்ளுமாறு அருள்வாயாக.

252. உண்மையிற் றிண்மை யுறாததனான் முன்னிலையிற்
கண்மயங்கி வீழ்ந்து கதிகெடுவேன் — அண்மையினும்
அண்மையா மான்மரம ணாசா ரியவெனக்குன்
உண்மை யுணர்த்த வுதி.

தன்மையின் உண்மைப் பொருளாக உள்ள ஆன்ம நிஷ்டையில் திடப்படாததனால் கண்மயங்கி முன்னிலைப் பொருள்களில் வீழ்ந்து கதியிழக்கின்றேன். எனக்கு வெகு சமீபத்திலுள்ள எப் பொருள்களையும் விட மிக வெகு சமீபத்திலிருக்கின்ற ஆன்மாவாகிய ஸ்ரீ ரமண சற்குருவே! நீ எனக்கு உன் உண்மையை உணர்த்துவதற்கு உதித்தருள்வாயாக.

253. உத்தமர்க ளெல்லா முணர்ந்தா ருனதருளால்
இத்தமியே னேங்கி யிளைக்கின்றேன் — பித்தமன
மாயப்பற் றானவபி மானத்தால் உன்னருளிற்
றோயப்பெற றோங்கவுள்ளே தோன்று.

உன்னுடைய உத்தமமான அடியார்கள் எல்லாரும் உனது அருளால் அவ் வுண்மையை உணர்ந்தனர்; ஆனால் உன் பிள்ளையாகிய நான் மட்டுமே பித்தமன மாயமாகிய தேகாபிமானப் பற்றால் ஏங்கி இளைக்கின்றேன். நான் உன் அருளில் தோயப்பெற்று, அதனால் அவ் வுண்மை யுணர்ந்து ஓங்கும்படி உள்ளே தோன்றுவாயாக.

254. பந்தமுத்தி யற்ற பரமாகா சப்பிரமம்
சொந்த சொரூபத் துலக்கமே — அந்தத்
துலக்கப் பிரஜ்ஞையுளந் தோய வருளால்
இலக்குவோ னீயன்றி யார்.

பந்தம் முக்தி இரண்டும் இல்லாத பரமாகாசமாகிய பிரம்மம் என்பது ஒவ்வொருவரது ஆன்ம சொரூப விளக்கமேயாகும். அந்த ஆன்ம சொரூப விளக்கத்தின் அறிவு உள்ளத்தில் ஏற்படும்படி அருளால் காட்டித் தருபவன் நீ யன்றி வேறு யாருளார்?

## 27. தடுத்தாண்டருள வேண்டல்

255. எண்ணத்தாற் றோன்றி யிருக்கு முலகவுரு
வண்ணத்தைக் கண்டு மதிமயங்கித் — திண்ணங்கெட்
டுண்முகத்தி னீங்கி யுழல்வேனை யுன்னருட்சீர்
தண்முகத்தாற் பார்த்துத் தடு.

ஐம்புலன்களின் வழியே தொழிற்படும் எண்ணங்களாகிய மனத்தால் தோன்றியிருக்கும் இவ் வுலகக் காட்சியின் அழகைக் கண்டு, மதிமயங்கி திடங்கெட்டு, அதனால் உண்முகத்தினின்றும் நீங்கிப் பகிர்முகப் பட்டு, இவ் வுலகில் உழல்கின்ற என்னை உனது சிறந்த அருளாகிய குளிர்ந்த முகத்தால் பார்த்துத் தடுத்தருள்வாயாக.

256. கற்பனையை மெய்யாக் கருதிக் கவர்ச்சியுற்றுப்
பற்பல வான பகிர்விடய — அற்பசுகம்
இச்சித் தலையு மிழிநெஞ்சி னேனையருட்
சச்சித்தின் பூட்டித் தடு.

மேற்கூறியவாறு தோன்றுகின்ற உலகக் கற்பனையை உண்மை யென்று எண்ணி, அதிற் கவர்ச்சியடைந்து, அங்கு பற்பலவிதமாகத் தோன்றும் பாஹ்ய விஷயங்களாகிய அற்ப சுகங்களையே விரும்பி அலைகின்ற இழிவான புத்தி யுடையவனாகிய என்னை சச்சிதானந்தத்தின் அருளின்பத்தை யூட்டி, உலகின்பங்களுக்குப் போகாதவாறு தடுத்தருள்வாயாக.

257. தன்முகமா காகத் தவறாற் சலிப்புற்றுப்
பன்முகமா மாசைப் பரபரப்பாற் — சென்முகங்கள்
எத்தனையோ கோடி யெதிர்ப்படுவ வந்தோவிப்
பித்தனையா ளாயோ பிடித்து.

ஆன்மாவை நோக்கி நிற்காத பிழையால் சலனமடைந்து, வெளியிற் பலமுகப்பட்ட ஆசைகளின் பரபரப்பால் பிரவிருத்திப்பதற்கு ஏற்ற எத்தனையோ கோடி வழிகள் எதிர்ப்படுகின்றன. அந்தோ! இவைகளி லெல்லாம் போகாத படி பித்தனாகிய என்னைத் தடுத்துப் பிடித்து ஆட்கொள்ளமாட்டாயா?

258. உண்மைநா னாக வுளத்தே யொளிருமுனக்
கண்மைமுக மாகி யமராமல் — உண்மையிலாத்
தோற்ற மெழுப்பித் தொடர்ந்ததன்பின் னோடியே
மாற்றமுறு மென்னை மடக்கு.

உண்மையான நானாக உள்ளத்தில் விளங்கும் உன்னையே நோக்கி நிற்பவனாகாமல் தன்னாட்டம் நீங்கி, உண்மையற்ற உலகப் பொய்த்தோற்றத்தை எழுப்பி, அதன் பின்னேயே தொடர்ந்து ஓடி ஏமாந்து போகின்ற என்னை அந்தர் முகமாகத் திருப்பிக் கொணர்வாயாக.

259. எந்தவொரு சத்தி யிருப்பறிவின் வேறுபோல்
உந்தி யெழுந்தோ ருபாதியுடன் — பந்தமுற்று
நானிதுவென் றெண்ணி நலியுமோ வன்னதைநீ
தானிறுத்த வேண்டுந் தடுத்து.

எந்தவொரு மாயாசக்தி இருப்பை யறியும் ஞான சக்திக்கு முரண்பாடானது போல் உந்தி எழுந்து தேகமாகிய ஓர் உபாதியுடன் பந்தமுற்று, 'இந்த தேகமே நான்' என்று எண்ணிக் கீழ்மை யடைகின்றதோ, அதை நீதான் தடுத்து நிறுத்த வேண்டும்.

260. மண்முகமெய் யாது மதிநுட்ப வாயுதத்தை
யுண்முகமா வெய்துள் ளுணர்வுபெறத் — தண்முகஞ்செய்

தாண்டருள்க வேழை யவமுயற்சி யற்றன்பு
பூண்டொழுக [21]நின்பாதப் போது.

நுட்பபுத்தி என்னும் ஆயுதத்தை லௌகீக வழியிற் செலுத்தாது, உண்முகமாகச் செலுத்தி, ஆன்மஞானம் பெறும்படி நீ குளிர்முகம் கொண்டு ஏழையாகிய நான் வீண் முயற்சிக ளெல்லாம் ஒழித்து உன்னுடைய பாத தாமரைகளுக்கு அன்பு பூண்டு ஒழுகும்படி ஆண்டருள்வாயாக.

## 28. மீட்டருள வேண்டல்

261. விட்டகன்ற மூலத்துண் மீளு(ம்) நிவிருத்தி
யிட்டமொன்றே யன்றி யெதுகுறித்தும் — எட்டுணையும்
யானுன்பால் வேண்டு மரிய பெரியவரம்
ஏனின்னொன் றுண்டா மினி.

அறியாமையால் நான் விட்டகன்ற மூலப்பொருளாகிய ஆன்மாவினுள் மீண்டும் திரும்பி வந்தடையும் நிவிருத்தி இஷ்டம் ஒன்றைத் தவிர நான் உன்னிடத்தில் எதைக் குறித்தும், எள்ளளவும் வேண்டிப் பெறக்கூடிய அரிய பெரிய வரம் இனி இன்னொன்று ஏன் உண்டாகப் போகின்றது?

262. கண்முதலா மைம்பொறிகள் காட்டும்பொய்க் கற்பனையை
யெண்ணியென் வாழ்வா விடைவிடா — தெண்ணத்
திரைவிசையா லேயிழுத்துச் செல்லப்பட் டேனைக்
கரைமிசைசேர்ப் பாயுன் கழல்.

கண் முதலிய ஐம்பொறிகளும் காட்டித்தரும் பொய்க்கற்பனைத் தோற்றத்தையே என்னுடைய நிஜ வாழ்வாகக் கருதி, அதனால் இடைவிடாது எழுகின்ற எண்ணங்களாகிய அலைகளின் வேகத்தால் பகிர்முகக் கடலுக்குள் இழுத்துச் செல்லப்பட்ட என்னை உன் திருவடியாகிய ஆன்மா வாம் கரையில் மீட்டுக் கொண்டுவந்து சேர்ப்பாயாக.

263. பிராரத்த வாயிலாப் பேணப் படநா
னிராப்பகலா யேனுடலை யெண்ணிக் — கராப்புணையாய்க்
கட்டிக்கொண் டுய்யுங் கதியிழக்கின் றேனோநீ
விட்டுப் பிரித்தென்னை மீள்.

இவ் வுடல் பிராரப்தத்தாலேயே போஷிக்கப்பட்டுக் கொண்டிருக்கவும், அதை அறியாது நான் இந்த உடலைப் போஷிப்பதற்காக இரவும் பகலுமாக இதையே எண்ணி, முதலையையே தெப்பமாகக் கட்டிக்கொண்டவனைப் போல[22], உய்யும் கதியை ஏன் இழக்கின்றேனோ? இவ் வுடற் பற்றினின்றும் என்னை நீ விட்டுப் பிரித்து மீட்பாயாக.

264. உடலு(ம்) மனம்புத்தி யோடுமூச் செல்லாங்
கடவுணீ யேகணித்த தன்றோ — மடமுடையேன்
நானெனதென் றேயபிமா னத்தா லபகரித்தேன்
கோனுனதா நீமீட்டுக் கொள்.

இவ்வுடலும் அதில் இருக்கின்ற மனம் புத்தி மூச்சு ஆகியவை யெல்லாமும் இயங்குமாறு கடவுளாகிய உன்னாலேயே ஏற்படுத்தப்பட்டுள்ளன, அல்லவா? அறிவில்லாதவனாகிய நான் அவைகளை 'நான்' என்றும் 'என்னவை' என்றும் அபிமானத்தால் அபகரித்துக் கொண்டேனே! ஆண்டவனாகிய நீயே அவைகளை உன்னுடையதாக மீட்டுக்கொள்வாயாக.

[21] 'நின்பாதப் போது அன்பு பூண்டொழுக' எனக் கூட்டுக.

[22] "இழிவுடல் யான்" என வரும் 'உள்ளது நாற்பது- அனுபந்தம்' 12வது பாடல் இங்கு காணத் தக்கது.

265. தன்னி னிலைத்துச் சதானந்த முண்ணாமற்
பொன்னிற் புகழிற் புலநுகர்வா — மன்னியத்தில்
ஆரவா ரித்தலையு மாசை விருத்தியகஞ்
சேரமீள் வித்தருளிச் செய்.

பக்தியாகிய ஆசை விருத்தி ஆன்மாவாகிய தன்னிடத்திலேயே நிலைத்து எப்போதும் ஆத்மானந்தத்தையே அனுபவித்திருக்காமல், வெளியே பொன்னிலும் புகழிலும் மற்றும் ஐம்புல நுகர்ச்சிகளுக்கான அன்னியப் பொருள்களிலும் ஆரவாரித்து அலைகின்றது. அவ்வாறின்றி, அதை உள்ளே ஆன்மாவில் திரும்பி வந்து சேருமாறு நீ மீட்டருளிச் செய்வாயாக.

266. பொல்லாத நட்பாம் புலனைந்தை யும்புல்லி
யெல்லாச் சிறப்பு மிழந்தேனை — நல்லார்
சிறிதேனு(ம்) நாடாவத் தீநட்பி னீக்கி
நெறியோடுன் னோடே நிறுத்து.

தகாத நட்பாகிய ஐம்புலன்களோடுங் கூடி எனது உண்மையான எல்லாச் சிறப்பையும் இழந்தேன். உன் அடியவர்களாகிய நல்லோர் சிறிதேனும் நாடாத அந்த ஐம்புலத் தீய நட்பினின்றும் நீ என்னை நீக்கி நல்ல பண்போடு உன்னுடனேயே இருக்கும்படி வைப்பாயாக.

267.திறந்துவிடப் பட்ட சிவயோக வாயின்
மறந்து மனிதனாநான் மாறி — யறம்பாவக்
கட்டுற் றதையுன் கடாட்சத்தான் மீண்டுமறுத்
திட்டுச் செல் வாயின் றெனை.

இயல்பாகவே திறந்துவிடப்பட்ட (என்றுமே பந்தப் படாத) சிவசாயுச்சிய அனுபவத்தைப் பெறும் வாயிலாகிய தன்னாட்டத்தை மறந்து, பகிர்முகப்பட்டதால் நான் ஒரு மனிதனாக மாறி, பாப புண்ணியங்களாற் கட்டுப்பட்ட நிலையை உன் கடாக்ஷத்தால் அறுத்து இன்று நீ மீண்டும் என்னை அச் சிவசாயுச்சிய நிலைக்கு அழைத்துச் செல்வாயாக.

268. போகப் புறச்சுகங்கள் போதும் பரமார்த்த
யோகச் சுகத்தையினி யூட்டுகவே — தேகங்கண்
மூன்று சிறைக்கதவுண் மூடும் முடியவிழ்த்தே
யேன்றுவிடு விப்பா யெனை.

வெளியுலக போகங்களாகிய சுகங்களை நான் அடைந்தது போதும். இனிமேலாவது பரமார்த்த ஆன்மயோக சுகத்தை எனக்கு ஊட்டியருள்க. மூன்று தேகங்களாகிய ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சிறைகளுக்குள் என்னைப் போட்டு மூடுகின்ற மாய முடிச்சை அவிழ்த்து என்னை மீட்டு விடுவிப்பாயாக.

269. எழுந்துவெளி யோடி யிகபரமென் றாடிக்
கொழுந்துவிட் டோங்காசை கூர்ந்தே — விழுந்தழியும்
வீண்வாழ்வின் மீட்டிதய வீடிருத்த வேயருட்கண்
காண்பா யெனைநீ கனிந்து.

அகந்தையெழுச்சியாக எழுந்து, பகிர்முகப்பட்டுத் திரிந்து, 'இவ்வுலக — சுவர்க்க இன்பங்கள்' என்று ஆரவாரித்துக் கொழுந்துவிட்டு எரிந்து ஓங்கும் ஆசை நெருப்பில் விழுந்து அழிகின்ற என்னை அத்தகைய வீண் வாழ்வினின்றும் மீட்டு, இதய வீட்டில் ஸ்திரமாய் இருத்தி வைக்க நீ கனிவோடு உன் அருட்கண்ணால் என்னைக் காண்பாயாக.

270. சேற்றி லழுத்தித் திணறவைக்குந் தேகோகக்
கூற்றகற்றி மீட்டென்னைக் கொள்ளாயோ — ஆற்றா

தழுதலறி நின்னிடமே யாசிக்கு மெற்குத்
தொழுதுஞ்செய் யாயோ துணை.

என்னைத் துன்பச் சேற்றில் அழுத்தி மூச்சுத் திணற வைக்கின்ற தேகாத்ம புத்தியாகிய எமனிடமிருந்து விலக்கி மீட்டுக்கொள்ள மாட்டாயோ? இச் சேற்றிலிருந்து கொண்டு யாதொரு முயற்சியும் செய்ய முடியாமல் அழுது அலறி உன் பால் அபயத்தை யாசித்துத் தொழுதும் எனக்கு நீ துணை செய்ய மாட்டாயோ?[23]

271. அருளின் வடிவே யருணா சலசற்
குருரமண ஞானசிவக் குன்றே — மருளின்
வலியறிந்து மாற்றும் வலிமையுளா யென்னை
நலிவிலிருந் துய்ப்பாய் நலம்.

அருளே வடிவானவனே! ஞானசிவக் குன்றாகிய அருணாசலரமண சற்குருவே! உன் அடியார்களிடம் மருட்சக்தி எவ்வளவு வலியதாய் உள்ளது என்று அறிந்து அதை மாற்றும் அருட்சக்தி யுடையவனே! நீ என்னை அழிவிலிருந்து காப்பாற்றி நலமடையும்படிச் செய்வாயாக.

272. என்னவினை யானா னெடுத்தேனோ வி்வ்வுடலை
யின்னுமது நீளா தெனையெடுப்பாய் — உன்னால்
விடுபட்ட மோக விலங்கினுண் மீண்டும்
படசற்றும் பண்ணா தருள்.

எத்தகைய பூர்வ கொடிய வினைகளால் நான் இவ் வுடலை எடுத்தேனோ. அவை இன்னும் மறுபிறப்புக்களில் தொடராத படி நீ என்னை மீட்டு எடுத்துக் கொள்வாயாக. அவ்வாறு, எந்த மோகமாகிய விலங்கிலிருந்து நான் உன்னால் விடுபட்டேனோ, அந்த வினை விலங்கினுள் மீண்டும் அகப்பட்டுக் கொள்ளுமாறு நீ கொஞ்சமும் சூது செய்யாமல் அருள்வாயாக.

273. பன்னெடுங்கா லச்சிறையாய்ப் பாழும் பருவுடலில்
என்னதுநா னா(ம்)நரகத் தேங்குகின்றேன் — இன்னும்
படுமித் துயரகலப் பண்ணாயோ வீசா
விடுவித் தருள்க விரைந்து.

ஈசா! பாழான இந்த ஸ்தூல தேகத்தில் பல பிறவிகளாகிய நீண்டகாலச் சிறையில் அகப்பட்டு, 'நான்', 'எனது' என்ற அபிமான நரகத்தில் விழுந்து ஏங்குகின்றேன். இவ்வாறு நான் படும் இத் துயரம் இனிமேலாவது நீங்கும்படிச் செய்ய மாட்டாயோ? விரைவாக என்னை விடுவித்தருள்க.

274. மிக்கத் தடித்த வியாமோகக் காரிருளிற்
சிக்கிப் பிராணன் றிணறுமெனை — யிக்கணமுன்
பாதத்தா லுந்திப் பரவொளியிற் றள்ளியருட்
போதத் துயிர்ப்பிச்சை போடு.

மிகவும் கொழுத்துள்ள பெரிய மோகமாகிய காரிருளில் சிக்கிப் போய் மூச்சுத் திணறும் என்னை இந்த க்ஷணத்திலேயே உன் திருவடிகளால் உந்தி மேலான பிரம்மப் பிரகாசத்தில் தள்ளி அருள் ஞானமாகிய உயிர்ப்பிச்சை அளிப்பாயாக.

275. ஐம்புலனோ டாடி யறிவுகெட் டேனையினி
யெம்பெருமா னீமீட் டெடுப்பாயேல் — வெம்புமுயிர்
முத்தாபக் கோடை முடிந்துன் னருண்மழைகொண்
டுத்தா ரணமே யுறும்.

ஐம்புலன்களோடு ஒருஜீவனாகக் கூடியாடி 'நான் யார்' என்ற மெய்யறிவு கெட்டுள்ள

[23] இந் நூலின் 279வது பாடலின் கருத்தும் ஈண்டு ஒத்து நோக்கத் தக்கது.

என்னை, எம்பெருமானே, நீ இனியாவது மீட்டு எடுத்துக் கொள்வாயேயானால்,மூவாசைத் தீயாகிய கோடைக்காலம் முடிந்து, உன் அருளாகிய மழை பெய்யப்பெற்று, வெம்புகின்ற என் உயிர் உத்தாரணம் அடையும்.

276. திவ்வியமா முன்றன் றிருவருள்வந் தாலன்றிக்
கவ்வியபாழ்ம் மோகக் கலிவாய்நின் — றெவ்விதமு(ம்)
நான்மீளே னெந்தாய் ரமண குருபதங்கள்
தான்மீட் குஞ் சத்தி யுடைத்து.

உன்னுடைய திவ்வியமான திருவருள் வந்தாலல்லாமல், என்னைக் கவ்விக்கொண்ட பாழான மோகக் கலிபுருஷனின் வாயிலிருந்து நான் கொஞ்சங்கூட மீள மாட்டேன். என் தந்தையே! ஸ்ரீ ரமண சற்குருவின் பாதங்களுக்கு மட்டுமே என்னை மீட்கும் சக்தி உள்ளது.

## 29. காத்தருள வேண்டல்

277. தாழ்வுற் றழுந்திச் சமுசார மாக்கடலுண்
மூழ்குந் தருணமென் முன்வந்த — வாழ்வாம்
பரமோப கார பகவான் ரமண
குருவே யெனைத்தூக்கிக் கொள்.

நான் மிகத் தாழ்வை யடைந்து பெரிய சம்சாரக் கடலுள் அழுந்தி முழுகும் தருணத்தில் என் முன்னால் தோன்றிய பரவாழ்வாகிய பகவான் ஸ்ரீ ரமண சற்குருவே! உனது பரமோபகாரத் திருவருட் சக்தியால் என்னைத் தூக்கிக் கொள்வாயாக.

278. என்று மிருக்கு மியல்பா(ம்) நிலைமறந்து
நின்றழிக னாவி னிசபுத்தி — தொன்றுதொட்டுக்
கொண்டதனை விட்டகலக் கூடா தலறியுனைக்
கண்டழுது கெஞ்சுமெனைக் கா.

என்றும் இருந்து விளங்கும் பரமாத்ம சகஜ நிலையை மறந்து, தொன்று தொட்டுத் தோன்றி யழிகின்ற கனா மாத்திரமான இந்த உடல் வாழ்வில் நிஜ புத்தி கொண்டு, அதைவிட்டு அகல முடியாமல் அலறி, கடைசியில் சற்குருவாகிய உன்னைக் கண்டு அழுது கெஞ்சுகின்ற என்னைக் காப்பாற்றி யருள்க.

279. ஏறுவதாய் மேலேநா னெண்ணிக்கொண் டின்னுமின்னுஞ்
சேறடியி லேயழுந்திச் சிக்குகின்றேன் — வீறுடையாய்
போர்செயலில் வல்லநீ புக்கெனைக்காப் பாற்றுகமற்
றோர்செயலு மீயா தெனக்கு.

சேற்றிலிருந்து மேலே ஏறுவதாக நான் எண்ணிக் கொண்டு முயன்று முயன்று, ஆனால் அதனால் மேலும் மேலும் சேற்றின் அடியிலேயே அழுந்திச் சிக்கிப்போகிறேன். அருட் சக்தியால் வீறுபடைத்தவனே! மாயையை அழிக்கும் போர்த் தொழிலில் வல்லவனே! நீ வந்து புகுந்து, எனக்கென்று எந்தவொரு சாதனையும் கொடுக்காது, நீயே என்னைக் காப்பாற்றி அருள்க.

குறிப்பு: சேற்றில் இடுப்பளவு ஆழத்தில் முழுகியுள்ள ஒருவன் அச் சேற்றினின்றும் வெளிவருவதற்காகச் செய்கின்ற எல்லா முயற்சிகளும் அவனை மேலும் ஆழமாக சேற்றில் பதிக்கவே உதவும். அவன் காப்பாற்றப்பட வேண்டுமானால், முதலில் தான் செய்கின்ற முயற்சிகளை யெல்லாம் விட்டு விட்டுசும்மா இருக்க வேண்டும்; அப்போதுதான் திடமான பூமியில் நின்று கொண்டிருக்கும் வலிமை மிக்க வேறொருவன் அவனுக்குக் கை கொடுத்து சேற்றினின்றும் வெளியே தூக்கி யெடுத்துக் காப்பாற்ற முடியும். அதுபோலவே, சம்சாரச் சேற்றில் முழுகிக் கொண்டிருக்கும் நாம் அச் சேற்றினின்றும் வெளியேறச் செய்கின்ற எல்லா முயற்சிகளும் அச் சேற்றில் மேன்மேலும் ஆழ்வதற்கே உதவும். நாம் காப்பாற்றப்பட

வேண்டுமானால், முதலில் நாம் செய்கின்ற எல்லா முயற்சிகளையும் (சாதனைகளையும்) விட்டு விட்டு எச் செய்கையு மற்றுச் சும்மா இருக்க வேண்டும்; அப்போதுதான், சத்திய வஸ்துவில் நிலைத்து நிற்கும் ஸ்ரீ ரமண பகவான் அபயகரம் நீட்டி சம்சாரச் சேற்றினின்றும் வெளியே எடுத்து காப்பாற்றுவர். அதனால்தான், 'நான் செய்கிறேன்' என்று எழும் நம்முடைய வீணான முயற்சிகளுக்கெல்லாம் ஸ்ரீ பகவான் தன்னுடைய அருளாலேயே ஒரு முடிவு கட்டி சம்சாரச் சகதியில் நாம் முற்றும் மூழ்கி அழிந்துவிடாமல் நம்மை வெளியே தூக்கியெடுத்து உய்விக்க வேண்டும் என்று பிரார்த்திப்பதாக இவ் வெண்பாவின் கருத்து அமைந்துள்ளது.

280. உய்யவைக்குந் தாய்ச்சிறகுள் ளோர்குஞ்சு போலுனருட்
கையணைப்பில் வாணாட் கழிக்கின்றேன் — மையல்வாய்
யானகன்று போகா தருணா சலரமணத்
தாயகமே நீகாத் தருள்.

தன்னைக் காப்பாற்றும் தாய்ப்பறவையின் சிறகுக்குள்ளே காப்புற்று வாழுகின்ற ஒரு பறவைக் குஞ்சு போல, உன்னுடைய அருட்கைகளின் அணைப்பில் என் வாழ்நாளைக் கழித்துக்கொண் டிருக்கின்றேன். உன் அருட்கைப்பிடியை விட்டு வெளியே மாயையினிடம் நான் நீங்கிப் போய்விடாதபடி, அருணாசலரமணத் தாயகமே, நீயே என்னைக் காத்தருள் வாயாக.

281. உள்விழித்து மேலே யுறங்கி யுடல்வாணாட்
டள்ளுவிப்பாய் ஞானத் தயாளுவே — முள்வளைத்து
நெற்பயிரைக் காப்பார்போ னீசனெனு முன்னடிமை
அற்பனெனைக் காப்பா யரண்.

ஞானத் தயாளுவே! நான் உள்ளே ஆன்மாவில் விழிப்புற்றவனாய், வெளியேயுள்ள உடலுலக வாழ்வில் உறங்கிப் போனவனாய், என் வாழ்நாட்களைத் தள்ளும்படிச் செய்விப்பாயாக. நான் நீசனேயானாலும் உனக்கு அடிமைப்பட்ட அற்பனாகையால், ஒருவன் தான் பயிரிட்ட நெற்பயிரை முள்வேலி கோலிக் காப்பதைப் போல நீ என்னை அரணிட்டுக் காப்பாயாக.

282. அருளி லடைக்கலமுற் றாக்கையில்வாழ் வேனுக்
கொருசிறிதுந் தீமைவரா துய்ப்பாய் — குருவருளுஞ்
சோண சிவமலையுஞ் சூழ்ந்து பெருந்துணையாப்
பேணவளர் கின்ற பிளைக்கு.

சற்குருவின் திருவருளும் சோணசிவ மலையும் நாற்புறமும் பெருந் துணையாகச் சூழ்ந்து பேண வளர்கின்றவனும், திருவருளில் அடைக்கல முற்று இந்த உடலில் வாழ்ந்து கொண்டும் இருக்கும் உன் பிள்ளையாகிய எனக்கு ஒரு சிறிதும் தீமை வராது காப்பாற்றுவாயாக.

283. வாரம் பிடித்த வடியர்தம் வாழ்வுமுழுப்
பாரந் தரிக்கும் பரம்பொருளே — சாரஞ்
சிறிதுமிலாப் பொய்யன்பிற் றேர்ந்தேன் பரமும்
பிறிதன் றுனக்கே பொறுப்பு.

அளவற்ற அன்புடைய உன் அடியவர்களது வாழ்வின் முழுப்பாரத்தையும் தாங்குகின்ற பரம்பொருளே! சிறிது கூட சாரமற்ற பொய்யன்பில் கைதேர்ந்தவனாகிய என்னுடைய பாரமும் உன்னால் தாங்கப்பட வேண்டியதே தவிர வேறு அல்ல. அப் பொறுப்பும் உன்னுடையதே யாகும்.

284. அருளே புகலா வமைதியுற லன்றிப்
பொருளே புகலெனுமிப் பூமி — யிருளகற்றி
யாதோர் குறைவு மறியாச் சுகவாழ்வென்
மீதே பொழிக விறை.

அருளையே புகலாகக் கொண்டு அமைதி யடைவதைத் தவிர, ஈட்டும் பொருளையே புகல் எனக் கருதி வாழும் இப் பூலோக வாழ்க்கையின் அஞ்ஞானத்தை என்னிடமிருந்து நீக்கி, என் மீது யாதொரு குறைவும் அறியாத சுகவாழ்வை, இறைவனே, நீ பொழிந்தருள்க.

285. ரமணா வுனையன்றி நற்றுணையாய் வாழ்வுச்
சுமைநாளில் வேறெவர்தான் சூழ்வர் — அமைதியுடன்
உன்னி லொடுங்கியிட ரொன்றுமிலா நல்வாழ்வில்
என்னை யருளா லிருத்து.

என்னுடைய உடல்வாழ்வுச் சுமையைத் தாங்கும் இந் நாட்களில், ஸ்ரீ ரமண பகவானே, உன்னைத் தவிர எனக்கு நல்ல துணையாக யார் தான் வந்து சேர முடியும்? ஆகையால், அமைதியோடு உன் திருவடியில் ஒடுங்கி, ஒரு துன்பமும் இல்லாது வாழும் நல்வாழ்வில் உன்னருளால் என்னை இருத்து வாயாக.

286. இவ்வாழ்வி லுன்னருளா லெல்லா(ம்) நடைபெறலாற்
செவ்வா றிலாதொன்று சேர்தலெங்ஙன் — எவ்வாறுங்
காக்கக் கரங்கங் கணங்கொண்ட நீயிருக்க
ஏக்கங் கவலையே னெற்கு.

இவ் வாழ்வில் எல்லா நிகழ்ச்சிகளும் உன் அருளாலேயே நடைபெறுவதால், நன்மையைத் தவிர தீமை யொன்று எனக்கு எப்படி வந்து சேரும்? என்னை எப்படியாவது காத்தே தீருவது என்று கையில் கங்கணம் பூண்ட நீ இருக்கும்போது, ஒரு ஏக்கமோ கவலையோ எனக்கு எதற்காக?

287. விபாக விவேகமிழந் துன்னைமறந் தேழை
யபாவ விருளுறுமப் போதுஞ் — சுபாவத்
திருவருளா லென்பாலோர் தீதுறவொட் டாத
குருரமணா காப்பே கொடு.

ஏழையாகிய நான் பகுத்தறியும் விவேகத்தை யிழந்து, உன்னை மறந்து, ஒன்றுமே யில்லாத அஞ்ஞான இருளில் மூழ்கும் போதுங்கூட, எனக்கு யாதொரு தீங்கும் வராதபடி உன்னுடைய சுபாவமான திருவருளால் என்னை ரக்ஷிக்கின்ற குரு ரமணா! உன் ரக்ஷையை எனக்குக் கொடுப்பாயாக.

## 30.அபயம் வேண்டல்

288. அன்பருளம் பொங்க வருணா சலவடிவின்
தென்புறநோக் காவமர்ந்த தேசிகநின் — முன்போந்
தபய மபய மபயமென வீழ்ந்த
வபலையே னைக்காத் தருள்.

அடியார்களின் உள்ளம் பக்தியாற் பொங்குமாறு ஸ்ரீ அருணாசலத்தின் தென்புறத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாக வந்தமர்ந்த ஞான தேசிகனே! உன் சந்நிதியில் வந்து 'அபயம், அபயம், அபயம்' என்று யாசித்து விழுந்து வணங்கிய அசக்தனாகிய என்னைக் காத்தருள்வாயாக.

289. கண்ணா லறிவளிக்குங் கற்பகமே வானவருக்
கண்ணா மலையான வற்புதமே — தண்ணா
ரருளால் ரமணவடி வாகியெனை யாண்ட
குருவே யபயங் கொடு.

கண்ணோக்கினாலேயே ஞானத்தைக் கொடுக்கும் கற்பக விருக்ஷமே! பிரம்ம விஷ்ணுக்களாகிய தேவர்களுக்கிடையில் அற்புதமான அண்ணாமலையாக

எழுந்தவனே! உயிர்கள் மேல் அதிசீதள அருட்பெருங் கருணையால் ஸ்ரீ ரமண வடிவம் தாங்கி வந்து என்னை யாட்கொண்ட சற்குருவே! அபயம் கொடுத்தருள்க.

290. வேறுபடு சிந்தை விலங்கின் விடுபட்டுள்
ளாறுதலை வேண்டி யழுகின்றேன் — நீறுபட
வல்லனங்க னைக்கெடுத்த வாலறிவாந் தீவிழியாய்
நல்ல வருளபய(ம்) நல்கு.

ஆன்ம நாட்டத்தினின்றும் வேறுபட்டுப் போகின்ற சிந்தை என்னும் விலங்கிலிருந்து விடுபட்டு உள்ளே ஆன்மாவில் நிலைபெறும் அமைதியை வேண்டி அழுகின்றேன். மிக வல்லமை பொருந்திய மன்மதனைப் பேரறிவாகிய சுடர்விழியாற் சாம்பலாகும்படி அழித்தவனே, அந்த உனது நல்ல அருளபயத்தை எனக்குக் கொடுப்பாயாக.

291. சித்த விடப்புற்றின் செல்லரிக்கப் பாழாகும்
பித்தமன வாழ்வின்றப் பித்திடுவான் — முத்த
முனிவேந்த னேரமண மூர்த்தியே நின்றாட்
குனிவே னபயங் கொடு.

ஜீவன் முக்தி பெற்ற முனிவர்களுக்கெல்லாம் அரசனே! ஸ்ரீ ரமண மூர்த்தியே! விஷப்புற்றாகிய சித்தத்தில் குடியிருக்கும் வாசனைகளாகிய செல்லால் அரிக்கப்பட்டுப் பாழாகின்றதும், பைத்தியம் பிடித்ததுமான இம் மனவாழ்விலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக உனது திருவடிகளிற் குனிந்து வணங்குகின்றேன். நீ அபயம் கொடுத்தருள்வாயாக.

292. சரணம் புகுந்தேனென் சற்குருநின் பாத
வரணளிக்க வேண்டு மபயம் — மரணங்
கடந்த வுனினான் கரைந்தே யிருந்த
விடந்தெரியா [24]தொன்றாய் விட.

என் சற்குருவே! மரணத்தைக் கடந்த உன் பாதத்தில் சரணம் புகுந்தேன். அகந்தை இருந்த விடம் தெரியாமல் அழிந்து நான் உன்னில் கரைந்து ஒன்றாகிவிடுமாறு உன் திருவடிப் பாதுகாப்பால் எனக்கு அபயம் அளிக்க வேண்டும்.

293. நல்லோர்க் கினிய ரமண பதாம்புயங்க
ளல்லா லபய மடியேனுக் — கில்லை
மனிதருளே தாழ்ந்த மதியனா னேனும்
புனிதமன னாகப் புரி.

நல்லோர்களாகிய சிறந்த அடியார்களுக்கு இன்பந் தருவதான ஸ்ரீ ரமண பாத தாமரைகளைத் தவிர, அடியேனுக்கு அபயஸ்தானம் வேறு இல்லை. நான் மனிதர் அனைவரிலும் மிகத் தாழ்ந்த புத்தி யுடையவனானாலும், புனிதமான மனத்தைப் பெறும்படி நீ அருள்புரிவாயாக.

294. கெஞ்சியழு வேனுட் கிளர்ந்தே யகமுகமாய்ச்
செஞ்செவே நிற்குந் திறமருள்வாய் — அஞ்சலெனத்
தாராயேற் றஞ்சந் தளர்ந்துபவத் தாழ்ந்துகரை
சேரா தழிவேன் றெரி.

உன்னிடம் கெஞ்சி யழுகின்றவனாகிய என்னுள்ளத்தில் நீ ஸ்புரித்து விளங்கி, நான் நன்றாக ஆன்மாபிமுகப்பட்டு நிஷ்டையுறும் திறமையை எனக்கு அருள்வாயாக. 'பயப்படாதே' என்று கூறி நீ இவ்விதம் எனக்குத் தஞ்சம் அருளாவிட்டால், நான் மனம் தளர்ந்து பிறவிக் கடலில் மூழ்கிக் கரையேற முடியாது அழிவேன். இதைத் தெரிந்துகொள்க.

---

[24] 'ஒன்றாய்விட பாத அரண் அபயம் அளிக்க வேண்டும்' என்று கூட்டுக.

295. இயங்கு மனமுடலை யானென்றே யெண்ணி
மயங்குமறி யாமை வயத்தாற் — பயங்கொண்டு
சாவுவாழ் வான சமய மெலா(ம்)நடுங்கும்
பாவியேன் றீரமுறப் பார்.

(உண்மையில் ஜடமேயாயினும்) சேதன வஸ்துபோல இயங்கிக் கொண்டிருக்கும் மனத்தையும் உடலையும் 'நான்' என்று எண்ணி அபிமானித்து மயங்குகின்ற அஞ்ஞானத்திற்கு வசமாகி, அதனால் உடல் வாழ்வுக் காலத்திலும் உடல் சாகுங் காலத்திலும் எப்போதும் பயந்து நடுங்கிக்கொண்டே யிருக்கும் இப் பாவியேன் தைரிய மடையும்படி நீ அருட் கண்ணால் பார்த்தருள்வாயாக.

296. பெருந்துணையா யுள்ளத்திற் பேராம னீயே
யிருந்தெனைக்காப் பாற்றா யெனிலோ — அருந்தவமும்
ஆற்றகிலா தேழை யலமந் தழிவேனே
ஏற்றவனே யென்பா லிரங்கு.

நீயே என்னுடைய உள்ளத்தில் ஒரு போதும் நீங்காத பெருந்துணையாக இருந்துகொண்டு என்னைக் காப்பாற்றி அருளாவிட்டால், அரிய தவம் எதையும் ஆற்ற முடியாதவனாய் இவ் வேழையேன் வருந்தி அழிவேனே! என்னை அடிமையாக ஏற்றுக்கொண்ட சற்குருவே, என்னிடம் இரக்கங் கொள்வாயாக.

297. தேகத்தின் வேறாய்ச் சிதாகாச மாவோங்கும்
ஏகப் பரப்பிரம வின்புருவாய் — யோகத்
தழுந்திமீ ளாத வபயந்தா ராயோ
தொழும்படிறேன் பாலிரக்கந் தோய்ந்து.

உன்னைத் தொழுகின்ற அடியேனிடம் நீ இரக்கங் கொண்டவனாகி, நான் இத் தேகத்திற்கு வேறான சிதாகாசமாக விளங்கும் ஏகப் பரப்பிரம்மானந்த வடிவாகி யோக நிஷ்டையில் அழுந்தி என்றும் திரும்பாத அபய நிலையைத தரமாட்டாயோ?

298. என்னசிந் தித்து மியலே னெனைக்கொலநான்
உன்னைச்சிந் தித்தா லுதவுவையென் — றன்னே
யருணா சலரமணா வாண்டருளென் றார்த்தேன்
குருவே யபயங் கொடு.

அகந்தையாகிய என்னை நானே அழித்துவிடுவதற்கு என்ன தந்திரங்களை யோசித்தும் முடியவில்லை. ஆகையால், 'அருணாசல ரமணா! அன்னையே!' என்றவாறு உன்னைச் சிந்தித்தால் நீ உதவுவாய் என்று எண்ணி, 'சற்குருவே, என்னை யாண்டருள்' என்று முறையிட்டேன். நீயே அபயங் கொடுப்பாயாக.

## 31. மெய்யடிமை வேண்டல்

299. உண்மை யடிமைப்பே றொன்றுனடிக் கென்னளவில்
வண்மையா னீவழங்கின் மற்றுமோர் — திண்மைநிலை
ஏதெனக்கு வேண்டு மிறைரமணா பின்னென்மேல்
வேதனுக்கும் வேலை யிலை.

இறைவனாகிய ரமணா! உனது திருவடியின் உண்மையான அடிமையாகிவிடும் ஒரு பாக்கியத்தை உன்னுடைய வள்ளற்றன்மையினால் நீ எனக்கு அருளிவிட்டால், வேறு உயர்ந்த நிலை எனக்கு எது ஒன்று வேண்டும்? (ஒன்றும் வேண்டாம்.) அதன் பிறகு பிரம்மாவுக்கு கூட என்னிடம் வேலை இல்லை யல்லவா?

300. உலவா துயர்ந்த வுனதடிமை யன்றி
நிலமே லெனக்கோர் நிலையேன் — தலைவா

ரமண குருபரனே நாளவமா காமல்
அமைய வருளே யளி.

தலைவனே! ரமண குருபரனே! அழிவற்று உயர்ந்த உனது அடிமைப் பேற்றை யன்றி இவ் வுலகில் எனக்குச் சிறந்த ஒரு நிலை ஏன் வேண்டும்? (வேண்டாம்.) ஆகையால் இவ் வாழ்வின் மீதி நாட்கள் வீணாகாதபடி உனக்கு அடிமை செய்து அமையுமாறு அருள் தருவாயாக.

301. ஒன்றேநீ சத்தா முனக்கயலோர் சத்தியிலை
நன்றா யெனையடிய னாக்கியகம் — வென்றோங்கி
வாழ்வு பெறக்கருணை வைப்பாயேன் மற்றெனக்கோர்
தாழ்வுண்டோ செய்க தயை.

சத்தாகிய நீ ஒருவனே உண்டு. உனக்கு வேறாக எந்தவொரு சக்தியும் இல்லை. ஆகையால் நீ என்னை அடியவனாக நன்றாகச் செய்து, என் அகங்காரத்தை அழித்து ஓங்கி அருள் வாழ்வு நான் பெறுமாறு கருணை செய்வாயேல், வேறு எனக்கு எந்தவொரு தாழ்வும் உண்டாகுமோ? (உண்டாகாது.) நீ தயை செய்வாயாக.

302. அடிமை யுனக்கென் றமையுமேற் சிந்தை
மிடிமைப் புலவழியை மேவிக் — கடிவிரைந்து
வீணுழைப்பை யேனோதான் மேற்கொள்ளும் உள்ளத்திற்
றாணுவென நிற்கவருள் தா.

என் மனம் தான் உனது அடிமை என்ற பேற்றை ஏற்றுக்கொண்டு அமையுமாகில், பிறகு தரித்திரத் தன்மையுடைய புலன்களின் வழியே சரேலென வெளியில் தாவி வீணான முயற்சிகளை ஏன்தான் மேற்கொள்ளுமோ? ( கொள்ளாதல்லவா? ) ஆகவே, அது ஆன்மாவில் அசலமாக நிஷ்டையுற்றிருக்க உன் அருளைக் கொடுப்பாயாக.

303. நல்லடிமை பூண்டுடலி னானென் றெழுமெழுச்சி
புல்லின் னுனியளவு போலுமெழா — தெல்லில்
இருப்பற் றிருள்கரந்த தென்ன விருக்க
விருப்புற் றருள்க விரைந்து.

நான் உன்னுடைய நல்ல அடிமையாகி, இவ் வுடலில் 'நான்' என்று எழும் அகங்கார யெழுச்சி ஒரு புல்லின் நுனியளவு கூட மீண்டும் எழாதபடி அடங்கி, சூரியனிடம் இருள் இருப்பற்றுக் கரைந்து போவதுபோல, அழிந்துபோய் இருக்க நீ என்பால் கருணை கூர்ந்து விரைந்து அருள்க.

304. எனக்கோர் முடிவிடுவா யீசவினி யேனுஞ்
சினக்காம மோகவலை சிக்கா — துனக்கேநான்
என்றென்று(ம்) மீளா வினிய வடிமையா
நின்றிடவே யுண்முகமா நேர்.

ஈசுவரனே! இனியேனும் நான் காமம், குரோதம், மோகம் ஆகிய வலைகளிற் சிக்காது, என்றென்றும் உனக்கே மீளாத இனிய அடிமையாகி, உண்முகமாய் நிஷ்டையுற் றிருக்கும்படி நீ எனக்கொரு முடிவான தீர்ப்பு (ஆக்ஞை) அளித்தருள்வாயாக.

305. உனக்கடிமை யென்றா லுளக்கவலை யேது(ம்)
நினைப்பிலெழா தாயி னிசமாம் — வினைப்பயனோ
தன்முனைப்போ காரணமாச் சங்கற்பஞ் சேரவிட்டால்
உன்னடிமைக் கீதழகோ வோது.

நான் உனக்கடிமை யென்றால், உள்ளத்தில் கவலைகளாகிய எண்ணங்கள் யாதொன்றும் எழாது இருக்குமாயின், அப்பொழுது தான் அந்த அடிமைப்பேறு

நிஜமாகும். அவ்வாறின்றி, பண்டை வாசனைகளை யெழுப்பி வைக்கும் ஊழ்வினையினாலோ அல்லது ஆகாமிய தூண்டுதலாகிய தன் முனைப்பினாலோ என் உள்ளத்திற் சங்கற்ப விகற்பங்களாகிய எண்ணங்கள் உண்டாகும்படி நீ விட்டால், உன் அடிமை என்ற ஒருவனுக்கு இது அழகாகுமா? நீயே சொல்வாயாக.

306. இத்தனைநா ளேழையிட மென்னென்ன வைத்தனையோ
அத்தனையு முன்னருளா லல்லாமல் — சத்தியமாய்
நானென்ன தென்றால் ரமணேசா ஞாயமோ
தானெனவே தன்னடிமை தா.

ஸ்ரீ ரமணேசா, ஏழையாகிய என்னிடம் இத்தனைக் காலமாக எந்த யெந்த நற்குணங்களை வைத்திருந்தாயோ, அவை யாவும் நீயே உன்னுடைய அருளால் தந்தவையே தவிர, அவற்றை நான் என் தவத்தாலோ புண்ணியத்தாலோ அடைந்திருந்தேன் என்பதோ அல்லது அவை யாவும் உண்மையில் என்னுடைய நற்பண்புகளே என்று சொல்வதோ ஞாயமாகுமா? ஆகையால் உன் அடிமைப் பேற்றையும் நீயாகவே தந்தருள்க.

307. எனக்கறிவு வந்த விளமை முதலே
யுனக்கடிமை யுண்மையா யாகி — மனக்கொடிய
பேய்வாயின் மீளப் பெரிதழுத துக்கமினி
ஓய்வாத லென்றோ வுரை.

எனக்கு அறிவு தெரிந்த இளமைப் பருவம் முதற் கொண்டே, நான் உனக்கு உண்மையான ஓர் அடியவனாக வேண்டுமென்றும், கொடிய மனப் பேயினிடமிருந்து மீண்டு கொள்ள வேண்டு மென்றும் மிக அதிகமாகத் தொழுது அழுத துக்க மெல்லாம் இனி ஒரு முடிவுக்கு வந்து ஓய்வடைவது என்றைக்கோ? நீயே சொல்க.

308. தடுத்து நிறுத்தியெனைத் தன்னடிமை யாக்கி
யெடுத்தணைக்க வேண்டி யிறைஞ்சி — யடுத்தடுத்துச்
சொல்லான் மனத்தாற் றொழுதழுது நின்றுடலால்
எல்லா மிரந்தனனெந் தாய்.

எந்தையே! நான் உலக வழிக்குச் செல்லாதவாறு என்னைத் தடுத்து நிறுத்தி, உனக்கு அடிமையாக்கி மாயையினின்றும் விலக்கி யெடுத்து என்னை யணைக்க வேண்டும் என்று பிரார்த்தித்து மனோவாக்குக் காயங்களால் மீண்டும் மீண்டும் எத்தனையோ முறை தொழுதும் அழுதும் உன்னிடம் கெஞ்சினேன்!

309. உத்தமர்பா லன்றி யுறாத திருவடிகண்
மத்தவகங் கார மதியெனையுஞ் — சுத்திசெய்து
தன்னுடன்கொண் டேகத் தரைமேல் ரமணவுரு
மன்னினையுன் னாளா வரி.

மகான்களாகிய உத்தம அடியார்களிடம் மட்டுமே பொருந்தும் உனது திருவடிகள் எனது கொழுத்த அகங்கார புத்தியையும் சுத்திசெய்து, என்னையும் உன்னுடன் அழைத்துச் செல்வதற்காகவே இப் பூவுலகில் ஸ்ரீ ரமண சற்குரு வடிவை எடுத்துக்கொண்ட தல்லவா? ஆகையால் என்னையும் உன்னுடைய ஆளாக நீயே வரிப்பாயாக.

310. நல்லா ருளம்பொருந்தா நாற்றச் சடபாவப்
பொல்லா வுணர்ச்சி புறந்தள்ளக் — கல்லாதேன்
மோன குருரமண மூர்த்தியுனக் காளென்னல்
ஈனமன்றோ வாளாக் கெனை.

இந்த நாற்ற ஜடவுடலை 'நான்' என்று அபிமானிக்கும் பொல்லாத தேகாத்மபுத்தி நல்லோர்களாகிய உனது அடியார்களது உள்ளத்திற்குப் பொருந்தாத தாகும். இதை

விலக்கித் தள்ளக் கற்காதவனாகிய நான் மௌன ரமண குருமூர்த்தி யாகிய உனக்கு ஓர் அடிமை என்று சொல்லுதல் உன்னுடைய பெருமைக்கே ஈனமல்லவா? ஆகையால், என்னை உன்னுடைய உண்மையான அடிமையாக ஆக்குவாயாக.

311. இவ்வாறே வாணா ளெலாங்கழிய விட்டிருப்பின்
எவ்வா றுனக்கடிமை யெய்துவனான் — செவ்வே
பகவனா வந்த பரம்பொருளே யீதுன்
முகமுனே யானசொன் முறை.

இப்படியே எனது வாழ்நாள் எல்லாம் வீணாகக் கழியும்படி நீ விட்டிருப்பாயாகில், நான் இனி எவ்வாறு உனக்கு ஓர் உண்மை யடிமையாக ஆவேன்? சாக்ஷாத் ஈசுவரனாகவே அவதரித்த பரம்பொருளே! உன் சந்நிதியில் உன் திருமுகத்தின் முன்னே நான் சொல்லும் முறையீடு இதுவே யாகும்.

312. ரமண குருபரநின் னல்லடிமைப் பேற்றைக்
குமணனினு மிக்கக் கொடுப்பாய் — நமரமண
வென்றடங்கிக் கும்பிட் டிருக்கின்றே னின்னருளே
வென்றருள நீயே விதி.

ஸ்ரீ ரமண குருபரனே! உனக்கு உண்மையாக அடிமையாகும் பேற்றை குமண வள்ளலை விடத் தாராளமாகக் கொடுப்பாயாக. உன் சந்நிதியில் 'நம ரமண' என்று அடங்கி வணங்கிக் கும்பிட்டிருக்கிறேன். என் வாழ்க்கையில் உன் அருளே வெற்றியடையும்படி நீயே விதிப்பாயாக.

313. ஓதவுன மெய்தொட் டுவக்கவொணா வோங்காரப்
போதவுணர் வாகிப் புறங்காணா — வேத
முடிப்பொருளே சீரமண மூர்த்தியே யுன்ற
னடிக்கடிமை யாமாறே யாக்கு.

ஓதுவுதற்கோ, தியானிப்பதற்கோ, கையால் தொட்டு அறிந்து சந்தோஷிப்பதற்கோ மிக அரிதாகிய ஓங்கார ஞான உணர்வாகி, தனக்கு அன்னியமாக யாதொன்றையுங் காணாத வேதாந்த மெய்ப்பொருளாகிய ஸ்ரீ ரமண மூர்த்தியே! உனது திருவடிகளுக்கு நான் அடிமையாகுமாறு ஆக்குவாயாக.

314. உனதடிமை யென்றே யுணர்வதன்றி வேறே
யெனையறிவ தென்னரம ணேசா — அனையறிந்
தாதரவு செய்தாலல் லாமற் சிசுவெனக்கிங்
கேதுதுணை யேதுவழி யே.

'நான் யார்?' என்றால், 'நான் உன்னுடைய அடிமை தான்' என்று உணர்வதைத் தவிர நான் என்னை அறிவது என்பது வேறென்ன! ஸ்ரீ ரமணேசனே! தாயாகிய நீயே சிசுவாகிய என்னுடைய இயலாமையையும் எனக்குத் தேவையான வற்றையும் அறிந்து தக்கவாறு ஆதரவு செய்தாலல்லாமல், இங்கு எனக்கு வேறு துணையோ வேறு வழியோ ஏது?

315. ஆகவே யுன்ற னருளா லடியனேன்
சோகமோ கப்பாழ் துறந்துபரி — பாகமடைந்
தென்று முரிய வினிய வடிமையா
நின்றிடவே வைப்பாய் நிலைத்து.

ஆகையால், அடியவனாகிய நான் உன்னருளாலேயே பாழான சோக மோகங்களைத் துறந்து, பரிபக்குவமடைந்து என்றென்றைக்கும் உனக்கே உரியவனும் உனக்கு இனிய ஓர் அடிமையாகி நிலைத்து இருக்குமாறு என்னை வைப்பாயாக.

## 32. மெய்யன்பு வேண்டல்

316. [25]வேண்டுவதின் சாரமெலா மெய்யன்பே நின்பதத்திற்
பூண்டதுவே யானபரி பூரணத்தின் — மாண்டகந்தை
அன்பாழி யுன்னி லனன்னியவோ ரன்பணுவா
யின்பா மியல்பா மிருப்பு.

நான் உன்னிடம் வேண்டுவதின் சாரமெல்லாம் என்ன வென்றால், உன் திருவடிகளில் மெய்யன்பு பூண்டு, அந்தப் பரிபூரணமாகிய மெய்யன்பிலேயே அகந்தை மாண்டு, அன்புக் கடலாகிய உன்னில் உனக்கு வேறாகாத ஓர் அன்பு அணுவாய் இயல்பான இன்பமயமாய் இருக்கும் நிலையே யாகும்.

317. உண்மையன் பில்லையெனக் குன்பதத்தி லெம்பெருமான்
திண்மை மிகுத்தகொடுந் தீமனத்தேன் — உண்மயக்க(ம்)
நீக்கும் பொறுப்பு(ம்) நெறியா னிலைநிறுவிக்
காக்கும் பொறுப்புமுனக் காம்.

எம்பெருமானே! உன்னுடைய திருவடிகளில் எனக்கு உண்மையான அன்பு இல்லை. தீமைகள் பல வலுத்து மிகுந்த கொடிய மனத்தை யுடையவன் நான். ஆகவே என் உள்ளத்தின் மயக்கம் முழுவதையும் நீக்கும் பொறுப்பும், பக்திநெறியால் உன்திருவடியில் நிஷ்டையை உண்டாக்கி என்னைக் காக்கும் பொறுப்பும் உன்னுடையதே யாகும்.

318. கைகூப்பி நெஞ்சங் கனிந்து கரைந்துருகி
மெய்வேர்த் துரோம விதிர்ப்பெய்தி — செய்வேற்றுக்
கன்மமறந் துன்கழலே காமுறுநிட் டானுபவச்
சென்மமா யென்வாழ்வைச் செய்.

கைகூப்பி, மனம் கனிந்து கரைந்து உருகி, உடல் வியர்த்து, மயிர்க் கூச்சல் எய்தி, செய்யும் பிற கர்மங்கள் எல்லாம் மறந்துபோய், உன் திருவடிகளையே காமுற்று நிற்கும் நிஷ்டானுபவ ஜன்மமாக என் வாழ்வைச் செய்தருள்.

319. இருப்பிற் றிரியாத வீடிலாச் சத்தி
யுருப்பெற் றுலாவியதுன் னுண்மை — குருப்பற்றால்
மற்றெல்லாப் பற்றும் மறைந்து மனோநாச
முற்றிடநின் சத்தி யுதவு.

சந்மாத்திர பிரம்ம நிலையிலிருந்து சற்றும் சலிக்காத இணையற்ற பரமேசுவரசக்தியே ஸ்ரீ ரமண உருவத்தை ஏற்றுக் கொண்டு இவ் வுலகில் உலவியது என்பதுதான் உன்னைப் பற்றிய உண்மை யாகும். அத்தகைய சற்குருவாகிய உன்னுடைய பற்றால் மற்ற உலகப் பற்றுகள் எல்லாம் மறைந்து, நான் மனோநாசம் அடையுமாறு உன்னுடைய அத்தகைய இணையிலாச் சக்தியால் உதவுக.

320. உள்ளமே பேரின்ப வூற்றென்னுந் திண்ணங்கொண்
டெள்ளவு(ம்) நான்வெளியி லேகாமற் — கள்ள
வெழுச்சிக்குஞ் சற்று மிடந்தரா மெய்யன்
பெழுச்சிதந் தாள்வா யெனை.

நான் 'உள்ளமாகிய ஆன்மாவே பேரின்ப வூற்றாகும்' என்னும் அறிவை திடமாகக் கொண்டு, அதனால் எதற்காகவும் எள்ளவும் புறமுகமாகாமல், 'நான் உடல்' என்று எழும் கள்ள எழுச்சிக்கும் சற்றும் இடந்தராத மெய்யன்பு கிளர்ந்து எழுமாறு நீ என்னை ஆட்கொண்டு அருள் செய்வாயாக.

[25] 'வேண்டுவதின் சாரமெல்லாம் இருப்பே யாகும்' என்றவாறு.

321. வீணுக் குழலும் வெளிமுகவாழ் விட்டொழித்துப்
பேணுந் திருவடியிற் பேரன்பு — பூணும்
பெரும்பாக் கிய(ம்)நான் பெறுமாறுன் னுள்ளம்
விரும்புமேற் றீரும் வினை.

உண்மையான பயன் எதுவுமின்றி பாடுபடும் வெளிமுக வாழ்க்கையை நான் விட்டொழித்து, மெய்யடியார்கள் போற்றுகின்ற உன் திருவடியிற் பேரன்பு பூணுகின்ற பெரிய பாக்கியத்தை நான் அடையுமாறு உன் திருவுள்ளம் விரும்புமாகில், என் வினைகளெல்லாம் அப்பொழுதே தீர்ந்துவிடும்.

322. ஓடும் மனத்தையிழுத் துள்ளே நிறுத்தவெகு
பாடுளதாய்க் காணப்படுவதேன் — ஈடிலாப்
பேரன்பு வெள்ளப் பெருக்கெடுத்தா லுன்பதத்தில்
வேறெங்கு செல்லும் விரைந்து.

பகிர்முகப்பட்டு விஷயங்களில் ஓடியலையும் மனத்தை உள்ளே இழுத்து ஆன்மாவில் நிறுத்துவது பலவந்தம் போலவும் மிகமிக உழைப்புள்ளது போலவும் காணப்படுவது ஏன்? பரமான்மாவாகிய உனது திருவடியில் இணையில்லாத பேரன்பு வெள்ளமாகப் பெருக்கெடுக்குமானால், அந்த மனம் உன்னை விட்டு வேறு எங்கு விரைந்து செல்லும்? (எங்கும் செல்லாது.)

323. அன்புவெள் ளத்தா லடித்துச்செல் லப்படினான்
பின்பெங் கிருக்குமொரு பேச்சுமூச் — சின்பக்
கடலடியி லாழ்ந்தென்றுங் கங்குகரை காண
முடியாதோ னாவேன் முடிந்து.

ஜீவமனமாகிய நான் உன் பேரன்பு வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டால், பிரவிருத்தி வடிவங்களாகிய பேச்சோ மூச்சோ கூட அதன் பிறகு எங்கு இருக்கும்? அப்போது நான் அவ் வன்பு வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்பட்டு ஆத்மானந்தமாகிய சமுத்திரத்தில் சேர்ந்து அதனடியில் முழுகி, கங்குகரையாகிய எல்லைகளற்று அந்த சமுத்திர வடிவேயாகி என்றென்றும் உன்னில் முடிந்து போவேன்!

324. எத்தகைய பத்தி யெழுந்தா லுடன்மனமேற்
சுத்த மறதி துலக்கமுற்றே — யித்தரைவாழ்
வெள்ளளவு மின்பதுன்ப மில்லா வருள்வடிவங்
கொள்ளுமோ வஃதைக் கொடு.

எத்தகைய பக்தி உள்ளத்தில் எழுந்தால் உடலும் மனமும் அடியோடு மறக்கப்பட்டு இப் பூலோக வாழ்க்கை எள்ளளவுங் கூட இன்ப துன்பமில்லாத அருள்வாழ்வாகிய வடிவத்தைக் கொள்ளுமோ, அத்தகைய பக்தியைக் கொடுப்பாயாக.

325. உன்னிடத்தி லன்பிருந்தா லோடுமோ நெஞ்சமுள்ளே
தன்னிடத்தி ருந்தாலுந் தாவாதாம் — அன்னியத்தின்
பற்றினா லன்றோ பறக்கின்ற திவ்வலைச்சல்
அற்றிருக்க வுன்னன் பருள்.

சற்குருவாகிய உன்னிடத்தில் உண்மையான அன்பு இருந்தால், மற்ற பொருள்களை நோக்கி என் மனம் ஓடுமோ? அன்றியும், உள்ளே விளங்கிடும் ஆன்ம சொரூபத்தில் அன்பு இருந்தாலும், வெளிமுகத்தில் தாவாது. இவ் விரண்டு மில்லாமல், அன்னியப் பொருள்களின் மேல் உள்ள பற்றினாலல்லவா மனம் வெளிமுகத்தில் பறக்கின்றது? இம் மன அலைச்சல் அற்று இருக்க உன் மெய்யன்பை எனக்கு அருள்வாயாக.

326. மெய்யான பத்திகொண்டான் மீண்டு முனைவிடுத்தோர்
பொய்யா யெழுந்தகன்று போவேனோ — ஐயாவென்
போலிப் பணிவின் புரைநீக்கி மெய்யன்பு
பாலித் தருள்க பதம்.

உன்னிடம் உண்மையான பக்தி எனக்கு இருக்கு மானால், உன்னை விட்டுவிட்டு 'இந்த தேகமே நான்' என்ற ஒரு பொய்யகந்தை வடிவில் மீண்டும் எழுந்து அகன்று போவேனா? ஐயா! என்னுடைய போலி நமஸ்காரங்களின் குற்றத்தை நீக்கி, உன்னுடைய பாதங்களில் மெய்யன்பை அளித்தருள்க.

327. எத்தகைய மெய்யன் பெனக்களித்தாற் புன்புலங்காண்
மித்தைவழி செல்ல விரும்பாமற் — புத்தியகம்
பற்றி யழுந்திப் பகிர்முகமென் றென்றுமுறா
வெற்றியுறு மஃதே விளை.

எத்தகைய உண்மையான அன்பை உனது திருவடியில் எனக்கு அளிப்பாயானால் என் புத்தி அற்பப் புலன்களின் வழியே இப் பொய்யுலகத்தை யறிய விரும்பாமல், ஆன்மாவைப் பற்றிக்கொண்டு அதிலேயே அழுந்திப்போய், பிறகு எக்காலத்திலும் பகிர்முகமே அடையாத ஞான வெற்றியுறுமோ, அத்தகைய அன்பையே எனக்கு உண்டாக்குக.

328. அன்புமு ளாத வடியே னடிமைப்பே
[26]ரென்புகல்வேன் மிக்க விழுக்கன்றோ — நின்புகலை
நாடிவந்தும் மெய்யன்பை நானடையே னாயினினி
யீடிலையென் புன்மைக் கினொன்று.

மெய்யன்பு உதிக்காத நான் உன்னுடைய அடிமை என்று பெயர் சூட்டிக்கொள்வதை என்னவென்று சொல்வேன்! இது மிகவும் தவறல்லவா? உன்னைப் புகலாக நாடிவந்துங் கூட நான் மெய்யன்பை யடைய மாட்டேனாயின், என்னுடைய இச் சிறுமைக்கு இணையாக இனி ஏதொன்றுமே இருக்க முடியாது!

329. எனக்குன் னடிநீழ லெய்தியெண மேது(ம்)
மனத்தணுகா வாறிருக்க வாசை — யினிப்போ
டெழாதது மேனோ விறைவாவென் சென்னி
தொழாததோ நின்றாளைத் தொட்டு.

இறைவா! உனது திருவடி நிழலை யடைந்து மனத்தில் யாதோர் எண்ணமும் உண்டாகாதபடி நிஷ்டையுற் றிருப்பதற்கு எனக்கு மிக விருப்பத்தோடு ஓர் ஆசை யெழாதது ஏனோ? இதற்குக் காரணம் என் சிரம் உனது திருவடிகளைத் தொட்டு தொழாதது தானோ?

330. ஆளவே வந்த வருணா சலரமணா
நீளவே யுன்னை நினைந்தறியேன் — மூளவே
மெய்யன்பு வித்து விதைத்தருணீர் பாய்ச்சியெனைக்
கொய்துனக்கே நல்லூணாக் கொள்.

என்னை யாட்கொள்வதற்காகவே இவ் வுலகில் அவதரித்த ஸ்ரீ அருணாசலரமணா! இடைவிடாது தைலதாரை போன்று உன்னை நெடிது தியானித்து அறியேன். எனக்கு மெய்யன்பு மூளும்படி என்னுள் அதற்கேற்ற விதை விதைத்து, உன்னருளாகிய நீரைப் பாய்ச்சி, மெய்யன்பு விளையப்பெற்ற என்னைப் பறித்துச் சமைத்து உனக்கே நல்ல நிவேதனமாக உட்கொண்டருள்க.

331. உன்பே ரருளா லுலகோ ருபகாரம்
என்பா லியற்றுவதற் கீடாக — அன்போ

[26] 'பேறு' எனவும் பாடம்.

டிடைவிடா துன்னைநா னெண்ணிடுவ தன்றோ
கடமையருள் வாய்மெய்க் கனிவு.

உன்னுடைய சிறந்த திருவருளால் உந்தப்பட்டு உலகோர் எனக்கு உபகாரம் செய்வதற்கு ஈடாக நான் இடைவிடா அன்போடு உன்னைத் தியானிக்க வேண்டிய தல்லவா என் கடமை? அத்தகைய மெய்யான அன்புக்கனிவை எனக்கு அருள் செய்வாயாக.

332. திருவருளா லன்றியொன்றுஞ் செய்வதற்கில் லாது
குருபதமே நற்றுணையாய்க் கூவி — யுருகவெனை
வைத்தா யதுவுமுண்மை வாரமின்றி வாயளவாப்
பொய்த்தாய் விடாது புர.

உன்னுடைய திருவருளாலன்றி என்னால் ஒன்றும் செய்ய முடியாதவனாகி, அத் திருவருளைப் பெறுவதற்காக என் சற்குருவாகிய உனது திருவடிகளையே துணை கூவிப் பாடி உருகும்படி என்னை வைத்தாய். இதுவுங் கூட உண்மையான அன்பில்லாது வாயளவான பிரார்த்தனையாகப் பொய்யாகி விடாதபடி நீ காப்பாற்றி யருள்வாயாக.

333. மிக்கத் தடித்த வினையுடனா னென்னுமதி
சுக்கற் பொடியாத் தொலைந்தழிய — நெக்குற்
றுருகி யுனைநினையு முண்மையன் புள்ளந்
தருகிலா யோவென் றனக்கு.

ஊழ்வினையினால் அடைந்த இவ் வுடலை 'நான்' என்று மிகுந்த வலிவோடு அபிமானிக்கும் புத்தி சுக்கற் பொடியாக நொறுங்கி யழியும்படி உன்னை நெக்குநெக்குருகி நினையும் உண்மையன்பை என் உள்ளத்தில் எனக்குத் தர மாட்டாயோ?

334. சுத்தப் பிரேமை துளிர்த்தா லலாகந்தை
மத்தப் பசாசகல மாட்டாது — சித்தத்துட்
சேர்வா தனையுஞ் சிதையா தருளென்மேற்
கூர்வாய் ரமண குரு.

பரிசுத்தமான உண்மை யன்பு என் உள்ளத்தில் உதித்தாலன்றி, அகந்தையாகிய மூடப் பிசாசு என்னை விட்டு அகலாது; அனாதி காலமாக சித்தத்துள் சேர்க்கப்பட்டுக் குவிந்து கிடக்கும் வாசனைகளும் அழியா. ஆகையால், ஸ்ரீ ரமண சற்குருவே, என்மேல் அருள் கூர்வாயாக.

335. ஓயாக் குறையா வுணர்வாமெய் யன்புனடிக்
கீயா திருப்பதே னென்னளவில் — தாயாயென்
றந்தையுந் தெய்வமுஞ் சற்குருவு மானநீ
தந்திடவே வேண்டுமிதைத் தா.

ஓயாததும் குறையாததுமான மெய்யன்பு உணர்ச்சியை உன் திருவடிகளில் ஏற்படுமாறு நீ எனக்குக் கொடாமல் இருப்பது ஏனோ? எனது தாயும் தந்தையும் தெய்வமும் சற்குருவுமான நீதான் தந்தருள வேண்டும். இதைத் தருவாயாக.

336. மெய்யன்பென் னுள்ளம் விளையத் தருவாயேல்
ஐயனே நின்கடமை யாயிற்றாம் — செய்ய
அதன்பின் னெனக்குனக்கோ ரற்பமுமே வேலை
யெதைமுன்னிட் டென்னுண் டியம்பு.

என்னுள்ளத்தில் மெய்யன்பு விளையும்படி நீ அருள் செய்வாயானால், ஆண்டவனே, உன்னுடைய கடமை முடிந்த தாகும். அதன் பிறகு எனக்கோ உனக்கோ செய்ய வேண்டியதாகக் கொஞ்சங்கூட எதை முன்னிட்டு எந்த வேலை தான் இருக்கப் போகின்றது? நீயே சொல்க.

337. நைச்சரித்துன் பாலிந்த நாயேன் பெறவிரும்பு
மைச்சுவர்ய பாக்கியமெய் யன்பேதான் — பொய்ச்சுகங்கள்
கூட்டும் பிறவரங்கள் கொள்ள விரும்பேனுன்
றாட்டா மரைக்கடிமை தா.

உன்னிடம் வந்து நச்சரித்து இந்த நாயேன் பெற்றுக் கொள்ள விரும்பும் ஐசுவரிய பாக்கியம் எது என்றால், உன் திருவடிகளில் எனக்கு மெய்யன்பு உண்டாக வேண்டும் என்பது தான். இதைத் தவிர, பிரம்மலோகம் வரையுள்ள பொய்ச் சுகங்களைப் பெறுகின்ற எந்தப் பிற வரங்களும் நான் உன்னிடம் கேட்க விரும்ப மாட்டேன். உன்னுடைய பாத தாமரைகளுக்கு அன்படிமையையே எனக்குத் தருவாயாக.

338. ஆண்டபே ரன்பி லணுவேனு(ம்) நின்னிட(ம்)நான்
பூண்டிடுமா றீவாய் புரவலனே — வேண்டுவார்
வேண்டியவா றெய்த விரைந்தருளு(ம்) நின்னிட(ம்)நான்
வேண்டுவதிவ் வன்பின் விளைவு.

நீ என்னிடம் எத்தகைய அவ்வியாஜ கருணை பூண்டு என்னை ஆட்கொண்டாயோ, அந்த அன்பின் ஒரு அணு மாத்திரமாவது நான் உன்னிடம் கொள்ளுமாறு, வள்ளலே, நீ எனக்கு அருள்வாயாக. வேண்டுவார் வேண்டியபடி அடையுமாறு அவர்களுக்கு விரைவில் அருளும் உன்னிடம் நான் வேண்டுவது இந்த அன்பின் விளைவையே யாகும்.

339. மற்றவையெல் லாமுன் மலரடிக ளிச்சைவழி
யுற்றிடுக வானாலிவ் வுண்மையன்பு — பெற்றிடுதல்
ஒன்றுமட்டு மென்று(ம்)நா னுன்பா லிரக்கின்றேன்
இன்றே யருள்வா யினிது.

எனக்கு மற்ற எவை யெல்லாம் தேவையோ, அவைகளெல்லாம் உனது திருவடிகளின் இச்சைப்படியே நடக்கட்டும். ஆனால், இந்த உண்மையான அன்பு பெறுதல் என்ற ஒன்றை மாத்திரம் நான் எப்போதும் உன்பால் வேண்டி யாசிக்கின்றேன். அதை நன்றாக இன்றே அருள்வாயாக.

குறிப்பு: "...எண்ண மெதுவோ வதுசெய்வாய் கண்ணே யுன்றன் கழலிணையிற் காதற் பெருக்கே தருவாயே" என்ற 'ஸ்ரீ அருணாசல நவமணிமாலை' யிலுள்ள பிரார்த்தனையும் இங்கு ஒத்து நோக்கத் தக்கது

## 33. ஸ்வாத்ம பக்தி வேண்டல்

340. முத்தியகத் தான்ம முழுப்பிரிய மோனநிலை
பத்தியிதென் றாய்ந்திதயம் பற்றலின்றி — மித்தையுல
கின்னு(ம்) நிசமென் றெழுமடமை போக்குகநா
னுன்னவென் னான்ம வுரு.

உள்ளே ஆன்மாவினிடம் அடையும் முழுப் பிரியமே முக்தி யென்றும், மோன நிலை யென்றும், பக்தியும் இதுவே என்றும் ஆராய்ந்து அறிந்து, நான் உள்ளே இதயத்தில் நிஷ்டையுறுவதைத் தவிர, வெளியே தோன்றும் இப் பொய்யுலகு நிஜமானதே என்று இன்னமும் எழுகின்ற என் மடமையைப் போக்கியருள்க. அதனால் நான் என் ஆன்ம சொரூபமாகிய உன்னை எப்போதும் தியானிப்பேனாக.

341. வந்தவழி மீளும் வகையும் வலிவுமுள்ள
தந்திர(ம்)நீ தந்ததொரு தன்னாட்டம் — அந்தர்முகத்
தன்னாட்ட மூன்றத் தடையா மயக்கமெலா
முன்னோட்டி யான்மபத்தி மூட்டு.

ஆன்மாவிலிருந்து வெளிவந்த வழியே திரும்பிச் சென்று ஆன்மாவை அடையும் வழியும், அதற்கு வேண்டிய சக்தியுமுள்ள தந்திரம் யாதெனில், நீ அருளிச் செய்த ஆன்ம விசாரமாகிய தன்னாட்டமே யாகும். உண்முகப்படும் இந்தத் தன்னாட்டத்தில் நிலைபெறத் தடையாக வுள்ள மயக்கங்களை யெல்லாம் நீ என்னிடமிருந்து முதலில் அகற்றி, ஸ்வாத்ம பக்தியை மூட்டுவாயாக.

342. நினைப்பெழூஉ மூல(ம்) நினைக்கப் படலே
நினைத்தழுவ நெஞ்சங்கொண் ணேசந் — தனைத்துருவி
நானா ரெவணிருந்தென் னாட்டமுமா மிப்பத்தி
ஞானா சிரியனே நல்கு.

முதல் எண்ணமாகிய 'நான் தேகம்' என்ற உணர்வு எதிலிருந்து எழுகின்றதோ, அந்த மூலஸ்தானம் நினைக்கப் படுவதே உன்னைத் தழுவிக்கொள்வதற்காக நான் மேற்கொள்ளும் அன்பாகும்! இதுவே 'நானார்? நானெங்கிருந்து?' என்று தன்னை ஆராயும் நாட்டமு மாகும்! ஆகையால், ஞானாசிரியனே, இந்த ஸ்வாத்ம பக்தியை எனக்கு அருள்வாயாக.

343. சொச்சொரூப பத்தி சுரந்து பெருகவெனக்
கிச்சையிதை நீயளித்தா லென்னவோ — சச்சிதா
னந்த ரமணகுரு நாதனீ சொச்சொருபா
னந்தனன்றி யுண்டோவோர் நான்.

என் ஆன்ம சொரூபத்தில் அன்பு சுரந்து பெருகுவதற்கே எனக்கு இச்சை. எனக்கு நீ இதை அளித்தால், உனக்கு என்ன குறைந்துவிடும்? ஸ்வஸ்வரூபத்தில் ரமிக்கும் சச்சிதானந்த ஸ்ரீ ரமண குருநாதனாகிய உன்னை யன்றி 'நான்' என்று ஒருவன் தனியாக இருக்க முடியுமோ? (இல்லை.)

344. வீணெண்ணம் யாவையுமே விட்டுள் ளழுந்தியகங்
காணெண்ண மொன்றிற் கழிவிருப்பம் — பூண
வருள்புரிவா யண்ணா மலைரமணா ஞானப்
பொருளுருவா யென்னுட் புகுந்து.

'வீணான எல்லா எண்ணங்களையும் விட்டு, உள்ளே மூழ்கி ஆன்மாவைக் காண வேண்டும்' என்ற ஒரே எண்ணத்தில் மிகுந்த விருப்பம் எனக்கு உண்டாகும்படி, ஞானப் பொருளின் உருவில் என்னுட் புகுந்து, அண்ணாமலை ரமணா, நீ அருள்புரிவாயாக.

345. உத்தமரா மன்ப ருளத்தி லுணர்வொளியாய்
அத்தமியா வின்பபர மான்மாவே — மித்தைமனத்
துன்பகற்று முன்மெய்ச் சொரூபத்திற் சொக்கிநிற்கும்
அன்புமல ரென்னுள் ளலர்த்து.

உத்தமர்களாகிய உனது அடியவர்களின் உள்ளத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற ஞானப் பிரகாசமாக என்றுமே மறைவில்லாத பேரின்ப வடிவாய் விளங்கும் பரமான்மாவே! இப் பொய் மனத் துன்பங்களை யெல்லாம் அகற்றுகின்ற உன்மெய்யான ஆன்ம சொரூபத்தில் சொக்கி நிற்கும் பரிசுத்த அன்பாகிய மலரை என் உள்ளத்தில் மலர்த்துவாயாக.

346. உத்தமத்து ளுத்தமந்தன் னுள்ளூன்றி நிற்பதெனுஞ்
சத்தியத்தை யோர்ந்ததிடத் தாலயலா — மித்தையிலென்
வீண்புத்தி நாடும் விருத்தி யகன்றுனையுட்
காண்பத்தி யீவாய் கனிந்து.

ஆன்மாவாகிய தன்னுள் ஊன்றி நிற்பதே உத்தமச் செயல்கள் எல்லாவற்றிலும் சிறந்த உத்தமமாகும் என்ற உண்மையைத் திடமாக அறிந்து, அதனால் அன்னியமாகிய மற்ற எந்தப் பொய்ப் பொருளின் மேலும் என் புத்தி நாடுகின்ற வீண் விருத்திகள் எல்லாம் அகன்று, உள்ளே ஆன்மாவாகிய உன்னையே கண்டுகொண்டிருக்கும் பக்தியைக் கனிவோடு எனக்கு அருள்வாயாக.

347. ஆன்ம பரப்பிரிய மார்ந்தமனந் தந்தாயேல்
நான்மற் றெதையெதற்கா நாடுவனாம் — வான்பெற்றே
ஆளும் பரிசு மதற்கிணையா மோவெனை நீ
யாளும் பரிசே யருள்.

ஆன்ம பரபக்தி நிறைந்த மனத்தை நீ எனக்கு அருளினாயானால், அதன் பிறகு நான் மற்ற எந்தப் பொருளை எதற்காக உன்னிடம் யாசிக்கப் போகின்றேன்? வானுலகங்களை யெல்லாம் அரசாளும் பதவியை நான் பெற்றாலுங் கூட, அது இதற்கு இணையாகுமா? ஆகையால், என்னை நீ ஆளாகக் கொள்ளும் பதவியையே எனக்கு அருள்வாயாக.

348. உள்ளத்தி னானென்னு முண்மைப் பொருளாக
விள்ளற் கிலாது விளங்குமுனைக் — கள்ளப்
பழிமனங் காணப் பரபத்தி யுற்றா
லழிவுறுமா மஃதே யருள்.

உள்ளத்தில் 'நான் நான்' என்று இடைவிடாது மெய்ப்பொருளாக வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாது விளங்கும் உன்னை இந்தக் கள்ளப் பழி மனம் காண்பதற்காக உயர்ந்த பிரியம் கொள்ளுமாயின், அப்போதே அது அழிந்துவிடும். ஆகையால், இம் மனத்திற்கு அதையே அருள்வாயாக.

349. எந்தமுன்னி லைப்பொருளு மீசனல்ல வுள்வெளியிற்
றொந்தவுணர் வுற்றென்முன் றோன்றுபவை — சொந்த
சொரூபத்தி லன்பாலுட் டோய்வதன்றோ வுண்மை
குருபத்தி யஃதே கொடு.

அன்னிய இருமையுணர்வோடு என்னுள்ளிலோ வெளியிலோ என் முன் தோன்றக் கூடிய எந்த முன்னிலைப் பொருளும் கடவுளாகாது. ஆகவே, என்முன் முன்னிலையாகத் தோன்றிய சற்குருவாகிய உன்னிடம் நான் உண்மையாக குருபக்தி கொள்வது யாதெனில், ஸ்வஸ்வரூபமாகிய ஆன்மா வினிடம் அன்போடு தோய்ந்திருப்பதே யல்லவா? ஆகையால், அதையே கொடுத்தருள்க.

350. அகக்கமல தேவ னருள்ரமண னன்றி
யுகப்பதொன் றின்றியென் னுள்ளம் — மிகப்பெரிய
ஏகாக் கிரபத்தி யெய்தவருள் பின்புதான்
தேகாத்ம புத்திச் சிதைவு.

அகக்கமலத்தில் வீற்றிருக்கும் கடவுளாகிய அருள் ரமணனாம் ஆன்மாவை யன்றி விரும்பிச் சுகிப்பதற்கு என்னுள்ளம் வேறு எதையும் நாடாதபடி உன்னிடம் மிகப்பெரிய ஏகாக்கிர பக்தி யடையுமாறு அருள்வாயாக. அதன் பிறகு தான் தேகாத்ம புத்தி நாசமடையும்.

351. பிரமாதத் தாலுட் பிரியந் தவிரா
துரமாக வூன்றியக(ம்) நிற்கும் — வரமன்றோ
நீதரவும் வேண்டு(ம்) நெடுங்கா லிதற்கன்றோ
வேதனையென் வேட்கைநிறை வேற்று.

உள்ளே ஆன்ம சொரூபப் பிரியத்தினின்றும் பிரமாதத்தால் நழுவி வெளிப்படாது, இதயத்தில் உரமாக ஊன்றி நிற்கும் ஆன்ம நிஷ்டையாகிய வரமல்லவா நீ எனக்குத் தரவேண்டும்? இது வல்லவோ வேண்டுமென்று நெடுங்காலமாக வேதனைப் படுகின்றேன்? இந்த என் ஆசையை நிறைவேற்றுவாயாக.

352. உண்மையா முன்னி லிரண்டற வொன்றிநிற்குந்
திண்மையே பத்தித் திறமன்றிக் — கண்மயங்கி
வேற்றானா வுன்னை வெளியேற்றி நான்றவிப்ப
தாற்றே னருளா லணை.

உள்ளத்தில் உண்மை வஸ்துவாக உள்ள உன்னிடம் 'நான்' என்ற அகந்தையெழுச்சி என்னும் இரண்டாவது ஒரு பொருளாக எழாமல் உன்னிடத்திலேயே ஒடுங்கி ஒன்றாகி நிற்கும் திண்மை தான் உயர்ந்த குருபக்தி யாகுமே தவிர, 'நான் இந்த தேகம்' என்ற ஓர் அன்னிய எழுச்சியாக எழுந்து அறிவு மயங்கி, சொந்தமாக உள்ளே யுள்ள உன்னை வெளியேற்றி வேற்றானைப் போன்று ஒரு தெய்வமாக்கி, பிறகு உன்னை அடைய முடியாமல் தவிக்கின்ற இவ் வறியாமை நிலையை என்னால் சகிக்க முடியவில்லை. ஆகையால், உன் அருளால் நீயே என்னை உன்னோடு அணைப்பாயாக.

353. என்னைக் கருதி யெழுச்சியற வாழ்ந்துநா
னுன்னிற் கரைந்தொழிவ தொன்றன்றோ — வுன்னையான்
உண்மையா யென்று முபாசித்த லந்தர்முகத்
திண்மையே பத்தித் திறம்.

அந்தர்முகத்தில் ஆன்மாவாகிய உன்னிடம் திடமாக ஒடுங்கி நிற்பதே (ஸ்வாத்மபக்தியே) பக்தியின் வகைகளுக்குள் தலைசிறந்த தாகும், அல்லவா? ஆகையால், 'நான் இன்னாராக இருக்கின்றேன்' என்றவாறு எழுகின்ற அகந்தையெழுச்சி அழியும்படி 'நான் இருக்கின்றேன்' என்ற தன்மையின் உண்மை வடிவில் கருத்தைச் செலுத்தி நான் உன்னிடம் மூழ்கிக் கரைந்து தனித்தன்மை அற்றுப் போவதல்லவா நான் உன்னை உண்மையாகவே எப்போதும் உபாசிக்கும் நிலை? (இதனை யருள்வாயாக!)

354. அறிவொன்றே தானான வத்துவித மோனச்
செறிவன்றோ நீரமண தேவே — பிறவொன்றா
யுன்னைக் கருதி யுபாசிப்ப தெல்லா(ம்)நான்
என்னையே மாற்று மிழுக்கு.

ஸ்ரீ ரமண தேவனே! 'இருக்கிறேன்' என்ற அத்துவித மோன அறிவின் திடமே தானான ஒரே வஸ்துவே நீ யல்லவா? அப்படி யிருக்க, உன்னை இந்த ஆன்ம இருப்புக்கு அன்னியமாக வெளியேயுள்ள மற்றொரு தெய்வமாய் எண்ணி உபாசிப்பதெல்லாம் நான் என்னையே ஏமாற்றிக்கொள்ளும் குற்றமல்லவா? (ஆகையால், இந்தக் குற்றத்தை நீக்கி, 'இருக்கிறேன்' என்ற அறிவை நாடும் விருப்பமாகிய மெய்யான ரமண பக்தியை எனக்குத் தந்தருள்வாயாக.)

355. இந்த ரமணபத்தி யானடைய வுன்னருளாற்
றந்திடவேண் டும்பரமாச் சாரியனே — சிந்தைநினை

வேதுமற் றென்று மியலறிவா னந்தமாம்
போதமுற்ற வாழ்வு பொருத்து.

பரம ஆசாரிய புருஷனே! உன்னுடைய அருளால் இத்தகைய ரமண பக்தியை நான் அடையும்படி நீ எனக்குத் தந்தருள வேண்டும். மனத்தில் எண்ணங்கள் எதுவுமின்றி எப்போதும் சச்சிதானந்த சகஜ ஞானமுற் றிருக்கும் வாழ்வை எனக்குப் பொருத்துவாயாக.

## 34. மெய்த்துறவு வேண்டல்

356. புறமுக(ம்) நீத்த பொழுதேமெய் யான
துறவறஞ்சித் தித்ததாச் சொல்வேன் — அறிவறிவித்
தன்னிய ஞான மகற்றி யடியேன்வாழ்
வுன்னுடைய தாக வுயர்த்து.

மனம் புறமுகப்படுவதை அடியோடு விட்ட பொழுது தான், உண்மையான துறவறம் எனக்குச் சித்தித்ததாகச் சொல்வேன். எனவே, ஆன்மாவை அறிவித்து, பிறவற்றை அறியும் அஞ்ஞானத்தை அகற்றி, அடியேனுடைய வாழ்வை உன்னுடைய சகஜாத்ம ஸ்திதியாக உயர்த்துக.

357. உலகோர் புகழிகழை யுன்னுமட்டு(ம்) முற்றும்
உலகு துறத்தலொண் ணாது — விலகியிவை
யுண்ணோக்கி நிற்பதே யுண்மைத் துறவதற்குன்
கண்ணோக்கம் வைத்திதயங் காட்டு.

உலகத்தார் செய்யும் புகழையும் இகழையும் நான் பொருட்படுத்தும் வரையிலும், நான் இவ் வுலகை முற்றும் துறந்துவிடுதல் முடியாது. இப் புகழிகழ்களிலிருந்து விலகி ஆன்மாவை நோக்கி நிற்பதே உண்மைத் துறவாகும். இதை நான் அடைவதற்கு நீ உன் கண்ணோக்கத்தை என்மீது வைத்து, இதயமாகிய உன்னைக் காட்டியருள்க.

## 35. மெய்க்காட்சி வேண்டல்

358. வெளியே திரும்பில் விதவிதமாக் காணும்
ஒளியி லுவகையுறா துள்ளே — யொளிருமுன்
ஒன்றான மெய்க்காட்சி யோர்ந்தடங்கி யோயவெனக்
கென்றே யருள்வா யினிது.

புலன்களின் வழியே மனம் வெளியே திரும்புவதால் பற்பலவிதமாகக் காணுவதாகிய இவ் வுலகக் காட்சிகளில் விருப்பம் அடையாமல், உள்ளே ஏகமாக விளங்கும் ஆன்மாவாகிய உன்னுடைய மெய்க்காட்சியைப் பெற்று, அதிலேயே நான் அடங்கி ஓய்ந்து போகுமாறு நீ எனக்கு எப்போது நன்றாக அருள்வாய்?

359. உன்றனருட் பார்வையிலே யொன்றுமிலா மாயையைநீ
வென்றுதர வேண்டுமென்று வேண்டுகின்றேன் — நன்றுநன்
றில்லாத தில்லாத தாய்க்கா ணியற்பார்வை
யல்லால்யா சிப்பதெது வாம்.

உன்னுடைய ஞான அருட்பார்வையில் யாதொரு இருப்பும் அற்ற மாயையை நான் என்னுடைய எதிரியாக இருப்பதாகக் கருதி, நீ எனக்காக அதை வென்று தர வேண்டும் என்று வேண்டுகின்றேன்! என்னுடைய இப் பிரார்த்தனை எவ்வளவு பரிகாசமான செயலாக இருக்கின்றது! உண்மையில் இருப்பற்ற மாயையை அது முக்காலத்திலும்

இருப்பற்றதாகவே அறிகின்ற சத் பார்வையை (ஞானத்தை)த் தவிர நான் யாசிக்கும் இப் பிரார்த்தனையின் பொருள் வேறென்ன வாகும்?

360. மற்றொன்றுங் காணா மனமிறந்த நல்வாழ்வைப்
பெற்றன்றி யுன்காட்சி பெற்றவனோ — சிற்றடியேன்
காண வருட்குருவாய்க் காட்சிதந்த சீரமணத்
தாணுவே செய்க தயை.

முழுவதும் மனோநாசமாகி அன்னியப் பொருள் எதையுமே காண முடியாத ஞான வாழ்க்கையைப் பெற்றாலன்றி, நான் உன்னுடைய உண்மையான காட்சியைப் பெற்றவனாவேனோ? சிறியவனாகிய அடியேன் என் ஊனக் கண்ணால் காணும்படி அருட்குருவாகக் காட்சி தந்த ஸ்ரீ ரமணக் கடவுளே! உன்னுடைய மேற்கூறிய மெய்க் காட்சியையும் நான் பெறுமாறு தயவு செய்க.

## 36. மெய்யுணர்வு வேண்டல்

361. [27]வெற்றுண்மை யாக விளங்கு மகவுணர்வே
முற்றுண்மை யென்ற முடிவறிந்து — நற்றிண்மை
யெய்திடவே முன்னருளா லென்னையாட் கொண்டநீ
செய்தருள வேண்டுஞ் சிறிது.

'இருக்கிறேன்' என்ற வெறும் இருப்பளவாக மாத்திரம் விளங்கும் 'நான்' என்ற உணர்வே முடிவான பாரமார்த்திக சத்தியம் என்று அறிந்துகொண்டு, அந்த அகவுணர்விலேயே நான் மிகவும் திடமாக நிஷ்டைகூடி நிற்க, முன்பு உன்னுடைய திருவருளால் என்னை யாட்கொண்ட நீ இப்பொழுது சிறிது செய்தருள வேண்டும்.

362. உண்மையன் பின்ப முணர வுணர்த்துவையேற்
கண்மயக்கும் பொய்யுலகக் காராசை — அண்மையிலு(ம்)
நாடா தகலும் ரமண பரவொளியே
வீடாகி நிற்கும் விடிந்து.

உன்னிடம் கொள்ளும் மெய்யன்பின் ஆனந்தம் இத்தகையது என்று நான் அறியும்படி எனக்கு அனுபவமாக உணர்த்துவாயாகில், அறிவை மயக்கும் இப் பொய்யுலகத்தின் தீய ஆசைகள் அருகில் நெருங்காமலேயே அகன்றுபோய், உன்னிடம் ரமித்திருக்கும் சிரேஷ்டமான ஸ்ரீ ரமண ஞானம் உதயமாகி, அதுவே மோக்ஷமாகவும் விளங்கும்.

363. இவ்வுடனா னாக விருக்கு மெனைமறந்து
செவ்வியமெய் யான்மசச் சித்தாமுன் — றிவ்வியபொற்
பாதமற வாத பரம விருப்புருவ
போதமுற வாசி பொழி.

'இவ் வுடம்பே நான்' என்று எழுந்து இருக்கும் தன்மை யுணர்வாகிய என்னை அடியோடு மறந்து, சிறந்த பரமாத்ம சத்சித்தாகிய உன்னுடைய திவ்விய திருவடிகளை மறவாத பரமப்பிரிய வடிவுற்ற ஞானத்தை நான் அடையும்படி ஆசி பொழிவாயாக.

364. தூலவுட லாதியாந் தோற்றமே நானென்று
காலமிட மாதியாற் கட்டுண்டேன் — வாலறிவாஞ்
சுத்த வெளியென் சொரூப மெனவுணர்ந்து
பத்தமற வென்னைப் பணி.

---

[27] 'வெற்றுண்மை' வெறும் இருப்பளவாக வுள்ள நிலை. 'முற்றுண்மை' பாரமார்த்திக சத்தியம்.

நான் ஸ்தூல, சூக்ஷ்ம, காரண தேகாதிகளின் தோற்றத்தையே என் வாழ்வு என்று எண்ணிக் காலதேசாதிகளாற் கட்டுப்பட்டவனானேன். ஆனால் என்னுடைய உண்மை சொரூபமோ பரிசுத்தமான ஞானாகாசம் என்பதை அறிந்து சகல பந்தங்களினின்றும் விடுபடுமாறு என்னை விதிப்பாயாக.

365. ஐயுணர்ச்சி யாக வறிபடுபூ வாழ்வுமனப்
பொய்யுணர்ச்சி நீங்கியகம் புக்கொடுங்கி — மெய்யுணர்ச்சி
யோரும் வர(ம்)நீ யுதவி யருளாயேற்
றீருமோ வென்றன் றிகைப்பு.

ஐம்புல உணர்ச்சியாக அறியப்படும் இந்த பூலோக வாழ்க்கை என்னும் மனத்தின் பொய்யுணர்ச்சிகள் நீங்கி, ஆன்மாவிற் புகுந்து ஒடுங்கி, அந்த மெய்ஞ்ஞானத்தை அனுபவிக்கும் வரத்தை நீ உதவி யருளாவிட்டால், எனது திகைப்புத் தீருமோ?

366. உடன்மனநா னல்லாத வுண்மையுணர்ந் தன்றிக்
கெடலரிது துன்பக் கிரந்தி — உடனடியா
யுண்மை யுணர்வருளி யோட்டுவா யாசையச்ச
வெண்ணவடி வாம்பே யிதை.

'இந்த உடலும் மனமும் நானல்ல' என்ற உண்மையை அனுபவமாக நான் அறிந்தாலன்றி, துன்பங்களாகிய பந்த முடிச்சு அறுவது அரிதாகும். ஆகையால், நீ உடனடியாக அந்த உண்மை யுணர்வை எனக்கு அருளி, ஆசை, அச்சம் முதலிய எண்ணங்களின் வடிவாக என்னைப் பிடித்த இந்தப் பேயை ஓட்டியருள்வாயாக.

367. இந்த வகந்தையுண்மை யெவ்வாறோ வவ்வாறே
தொந்தங் களினுண்மை தோன்றுவதால் — உந்தியெழும்
பொய்யுணர்வா(ம்) நானழிந்து பூன்றமாப் பொங்குமக
மெய்யுணர்வா நிற்க விதி.

இந்த அகந்தையாகிய 'நான்' எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மையாகவே அன்னிய உணர்வுகளாகிய இவ் வுலகத்தின் உண்மையும் தோன்றுவதால், ஒடுங்கியும் உதித்தும் எழுகின்ற இந்த 'நான்' என்னும் பொய்யுணர்வு அழிந்து, பூரணமாகப் பொங்குகின்ற 'நான்' என்னும் ஆன்மாவாகிய மெய்யுணர்வாக மட்டும் நிஷ்டையுறும்படி விதிப்பாயாக.

368. காணுமிவை யெல்லாங் கணப்பொழுதிற் சாவென்னும்
மாணரக்கன் வாயின் மடிந்துவிடுங் — காணுகின்ற
நானிருக்கு முண்மை நனவிருக்கும் போதுணர்த்து
வோனிருக்கின் றாய்நீ யுணர்த்து.

காணப்படுகின்ற இப் பிரபஞ்ச மெல்லாம் மரணம் என்ற பெரிய அரக்கனது வாயில் வ்ழ்ந்து ஒரு கணப்போதில் மடிந்துவிடும். 'இவைகளைக் காணுகின்ற காண்பானாகிய நான் உண்மையாகவே எப்படி இருக்கின்றேன்' என்ற உண்மையை இந்த நனவு நிலையிலேயே உணர்த்துகின்ற சற்குருவாகிய நீ எனக்குக் கிடைத்திருக்கின்றா யல்லவா? ஆகையால், நீயே அதனை எனக்கு உணர்த்துவாயாக.

369. எல்லா மறந்தும் மறக்க வியலாத
நல்ல விதயமுன்றன் ஞாபகமே — எல்லாக
ஏகமா யெங்குமென் றென்றுமா யோங்குசிவ
யோகஞா னானுபவ மூட்டு.

எல்லாவற்றையும் மறந்தாலும் மறக்க முடியாத நல்ல ஞாபகமாக விளங்கும் என் ஆன்மாவாகிய நீ சூரியனைப் போல் சுயம்பிரகாச மாகவும், ஏகமாகவும், எங்குமுள்ளதாகவும், எப்போது முள்ளதாகவும் விளங்குகின்ற சிவயோக ஞானானுபவத்தை எனக்கு ஊட்டியருள்க.

370. உண்மைகண் டாலன்றி யோகை யுவர்ப்புருவாக்
கண்மயக்கும் வாழ்வுக் கனவினிலே — புண்ணுறாச்
சாந்தியுறே னென்னுரிமைச் சற்குருவே மெய்யுணர்விற்
போந்தருளி யுண்மை புகட்டு.

எனக்கு உரிமையான சற்குரு மூர்த்தியே! மெய்ப் பொருளைக் கண்டாலன்றி, இன்பதுன்பங்களின் வடிவாக அறிவை மயக்குகின்ற இவ் வுலக வாழ்வாகிய கனவில் அவற்றாற் புண்படுத்தப்படாத பரமசாந்தியை நான் அடைய மாட்டேன். ஆகையால், மெய்ப் பொருளின் மெய்ஞ்ஞான வடிவில் என்னுள்ளத்தில் எழுந்தருளி அந்தப் பேருண்மையை எனக்குப் புகட்டுவாயாக.

371. உண்மையறி வின்றே லுலகிற் கருமங்கள்
பண்ணுபவ னானெனவே பந்திக்கும் — கண்மயக்குங்
கர்த்தத் துவக்கழற்சி காட்டிக் கருவியெனை
வைத்தருள்க நின்கை வசம்.

மெய்ஞ்ஞான மில்லாவிட்டால், இவ் வுலகில் 'செய் பவனே நான்' என்றவாறு கர்மங்கள் கர்த்துருத்துவத்தால் என்னைப் பந்திக்கும். அறிவைக் கெடுக்கும் இந்தக் கர்த்துருத்துவத்தை என்னிடமிருந்து கழற்றிக் காட்டி, என்னை உன் கைவசம் உள்ள ஒரு கருவியாக மட்டும் இயங்க வைத்தருள் வாயாக.

372. பாடுறுநெஞ் சோடொருமைப்[28] பாடுறுபொய்ப் பாவத்தாற்
கேடுறா வென்னுண்மை கிட்டாமற் — றேடுறூஉம்
மந்தனெனை யுன்றனருள் வல்லபத்தா லுண்முகமா
யுந்தியிழுத் துண்மை யுணர்த்து.

கர்த்துருத்துவத்தால் சகல பாடுகளையும் படுகின்ற மனத்துடன் 'அதுவே நான்' என்று ஒன்றாகப் பொருந்திப் போன பொய்ய பிமானத்தால் அழிவற்ற என் உண்மை நிலை எப்படிப்பட்டது என்று அறியக் கிடைக்காமல் தேடிக்கொண்டிருக்கும் மந்தனாகிய என்னை உன்னுடைய அருட்சக்தியால் உண்முகமாக உந்திக் கவர்ந்து இழுத்துச் சென்று என் உண்மை நிலையை உணர்த்துவாயாக.

373. கண்ணைக் கெடுத்திக் கலவரமாய்க் காணுலகை
யெண்ணித் திரிய விழுத்தலைத்தே — திண்ணென்
றழுத்துமகங் கார வசுரப்பேய் மாய்க்கும்
விழுத்துணையே யுண்மை விளக்கு.

அறிவை மயக்கி, வெறும் ஆரவார பரபரப்பான விஷயங்களால் நிறைந்த இவ் வுலகத்தையே எண்ணி யலையுமாறு என்னை விக்ஷேபத்தால் அலைக்கழித்து, ஆவரணத்தால் கனத்து அழுத்துகின்ற அகங்காரமாகிய ராக்ஷஸப் பேயை அழிக்கும் எனது சிறந்த துணையாகிய சற்குருவே! எனக்கு உண்மையை விளக்கியருள் வாயாக.

374. உடலுலகஞ் சொப்பனமா வோரப்பட் டாற்றான்
கெடுமதன்மே னெஞ்சிலுள்ள கேண்மை — கடவுளுரு
வந்தெனிரு கண்முன்னே வாய்த்தாயே நின்னருளா
லிந்தவித மோர்ந்திடச்செய் யெற்கு.

[28] 'ஒருமைப்பாடு' = 'அதுவே நான்' என்று அபிமானித்து ஒன்றாகியுள்ள நிலை.

இந்த உடலும் உலகும் சொப்பனம் போன்ற பொய்த் தோற்றமாக அறியப்பட்டால் தான், அவற்றின் மேல் மனத்தினுள் எழும் ஆசை கெடும். சாக்ஷாத் ஈசுவரனேயாகிய நீ உருவெடுத்துக்கொண்டு என்னுடைய இரு கண்களுக்கும் முன்னே நான் காணும்படி வந்து வாய்த்தாயே! அத்தகைய உன்னுடைய அருளால் உடலையும் உலகத்தையும் நான் கனவாக உணரும்படிச் செய்தருள்வாயாக.

375. எத்தான் மறந்தே னெனைநா னதையகற்றி
வைத்தாக வேண்டும் மனமாயை — தொத்தா
தருணா சலத்தாண்ட வப்பா ரமண
கருணா நிதியே கதி.

எந்த மாயாசக்தியால் 'நான் ஆன்மா' என்பதை மறந்தேனோ, அச் சக்தியை சற்குருவாகிய நீயே விலக்கி வைத்தருள வேண்டும். என்மீது மனமாயை தொத்திக்கொள்ளாதவாறு அருணாசலத்தில் என்னை யாட்கொண்ட கருணாநிதியாகிய ஸ்ரீ ரமணப்பாவே! நீயே கதி.

376. என்னையெவ் வாறோநா னின்னொன்றாப் பாவிக்குந்
தன்மை யடைந்து தடுமாறி — முன்னுள்ள
வென்னையுல காய்வெறுப்பா யிச்சையா யன்னியமா
யுன்னுமென் மோக மொழி.

ஆன்மாவாகிய என்னை நானே எப்படியோ அகந்தை யாகிய இன்னொன்றாகப் பாவிக்கும் தன்மையடைந்து, அதனால் புத்தி தடுமாறி (தோஷ திருஷ்டியுற்று) என் முன்னேயுள்ள என்னையே எனக்கு அன்னியமான ஓர் உலகமாகவும், அதில் எனக்கு உள்ள விருப்பு வெறுப்புப் பொருள்களாகவும் மயங்கிக் காணும் என் மயக்கத்தை யொழிப்பாயாக.

377. அடுக்கி யடுக்கிநினை வாரு(ம்)மட நெஞ்சை
யொடுக்கி யொடுக்கியுணர் வோடே — துடுக்கழியச்
சும்மா விருக்குஞ் சொரூபப் பயிற்சிரம
ணம்மா வெனக்கே யளி.

அடுக்கடுக்காக எண்ணங்களை யெழுப்பும் மட மனத்தை எழும்பாமல் இதயத்தில் 'இருக்கிறேன்' என்ற உணர்வுக்குக் கேடில்லாதவாறு ஒடுக்கி ஒடுக்கி அகந்தைத் துடுக்கு அழியுமாறு சும்மா இருக்கும் சொரூப நிஷ்டைப் பயிற்சியை, ரமணம்மாவே, நீ (தாய்ப்பறவை தன் குஞ்சுகளுக்குப் பறக்கப் பயிற்சி அளிப்பது போன்று) எனக்கு அளித்தருள்வாயாக.

## 37. ஞானத்தீ மூட்ட வேண்டல்

378. சித்தப் படுகுழிக்கண் சேர்வா தனைத்திரளிற்
சுத்தசிவ ஞானச் சுடரெரியை — வைத்தெரித்து
நீறாக்கி யென்னை நிசமாக்கிப் பந்தமெலாம்
வேறாக்கி வைப்பாய் விரைந்து.

சித்தம் என்னும் படுகுழியிலே சேர்த்து அடைக்கப் பட்டுள்ள வாசனைக் குவியலில் சுத்த சிவஞானமாகிய நெருப்பை மூட்டி, அவற்றை யெல்லாம் சாம்பலாக எரித்து, மிஞ்சி யிருக்கின்ற ஆன்ம சொரூபமாகிய என்னையே அழிவற்ற மெய்ப்பொருளாக உணர வைத்து, விரைவில் பந்தங்களை யெல்லாம் முக்காலத்திலும் பொய்ப்பொருளாக்கி வைப்பாயாக.

379. எழுந்து திரிந்துலக விச்சைநிறை வேறின்
அழுந்தி யரைக்கணமே யுள்ளங் — கொழுந்துவிட்டு
மீண்டு மெரிந்து வெளிக்கிளம்பும் வேட்கைத்தீ
மாண்டொழிய ஞானத்தீ வை.

விஷயப் பொருள்களில் எழுகின்ற ஆசைத் தீயானது எழுந்ததும் பற்பல உலகப் பொருள்களில் திரிந்து தான் விரும்பியவை கிட்டிய போது, ஓர் அரைக்கண நேரமே உள்ளத்தில் (ஆன்மாவில்) மூழ்கி, இருந்துவிட்டு, மீண்டும் கொழுந்துவிட்டெரிந்து வெளியே கிளம்புகின்றது. இந்தக் கொடிய ஆசைத் தீயானது அழிந்து சாம்பலாகுமாறு நீ ஞானத் தீயை வைத்து அதை எரித்தருள்வாயாக.

380. விண்ணையுமே சுட்டெரிக்கும் வேட்கைத்தீ நின்ஞானக்
கண்ணெரியாற் சுட்டுக் கருவறுத்தத் — தண்ணென்வெண்
ணீறெடுத்துன் கையாலென் னெற்றியிட்டு மெய்ஞ்ஞான
வீறெடுத்த வின்பம் விளை.

தேவலோக வாசிகளைக்கூட மயக்கிச் சுட்டு எரிக்கும் ஆசைத் தீயை உனது நெற்றிக்கண்ணாகிய ஞானத்தீயாற் சுட்டு, அதை மூலத்தோடு அழித்து, சகல தாபங்களும் ஒழிந்து குளிர்ந்துள்ள சாந்தியாகிய அந்த வெண்ணீற்றை உன் கையால் எடுத்து என் நெற்றியிலே இட்டு, மெய்ஞ்ஞான வெற்றியால் நிரம்பிய பேரின்பத்தை விளைவித்தருள்வாயாக.

381. எத்தனையோ சென்மமா யீட்டியபல் வாசனையாஞ்
சித்தமலக் காட்டிற் றிருவருட்டீ — வைத்தவைகள்
வேரோடு மீதியின்றி வெந்ததிரு நீறைநீ
சீராயென் னெற்றியிலே தீட்டு.

எத்தனையோ கோடி ஜன்மங்களாகச் சேர்த்துக் குவித்துப் பல்வேறு விதமான வாசனைகளின் பண்டகசாலையாகிய சித்தம் என்னும் மலக்காட்டில் திருவருள் என்னும் ஞானத் தீயை வைத்து, அந்த மும்மல வாசனைகளும் அவற்றின் வேராகிய அகங்காரத்தோடு மிச்சமின்றி வெந்தழிந்து போக, அங்கு மிஞ்சி நிற்கின்ற பொருளாகிய ஆன்மத் திருநீற்றை என் நெற்றியிலே நீ அழகாகத் தீட்டுவாயாக.

382. கரியவுருக் காலனையுங் காய்வாய்வெங் காம
வெறிய னெரிய வெரிப்பாய் — புரிமூன்றின்
மீதே யெரிய விழிப்பாய் திருப்பாதப்
போதே யெனது புகல்.

கரிய உருவத்தையுடைய இயமனையும் நீ கொன்ற வனாகிறாய்; கொடிய வெறியனாகிய மன்மதனும் எரியும்படிச் செய்தாய்; திரிபுராதிகளின் மேல் அவர்கள் வெந்தழியும்படி உனது நெற்றிக்கண்ணைத் திறந்தாய். இந்த உனது ஞானாக்கினியின் வலிமையைக் கண்டே, நான் உனது திருவடித் தாமரைகளையே எனது புகலாகக் கொண்டேன்.

383. கற்பகோடி காலமாக் காமாதி சேர்சித்தக்
குப்பைக் குழியைக் கொளுத்தியருட் — சிற்பரமா
வெட்டவெளி யான விசுத்தஞா னானுபவ
நிட்டையிலே யென்னை நிறுத்து.

கணக்கற்ற கோடி கற்பகாலமாய்ச் சேர்த்து வைத்த காமம் முதலிய அழுக்குகள் நிறைந்த என் சித்தமாகிய குப்பைக் குழியை உன் ஞானாக்கினியாற் கொளுத்தி, அருட்

சிற்பரமான வெட்ட வெளியாக்கி, அந்தப் பரிசுத்த ஞானானுபவ நிஷ்டையிலேயே நான் என்றும் இருக்கும்படி என்னை நிறுத்துக.

384. சொருபச் சுகவழகிற் சொக்கியநு பூதி
வருமட்டும் வாழ்வுகன வாகா — துருவற்
றகமகமென் றேநின் னருணடங்காண் பித்துண்
முகமுறஞா னக்கனலே மூட்டு.

ஆன்ம சொரூபச் சுகமாகிய அழகில்மனம் வசீகரிக்கப்பட்டு அதிலேயே சொக்கியிருக்கும் நிஷ்டானுபூதி வரும் வரையில், இந்த ஜாக்கிர வாழ்வை ஒரு கனவாக உணர முடியாது. ஆகையால், அதற்கு ஹேதுவாக நாமரூபமற்று 'நான் நான்' என்று ஸ்புரித்து உள்ளத்தில் நீ செய்யும் அருள் நடனத்தைக் காண்பித்து, அதனால் நான் அந்தர்முக மடையுமாறு ஞானத்தீ மூட்டுவாயாக.

## 38. ஞானவிழிப்பு வேண்டல்

385. சொன்னபடி நின்று சுகியாமற் சோம்பலா
லின்னற் புலன்சொக் கிடுந்துயிலிற் — றுன்னி
யெழுமா றறியா தியலா தழுவேன்
எழுமா றருளா லெழுப்பு.

உன்னுடைய அருளுபதேசப்படி நிஷ்டையுற்று ஆன்மாவிற் சுகித்து இராமல், சோம்பலாகிய பிரமாதத்தால் துன்பந்தரும் புலனின்பங்களிற் சொக்கி அறியாமைத் தூக்கத்தில் ஆழ்ந்து, அதிலிருந்து விழித்து எழ அறியாமலும் முடியாமலும் உன்னைக் கெஞ்சி யழுகின்றேன். நான் அதினின்று விழித்தெழுமாறு உன்னருளால் என்னை எழுப்பி விடுவாயாக.

386. விழிப்புக் கிணையாக வேறொன்று மில்லை
பழிப்புக் கிடஞ்சொப் பனங்கள் — விழிப்படைய
நானாரென் றுண்ணாடு(ம்) நாட்டமே தானெழுப்பு
வோனாங் குருநீ யுணர்த்து.

ஞான விழிப்பிற்கு இணையாக வேறு எந்தப் பாக்கியங்களும் ஆகா. சொப்பனங்களைப் போல் அனுபவிக்கப்படும் பிரம்மலோக சுகங்கள் உள்ளிட்ட வாழ்வு முழுவதும் மெய்ஞ்ஞானிகளால் பழிக்கத் தகுந்ததே. அத்தகைய ஞான விழிப்பை யடைய வழியாவது 'நான் யார்?' என்று தன்னுள்ளே நாடும் ஆன்ம நாட்டம் ஒன்றே யாகும். அவ்வாறு என்னை எழுப்ப வல்லோனாகிய சற்குருவே! நீயே என்னை விழிப்புணர்த்து.

387. நள்ளிருளி னீங்கிசிவ ஞான விழிப்பிலுறும்
ஒள்ளியவாழ் வென்பா லுதவாயோ — பிள்ளையெனத்
தாங்கி வளர்த்தருண சைலத் திழுத்துவந்து
நீங்காப் புகலளித்த நீ.

என்னை உன் பிள்ளையாகவே ஏற்றுக்கொண்டு, என் வாழ்வின் பாரங்களை யெல்லாம் நீயே தாங்கி, என்னை வளர்த்து, நின் வடிவாகியஅருணாசலத்திற்கு இளமையிலேயே இழுத்து வந்து என்றும் விட்டு நீங்காத அடைக்கலம் அளித்த நீமேற்கூறிய அஞ்ஞான நடுநிசியின் இருளிலிருந்து விடுபட்டு சிவஞான விழிப்பை அடை கின்ற ஒளிபொருந்திய வாழ்வை எனக்கு அருள மாட்டாயோ?

388. தட்டி யெழுப்பியெனைச் சாக்கிரமாஞ் சொப்பனத்தை
விட்டுன் னருளாம் விழிப்பளித்து — நிட்டையிலே
யென்றென்று(ம்) நீங்கா வியல்பா யினிதிருத்தி
யுன்றனருட் செங்கோ லுயர்த்து.

என்னை இந்த நீண்ட அஞ்ஞானத் தூக்கத்திலிருந்து தட்டி யெழுப்பி, மேலும் கோடிக்கணக்கான பிறவி வாழ்வு களாகக் கண்டுவரும் இந்த ஜாக்கிரமாகிய சொப்பனத்தையும் நீக்கிவிட்டு, உன் அருளாகிய ஆன்மவிழிப்படையச் செய்து, அந்த ஆன்ம நிஷ்டையிலேயே என்றென்றும் நீங்காமல் நன்றாய் சகஜமாய் என்னை இருத்தி, உன் அருட்செங்கோலின் புகழை உயர்த்துவாயாக.

389. தன்மறதி யான தடித்த விருட்டுயிலிற்
சென்மம் பலவாத் தெரிகனவிற் — கன்மவலை
மேன்மேலும் பின்ன விழிப்படையா வீனவிமூ
டான்மா வெனையெழுப் பாய்.

தானாகிய ஆன்மாவை மறந்த தடித்த அஞ்ஞானமாகிய நீண்ட இருளில் தூங்கும் தூக்கத்தில் கனவாகத் தோன்றித் தெரிகின்ற பற்பலவான ஜன்மங்களில் பற்பலவான கர்மங்களை யியற்றவே, அவற்றின் பலன்களால் மேலும் மேலும் பின்னிச் சிக்கி இறுக்கப்பட்டு, அதனால் ஞான விழிப்பே யடைய முடியாத ஈனனும் பெரு மூடனுமாகிய என்னை நீ எழுப்பி விடுவாயாக.

390. விடிவெப் பொழுதென் விழிப்பெப் பொழுதென்
றடிமைச் சிறியே னரற்றும் — மிடிமைத்
துயரறியா யோசற்றுந் தோலாத வண்மைப்
பெயருடைய ஞானப் பிரான்.

கொஞ்சங்கூடத் தோல்வியே அறியாத கொடைவள்ளல் என்ற பெயரை யுடைய ஞானப் பெருமானே! உன் சந்நிதியில் வந்து நின்று 'எனக்கு விடிவு எப்பொழுது? எனக்கு ஞான விழிப்பு கிடைப்பது எப்பொழுது?' என்று அடிமைச் சிறியேனாகிய நான் என் வறுமைத் துயரைக் கூறி அலறி முறையிடுவதை நீ அறியாயோ?

391. என்று விழிப்பருள்வா யென்றேங்கு மென்பானீ
என்றெங்கென் கால விடமிலா — தின்றிங்கே
யோங்கியக ஞான வுணர்வா யொளிர்வையே
னீங்குமென் கீழ்மை நிலை.

'எனக்கு என்றைக்கு ஞான விழிப்பு அருள்வாய்?' என்று முறையிட்டு ஏங்கி நிற்கும் என்பால் 'என்று? எங்கு?' என்று குறிப்பிடப்படும் காலதேச நிபந்தனை இல்லாமல் இன்று, இங்கேயே நீ ஆன்மஞான உணர்வாக ஓங்கியெழுந்து பிரகாசிப்பாயேயானால், என் கீழ்மை நிலை நீங்கிவிடும்.

392. ஒளிக்கெல்லா மூல வொளியான நீயே
பளிச்சிட்டு ஞானப் பகலாய் — வெளிச்சம்
விளைத்தருள வேண்டும் விவிதமா யத்தாற்
கிளைத்தவிருட் கோசங் கிழித்து.

ஒளிகளுக் கெல்லாம் மூலமாகிய ஆன்ம ஒளியான நீயே மாயையின் விதவிதமான மோசடியால் கிளைவிட்டுக் கொழுத்துள்ள இருட்போர்வைகளை யெல்லாம் கிழித்து. ஞானப் பகலாய்ப் பளிச்சிட்டு அறிவு வெளிச்சத்தை உண்டாக்கித் தர வேண்டும்.

393. தூக்கங் கலைத்திந்தச் சொப்பனமு நீக்கியுண்மை
மோக்கவிழிப் பாம்விடிவை மூட்டுவித்து — நீக்கமற்ற
சச்சிதா னந்த சகஜ வனுபவமாஞ்
சொச்சொரூப ஞானந் துலக்கு.

அஞ்ஞானத் தூக்கத்தைக் கலைத்து, இந்த வாழ்வுக் கனவையும் நீக்கி, மோக்ஷமெனப்படும் உண்மையான விழிப்பாகிய விடிவை உண்டாக்கி வைத்து, என்றும் நீங்காத சச்சிதானந்த சகஜ அனுபவமாகிய என் ஆன்மசொரூப ஞானத்தை விளக்கியருள்வாயாக.

394. காணுலக மேவுவிவ காரங் கனவெனக்கண்
டாணவமற் றேயவைக்கு தாசீனம் — பூணப்
பிரமாத மற்றப் பிரம்மப் பிரஜ்ஞை
திரமாக்கு வாயுட் செறிந்து.

காணப்படுகின்ற இவ் வுலகத்திலுள்ள சகல வியவகாரங்களும் வெறுங் கனவே என்று கண்டு, ஆணவமற்று அவற்றிடம் நான் உதாசீன பாவங் கொள்ளுமாறு நீ என்னுள் எழுந்தருளி, பிரமாதமற்ற பிரம்மப் பிரஜ்ஞையை ஸ்திரமாக எனக்குக் கொடுத்தருள்வாயாக.

395. அறியாமைத் தூக்க மகன்றுணர்ந்தா லன்றிக்
கிறிவாழ்விச் சொப்பனமாங் கேட்டிற் — செறிவாகுந்
துன்பத்தி னீங்கவழி தோன்றிலதே நீயுமின்னு(ம்)
நின்பற் றளித்திலையென் னே.

அறியாமையாகிய நீண்ட தூக்கத்தினின்றும் நீங்கி விழிப்படைந் தாலன்றி, பைத்தியக்காரக் கனவாகிய இந்தக் கேடான வாழ்க்கையில் நிறைந்து உண்டாகும் துன்பங்களினின்றும் விடுபட வேறொரு வழியும் தோன்றவில்லையே. உன்னிடம் கொள்ளும் பக்தியாலன்றி இது கைகூடாததாயிருக்க, நீயும் இன்னமும் உன்னிடத்திற் பூரண பக்தியை அளிக்க வில்லையே. இது என்னே பரிதாபம்!

396. பொல்லா வசங்கியமாய்ப் போலியாய்த் தோன்றிநிலை
நில்லா வுடலகந்தை நேசத்தால் — எல்லாமா
யேகமா யென்று மிருக்கு முனையறியா
மோகவிரு ளீர்த்தருள்வாய் முன்.

பொல்லாத அசுத்தமுடையதாகவும் போலியாகவும் தோன்றி 'அடிக்கடி நிலையற்று அழிந்துபோகின்ற இந்த உடம்பே நான்' என்ற அகந்தையோடு நான் கொண்டுள்ள பற்று காரணமாக, எல்லாப் பொருள்களுமாய் அதே சமயம் அவை யொன்றுமே அல்லாத ஏகமாய் எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும் உன்னை அறிய முடியவில்லை. இந்த மோக இருளை நீ முதலில் தீர்த்தருள்வாயாக.

397. விழிப்புக்கு முன்போர் விநாடிவரைக் கவ்விச்
செழிப்புற்ற காரிருளின் திட்பம் — விழிப்பினொளி
வந்தகண மேதன் வலிமையடி யோடறல்போன்
மந்தனென் மாயவிருள் மாற்று.

தூக்கத்திலிருந்து விழிப்பதற்கு முன் ஒரு வினாடிவரை கவ்வித் திரண்டிருந்த பெரிய இருளின் அடர்த்தி விழிப்பாகிய ஒளி வந்த கணத்திலேயே அடியோடு தன் வலிமை யற்றுப் போவதைப்போல, உன் ஞான ஒளியைத் தந்து மந்தனாகிய என்னுடைய மாய இருளை மாற்றுவாயாக.

398. ஏதுநிகழ்ந் தாலு மிறைவா வருட்கயலா
காதுநிகழ் கின்றநிர்வி காரமாய்ப் — போதமுறும்
உண்மை விழிப்பி னுணர்விலே யூன்றிநிற்குந்
திண்மையு(ம்)நீ யுன்னருளாற் செய்.

இறைவா! என் இந்த உலக வாழ்வில் நன்மையோ தீமையோ எது நடந்தாலும், அது உன்னுடைய திருவருளுக்குச் சம்மதமில்லாமல் நிகழவில்லை என்று அறியும் நிர்விகார அறிவாகிய உண்மை விழிப்பில் நான் ஊன்றி நிற்கக் கூடிய திடத்தை நீ உன்னருளால் எனக்குச் செய்தருள்.

399. மனவறிவை யேயுண்மை வாழவாக் கருதித்
தினமுழலும் வீணனேன் செய்கை — கனவுலகிற்
றட்டித் தடுமாறும் பேதைமையே நீயென்னைத்
தட்டி விழிப்புணர்த்தித் தா.

மனமாத்திரத்தாலே ஐம்புலன்களின் வழியே அறியப்படும் அறிவையே என் உண்மையான வாழ்வாக நினைத்து, தினமும் உழலுகின்ற வீணனாகிய என்னுடைய செய்கை கனவுலகை ஒருவன் நிஜ மென்று கொண்டு அதில் தட்டுத் தடுமாறிக் கொண்டு கிடக்கும் மடமைச் செயலையே ஒத்ததாகும். ஆகையால், நீ என்னைத் தட்டி எழுப்பி இவ்வுலக வாழ்வாகிய கனவிலிருந்து விழிப்பித்தருள்வாயாக.

400. வெறுங்கனவில் வாழ்ந்துநான் வீய விழிக்கப்
பெறின்பிற குள்ள பெருமா — னுறங்குவதென்
றொன்றுமிலா ஞானநன வுண்மை யொருத்தனீ
யன்றோ வதுவே யருள்.

பாழாகிய கனவுக்குச் சமானமான இவ்வாழ்வில் 'நான் இன்னாராக இருக்கிறேன்' என்று வாழ்ந்த அகந்தை 'நான்' அழிந்ததும் ஏற்படக் கூடிய விழிப்பில், அதன் பிறகு வாழ்ந்திருக்கின்ற பெருமானானவன் எப்பொழுதும் உறங்குவது என்று ஒன்றுமே இல்லாத ஞான நனவில் வாழ்கின்ற உண்மையான நீ ஒருத்தனே யல்லவா? ஆதலால், அத்தகைய உன் வாழ்வையே அருள்வாயாக.

## 39. ஞானநிட்டை வேண்டல்

401. ஓமென் றுயிரென் றுணர்வென் றுளவடிவ
மாமென் றிதுவென் றதுவென்று(ம்) — நாமென்றே
பன்முறையாற் சுட்டியுஞ் சுட்டப் படாநிலையி
னின்னருளா லென்னை நிறுத்து.

'ஓம்' என்னும் பிரணவ மென்றும், உயிர்ப்பொருளென்றும், அறிவு என்றும், இதயவடிவமாகு மென்றும், 'இது' என்றும் அல்லது 'அது' என்றும் பலவித முறைகளில் அறிவிக்கப்பட்டும், சுட்டிக்காட்டப்படாத (முன்னிலை படர்க்கைகளில் ஒன்றாகாத) 'நான்' என்ற உண்மைத் தன்மை யொருமை உணர்வாகிய நிலையில் உன்னுடைய அருளால் என்னை நிறுத்துவாயாக (நிஷ்டை கூட்டி வைப்பாயாக).

402. முனைப்பற்ற மோனத்தி னாழத்தின் மூழ்கி
வினைப்பற்று மூலமொடு வெந்து — நினைப்பற்ற
தன்மயமா நிற்குந் தவமாம் பெருநிதியை
யிம்மையிலே யெய்த விரங்கு.

'நான்' என்று எழும் அகந்தை முனைப்பு அற்றுப் போன மோனத்தின் ஆழத்தில் மூழ்கி, வினைகளின் மேலுள்ள பற்று அவற்றின் மூலமாகிய கர்த்துருத்துவத்தோடு வெந்து அழிந்து போய், எவ்வித சிந்தனையுமற்ற ஆன்மமயமாக நிற்கும் இயல்பான தவமாகிய பெரிய ஐசுவரியத்தை நான் இந்தப் பிறவியிலேயே அடையும்படி தயவு செய்வாயாக.

403. சித்தத்தின் செய்கை சிறிதேனு மில்லாத
சத்தியவோய் வான சமாதியிலே — நித்தியமாய்
நீங்கா தனுபவிக்கு(ம்) நின்போக வேட்கையினி
தாங்கே னெனக்கதைநீ தா.

சித்தத்தின் செயல்களாகிய எண்ணங்கள் கொஞ்சங் கூட இல்லாத சத்தியமான ஓய்வாகிய சமாதி நிலையில் உன்னை விட்டு நீங்காமல் எப்போதும் அனுபவிக்கும் உன் ஆன்ம போகத்தின் மேலுள்ள இச்சையானது இனியும் தாமதிக்கப்படுமானால், என்னால் அதைத் தாங்கவே முடியாது. ஆகையால், அதை நீ எனக்கு இப்பொழுதே தருவாயாக.

404. நீங்காத மெய்யன்பா னெஞ்சங் கரைந்தழிந்து
தூங்காது தூங்குந் துரியத்தி — லோங்காரத்
துட்பொருளா நிற்கு முனோடணையு மோனநிலைத்
திட்பந் திருவருளாற் செய்.

உன்னிடம் எனக்கு உண்டாகிக் குறைவுபட்டுக் கெடாத மெய்யன்பால் நெஞ்சம் கரைந்து ஆன்மாவில் அழிந்துபோய், அங்கு தூங்காமல் தூங்கும் துரீய நிலையில், பிரணவத்தின் உட்பொருளாக விளங்கிக் கொண்டிருக்கும் உன்னோடு அணைந்து சுகிக்கும் திடமோன நிலையை உன் திருவருளால் எனக்குச் செய்வாயாக.

405. காணப் படுபவெலாங் காண்பானா வோரகந்தை
பேணப் படுங்காற் பிறங்குமன்றித் — தாணுவா
நிற்பித்தா லென்னை நிகழுமோ நின்னருளாற்
கற்பிப்பா யந்தக் கலை.

காணப்படுகின்ற இவ் வுலகங்க ளெல்லாம் அவற்றைக் காண்பானாகிய 'நான்' என்ற ஓர் அகந்தை ஏற்றுப் போஷிக்கப்படும் சமயத்தில் தான் இருப்புள்ளவை போல விளங்குமே தவிர, நீ என்னை ஆன்மாவில் அசலமாய் நிற்பித்தால், இவ் வுலகங்கள் தோன்றி இருக்க முடியுமோ? முடியாதல்லவா? இவ்வாறு இவ் வுலகங்கள் அற்று வாழும் பிரம்மக் கலையை உன்னுடைய அருளால் எனக்குக் கற்பிப்பாயாக.

406. இருப்பா யிராம லெழுச்சிக் கெதுவோர்
கருக்கா ரணமதனைக் காயு(ம்) — நெருப்புருவே
நீயின் றெனையுண் ணிலைப்பித் தருளவிரங்
காயென்னி லென்செய்வேன் காண்.

இருப்பு மாத்திரமாய் ஆன்மாவில் இருக்காமல் ஓர் அகந்தை யெழுச்சியாகி, நான் எழுவதற்கு எது ஒன்று மூலகாரணமோ, அந்த மாயையை எரித்துச் சாம்பலாக்கும் நெருப் புருவமே! நீ இன்று என்னை உள்ளத்தில் நிஷ்டை கூட்டுவித்தருள இரக்கப்பட ாவிட்டால், நான் என்ன செய்துவிட முடியும்? நீயே காண்க.

407. நானுதியா துள்ளமெய்ஞ் ஞானநிலை வேண்டுமன்றி
வானதிப னாதியோர் வாழ்வுமேன் — தானுதித்த
பின்னேகாண் கின்ற பிரமையே யிஃதெல்லா
மென்னே பயனோ விவை.

'நான்' என்ற அகந்தை உதிக்காமலுள்ள மெய்ஞ்ஞான நிலை தான் வேண்டுமே தவிர, இந்திரன் முதலிய தேவர்களின் வாழ்வும் எனக்கு எதற்காக? அத்தகைய சுவர்க்க வாழ்க்கைகளெல்லாம் 'நான்' என்ற அகந்தை உதித்த பிறகு அப் பொய் யகந்தையாற் காணப்படுகின்ற பிரமைத் தோற்றங்களே யாகும். ஆகையால், இவற்றால் எனக்கு என்ன பயன்?

408. வேழ(ம்)நீ யுண்ட விளங்கனியா யிங்கென்னை
வாழவைத் தாலதுதான் வாழ்வன்றிச் — சூழ
நிதித்திரளீந் தாலு(ம்) நிஷித்தமலஞ் சேர்ந்த
பொதிப்பிணவாழ் வாகத்தான் போம்.

குறிப்பு: யானை விளாம்பழத்தை உண்டபின், அது மலத்தோடு வெளிப்படும் போது அதன் மேலோடு உடையாமல் முழுவுருவமாகவே காணப்பட்டாலும், அதன் உள்ளிருந்த பழப்பகுதி முழுவதும் யானையால் ஜீரணிக்கப்பட்டு ஒன்று மில்லாமற் போவது போல், ஞானவேழமாகிய ஸ்ரீ பகவானால் உண்ணப்பட்ட அடியார்களுடைய பழத்தின் மேலோடு போன்ற தூலவுடல் வாழ்ந்திருந்தாலும், உள்ளே இருந்த மனமும், அதனைச் சேர்ந்த வாசனைகளும், வினைகளும், வினைப்பயன்களும் ஆகிய யாவும் ஞானத்தால் அழிக்கப்பட்டு விடுகின்றன. அத்தகைய ஜீவன் முக்த வாழ்வே இங்கு "அது தான் வாழ்வு" என்ற சொற்றொடரால் குறிக்கப்பட்டது.

409. மேன்மே லொடுங்கி வெளியுலகங் காணாம
னான்வாழச் செய்வாய் ரமணேசா — ஆன்மாவி
லாழ முழுகி யனுபவிக்கு மின்பினிலுஞ்
[29]சூழுலகி லேது சுகம்.

ஸ்ரீ ரமணேசா! வெளியுலகைக் காணாமல் ஐம்புலன்களும் மேன் மேலும் உள்ளே திரும்பி, மனம் ஆன்மாவில் ஒடுங்கி நான் வாழும்படிச் செய்வாயாக. இவ்வாறு ஆன்மாவில் ஆழ்ந்து முழுகி அனுபவிக்கும் பேரின்பத்தை விட வெளியே காணப்படும் இவ் வுலக வாழ்வில் (ஐம்புலக் காரியமாகிய ஏழுலகிலும்) வேறு பெரிய சுகம் ஏது இருக்கின்றது?

410. ஒடுங்கி யடங்கியுனி லொன்றாகி மீண்டு
மடங்கி யெழாத மதியாய்ப் — படும்பாடு
யாதொன்றுக் குங்கர்த்தா [30]போக்தாவு மாகாதுன்
பாதம்பெற் றோயப் பணி.

ஆன்மாவில் ஒடுங்கி, மீண்டும் 'நான்' என்று கிளம்பாமல் அடங்கி, ஆன்மாவாகிய உன்னுடன் ஒன்றாகி, மீண்டும் பகிர் முகப்படாத அறிவாய், தோற்றமாத்திர இவ்வுலகில் நடைபெறும் எந்தக் காரியத்திற்கும் தான் கர்த்தாவும் போக்தாவும் ஆகாததும், என்றுமே அழியாததுமான உன் திருவடி நிலையைப் பெற்று நான் ஓய்ந்திருக்குமாறு பணித்தருள்க.

411. தன்னிடத்தி லுள்ள தனிப்பிரியங் காரணமா
யன்னியங்க ளைத்தேட வாவலெழுந் — தன்னிடத்தி
னிற்கும்போ தாவ னிகழாத தாலெனையுண்
ணிற்கும் படியருள்செய் நீ.

ஆன்மாவின் மேலுள்ள அத்யந்தப் பிரியத்தினாலேயே அன்னியப் பிற பொருள்களைத் தேட இந்த விழிப்பு நிலையில் ஆவலுண்டாகிறது. இவ் விழிப்பு நிலை நீங்கி

[29] 'ஏழுலகத் துஞ்சுகமொன் றேது' எனவும் பாடம்.
[30] 'வாகாத சாகாத' எனவும் பாடம்.

ஆன்மாவிலேயே ஒன்றாகி நிற்கும் போது பிற பொருள்களை விரும்பும் ஆவல் உண்டாகாது. அதனால் என்னை எப்போதும் உள்ளே ஆன்மாவிலேயே நிற்கும்படி நீ செய்தருள் வாயாக.

412. எண்ண விசைக்க வியற்றவொன் றில்லாமற்
பண்ணமாட் டாயோ பகவானே — யுண்மையோ
டொன்றிநா னென்று முபாதி ரகிதனா
நின்றிருக்க வாசை நிறுத்து.

ஸ்ரீ பகவானே, எண்ணுகின்ற மனத்திற்கும், பேசும் வாக்கிற்கும், தொழிலியற்றும் காயத்திற்கும் (மனோவாக்குக் காயங்களாகிய திரிகரணங்களுக்கும்) தாம் செய்ய வேண்டியதாக யாதொரு கர்மமு மில்லாதவாறு அருள்செய்ய மாட்டாயோ? என்னுடைய ஆசை என்ன வென்றால், நான் சத்தியப் பொருளாகிய ஆன்மாவோடு ஒன்றாகி, எக்காலமும் உபாதியற்ற ஆன்மசொரூபமாகவே நிஷ்டையுற்றிருக்க வேண்டு மென்பதே. என்னை அவ்வாறே நிறுத்துவாயாக.

413. நினைப்பதனா லேது(ம்) நிகழாது சீவ
முனைப்பற் றிதயத்துண் மூழ்கித் — தனைப்பற்று(ம்)
நிட்டையொன்றே யாற்றற்கு நேரியதென் றோர்ந்தடியே
னுட்டிரும்பி நிற்கவலி யூட்டு.

மேன்மேலும் சிந்திப்பதனால் யாதொன்றும் நிகழ்ந்து விடாது என்றும், சிந்திக்கின்ற ஜீவ முனைப்பு அழிந்து இதயத்துள் மூழ்கி ஆன்மாவைப் பற்றிக் கொண்டு நிற்கும் நிஷ்டையொன்றுதான் ஜீவ சுதந்திரத்தால் செய்யத்தக்க சத் காரியம் என்றும் அறிந்து, அடியேன் அந்தர்முகப்பட்டு சமாதியில் அசலமாய் நிற்க அருட்சக்தி யூட்டுவாயாக.

414. கட்டமுற்ற நெஞ்சுன் கழலுற்றுக் காட்டபர
நிட்டையுற்று நீங்கா நிருவிகற்பப் — பெட்டகமா
யுன்னாற்காக் கப்பெற்ற வுன்பொருளா மாறாசி
யிந்நா ளெனக்கொன் றிடு.

பகிர்முகப்பட்டு உலகில் உழன்று அளவற்ற துன்பங்களை அனுபவித்த என் மனம் உன் திருவடிகளை அடைந்து, மேலான காஷ்ட நிஷ்டை கூடி, என்றும் நீங்காத ஆன்ம ஐசுவரியத்தைக் கொண்ட நிர்விகற்பப் பெட்டியாய், மேலும் அந்தப் பெட்டகம் உன்னருளாலேயே காக்கப்பட்டுள்ள உன்னுடைய பொருளாய் ஆகும்படி நீ இன்று எனக்கோர் ஆசி அருள்வாயாக.

415. ஒழிந்து புலச்சுவையுள் ளோர்வதிலே யாசைச்
செழிந்தெல்லா வாதனையுந் தேய்ந்து — கழிந்த
வருவ விரண்டு(ம்) மனாது நிகழ்வாய்
மருவ ரமணா மருவு.

ஸ்ரீ ரமண சற்குருவே! ஐம்புல இன்பச் சுவைகள் ஒழிந்து, உள்ள பொருளாகிய ஆன்மாவை அறிவதிலேயே ஆசை செழித்து, எல்லாவித பண்டை வாசனைகளும் தேய்ந்து 'சென்றவை' , 'வருபவை' என்னும் இறந்த — எதிர்காலங்களாகிய இரண்டையும் பற்றிச் சிறிதும் நினைக்காமல் நிகழ்காலத்தின் உண்மையாய் மட்டும் எப்பொழுதும் மிஞ்சி நிற்குமாறு நீ என்னை அணைவாயாக.

416. தனக்கோர் தனியிருப்புந் தன்னுடலு(ம்) மண்விண்
ணெனக்காண் பவையுமுண்மை யில்லா — மனக்காட்சிச்

சித்திரமாப் பொய்யாத் தெரியு மறிவுண்மைச்
சித்தி யடையவருள் செய்.

'நான் இன்னாராக இருக்கிறேன்' என்றவாறு எனக்கு ஒரு தனியிருப்பும், 'இது என் உடல்', 'இது பூமி, ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களாலாகிய பிரபஞ்சம்' என்று காணப்படும் முன்னிலைப் பொருள்களும் ஆகிய எல்லாம் உண்மை யற்ற மனத்தோற்றங்களாகிய வெறும் சித்திரங்களாய், மித்தையாய் உணரக்கூடிய உண்மையான ஞான சித்தியை நான் அடையும்படி நீ அருள் செய்வாயாக.

417. சித்தை நினைந்துலகச் சித்திரத்தைத் தான்மறக்குஞ்
சித்தி யெனக்குச்சித் திக்கவருள் — [31]சித்தவாவும்
பத்திசித் திக்கப் பரம நினதருளே
நத்தியிரக் கின்றேனீ நல்கு.

அறிவுப் பொருளாகிய ஆன்மாவை நாடி, சித்திரம் போன்ற தெரிவுப் பொருளாகிய உலகத்தை நான் மறந்துவிடக் கூடியதான சித்தியொன்று எனக்குக் கைகூடுமாறு அருள் செய்வாயாக. பரம்பொருளே! சித்சொரூபமான ஆன்மாவை நேசிக்கும் ஸ்வாத்மபக்தி எனக்குச் சித்திக்கும்படி உன் அருளைக் கெஞ்சி வேண்டுகின்றேன். நீயே கொடுப்பாயாக.

418. புலக்கவர்ச்சி நீங்கி புறமுகமா காதுண்
ணிலைக்கவைக்க மாட்டாயோ நீதான் — மலக்குவையாங்
காய மவாவுங் கசடனெனை யான்மபரா
காய வறிவிற் கணித்து.

மல மூட்டையாகிய இந்த சரீரத்தையே 'நான்', 'எனது' என்று அபிமானிக்கும் கீழோனாகிய என்னை ஆன்ம பராகாச அறிவுமயமாக ஆக்கி, ஐம்புலக் கவர்ச்சி நீங்கி, பகிர்முகப் படாமல் உள்ளத்திலேயே நிஷ்டையுறும்படி நீ செய்ய மாட்டாயோ?

419. அலையறிவை யன்றி யகமென்னுஞ் சொற்கோர்
நிலையறிவுண் டென்னு(ம்) நிசத்தைக் — கலையறிவாற்
கற்பித் ததுமன்றிக் கைவல்ய மாவென்னை
நிற்பிக்க வும்வேண்டு(ம்) நீ.

அலைந்து திரிகின்ற மன அறிவைத்தவிர,'நான்' என்ற சொல்லுக்குப் பொருளாக முக்காலத்தும், மூவவஸ்தைகளிலும் நிலைத்து உள்ள ஆன்ம அறிவு ஒன்று உண்டு என்ற உண்மையை உன் உபதேசங்களால் பரோக்ஷமாகக் கற்பித்தது மல்லாமல், அந்தக் கைவல்ய வஸ்துவாகவே என்னை அபரோக்ஷமாகவும் நிஷ்டை யடையும்படி சற்குருவாகிய நீ செய்தருள வேண்டும்.

420. வாழ்வென்றா லெண்ண வடுக்கூடத் தோன்றாதுள்
ளாழ்வன்றி யிவ்வா றலைவதோ — பாழ்நின்
றெனையெடுத்துச் சற்று மிருமையுணர் வென்று(ம்)
நினைவறச்செய் துன்னி னிறுத்து.

எண்ணங்கள் இருந்த அடையாளங் கூடத் தோன்றாதபடி உள்ளத்தில் ஆழ்ந்து மூழ்கிவிடுவதே உண்மையான வாழ்வு ஆகுமே தவிர, எண்ண அலைவுகளாக இவ்வாறு நான் அலைவது தானா என் வாழ்வு எனப்படும்? மூவவஸ்தைகளாகிய வாழ்வென்னும் பாழிலிருந்து என்னை மீட்டு எடுத்து, கொஞ்சங்கூடத் துவைத உணர்வாகிய நினைவே உண்டாகாதபடிச் செய்து, ஆன்மாவாகிய உன்னில் நிறுத்துவாயாக.

[31] 'சித் அவாவும் பத்தி' = தன்னறிவை நாடும் பக்தி; ஸ்வாத்ம பக்தி.

421. தூர்க்க வரிதாந் தொடுகேணி யைம்புலனுங்
கேட்குமுண வெல்லாங் கிடைப்பிக்கு(ம்) — மார்க்கத்திற்
சென்றதினி போதுந் திரும்பியித யத்துன்றா
ணின்றிருக்க வைப்பாய் நிலைத்து.

தூர்த்துவிடவே முடியாத ஆழமான பெருங்கேணிக்குச் சமானமான ஐம்புலன்களும் ஆசைப்படுகின்ற போகப் பொருள்களை யெல்லாம் சேமித்துக் கொடுக்கும் லௌகீக மார்க்கத்தில் நான் இது வரையில் முயற்சித்த தெல்லாம் போதும். இனி அவற்றிலிருந்து திரும்பி உண்முகமாகி இதயத்தில் உன் திருவடியில் நிலைத்து நிஷ்டையுற் றிருக்குமாறு வைப்பாயாக.

422. அதிசாந்த மாக வமர்ந்திருக்கும் ஞான
நிதிசேர்ந் தருளா னிகழும் — விதிசேர்ந்த
சாக்கிரமிச் சொப்பனத்தைச் சாட்சியாய்க்கண் டின்பதுன்ப
நீக்கமுற வென்னை நிறுத்து.

எந்தச் சூழ்நிலையிலும் அதிசாந்தமாக அமர்ந்து இருக்கக் கூடிய ஆன்ம நிலையாகிய ஞான நிதி படைத்தவனாய், பிராரப்தத்தால் உண்டாக்கப்பட்டுள்ள ஜாக்கிரமாகிய இந்தச் சொப்பனத்தை — உனது திருவருளால் நிகழும் வாழ்வுக் காட்சியை — நான் சாக்ஷியாக இருந்து கண்டு, அவ் வாழ்வின் இன்ப துன்பங்களினின்றும் முற்றிலும் விடுபட்டவனாய் இருக்கும்படி என்னை நிறுத்துவாயாக.

423. இப்பொழுதி லிங்கே யியல்பா யிருக்குமதி
யற்புதவா தார வறிவிருப்பே — யெப்பொழுது
மென்னிலையாய் நானா யிரண்டிலா தோர்ந்தமர
நின்னருளா லென்னை நிறுத்து.

இப்போதே இங்கேயே இயல்பாகவே அதியற்புதமான ஆதார அறிவாய் எது இருக்கிறதோ, அந்த ஆத்ம ஸ்திதியே எப்பொழுதும் என்னுடைய நிஷ்டையாய், அதுவே நானாய், அத்வைதமாய் அறிந்து அமைந்து நிற்கும்படி உன்னுடைய திருவருளால் என்னை நிறுத்துவாயாக.

424. முற்றுமுனக் கொப்படைத்து மோனமுற்ற நன்மனமாச்
சற்று மெழுந்தெதையுஞ் சாராத — வெற்ற றிவா
மீந்திருக்கு மாறே விதித்தருளா யோநின்முன்
றாழ்ந்தடிமை பூண்டேன் றனை.

உன் சந்நிதியில் வந்து அடிபணிந்து உனக்கு அடிமையான என்னை, உன்னிடம் பரிபூரணமாக ஒப்படைக்கப்பட்டு அதனால் மோனமுற்ற நல்ல மனமாக்கி கொஞ்சங்கூட எழுச்சியுற்று எதையும் பற்றிக்கொள்ளாத 'நான் இருக்கிறேன்' என்னும் ஆன்மவெற்றறிவாய் மட்டும் மீந்திருக்குமாறு நீ விதித்தருள மாட்டாயோ?

425. காலவீ ணின்றிக் கடுகி யகமுகத்தே
மூலமா யுள்ள முழுமுதலுன் — காலடியி
லோரலைவு மற்ற வுபசாந்த போகமுண்ணுஞ்
சீரருள்க ஞான சிவம்.

ஞானசிவமாகிய ஸ்ரீ ரமண சற்குருவே! அந்தர்முகத்தில் விளங்கும் மூலவஸ்துவாயுள்ள முழுமுதற் பொருளாகிய உன் திருவடிகளில் நான் காலத்தை வீணாக்காமல் விரைந்து வந்தடைந்து யாதொரு சலனமுமில்லாத உபசாந்தி என்னும் சிவபோகம் உண்கின்ற சிறப்பை எனக்கு அருள்வாயாக.

426. வந்தேன் ரமணாநின் வானருளால் கொண்டபிற
பந்தம் பலவுமற பாலனெனை — யெந்தாய்
சிறிதேனும் விட்டினிமேற் செல்லாம னின்றுன்
னறிவாகு மின்ப மளி.

எந்தையே ஸ்ரீ ரமணா! என்னைப் பற்றிக்கொண்டிருந்த ஏனைய பல பந்தங்களையும் உன் திருவருட் சித்தத்தால் விட்டு உன்னை வந்தடைந்தேன். சிறுவனாகிய என்னை விட்டு நீ இனி மேல் சிறிதேனும் விலகாமல் எப்பொழுதும் என்னுள் எழுந்தருளியிருந்து, உன் ஆன்மஞானமாகிய பேரின்பத்தைக் கொடுத்தருள்வாயாக.

427. எண்ணவலை மோதி யிடர்ப்பட் டிகவாழ்விற்
கண்ணிழந்தோ னாநான் கதறாம — லுண்ணிறைந்த
சாந்தசிவ ஞான சமுத்திரத்தி னாழத்தி
லாழ்ந்து சுகிக்க வருள்.

நான் இந்த உடல்வாழ்க்கை என்னும் சமுத்திரத்தில் கணக்கற்ற எண்ணங்களாகிய அலைகளால் மோதப்பட்டுத் துன்புற்று அறிவிழந்த வனாக அழுதுகிடக்காமல், உள்ளத்தில் சாந்தி நிறைந்த சிவஞான சமுத்திரத்தின் ஆழத்தில் அமிழ்ந்து சுகிக்குமாறு அருள் செய்வாயாக.

428. அலைந்தா லலைசற் றமைந்தாலஃ தாழி
யலைந்தமன(ம்) நின்றாலஃ தான்மா — குலைந்தமைதி
யேனோ வலைவே னிறைவா நினதருளால்
யானோய வைத்ததுவா யாக்கு.

கடல்நீர் அலையுமானால், அது அலையாகிறது; அலைகின்ற அலை சற்றுச் சலனமின்றி நிற்குமானால், அதுவே தன் அலையுருவம் அழிந்து கடலாகி விடுகின்றது. அவ்வாறே எண்ணங்களாக அலைந்த மனம் சலனமற்று நின்றால், அதுவே ஆன்மா வாகின்றதல்லவா? ஆகையால், நான் அமைதி குலைந்து, ஏன் அலைந்து ஒரு மனமாக வேண்டும்? இறைவனே! நீயே உனது திருவருளால் என் மன அலைவு ஓயும்படிச் செய்து, என்னை நீயாகிய ஆன்மாவாய் ஆக்குக.

429. தேக மனத்தாற் செயப்படூஉ(ம்) நற்றவங்க
ளேக வகண்ட வியல்பிலதா — லேக
சகஜமா நிற்குமகச் சார்பாந் தவமே
தகவிலே னும்பெறநீ தா.

தேகத்தாலோ மனத்தாலோ செய்யப்படும் நற்காரியங்கள் ஏக அகண்ட தவங்கள் ஆக முடியாதவையே. ஏக சஹஜமாக நிற்கும் நிஷ்டையாகிய ஆன்மாவில் அடையும் ஸ்திதமே சரியான தவ மாகும். அத்தகைய தவத்தைத் தகுதியற்றவனாகிய நானும் அடையுமாறு நீ அருள் செய்வாயாக.

430. காக்கும் பெருங்கருணைக் காவற் றிற(ம்)நம்பி
யார்க்கும் பகிர்முகநோக் கற்றுள்ளே — பார்க்குமுயர்
நிட்டா னுபவச்சீர் நின்னருளா னான்பெற்று
விட்டாற் றுயரம் விடும்.

என்னை எவ்விதத்தும் காப்பாற்றிக்கொண்டு வருகின்ற உனது அருட்பெரும் கருணைக் காவல் திறத்தை நம்பி, ஆரவாரிக்கும் பகிர்முக நோக்கமே அழிந்துபோய், உள்ளமாகிய ஆன்மாவையே தரிசித்து நிற்கும் உயர்ந்த நிஷ்டானுபவச் சீர்மையை உன்னுடைய அருளால் நான் அடைந்துவிட்டேனானால், என் துயரங்கள் யாவும் நீங்கிப் போகும்.

431. ஊன்றி யுரம்பெற்றவ் வுண்மையின்வே றாகவொரு
நான்றெரியா வான்மபர ஞானமயப் — பூன்றமா
யாத லழிதலற்ற வானந்த வாரிதியின்
மீதமின்றி மூழ்க விதி.

ஆன்மாவில் நன்றாக ஊன்றி, ஸ்திரமாகி, அவ் வுண்மைப் பொருளாகிய ஆன்மாவுக்கு வேறாக ஓர் அகந்தை 'நான்' என்று எழாமல், அந்தப் பரமான்ம ஞானமயப் பூரணப் பொருளாகவே நின்று, பிறப்பிறப்பற்ற அந்தப் பேரானந்த சமுத்திரத்தில் யாதொரு தனியிருப்பும் மீதியில்லாதபடி நான் மூழ்கிப்போகும்படி விதிப்பாயாக.

432. உள்ளத்தி னுண்மையா வோங்கு முனதருட்சீர்
வெள்ளத்தில் வீழ்ந்துமயல் வெப்பவிந்து — தெள்ளத்
தெளிந்து விளங்கு சிவானுபூ திச்செம்
பளிங்கா வொளிரப் பணி.

இதயத்தின் உண்மைப்பொருளாக விளங்குகின்ற உனது சிறந்த அருள் வெள்ளத்தில் நான் விழுந்து, மயக்கங்களாகிய எல்லாவித வெப்பமும் தணிந்து, மிகவும் தெளிந்து விளங்குகின்ற பரிசுத்தமான சிவானுபூதிப் பளிங்குமணியாக நான் பிரகாசிக்கும்படிப் பணித்தருள்க.

433. தன்னகத்தி னின்றுந் தவறாப் பரநிட்டை
முன்னளித்து நானென் முனைப்பழித்துப் — பொன்னில்
வயிரம் பதித்த வழகேபோ னீயென்
னுயிரி லுயிரா வொளிர்.

முதலில் ஆன்மாவினின்றும் நழுவாத பிரம்ம நிஷ்டையை எனக்குக் கொடுத்து, 'நான்' என்று எழுகின்ற அகந்தை முனைப்பை அழித்து, பொன் ஆபரணத்தில் வைரக் கல்லைப் பதித்த அழகைப் போல பரிசுத்தமாக்கப்பட்ட என் உயிரில் பதிக்கப்பட்ட வைரமாக நீ விளங்குவாயாக.

434. ஏக விருப்புருவா யெல்லா மொடுங்குசிவ
யோகபர நிட்டையிலே யூன்றிபரி — பாக
சகஜ நிருவிகற்பச் சாம்பிராச்சி யத்தை
யகரமணா நீயீந் தருள்.

ஆத்மரமணா! பிற பொருள்களின் இருப்பெல்லாம் மறைந்து, ஏக சன்மாத்திரமாக மட்டும் இருக்கும் மேலான சிவயோக நிஷ்டையிலே ஊன்றி, அதன் பரிபாகத் தால் அடையப்பெறும் சஹஜ நிர்விகற்பமாகிய ஆத்ம சாம்ராஜ்யத்தை நீ எனக்குக் கொடுத்தருள்வாயாக.

## 40. அன்னையினும் அருள வேண்டல்

435. தான்கழித்த புன்மலத்தாற் றன்னுடன்மேற் பூச்சுண்ட
வீன்குழவி கையி லெடுத்தன்னை — யூன்கழுவித்
தம்மடிமேற் கொள்ளுந் தயையினு(ம்)நீ மிக்ககந்தைப்
பொய்ம்மைத்தவிர்த் தீவாய் புகல்.

பிறந்து வெகு நாளாகாத ஒரு சிறு குழந்தை தான் கழித்த மலத்திலேயே புரளுவதால் அம்மலத்தைத் தன் உடம்பு முழுவதும் பூசிக்கொள்ளவே, அதைப் பெற்றெடுத்ததாய் அவ் வசுத்தத்தைப் பொருட்படுத்தாமல் அக் குழந்தையைத் தன் கையால் எடுத்து, அதன் உடல் முழுவதையும் கழுவிச் சுத்தம் செய்து, தன் மடிமேல் அமர்த்திக்கொள்கின்றாள், அன்றோ? அத் தாயையும் விட நீ என்மீது அதிகமாகக்

கருணை கொண்டு, நான் போர்த்திக்கொண்ட பொய் யகந்தை மலத்தைக் கழுவி நீக்கி உன் திருவடியில் எனக்குப் புகலளிப்பாயாக.

436. முடக்குழவி கண்குருடு மூர்க்கமதி கீழே
கிடக்கு(ம்)வய துங்கடந்தோன் கெட்ட — மடச்சிகர
மிப்படியோர் பிள்ளை யிருக்கின்றே னானுனக்கிங்
கெப்படியுங் காப்பாற் றெனை.

தானே நடமாட முடியாதபடி, பிறவியிலேயே முடமாகிய ஒரு குழந்தை; அதன் இரு கண்களும் பிறவிக் குருடு; புத்தியும் மூர்க்கமானது; மேலும் போட்ட இடத்திலேயே கிடக்காமல் நகர்ந்து செல்லும் பருவத்தையும் அடைந்தது அக் குழந்தை; எனவே, மூர்க்கமதியாலும், கண் குருட்டினாலும் பல இடங்களில் உருண்டு விழுபவன்; அத்துடன் அக் குழந்தை கெட்ட புத்தியின் சிகரமாகும். நான் உனக்கு இப்படிப்பட்ட ஒரு பிள்ளையாக இருக்கிறேன்! அந்தோ, இந் நிலையிலுள்ள என்னையும் எப்படியாவது உன் அருட்சக்தியால் காப்பாற்று வாயாக.

437. தாய்ப்பறவைத் தன்சிறகுட் சற்றுங் கவலையற்றுச்
சேய்க்குருவி தூங்குந் திறம்போல — வாய்ப்பரிதா
வாய்த்தரம ணேசாநின் வாழ்கழலி னீழலிலே
யோய்த்தடியேன் சித்த முறக்கு.

அடைவதற்கரிய பெரிய காப்புப் பாக்கியமாக உன் அடியவர்களுக்குக் கிடைத்த சற்குருவாகிய ஸ்ரீ ரமணேசா! ஒரு தாய்ப்பறவையின் இறக்கையினுள் அதன் குஞ்சுக் குருவி கொஞ்சங்கூடக் கவலையற்றுத் தூங்குவதைப் போல, உன்னுடைய அழிவற்ற திருவடி நிழலிலே என் சித்தத்தை முழுதும் ஓய வைத்து, அந்தக் குருவிக் குஞ்சு போல் கவலையற்று உறங்கும்படிச் செய்வாயாக.

438. ஓயா வுணர்வா யுளேனென்றுள் ளேவிளங்குந்
தாயாமுன் றாளிற் றலைசாய்த்தென் — னாயாச
மற்றருளால் ஞான வறிதுயினா னாழ்ந்திருக்கப்
பெற்றவளே யன்பாற் பிணை.

என்னைப் பெற்ற தாயாகிய ஸ்ரீ ரமண சற்குருவே! உள்ளத்தில் 'இருக்கிறேன்' என்று ஓயாது விளங்கிக் கொண்டிருக்கும் தன்மையுணர்வு வடிவாம் (சித்ரூபியாம்) என் தாயாகிய உன்னுடைய திருவடிகளில் நான் தலைசாய்த்து, உன் அருளால் எல்லா ஆயாசங்களுமற்று, அறிதுயிலாகிய ஞானத் தூக்கத்தில் ஆழ்ந்து இருக்கும்படி, நீயே என்னை உன் திருவடிகளில் அன்பால் பிணைத்து வைப்பாயாக.

439. பொறுக்க முடியாப் புரைகளைக்கொண் டேனை
யொறுக்க நினையே லுடையாய் — வெறுக்கவே
நீயு(ம்) நினைந்தா னிலையழிவேன் மன்னித்துத்
தாயினு மிக்கருளித் தாங்கு.

என்னை அடிமையாக உடையவனே! யாரும் பொறுத்தருள முடியாத அவ்வளவு கொடிய குற்றங்களைக் கொண்ட என்னை நீயாவது தண்டிக்க நினையாது பொறுத்து இருப்பாயாக. நீயும் என்னை வெறுக்க நினைத்தால், நான் யாதொரு நிலையான பயனுமின்றி அழிவேன். நீ என்னை மன்னித்து, பெற்ற தாயைவிட அதிக தயவு உடையவனாய் என்னைக் காப்பாற்றுவாயாக.

440. நிட்டைச் சுகக்கடலி னீந்துவதே யன்றிபுலக்
குட்டைப்புன் சேற்றிற் குளிக்கவோ — விட்டனைநீ

யப்பழுக்கற் றென்னை யருட்கரங்க ளாற்கழுவித்
துப்புரவாக் கன்பு சுரந்து.

ஆன்ம நிஷ்டையாகிய பேரின்பக் கடலில் நான் நீந்தி விளையாடும்படி விடுவதன்றி, ஐம்புலச் சிற்றின்பக் குட்டையாகிய அழுக்குச் சேற்றில் குளிக்கும்படியாகவோ என்னை நீ விட்டுவிட்டாய்? நீ என்பால் பேரன்பு கூர்ந்து என்னை மீட்டு எடுத்து உன் திருவருட் கரங்களால் என் அழுக்குகளை யெல்லாங் கழுவி நீக்கிப் பரிசுத்தமாக்குவாயாக.

441. தாயாகு(ம்) நீயுன் றயவாலே ஞானப்பால்
வாயார வூட்டி வளர்த்தாற்றான் — மாயா
மயக்கொழிந்திவ் வேழை வளர்வே னருளாற்
செயத்தகுந்தோ னன்றோநீ செய்.

என்னைப் பெற்ற தாயாகிய நீ உன் கருணையினாலேயே என் வாய் நிறைய ஞானப்பாலை யூட்டி வளர்த்தால் தான், இவ் வேழையாகிய நான் மாயையின் மயக்கத்திலிருந்து நீங்கி ஞானக் குழந்தையாய் வளர்வேன். இக் காரியத்தை உன்னுடைய கருணையினாலேயே நீ செய்யத் தகுந்தவனன்றோ? ஆகையால் அவ்வாறே செய்தருள்க.

442. சத்தியிலே னுன்னைச் சரணடைகின் றேனருளான்
முத்தியளித் தென்னை முடிப்பாய்நீ — புத்தியிலேன்
செய்பிழைக ளெல்லாஞ் சிவரமண மன்னித்துங்
கொய்தகற்றி யுஞ்சீர் கொடுத்து.

சிவரமணா! யாதொரு சக்தியுமில்லாத நான் உன்னைச் சரணடைகின்றேன். நல்ல புத்தி இல்லாதவனாகிய நான் செய்த, செய்யும் பிழைகளை யெல்லாம் நீ மன்னித்தும், இனி அவை என்னிடம் உண்டாகாதபடி அவற்றில் மூலமாகிய வாசனைகளைக் கொய்து அகற்றியும் நல்ல பக்குவத்தை எனக்கு உண்டாக்கித் தந்து, நீயே உன் அருளால் எனக்கு முக்தி யளித்து என் அகந்தை வாழ்வுக்கு ஒரு முடிவைச் செய்தருள் வாயாக.

443. கள்ள மனத்தைக் கழித்துட் கவர்ந்தெனைச்சென்
றுள்ளங் குதூகலிக்க வூட்டுவாய் — வெள்ளப்
பெருவா ரிதியாப் பெருகுமுன்பே ரின்ப
வருளான்ம ஞான வமுது.

கள்ளத்தனமான மனத்தை என்னை விட்டு விலக்கி, நீ என்னை உள்ளே கவர்ந்து சென்று, பொங்கும் சமுத்திரத்தைப் போலப் பெருகுகின்ற உன்னுடைய ஆன்மஞானமாகிய பேரின்ப அமுதத்தை என் உள்ளம் குதூகலிக்குமாறு ஊட்டி யருள்வாயாக.

444. சுத்தமற்ற தேகமனத் தொத்துநோய்க் காளாகி
மெத்த வருந்தி விடுதலைக்கோ — ரத்துவித
ஞான வயித்திய நாத னுனையடைந்தே
னானமருந் தானோ யகற்று.

அசுத்த தேகம் மனம் இவற்றையே 'மனம்' என்று அபிமானிக்கின்ற தொத்து நோய்க்கு ஆளாகி, அதனால் மிகவும் வருந்தி, இந் நோயினின்றும் விடுதலை யடைவதற்காக ஒப்பற்ற அத்வைத ஞான வைத்தியநாதனாகிய உன்னை யடைந்தேன். அந்

நோய்க்கேற்ற மருந்தால் அதை அகற்று வாயாக.

445. எண்ணுதற் கொன்றுமிலா வின்பப் பரவாழ்வை
நண்ணுதற் கென்கடவே னாயினே — னுண்ணுதற்
கென்னையுகந் தாண்ட விறைவா நினதருளோ
வன்னையினு மிக்கதன்றோ வாற்று.

நினைப்பதற்கு யாதொரு விஷயமுமில்லாத பேரின்ப நிலையாகியப் பரவாழ்வை அடைவதற்கு நாயேனாகிய நான் என்ன செய்வேன்? என்னை உனக்கு ஊணாக உண்டு தீர்ப்பதற்கென்றே அன்று மகிழ்ச்சியோடு என்னை யாட் கொண்ட இறைவனே! உன்னுடைய அருளோ ஒரு தாயின் கருணையை விட அதிகமானதல்லவா? ஆகவே, என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்தருள்க.

## 41. இதய வாழ்வு வேண்டல்

446. புலப்படூஉம் வாழ்வைப் பொருட்படுத்தா துள்ளத்
தலப்படூஉம் வாழ்வைத் தருவா — யலைப்படூஉம்
நெஞ்சத்து முன்னை நினைப்பித்த [32]நின்னடிக்கீழ்க்
கெஞ்சிக்கும் பிட்டென் கிடப்பு.

புலன்களுக்கு அறிபடும் இந்த என் தேக வாழ்வைப் பொருட்படுத்தாமல், இதயத்தை யடைந்து வாழும் வாழ்வைத் தருவாயாக. பிரபஞ்ச எண்ண அலைகளால் முழுகிக் கிடந்த என்னுடைய நெஞ்சத்திலும் அவற்றினூடே உன்னை நான் நினைக்கச் செய்தாயல்லவா? ஆகையால், உன்னுடைய திருவடிக் கீழ் பிரார்த்தித்து வணங்கிக் கிடப்பதே என் தற்போதைய காரியம்.

447. இதரத்தை யெண்ண வெழுந்திடுமுற் சாக
மிதயத்தை யெண்ணமற வெண்ண — வுதித்திலதே
அண்ணா மலையா யருளா லெனக்கிதய(ம்)
நண்ணாநின் றெய்தவரு ணாடு.

பிற பொருள்களைப் பற்றி எண்ணுவதற்கு எனக்கு எழும் உற்சாகம் எவ்வளவோ, அவ்வளவு ஆன்மாவை எண்ணுவதாகிய எண்ணமற்ற காரியத்தில் உதிக்கின்ற தில்லையே. அண்ணாமலையானே! நான் இதயத்தை யடையுமாறு நீயேஅருளால் செய்தருள்வாயாக.

448. பிரபுவே யென்மேலுன் பேரருளுண் டாமே
லிரவுபக லாயலையு மெண்ணந் — திரமா
யிதயமுற்று மீண்டு மெழாமலென் றென்றும்
பதியுமதை[33] யென்பாற் படுத்து.

பிரபுவே! உனக்கு என்மேல் பேரருள் உண்டாகுமே யானால், இரவும் பகலும் ஓயாமல் அலைந்து கொண்டிருக்கும் எண்ணங்களாகிய மனம் இதயத்தை ஸ்திரமாய் அடைந்து. மீண்டும் என்றென்றும் எழாமல் அதிலேயே பதிந்துவிடும். ஆகையால் அந்த உன் பேரருளை எனக்குத் தருவாயாக.

449. எல்லாச் சுவையு மிகந்து வெளிமுகத்தில்
நில்லாநின் றுள்ளே நிருவிகற்பம் — எல்லா

[32] 'பேரருளைக் கெஞ்சிக் கிடக்குமெனக் கே' எனவும்
[33] 'அதை' — உன் பேரருளை.

யிடைவிடா தோங்கு மிதயவாழ் வெய்தத்
தடையுறா நின்னருளைத் தா.

வெளிமுகத்தில் எல்லாவிதச் சுவைகளும் நீங்கி, உள்ளே நிர்விகற்ப சமாதியில் நிலைத்து நின்று, சூரியனைப் போல் இடைவிடாது பிரகாசிக்கும் ஆன்மவாழ்வை நான் அடைய, எதனாலும் தடுக்க முடியாத நின்னுடைய அருளைத் தருவாயாக.

450. பற்பலவாய்த் தோன்றும் பகிர்முகப்பொய்ப் புன்பொருளி
னற்ப சுகத்திற் கலையாம — லற்புதமா
யான்மாவி லான்மாவா யாரும்பே ரானந்த(ம்)
நான்மேவ ஞானங் கொடு.

வெளிமுகத்தில் பற்பல சுகப்பொருள்களாய்ப் பொய்யாகத் தோன்று கின்றவற்றின் அநித்திய சுகங்களுக்காக நான் அலையாமல், ஆன்மாவில் ஆன்மாவாய் நிலைபெறுகின்ற அற்புதமான பேரானந்தத்தை நான் அடையும்படி ஆன்ம ஞானத்தைக் கொடுத்தருள்க.

451. எழுந்தலையு(ம்) நானா யிராம லகத்தே
யழுந்திமகிழ் யானா யமரத் — தொழுஞ்சிறியே
னேமாறா தென்பா லிசைந்தருள்வாய் சித்தத்தின்
காமாதி யெல்லாங் களைந்து.

'தேகமே நான்' என்று எழுந்து அலைகின்ற அகந்தை நானாக இராமல், ஆன்மாவில் அழுந்தி மகிழ்கின்ற ஆன்ம நானாக இருக்கும்படி உன்னைத் தொழுகின்ற சிறியவனாகிய என்னை ஏமாற்றாமல், என் சித்தத்தில் உள்ள காமக்குரோதாதிகளை யெல்லாம் களைந்தெறிந்து, என் பிரார்த்தனைக்கு இசைந்தருள்வாயாக.

452. நானிதுவென் றிங்கோர் நரவுபாதி சேரவபி
மானமுட னோங்கு மமகார — வீனவாழ்
விப்போதே நீக்கி யியலறிவா னந்தவுன்றன்
சற்போத மோனவாழ்வு தா.

'நான் இந்த தேகம்' என்று இங்கே ஒரு மானிடத் தோற்றமாகிய உபாதி என்னோடு சேர்வதால் அந்த அபிமான அகங்காரமுடன் கூடவே தோன்றும் மமகாரமும் சேர்ந்து கொண்டுள்ள மிகவும் ஈனமான என்னுடைய இந்த வாழ்க்கையை நீ இப்பொழுதே நீக்கி, சச்சிதானந்தமாகிய உன்னுடைய சற்போத மோன வாழ்வைத் தருவாயாக.

453. வாழ்வென் றுடலுணர்வை மன்னுவ துண்மையிலே
தாழ்வன்றி யென்ன தனுமயல்விட் — டாழ்வுண்
டகவுணர்வின் பேரின்ப வாழ்கடலின் மூழ்கல்
தகவுடைய தன்றோநீ தா.

உடல் மூலம் ஏற்படும் பஞ்சேந்திரிய உணர்வுகளையே என் வாழ்வு என்று நினைப்பது உண்மையிலேயே தாழ்வே யன்றி வேறென்ன? இந்த தேக மயக்கத்தை விட்டு ஆன்ம வுணர்வாகிய ஆழமான பேரின்பக் கடலில் ஆழ்ந்து முழுகுவது தான் தகவுடைய வாழ்க்கை யல்லவா? நீ அதைத் தந்தருள்வாயாக.

454. உனக்கேற்ற வாறேவா ழுத்தமனா நின்றிம்
மனக்கோட்ட மெல்லா மகன்றே — தனக்கோர்
தனியிருப்பில் லாத சகஜ சமாதி
நனியிருப்பு வாழ்விலெனை நாட்டு.

உன் அருளிச்சைக்கு ஏற்றவாறே வாழ்கின்ற உத்தம அடியானாக நான் இருந்து, என் மனத்தின் கோணல் புத்தி யெல்லாம் நீங்கி, எனக்கென்று ஒரு தனி ஜீவ இருப்பு இல்லாத சகஜ சமாதியில் நன்றாக நிலைத்த இருப்புள்ள வாழ்வில் என்னை வைத்தருள்க.

455. பாடுற்று நொந்த பகிர்முகிநா னுன்னருளாற்
றேடுற்றென் மூலந் திரும்பியக — மீடற்ற
வீடுற்று நானற்று [34]வேசறவற் றோய்வுற்றுப்
பீடுற் றிடவருளோர் பேறு.

ஆகாமிய வினைகளால் வெகுபாடுபட்ட, நொந்த பகிர் முகத்தோனாகிய நான் உன்னுடைய திருவருளால் அகமுகமாகத் திரும்பி என் மூலஸ்தானத்தைத் தேடி, அதனால் அகந்தை யற்று, உளச் சோர்வெல்லாம் நீங்கி, நிலைத்த ஓய்வைப் பெற்று, இணையற்ற மோக்ஷத்தை யடைந்து சிறப்புறுமாறு நீ ஒரு பெரும் பாக்கியத்தை எனக்கு அருள்க.

456. தோற்றமெலா(ம்) நீங்கிச் சுவசொரூப மூன்றியினி
மாற்றமிலாப் பேரின்ப வாழ்வுறுமா — றேற்ற
மளித்தருள்வா யண்ணா மலைரமணா மால்வாய்க்
களித்தலையு மிக்கீழ்க் கடைக்கு.

அண்ணாமலை ரமணா! மாயையின் வழிகளிலேயே களிப்புற்று அலையும் கடைப்பட்ட இக் கீழ்மகனாகிய நான் இப் பிரபஞ்சத் தோற்ற மெல்லாம் நீங்கி, சொந்த ஆன்ம சொரூபத்தில் ஊன்றி, இனி என்றென்றும் அதனின்றும் மாறாத பேரின்ப வாழ்வை யடையுமாறு முன்னேற்றம் அளித்தருள்வாயாக.

457. சுட்டற் றொளிருஞ் சுயஞ்சோதி யேயுனது
மட்டற்ற ஞான மழையாலே — முட்டற்றுப்
பேரின்ப வாழ்வு பெருக வளர்ந்தமைதி
சேரும் படியருளே செய்.

மனோவாக்கக்காயங்களால் 'நீ இத்தகையோன்' என்று சுட்டி விளக்க முடியாதவாறு விளங்கும் ஆத்மஜோதியே! உனது அளவற்ற ஞான மழையால் எனக்கு எல்லாவித முட்டுப்பாடுகளும் நீங்கிப் பேரின்ப வாழ்வு பெருகி வளர்ந்து நான் அமைதி யடையும்படி அருள் செய்க.

458. ஓடி யுழன்றுமன முற்றிடுமின் பென்னுளதுண்
ணாடி யடங்குசுக லாபத்தின் — பாடிப்
பரவிப் பணிந்துன் பதவருளே நாடு
மிரவலனெற் கீவா யிது.

உள்ளே ஆன்மாவை நாடி யடங்கும் சுகமாகிய லாபத்தைவிட வெளிப் பொருள்களில் ஓடி யுழன்று இந்த மனம் அடைகின்ற இன்பம் என்ன இருக்கின்றது? உன்னையே பாடித் துதித்துப் பணிந்து உன் திருவடியின் அருளையே நாடி நிற்கும் யாசகனாகிய எனக்கு நீ இதை ஈவாயாக.

459. மிதந்து மனவெண்ண மேற்பரப்பி லேபுற்
புதம்போற் கெடாதுட் புகுந்து — திதம்பெற்று

---

[34] 'வேசறவு' = மனச் சோர்வு; 'வேசறவு அற்று' = உள்ளம் சோர்ந்து கெடுவது இல்லாமல்.
'அருள் ஓர் பேறு' = 'ஓர் பேறு அருள் (க)' என ஏவல் வினை முற்றாகக் கொள்க.

ஞானக் கடலடிவாழ் நன்முத்தாய்ப் பேரின்ப
மோனத் தமிழ்த்தியெனை மூடு.

நான் மன எண்ணங்களின் மேற்பரப்பிலேயே குமிழிகளைப் போல மிதந்து வீணே கெட்டுப் போகாதபடி, உள்ளே இதயத்தில் புகுந்து அங்கேயே நிலைபெற்று ஞானக் கடலின் அடியில் வாழ்கின்ற நல்ல முத்தாய் ஆவதற்குப் பேரின்பமான உன்னுடைய மோனத்தில் என்னை அமிழ்த்தி மூடி வைப்பாயாக.

460. எதனைமுன் னிட்டு மெழாமனா னென்னுள்
ளிதய(ம்)மன் னித்தோய்த் திருக்குங் — கதியருள்வா
யைந்தொழில்செய் நாதரினு மப்பாலா வோங்கும்ஞா
னேந்திரவா சானே யெனக்கு.

சிருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதானம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களையும் ஆற்றுகின்ற ஈசுவரர்களுக்கும் அதீதமானவனாய் ஓங்கி விளங்கும் ஞான ஆசாரியேந்திரனே! எதை முன்னிட்டும் ஒரு ஜீவனாக எழாமல் நான் என்னுள்ளே இதயத்தை யடைந்து ஆன்மாவிலேயே தோய்ந்திருக்கும் கதியை எனக்கு அருள்வாயாக.

461. சுத்த சுயநிலையிற் சொக்கித் துவிதமனப்
பித்த மயக்கமற்ற பேரின்ப — சித்தியால்
வாக்கற்றுப் போக்கு வரவற்று மாமவுன
நோக்குற் றிடமுடியென் னோன்பு.

பரிசுத்தமான ஆன்மாவில் சொக்கி நிலைத்து, துவித மனவாழ்வாகிய பித்த மயக்கமே இல்லாத பேரின்ப சித்தி அடைந்ததால் பேச்சற்று, எவ்விதப் போக்குவரவுமற்று, சிறந்த மோன திருஷ்டி அடையுமாறு என் நோன்பை முடித்தருள்க.

462. உன்னை நினைந்திவ் வுடலை மறந்தறிவாந்
தன்னை யுணர்ந்த சகஜத்தா — லின்னதெனத்
தற்சுட்டு மற்ற தகராகா சப்பதத்தை
யெற்கெட்டு மாறே யிணக்கு.

உன்னையே அன்போடு நினைந்து 'இவ் வுடலே நான்' என்ற உணர்வை மறந்து, ஞானமயமான ஆன்மாவை யறிந்த சகஜ நிலையால் 'தான் இன்னார் தான்' என்றுசுட்டிக்காட்டும் 'அஹம் பிரம்மாஸ்மி' என்ற தற்சுட்டும் பாவமும் இல்லாத இதயாகாசமான பிரம்ம பதத்தை எனக்கு எட்டக்கூடியதாக நீ இணக்கித் தருவாயாக.

463. எண்ண சொலவியற்ற வேது மவசியமில்
திண்ணமாம் மோனச் செறிவான — விண்ணுருவாய்
முற்று மமைத்து முனைப்பறுத்தென் வாழ்வையருள்
வெற்றவெளி யாக்கி விடு.

எண்ணுவதற்கோ, சொல்வதற்கோ, செய்வதற்கோ யாதொரு அவசியமும் இல்லாத திடமோனம் நிறைந்த ஆகாய வடிவாய் (மோனாகாசமாய்) என்னைப் பூரணமாக அமைத்து, அகந்தை முனைப்பை யறுத்து, என் வாழ்வை அருளாகாச வெற்றவெளியாக ஆக்கிவிடுக.

464. பொல்லாராய் நல்லாராய்ப் போற்றுவதாய்த் தூற்றுவதாய்
நில்லாத பொய்வாழ்வி னேருகின்ற — வெல்லாம்போய்

சற்றுமயல் காணாத சச்சிதா னந்தபர
வெற்றவெளி வாழ்வை விதி.

பொல்லாதவர்களாய், நல்லவர்களாய், அவர்கள் முறையே என்னைத் தூற்றுவதாகவோ, போற்றுவதாகவோ இந்த நிலையற்ற பொய் வாழ்வில் சம்பவிக்கின்ற எல்லா விகற்பங்களும் அழிந்துபோய், கொஞ்சமும் அன்னியமே காணாத சச்சிதானந்த ஆன்ம வெற்றவெளி வாழ்வை எனக்கு விதித்தருள்க.

## 42. அத்துவிதானுபவம் வேண்டல்

465. அசைவற்ற மோன வமைதியினா ழத்தி
லிசைவுற் றழுந்தியொன் றாகப் — பிசைவுற்
றிதுநா னிதுநீ யெனவிருமை காணாப்
புதுவாழ் வறிவைப் புகட்டு.

சிறிதும் அசைவில்லாத மோன அமைதியின் ஆழத்தில் ஒன்றாகச் சேர்ந்து அழுந்தி இணைந்துபோய், அந் நிலையில் 'இது நீ, இது நான்' என்ற வேற்றுமை காண முடியாத புது ஞான வாழ்வை அளித்தருள்க.

466. உள்ளதுநா னென்னு(ம்)நீ யொன்றே யுனைவிடுத்திங்
கெள்ளளவு முண்மை யெதுவுமில்லை — கொள்ளும்
பொருளா மதிக்கிற் புவிவாழ்வை வீணே
மருளாதென் செய்யும் மனம்.

'நான்' என்று இதயத்தில் விளங்கும் நீ யொன்றே உள்ள பொருள்; உன்னைத் தவிர இங்கு ஒரு சிறிதும் எந்தப் பொருளும் உண்மையாக இல்லவே இல்லை. அப்படி இருக்க, பொய்த்தோற்றமாகிய இந்த பூலோக வாழ்க்கையை அடையத் தகுந்த ஒரு பொருளாக மதித்தால், அறிவு வீணாக மருட்சி யடையாமல் எவ்வாறு இருக்கும்?

467. மோனவா னந்தவென் மூல நிலையமுற்று
நானதுவே யாஞ்சகஜ ஞானத்தாற் — றீன
வுணர்வெல்லா(ம்) நீங்கி யுனக்கனிய மாகாப்
புணர்வே யருளாற் பொருத்து.

மோனானந்தமும் என் மூலஸ்தானமுமாகிய ஆன்மாவை யடைந்து. 'அதுவே நான்' என்று உணரும் சகஜ ஞானத்தால் 'நான் இன்னார்' என்னும் அகந்தை வடிவின் தீன வுணர்வுகள் எல்லாம் நீங்கி, உனக்கு வேறாகாத ஐக்கியத்தையே உன் அருளால் எனக்குச் செய்து வைப்பாயாக.

468. ஒன்றா முளபொருணீ யன்றி யுலகுயிரென்
றொன்றேனு மில்லாத வுண்மையறி — வொன்றே
யிடுக்கணிலாப் பூரணப்பே ரின்பநிலை யஃதே
கொடுக்கவரு ளான்மன(ம்)நீ கொள்.

'ஏகமாக உள்ள பரம்பொருள் நீ ஒருவனே; உன்னை யன்றி இவ் வுலகென்றோ, உயிர்களென்றோ உண்மையில் யாதொரு பொருளும் இல்லவே இல்லை' என்ற அஜாத மெய்யறிவு ஒன்றே துன்பமில்லாத பரிபூரண இன்ப நிலை யாகும். அதையே எனக்குக் கொடுப்பதற்கு உன்னருளால் நீயே சம்மதிப்பாயாக.

469. நீயே யெழுந்தருளி நீசநான் மாயவருள்
வாயே லதன்பின் வரம்வேண்ட — வாயேதங்

குள்ளநீ வாழ வுனைத்தொந் தரவுசெய்த
[35]கள்ளநான் சாகக் கணி.

நீ 'அகம் அகம்' என்று ஸ்புரித்து எழுந்தருளுவதால் நீசனாகிய அகந்தை மாயும்படி அருள் செய்வாயேயானால், அதன் பிறகு உன்னிடம் யாதொரு வரமும் வேண்டுவதற்கு எனக்கு வாய் ஏது? அகந்தை யழிவுக்குப் பின் அங்கு விளங்குகின்ற நீ மாத்திரமே வாழ்ந்திருக்கவும், இத்தனை காலமாக உன்னிடம் வரங்கள் வேண்டி உன்னைத் தொந்தரவு செய்த கள்ளனாகிய நான் சாகும்படி செய்தருள்வாயாக.

470. ஒன்றேயா முண்மை யதுநீயென் றுன்னருளா
னன்றா யனுபவமாம் ஞானத்தா — லின்றேநான்
வாக்குமன மற்ற மவுனப் பரவெளியாப்
போக்குவர வற்றிருக்கப் புல்.

'உண்மைப் பொருள் ஒன்றே யாகும்; அது நீயே' என்ற உண்மையை உன்னுடைய திருவருளால் நான் நன்றாக அனுபவித்தடைந்த அபரோக்ஷ ஞானத்தால் இப்பொழுதே வாக்குமனங்களின் செயலற்ற மோனப் பராகாசமாய், போக்கு வரவற்று இருப்பு மாத்திரமாய் நிற்கும்படி என்னைச் சேர்ந்தருள்வாயாக.

471. தன்னெழுச்சி யற்ற ததாகார மெய்ந்நிலையா
[36]முன்மனிபா வத்துரமா யூன்றிநிற்க — வென்விருப்ப
முச்சமுற வேயருளா லூக்குவிக்க வேண்டுமிந்தப்
பிச்சையிடு வாயுன் பிளைக்கு.

அகந்தை யெழுச்சியற்ற ஆன்மசொரூப உண்மை நிலையாகிய இதயவுணர்வில் திடமாக நிஷ்டையுற்றிருக்க எனக்கு விருப்பம் அதிகமாக வேண்டும்; அதை நீ உன் அருளால் ஊக்குவிக்க வேண்டும். உன் பிள்ளையாகிய எனக்கு இந்தப் பிச்சையை இடுவாயாக.

472. அண்மைப் பொருளுக்கு மண்மையா நானாக
வுண்மைப் பொருணீயென் னுள்ளிருந்துங் — கண்மயக்கக்
காட்சியாற் சேய்மைக் கடவுளா வெண்ணுமனச்
சூட்சியறச் செய்து துலங்கு.

எந்தப் பொருளையும்விட மிக அருகாமையில்உள்ள 'நான்' என்ற உணர்வான உண்மைப் பொருளாக நீ எப்பொழுதும் என்னுள் விளங்கிக்கொண்டிருந்தும், அறிவு மயக்கத்தால் உன்னிருப்பை தூரத்தில் எங்கேயோ இருக்கும் ஒரு கடவுட் காட்சியாகக் கருதுகின்ற என் மன மாயத்தை அறுத்து நீ நானாய் விளங்குவாயாக.

473. ஒன்றா விளங்குந்தன் னுண்மைக்கு மாறாக
நன்றாநான் காணு(ம்) நவநவங்க — ளொன்றேனு
முண்மையல வென்றே யுரமா யனுபவிக்குந்
திண்மையுணர் வீந்து தெருட்டு.

எப்போதும் ஏகமாகவே விளங்குகின்ற 'நான் இருக்கிறேன்' என்னும் தன்மை உணர்வுக்கு மாறாக விழிப்பில் நான் நன்றாகக் காணுகின்ற புதுப்புதியதான அன்னியப் பொருள்களாலாகிய இப் பிரபஞ்சத்தில் ஒன்று கூட உண்மையல்ல வென்று திடமாய் அனுபவித்து உணரும் ஞானத்தைக் கொடுத்து என்னைத் தெளிவிப்பாயாக.

---

[35] 'பிள்ளைநா னோயப் பிணை' எனவும் பாடம். இதன் பொருள்: "...பிள்ளையாகிய நான் உன்னைத் தொந்தரவு செய்வதிலிருந்து ஓயும்படியாக என்னை உன்னோடு பிணைத்தருள்வாயாக."
[36] 'உன்மனி பாவம்' = இதய வுணர்வு.

474. இருக்கு(ம்) நிகழ்கா லிருப்பறியேன் முன்பின்
னிருக்கு(ம்)நிலைக் கேன்கவலை யெய்வேன் — இருக்கு
மியலறிவா னந்தமே யென்னுண்மை யாமற்
றயலறியா ஞான மளி.

இப்போது நடந்துகொண்டிருக்கும் நிகழ்காலத்தில் 'நான் எவ்வாறு இருக்கின்றேன்' என்பதை நான் அறியேன். அப்படியிருக்க, சென்ற காலத்திலோ வருங்காலத்திலோ நான் இருந்த அல்லது இருக்கப் போகின்ற நிலைகளுக்காக ஏன் கவலைப்படவேண்டும்? இப்போது ( நிகழ்காலத்தில்) விளங்கிக் கொண்டிருக்கும் சச்சிதானந்தமே என்னுடைய உண்மை நிலை என்று அறிந்து அன்னியம் எதையும் அறியாத ஞானத்தை எனக்கு அளிப்பாயாக.

475. அர்ப்பணிக்கப் பட்டுன் னருளுக்கூ ணானாற்றா
னிர்பய மான நிலையெய்துஞ் — சொற்பமெனும்
வேறாநா னோர்வியத்தி மிஞ்சினுமொன் றஞ்சவரு
மாறாத் துயர மகற்று.

நான் முழுவதும் அர்ப்பணிக்கப்பட்டு உன் திருவருளுக்கு ஊணாகிவிட்டால் தான், பயமற்ற நிலை கிடைக்கும். அவ்வாறின்றி, கொஞ்சமாவது உனக்கு வேறாக 'நான்' என்று ஒரு வியக்தி மிஞ்சியிருக்கும் வரை, என்னை அச்சுறுத்து வதற்கு ஏதாவதொரு முகாந்திரம் உண்டாகிக்கொண்டே இருக்கும். ஆகையால், என்றும் நீங்காத இந்தத் துயரத்தை அத்துவிதானுபவ நிலையைத் தந்து அகற்றி வைப்பாயாக.

476. வேறென்றொன் றேனும் விளங்கா தகமாகு
மாறென் றருணீ வழங்குவையோ — பேறென்றா
லிப்பேறே வேண்டு மிகபரப்பே றுண்மையிலாச்
சொப்பனமே யாகத் துலக்கு.

எந்தவொரு பொருளும் எனக்கு அன்னியமான வஸ்து என்று அறியப்படாமல் அது நானேயாக அனுபவமாகுமாறு நீ என்றைக்குத்தான் அருள் புரிவாயோ? அடையக் கூடிய பேறு என்றால், இந்தப் பேறு தான் எனக்கு வேண்டும். தவிர, இவ் வுலகிலும் மறு வுலகங்களிலும் அடையக் கூடிய பேறுகளெல்லாம் உண்மையற்ற வெறும் சொப்பனப் பேறேயாக எனக்கு விளக்கி வைப்பாயாக.

477. பற்றறநான் வேண்டுமெனிற் பற்றுவதற் கன்னியமே
யற்றநிலை யெய்தினா லல்லாமற் — பற்றறுதல்
வாய்க்குமோ சற்குருவின் வல்லருள்வந் தென்பொருட்டா
மாய்க்குமோ தேக மயக்கு.

நான் பற்றற்று இருக்க வேண்டு மென்றால், நான் பற்றுவதற்கு எனக்கு அன்னியமாக எந்தவொரு பொருளும் இல்லாத அத்வைத நிலையை அடைந்தாலன்றி, பற்றறுதல் என்பது எனக்கு சித்திக்குமோ? ஆகையால், சற்குருவே, உனது வலிய திருவருள் சக்தி என்பொருட்டாக வந்து, அன்னியத் தோற்றத்திற்குக் காரணமாகிய 'தேகமே நான்' என்ற மயக்கத்தை என்று அழிக்குமோ?

## 43. உண்டருள வேண்டல்

478. கருணைப் பெருநிதியென் கண்காண வந்த
வருணா சலரமண வப்பா — குருவடிவத்
தெய்வமே யுன்றன் றிருவருளுக் கூணாகச்
செய்வதொன்றே நான்வேண்டுந் தீர்ப்பு.

என் கண்களால் நான் காணும்படி என்முன் எழுந்தருளிய கருணைப் பெருநிதியாகிய அருணாசலரமண அப்பாவே! என் சற்குரு வடிவ இஷ்ட தெய்வமே! உன் திருவருளுக்கு என்னை நீ ஊணாகச் செய்ய வேண்டும் என்ற ஒன்றுதான் நான் உன்னிடம் வேண்டுகின்ற தீர்ப்பாகும்.

479. [37]மாணா ரிருவரின் மத்தியிலே செந்தழலின்
றாணா யெழுந்தாய்க்குச் சூதனே — னூணா
வொழியும் பெருவரமீ தொன்றளித்தென் றுக்க
விழிநீ ரொழித்து விடு.

மாட்சிமை பொருந்திய தேவர்களான பிரம்மவிஷ்ணுக்களின் இடையில் அக்கினி ஸ்தம்பமாக எழுந்த உனக்கு பொய்யெழுச்சியாக எழுந்த வஞ்சகனாகிய நான் ஊணாகி ஒழிந்துவிடும் இந்த ஒரே பெரிய வரத்தை எனக்கு அளித்து, என் கண்களிலிருந்து பெருகும் துயரக் கண்ணீரை ஒழித்து விடுக.

480. தேகமன மெல்லாந் திருவருளா லுண்ணப்பட்
டேகரச ஞானான்ம வின்புருவா — யாகத்
திருவுளஞ்செய் யாயோமுன் றென்முகநோக் கோடென்
குருவடிவாய் வந்தோய் குளிர்ந்து.

முன்பு ஒரு நாள் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியான என் சற்குரு வடிவாய் என் முன் கருணையோடு எழுந்தருளி வந்த ஸ்ரீ ரமண தேசிகனே! என் தேகம் மனம் யாவும் உன் திருவருளால் உண்ணப்பட்டு ஏகாத்ம ஞானப் பேரின்ப ரசமாக ஆகும்படி நீ திருவுள்ளம் கொள்ள மாட்டாயோ?

481. வானவர்க் காக மலையா வெழுந்தநீ
யீனனெனக் காக விறைரமண — மானிடனா
வந்த குருவாம் மகேசஞா னாக்கினியே
யிந்தனமாக் கொள்வா யெனை.

பிரம்ம விஷ்ணுக்களான தேவர்களுக்காக முன்னொரு காலத்தில் அண்ணாமலை யென்ற வடிவத்தோடு உருக்கொண்டு எழுந்தருளி வந்த நீ இன்று அற்பனாகிய எனக்காக ஸ்ரீ ரமணேசனாய் மானிட உருக்கொண்டு வந்த சற்குருவாகிய மகேசுவர ஞானாக்கினியே! என்னை உனக்கு விறகாக ஏற்றுக்கொள்வாயாக.

482. எப்படியோ தோன்றி யிருக்கு(ம்)நா னென்னுணர்வைத்
தப்பியதா லூனுலகைச் சங்கற்பித் — தொப்பியெதிர்
காணாநின் றாவல் கலங்குகின் றேனையுனக்
கூணாக்கிக் கொள்வா யுகந்து.

என் ஆன்மவுணர்வினின்றும் எப்படியோ நழுவித் தவறியதால் ஒரு தனி வியக்தியாகத் தோன்றிக் கொண்டிருக்கும் நான் எனக்கோர் உடலையும் உலகத்தையும் கற்பித்துக் கொண்டு, அவை எதிரே காணப்படுவது உண்மை என்று நினைத்து, அவற்றின் மேலுள்ள ஆசையால் கலங்குகின்றேன். இப்படித் தோன்றிய என்னை நீ மகிழ்ச்சியோடு உனக்கு ஊணாக்கிக் கொள்வாயாக.

483. அடங்காப் பிடிவாத வாங்காரச் சிந்தை
விடங்காட்டும் பாதை விரைந்து — திடங்கெட்டு
வீணாகா துன்றனருள் வீரத்தா லென்னையுனக்
கூணாகச் செய்க வுவந்து.

[37]'மாணார் இருவர்' = பிரம்ம விஷ்ணுக்கள்.

எழுகின்ற இவ் வகங்காரச் சிந்தையானது காட்டிக் கொடுக்கின்ற விஷ சமான பாதைகளிலேயே, விவேகத்தால் எவ்வளவு புத்தி சொன்னாலும், பிடிவாதமாகவும் அடங்காமலும் விரைந்து பாய்ந்து வலிவிழந்து, நான் வீணாகாமல் என்னை உன் அருள் வீரத்தால் அடக்கி உனக்கு ஊணாகும்படி மகிழ்ச்சியோடு செய்தருள்வாயாக.

484. எனக்கென் றிருப்பொன் றிருக்குமட்டுந் துன்ப
மனக்குறைகள் கொஞ்சமெனு மாறா — வுனக்கூணா
வென்னையுண்டு தீர்ப்பா யெனிற்பின் மனக்குறையார்க்
கென்னையுண் டாகு மிலை.

என்னுடையதாக ஒரு தனி இருப்புணர்வு ('நான் இத் தேகம்' என்ற அகந்தையுணர்வு) தோற்ற மாத்திரமாக இருக்கும் வரையிலும், மனக்குறைகளாகிய துன்பங்கள் சிறிதளவும் நீங்கா. ஆனால் என்னை உனக்கு ஊணாக நீ உண்டு தீர்த்துவிட்டால், அதன் பிறகு யாருக்கு என்ன மனக்குறைகள் உண்டாக முடியும்? ஒன்றுமில்லை.

485. உள்ளப் பரிசுத்த மொன்று மிலாக்கொடியக்
கள்ள னெனக்குமுனைக் காட்டிவைத்த — வள்ளலே
யக்கருணை போன்றே யகமுகமா யுள்ளத்துட்
புக்கடங்க வைத்தும் புசி.

சித்தசுத்தி யொன்றுமில்லாதக் கொடிய கள்ளனாகிய என்னையும் சற்குரு வடிவில் உன்னைத்தரிசிக்கச் செய்த அருள் வள்ளலே! அப்படிச் செய்த உன் கருணையாலேயே நான் அகமுகப்பட்டு உள்ளத்துட் புகுந்து அடங்கவும் வைத்து என்னைப் புசிப்பாயாக.

486. எல்லாஞ் செயவல்ல வெம்பிரா னுன்கழலின்
வல்லாண்மை நம்பியே வாழ்கின்றே — னல்லார்ந்த
வற்பனே னெஞ்சை யருளால் விழுங்குவையே
னிற்பனா னற்ற நிலை.

எல்லாம் செய்ய வல்ல என் ஆண்டவனாகிய உனது திருவடிகளின் அருட்சக்தியை நம்பியே நான் வாழ்ந்து வருகிறேன். அஞ்ஞானத்தால் இருண்ட இவ் வற்பனது மனத்தை நீ அருளால் விழுங்குவை யேயானால், அகந்தையற்ற ஆன்ம நிலையில் நான் நிஷ்டையுறுவேன்.

487. தன்னுள்ளே யாழ்வதற்குச் சாதகமாஞ் சூழ்நிலையை
யென்னென்ன வாறோநீ யீகின்றாய் — என்னினு(ம்)நான்
வீணாக்கி யஃதை வெளிமுகத்தே னானேனுன்
னூணாக்கி யென்னை யொழி.

தன்னாட்டங் கொண்டு உள்ளே திரும்பி ஆன்மாவில் மூழ்குவதற்குச் சாதகமான எத்தனையோ விதமான சூழ்நிலைகளை எப்படி யெப்படியோ எல்லாம் நீ எனக்குத் தினமும் கொடுத்துக்கொண்டே வருகிறாய்! அப்படி யிருந்தும், நான் அவற்றை யெல்லாம் வீணாக்கி வெளிமுகத்தோனாகவே இருக்கின்றேன். ஆகையால் உனக்கு ஊணாக்கி என்னை ஒழிப்பாயாக.

488. எழும்பா திருப்பா விருக்கும் பணியே
தொழும்பா வெனக்குறநீ தோன்றி — விழுங்காயோ
நானிதுவென் றுந்தி நலந்தீமை யாற்றவெழு
மீன வுபாதி யெனை.

'நான் இன்னார்' என்று எழாமல் 'நான் இருக்கிறேன்' என்ற இருப்பு மாத்திரமாக இருக்கும் நிலையையே எனக்கு இறைபணி யாகுமாறு நீ 'நான் நான்' என்று ஸ்புரித்துத்

தோன்றி, 'நான் இது' என்று தாவியெழுந்து நல்-தீ வினைகளைச் செய்யக் கிளம்பும் அற்ப வுபாதியாகிய என்னை அடியோடு உனக்கு ஊணாக விழுங்க மாட்டாயோ?

489. உன்பாற் றிரும்பி யுளத்துள் ளொடுங்கும்பே
ரன்பா லெனைவிழுங்கி யாண்டருள்க — வென்பான்முன்
பேரிரக்கங் கொண்டு பிடித்திளமை யிற்கொணர்ந்தோய்
வாரி யெடுத்து வளைத்து.

என்னிடம் முன்பு மிகுந்த கருணை மேலிட்டு என்னை இளமையில் உன் திருவடிக் கீழ் பிடித்துக்கொண்டு வந்தாயே! அதனால் நான் உன்னை நோக்கி உள்ளத்துள் திரும்பி உன்னிடம் ஒடுங்க வேண்டும் என்ற பேராசையை எழுப்பி, என்னை வாரி யெடுத்து வளைத்து விழுங்கி ஆண்டருள்வாயாக.

490. ஏதுமுனை மீறாவா றெல்லாம்வல் லாய்மற்றென்
மீதுகரு ணைபொழியு மேகமுநீ — யீதிரண்டு
முண்மையே லின்னேநீ யுண்டென்னை யுன்னருளின்
வண்மைநிலை நாட்டியருள் வாய்.

எந்த சக்தியும் உன் அருளிஷ்டத்தை மீற முடியாதவாறு எல்லாம் வல்லவனே! மேலும் எல்லாரையும் விட என் மீது கருணை மழை பொழிகின்ற மேகமும் நீயே யல்லவா? இவ் விரண்டும் உண்மையாகுமானால், இப்போதே நீ என்னை உண்டு உனது திருவருள் கொடைத் திறத்தை நிலைநாட்டி அருள்வாயாக.

## 44. ஐக்கியம் வேண்டல்

491. யாரு மறியா தவரவர்தம் முள்ளத்தி
லாருயிரா வாழு மசலனே — பாரனைத்தின்
மெய்ப்பொருளே சற்றுமுனை மீறாத வாறடிக்கீ
ழைக்கியமா வென்னை யடக்கு.

ஒவ்வொருவர் உள்ளத்திலும் யாரொருவரும் அறியாத படி அவர்களது ஆருயிராகிய ஆன்மாவாக வாழ்கின்ற ஸ்ரீ ரமண அசலனே! இந்த உலகங்கள் அனைத்தின் மெய்ப்பொருளே! நான் உன்னைக் கொஞ்சமும் மீறாதபடி உனது திருவடிக் கீழ் ஐக்கியமாக அடக்கியருள்க.

492. அடங்கினா லன்றியென்று மாராலு மெய்தற்
கிடங்கொடா வீடா மிதயத் — தடங்கடல்வா
யுப்புப் பதுமையா யூறி யுருக்கரைய
வைப்பதெனை யுன்மெய் வலம்.

முற்றிலும் அடங்கினாலன்றி யாராலும் எக்காலத்திலும் அடைவதற்கு இடங்கொடுக்காத வீடாகிய இதயம் என்னும் பெரும் சமுத்திரத்தில் நான் ஓர் உப்புப் பொம்மையாக ஊறி என்னை உருக்கரைய வைக்கக் கூடியது உன் சத்திய திருவருட் சக்திக்கே இயன்றதாகும்.

493. திருவருளாற் சித்தந் தெளிந்து தெரியிவ்
வுருவுலகி லொன்று முருசி — மருவுகிலா
தென்று மியல்பா யிருக்குமுனி லன்புருவா
யொன்றவெனை யாளாக் குனக்கு.

அத்தகைய உனது திருவருட் சக்தியால் என் சித்தம் தெளிந்து, தோற்ற மாத்திரமான இவ் வுலக வடிவப் பொருள்களில் ஒன்றில் கூட விருப்பம் அடையாமல், என்றும் இயல்பாகவே இருந்து விளங்கும் அன்பு வடிவான உன்னோடு நான் ஒன்றாகிவிடும்படி என்னை உனக்கு ஆளாக்குக.

494. ஒருமையோ டச்சின்மே லூன்றிநிற்போ ரன்றிக்
கருமச் சுழற்சக் கரத்தி — லொருசிறிது
நீங்கினுமே தான்சுழல நேருவதா லுன்னைவிட்
டியாங்குமக லாமை யருள்.

ஒரு சுழலும் சக்கரத்தின் சுழலாக அச்சு போல உள்ள ஆன்மாவிலேயே ஏகாக்கிரத்தோடு நிஷ்டையுற்று இருப்பவர்களைத்தவிர, கர்மங் களாகிய சுழலும் சக்கரப் பகுதிக்கு ஒரு சிறிது நீங்கி வந்தாலுங்கூட, தாமும் கர்த்தா-போக்தாவாகச் சுழல நேருவதால், அச்சு போன்ற ஆன்மாவாகிய உன்னை விட்டு நான் சிறிதும் எங்கும் அகலாத ஐக்கியத்தை அருள்வாயாக.

495. ஆமா றுனக்கடிமை யன்றிமனம் போனவழிப்
போமா றினியேனும் போக்காதே — காமாதி
யெவ்விகற்ப மும்பொருந்தா வின்பநிலை யேதுண்டோ
வவ்விடத்தி லென்னை யணை.

உனக்கு மனம் அடிமையாகுவது விட்டு, அது போன வழிக்குப் போகுமாறு இனியேனும் அனுமதிக்காதிருப்பாயாக. காமாதிகளாகிய எந்தவித விகற்பங்களும் வந்து சேர முடியாத பேரின்பநிலை ஏதொன்றுண்டோ, அவ் விடத்திலேயே என்னை அணைத்து வைத்துக் கொள்வாயாக.

496. தன்மறுப்பு முற்றச் சமைந்து பிரமாதப்
புன்மயக்க மீண்டும் புகாதபடி — நின்மலர்த்தா
ணன்றா யழுத்தியெனை ஞானக் கடலடியி
லொன்றாக்கிக் கொள்ளவென்மே லூன்று.

அகந்தை மறுப்பாகிய தன்னடக்கம் எனக்குப் பூரணமாக ஏற்பட்டு, பிரமாதமாகிய அற்ப மாயை மீண்டும் உண்டாகாதபடி என்னை ஞானக் கடலின் ஆழத்தில் நன்றாக அழுத்தி மிதித்து ஒன்றாக்கிக்கொள்ளுமாறு உன்னுடைய தாமரைத் திருவடிகளை என்மேல் ஊன்றி யருள்வாயாக.

497. இயல்பான வான்மசுக மெவ்விதமோ வஃதை
மயல்படா லின்றி வழங்கிப் — புயனெஞ்சப்
போலி யுயிரைப் புசித்தென்னை நீங்காதுன்
காலிணையிற் சேர்த்தருளாற் கட்டு.

என்றும் சகஜமாய் விளங்கும் ஆத்ம சுகம் எத்தகையதோ அதன்மேல் எவ்வித மாயமும் படராதபடி அதை உள்ள படியே எனக்கு வழங்கி, புயலைப் போல அலையும் வேகமுள்ள போலியுயிராகிய அகந்தையை நீ ஊணாக்கிக்கொண்டு, மீதியுள்ள என்னை உன் திருவருளால் உன் திருவடிகளில் சேர்த்து அவற்றை விட்டு என்றும் நீங்காதபடிக் கட்டி வைப்பாயாக.

498. பின்னிடா வூக்கப் பெருமுயற்சி கொண்டுமனத்
தன்னியப்பற் றெல்லா மறவகற்றித் — தன்னுள்ளே
யூன்றியக லாக்கவனத் தோடென் னுதிதலமுன்
பூன்றபதஞ் சேரப் புணர்த்து.

நான் தளராத ஊக்கத்தோடு பெருமுயற்சி மேற்கொண்டு, உள்ளத்தில் அன்னியப் பொருள்களின் மேலுள்ள பற்றுக்களை யெல்லாம் அறவே அகற்றி, ஆன்மாவில் ஊன்றி அதை விட்டு நீங்காத கவனத்தோடு என்னுடைய உற்பத்தி ஸ்தானமாகிய உனது பரிபூரணத் திருவடிகளிலேயே இருக்கு மாறு என்னைச் சேர்த்து வைப்பாயாக.

499. என்னிடத்தி லென்னா லெழுந்தன் னியம்போலென்
முன்னிலையிற் காணு முலகாதி — முன்னியே
யுன்னை யகன்ற வுணர்வுடையே னானேனின்
னின்னருளா லென்னை யிணை.

என்னிடத்திலிருந்து என்னாலேயே எழுந்து எனக்கு அன்னிய வஸ்துக்கள் போலவே என் முன்னால் காணப்படுகின்ற இந்த உலகம் முதலிய வெளிப் பொருள்களையே நினைத்து, அதனால் உன்னை விட்டு நீங்கிய (வியோக) உணர்வுடையவனானேன். ஆகையால் உன்னுடைய திருவருளாலேயே என்னை உன்னோடு இணைப்பாயாக.

500. கனவுக்கு மூலமோர் காட சுழுத்தி
நனவுக்கு மூலமஞ் ஞானம் — மனதுற்ற
விவ்வவத்தை யெல்லா மிலாம லிதயத்தி
லவ்வியத்த மாக வணை.

கனவு உண்டாவதற்கு மூலகாரணமான ஆதாரம் ஒரு கட்டை போன்ற தூக்கமே யாகும்; அவ்வாறே, இந்த நனவு என்னும் வாழ்வு தோன்றுவதற்கு ஆதாரமான தூக்கம் அஞ்ஞானமே யாகும். மனத்தால் அனுமானிக்கப்படுகின்ற இந்த பேத அவஸ்தைக ளெல்லாம் இல்லாமல் என்னை இதயத்தில் இரண்டற அணைத்தருள்க.

501. சுத்தப் பிரஞ்ஞை சொரூபமா நின்றென்று(ம்)
மித்தை யெழுச்சி வெளிப்படா — வத்துவிதப்
பேரின்ப வீட்டிற் பிரம்மசாட் சாற்காரஞ்
சேரும் படிசெய் திரு.

நான் எப்போதும் உபாதியற்ற பிரஞ்ஞை வடிவாகவே நிலைபெற்று, அகந்தையாகிய பொய்யெழுச்சி உண்டாகாமல் அத்வைதானுபவ மாகிய பேரின்ப வீட்டில் பிரம்ம சாக்ஷாத் காரத்தை நுகரும்படிச் செய்து நீ விளங்குவாயாக.

502. சும்மா விருக்கவொரு சூட்சுமமாஞ் சூத்திரத்தால்
வெம்மாயை விட்டென்னை மீட்டருள்வா — யம்மா
வருணா சலரமண வப்பாவே யாண்ட
குருநாதா வுன்னிலெனைக் கூட்டு.

ஸ்ரீ அருணாசலரமண அம்மையப்பனே! என்னை ஆட்கொண்ட குருநாதா! உயிர்கள் சும்மா இருப்பதற்கு ஒரு தவறாத சூக்ஷ்மமான சூத்திரமாகிய 'நான் யார்?' என்னும் ஆன்மவிசாரத்தால் என்னைக் கொடிய மாயையினின்றும் மீட்டு உன்னுடன் கூட்டியருள்வாயாக.

503. நீயே யெனக்குற்ற நேச(ம்) நினைப்பித்த
நீயே யெனைப்பெற்றோன் நீங்காத — நீயே
தடுத்தென்னை யாட்கொண்ட சற்குருவு(ம்) நீயே
யெடுத்தென்னை யுன்னோ டிணை.

நீயே எனக்கு நேசமான பொருள்; என்னிடம் உன் நினைப்பை நீயே பிறப்பித்ததால், நீயே என்னைப் பெற்றவன்; என்னை விட்டு எப்பொழுதும் நீங்காத நீயே என்னை

உலக வழிக்குப் போகாமல் தடுத்தாட்கொண்ட சற்குருவும் ஆவாய். ஆகையால், அப்படிப்பட்ட நீயே என்னைப் பக்குவப்படுத்தி எடுத்து உன்னோடு சேர்த்துக்கொள்வாயாக.

504. நானெழுச்சி யற்றசிவ ஞானப் பரவாழ்வு
தானளிக்க வேண்டுமென் றந்தையே — யூனடுத்தோ
சூட்சுமத்தோ காரணத்தோ தொத்தா துனைச்சேர
மோட்சமாங் கல்ய(ம்) முடி.

என் தந்தையே! 'நான்' என்ற அகந்தை யெழுச்சி அறவே இல்லாத சிவஞானப் பரவாழ்வை நீயே எனக்கு அளிக்க வேண்டும். அவ்வாறு என்னை வாழ வைப்போனாகிய நீ, நான் ஸ்தூல சூக்ஷ்ம காரண தேகங்கள் யாதொன்றின் மேலும் அபிமானத்தால் தொத்திக் கொள்ளாமல் உன்னோடே வாழ்ந்திருக்கும்படி மோக்ஷ மென்னும் மாங்கல்யம் சூட்டுவாயாக.

505. அஞ்சு புலனு மறிமனமு(ம்) நீங்கியபின்
மிஞ்சும் பரமோன வீட்டினிலே — துஞ்சாப்
பெருவாழ்வி லுன்னோடிப் பேதையே னும்போந்
திறுமாந் திருக்க விசை.

ஐம்புலன்களும் அவற்றின் அறிவுக்குக் காரணமாகிய மனமும் துறக்கப்பட்டு, அதன் பிறகு மிஞ்சி நிற்கும் பரமோனமான வீட்டிலே உன்னோடு இப் பேதையேனும் வந்து சேர்ந்து அழியாப் பெரு வாழ்வில் இறுமாந்து இருக்க இசைவாயாக.

506. அகமங்கம் புத்தி யழிரமண மான
சுகமங் கலவாழ்விற் சொக்கி — யிகபரமா
யேதொன்று மென்று மெனையன்றி யில்லாத
போதங்கண் டேரமிக்கப் புல்.

'தேகமே நான்' என்ற புத்தியை அழிக்கின்ற ஐக்கிய நிலையாகிய மங்களகரமான சுகவாழ்வில் (ஆன்ம நிஷ்டையில்) சொக்கிப்போய், என் இருப்பு மாத்திரத்தைத் தவிர இகமென்றோ பரமென்றோ ஏதொன்றும் எப்போதும் இல்லாத அத்வைத ஞானத்தைக் கண்டு, அதிலேயே நான் ரமித்து அனுபவிக்கும்படி என்னைச் சேர்வாயாக.

# வழக்கிடல் அதிகாரம்

## 1. உன் கடமை செய்தருள்

507. கடமை கடந்த கடவு ளுனக்கோர்
கடமை விதிக்கக் கடவேன் — மடமை
மகனெனைநீ பெற்று வளர்த்ததனா லிந்தச்
செகமிகழா வாறருளே செய்.

பஞ்சகிருத்தியங்களாகிய கடமையையும் கடந்து உள்ள கடவுளாகிய உனக்கு நான் ஒரு கடமை விதிக்க வேண்டியவ னாகின்றேன். அது யாதெனில், மடமையே வடிவாகிய என்னை நீ மகனாகப் பெற்று வளர்த்ததனால், என்னை இவ் வுலகம் பழித்து அதனால் உனக்கு இகழ்வு உண்டாகாதவாறு உன்னருளால் எனக்குத் தகுந்ததைச் செய்வாயாக. இதுவே உன் கடமை யாகும்.

508. நேரா யுனைநம்பு(ம்) நெஞ்சுந் தனையாரென்
றாராயு(ம்) நெஞ்சு மமைதியுறும் — ஓராறு
மூன்றிக் கடைப்பிடியா தோரப்புன் மேய்வேன்பா
லீன்றகட னுண்டே யிரங்கு.

தான் செய்ய வேண்டியதாக யாதொரு சாதனைப் பொறுப்பும் இன்றி நேராகவே உன்னை முழுவதும் நம்பும் ஒருவனும், அல்லது தன்னை 'நான் யார்?' என்று ஆராய்கின்ற ஒருவனும், அப்பொழுதே பேரமைதியை அடைவர். ஆனால் யானோ இவ் விரண்டில் யாதொரு மார்க்கத்தையும் ஆழ்ந்து கடைப்பிடியாமல், ஒவ்வொன்றிலும் மேலெழுந்த வாரியாக ஓரப்புல் மேயும் மாடு போல் இருக்கின்றேன். ஆயினும் என்னை உன் அடியவனாக ஏற்றுக்கொண்ட (உன் பிள்ளையாகப் பெற்றெடுத்த) கடமை உனக்கு உண்டல்லவா? ஆகையால் என்மேல் இரக்கப்படுவாயாக.

509. கற்கவுங் கற்றாங்கு நிற்கவுங் கில்லாது
தற்கருவத் தாலே சலிக்குமிவ் — வற்பனுக்குந்
தந்துன் றரிசனமுன் றாட்கொண்டா யேயின்று
நொந்தென் பயனருட்கண் ணோக்கு.

கற்க வேண்டியவற்றைக் கற்று, அவற்றிற்குத் தக நிற்க வேண்டியவாறு அடங்கி நிற்கவும் முடியாமல், தற்கருவத்தாலே அலைந்து கெடுகின்ற இவ் வற்பனுக்கும் முன்னொரு நாள் உன் தரிசனம் கொடுத்து ஆட்கொண்டுவிட்டாயே! இனி இன்று என் குறைகளைக் கண்டு நீ நொந்து கொள்வதால் என்ன பயன்? உன் அருட்கண்களால் என்னை நோக்குவாயாக.

510. வெளியோடும் வேட்கை வெறிதணிந்து ஞானத்
தெளிவோ டடங்கிச் சிவமா — யொளிரும்
பெருவாழ்வை யீயும் பெருங்கடன்கொண் டாய்நீ
குருவாகி யன்றெனையாட் கொண்டு.

நீ குருவாக இருந்து அன்று என்னை ஆட்கொண்ட தால், வெளியே அலையும் எனது ஆசை வெறிகளை யெல்லாம் தணித்து, நான் ஞானத் தெளிவோடு உள்ளே யடங்கி சிவமாகவே பிரகாசிக்கும் பெருவாழ்வை எனக்குக் கொடுக்க வேண்டிய பெருங் கடனாக ஏற்றுக்கொண்டு விட்டாய்.

511. பட்டகடன் றீர்க்கப் படாத வரையுனையான்
விட்டுவிடே னென்றறிந்தோ வெம்மாயக் — கட்டழலான்
மேன்மேலுஞ் சுட்டு விரட்டுகின்றாய் நின்னைவிட்டு
[38]நான்போக மாட்டே னகர்ந்து.

இவ்வாறு நீ பட்ட கடனை நீ எனக்குத் தீர்க்காத வரையில் உன்னை நான் விடவே மாட்டேன் என்று அறிந்து தானோ கொடிய மாயையின் பந்தத் தீயால் என்னை மேன்மேலும் சுட்டு விரட்டுகின்றாய்? அக் கடனை வசூலிக்காமல் நான் உன்னை விட்டு நகர்ந்து போகவே மாட்டேன். அறிக.

512. மண்பொன் பணந்தொடுதன் மாத்திரந் தான்கடனோ
கண்டொட்ட தென்னைக் கடனன்றோ — பண்டொட்ட
பாதத்தோ யேமாற்றப் பார்ப்பையேல் வட்டிமுதல்
வீதத்தா னீளு மிகுத்து.

மண்ணையோ பொன்னையோ பணத்தையோ ஒருவன் தன் கைகளால் தொட்டு எடுத்துக்கொள்வது தான் ஒரு கடனாகுமா? அன்று நீ உன் கண்களால் என்னைத் தொட்டது என்பால் நீ பட்ட கடன் அன்றோ? உத்தம அடியார்களால் பாடித் தொடப்பட்ட பாதத்தை யுடையவனே! நீ என்னை ஏமாற்றப் பார்ப்பாயாகில், நீ என்னிடம் பட்ட கடனுக்குக் கூடுதலாகும் வட்டியானது முதலின் வீதத்தில் வளர்ந்து மிகுந்துகொண்டே போகும் என்று அறிக.

513. பேச்செண்ண மற்றப் பிரம்ம சமாதிநிலை
மூச்சிழுத்தற் போற்சகஜ முற்றிடவே — யாச்சென்றாற்
கூர்ந்தவிழி யாலெனைநீ கொண்டகட னன்றேதான்
றீர்ந்ததெனச் சொல்வேன் றெரி.

சொல்லோ நினைப்போ சிறிதுமில்லாத பிரம்ம சமாதி நிலை எனக்கு மூச்சுவிடுவதைப் போன்ற முயற்சியற்ற சகஜமாக எப்பொழுது கைகூடுகிறதோ, அப்பொழுதுதான் உன்னுடைய அருள் கூர்ந்த விழிகளால் நீ என்னை ஆட்கொண்ட கடன் தீர்ந்தது என்று சொல்வேன். அறிந்து கொள்க.

514. வீடும் வசிக்கு மிடமுமெனக் கேனிதய
வீடடைந்து வாழ விடுவையேல் — ஈடிலா
வுன்பாத நீழலன்றி யும்பருல காட்சிதந்து
மென்பா லிரங்காமை யே.

நீ என்னை உன்னுடைய இதய வீடாகிய ஆன்மாவில் வாழ்ந்திருக்கும்படிச் செய்வாயாகில், பிறகு இவ்வுலகில் நான் வசிப்பதற்கு நல்ல வீடும் நல்ல இடங்களும் எனக்கு எதற்காக வேண்டும்? இணையற்ற இந்த இதய வீடாகிய உன் பாத நிழலைத் தவிர நீ எனக்கு தேவலோக ஆட்சியைக் கொடுத்தாலும், அச் செய்கை உனக்கு என்மேல் இரக்கம் இல்லை என்பதையே காட்டுவதாகும்.

[38] 'நான்வேறு நாடே னயந்து' எனவும் பாடம். இதன் பொருள்: "...நான் உன்னை விட்டு வேறு யாரிடமும் எதையும் விரும்பிச் செல்ல மாட்டேன்".

515. ரமண திருவடிக ணம்பியலால் யானோ
ரிமையு மிருப்பொன்று மில்லேன் — றமதருளால்
வாழ்விப் பதுமென் மனத்தையான் மக்கடலி
லாழ்விப் பதுமுன்பா டாம்.

என் சற்குருவாகிய ஸ்ரீ ரமண பிரானே! உன் திருவடிகளை நம்பி இருப்பதைத் தவிர, ஓர் இமைப் பொழுதுங்கூட எனக்கு வேறோர் இருப்பும் இல்லை. உன்னுடைய அருளால் என்னை வாழ்விக்க வேண்டியதும், என் மனத்தை ஆன்மக் கடலில் மூழ்குவிக்க வேண்டியதும் உன் கடனே யாகும்.

516. புலன்க ளளிக்குமிக போகப் புசிப்பிற்
கலங்கி யுனைமறந்தக் காலென் — னலங்களிலே
மிக்கக் கவலையுள்ள வேந்தே யெனைவிடுவித்
துய்க்கும் பொறுப்புண் டுனக்கு.

ஐம்புலன்கள் அளிக்கின்ற இவ் வுலக போகங்களை அனுபவிக்கும் போது அவற்றில் மயங்கி நான் உன்னை மறந்திருக்கும் சமயங்களிலும் கூட, என்னுடைய மெய்யான நன்மைகளிலேயே மிகுந்த கவலை கொண்டுள்ள குருதேவனே, என்னை அப் புலன்களின் சுவையிலிருந்து விடுவித்துக் காப்பாற்றும் பொறுப்பும் உனக்கே உண்டு.

517. சித்தப் பெருங்குழியிற் சேர்ந்தநசைக் குப்பையெலாஞ்
சித்தழலை மூட்டிச் சிதைவித்துப் — புத்தம்
புதிய களங்கமற்ற போதவெளி யாக்கும்
விதியுனக்குண் டென்பொருட்டு மேவு.

சித்தம் என்னும் பெரிய குழியில் கோடிக்கணக்கான ஜன்மங்களாக என்னால் சேர்த்து வைக்கப்பட்டுள்ள ஆசைகள் என்னும் குப்பை முழுவதையும் ஞானாக்கினியை மூட்டி எரித்து சாம்பலாக்கி, நவநவமானதும் களங்கமில்லாததுமான ஞானாகாசமாக அந்தச் சித்தத்தை என்பொருட்டு மாற்றும் கடமை உனக்கு உண்டு. அதைச் செய்தருள்வாயாக.

518. மெய்ச்சுகமா நீயே விளங்க விழிக்குருடா
நச்சுக் கனியருந்த நாடுமெனை — சொச்சொருப
நாட்டமுறக் கூட்டிவிட நாசகதி வீழாமன்
மீட்ட லுனக்கோர் விதி.

நீயே உண்மையான சுகமாக இதயத்தில் விளங்கிக் கொண்டிருந்ததும் கூட, அது தெரியாத விழியற்ற குருடனாய் உலக சுகங்களாகிய நச்சுக் கனியை உண்ணத் தேடியலையும் என்னை ஸ்வஸ்வரூப நாட்டம் அடையும்படி நீ உண்முகமாக்கி, விஷயங்களாகிய விஷத்தால் நான் நாசகதியில் விழாதபடி மீட்டு எடுக்க வேண்டியது உன்னுடைய ஒரு தலைவிதி யாகும்.

519. பேரறிவும் பேரருளும் பேத மறத்திரண்டு
சேர வெழுந்த சிவரமணா — காரகந்தைச்
சேற்றுண் முழுகித் திணறு மெனைக்கரைமே
லேற்றுங் கடமையுனக் கே.

பேரறிவும் பேரருளும் வேற்றுமையற்று ஒன்றாய்த் திரண்டு என் சற்குரு வடிவாக எழுந்தருளிய சிவரமணா! அஞ்ஞானமாகிய அகந்தைச் சேற்றினுள் மூழ்கித் திணறும் என்னை அதிலிருந்தும் மேலே எடுத்துக்கரையேற்றும் கடமை உன்னுடையதே யாகும்.

520. நம்பிக்கை வைத்தோய்ந்து நானிருக்கத் தக்கவருட்
செம்பொற்குன் றொன்றதுநீ சீரமணா — வெம்பியினி
யந்தகா ரத்துள் ளழுந்தா தெனைக்காத்தல்
தந்தையுன் பாரந் தரி.

நான் முழு நம்பிக்கை வைத்து, அதனால் யாதொரு முயற்சியும் தேவையற்று ஓய்ந்து இருக்கத் தக்க ஒரேயொரு அருட் செம்பொன்னாலாகிய மலை, ஸ்ரீ ரமணா, நீ ஒருவனே யாகும். இனியும் நான் துன்புற்று அஞ்ஞான இருளில் அழுந்திப் போகாதபடி என்னைக் காக்க வேண்டியது, தந்தையே, உன்னுடைய பாரமே யாகும். அதை நீயே தாங்குவாயாக.

521. உற்றார்மீ ளாத வுனது பெரும்பதத்தைப்
பெற்றாக வேண்டும் பிதாவேநான் — பற்றாத
பக்குவத்தே னாயினுமுன் பார்வைப் பரவலையிற்
சிக்கவைத்தா யன்றோநீ செப்பு.

பிதாவே, உன்னைச் சரணாகதியாக வந்தடைந்தவர்கள் பிறப் பிறப்பிற்கு மீண்டும் திரும்ப விடாத உனது அருட்பெரும் பதத்தை, அதற்குப் போதிய பக்குவமில்லாதவனே யானாலும், நானும் பெற்றே யாகவேண்டும். ஏனெனில், உனது அருட்பார்வையாகிய சிரேஷ்டமான வலையில் அன்றொரு நாள் நீ என்னைச் சிக்க வைத்தா யல்லவா? நீயே சொல்க.

522. யானே நினதுடைமை யாவ தறியாமல்
யானே னுடைமை யபகரித்தேன் — தானேநீ
யென்மடமை நீக்கி யிரண்டற் றெனையிருத்து(ம்)
நன்கடமை யுள்ளோ னடத்து.

நானே உன்னுடைய உடைமைப் பொருளாகின்றேன் என்பதை அறியாமல், உனக்கே சொந்தமான இவ் வுடல், உலகப் பொருள்களை என்னுடைய உடைமைப் பொருளாக ஏன் அபகரித்துக் கொண்டேனோ? நீயே என் இவ் வறியாமையைப் போக்கி, என்னை உனக்கு வேறான மற்றொரு பொருளாக்காமல் ஏகமாய் இருத்தி வைக்கவேண்டிய நல்ல கடமையுள்ளோனாவாய். ஆகவே அவ்வாறே அருள்க.

523.கைவிட்டா னீயெக் கடவுளரு மேயெதுவுஞ்
செய்வித் தருளுந் திறமையிலா — ருய்விக்க
வென்னை யுனதடிக்கன் றேற்ற கடமையுனக்
கின்னுமுள தென்னை யெடு.

நீ என்னைக் கைவிடுவாயானால், வேறு எந்தத் தெய்வங்களும் எனக்காக ஏதொன்றும் செய்தருளும் சக்தியில்லாதவர்களாவர். அன்று என்னை உய்விப்பதற்காக உனது திருவடிகளில் ஏற்றுக்கொண்ட கடமை இன்னும் தீராமல் உனக்கு இருந்தே வருகின்றது. ஆகையால் என்னை உய்வித்தருள்க.

524. இருப்பறியேன் றோன்று மியல்பறியே னுண்மை
விருப்பறியே னீயுள் விளங்கும் — புரிப்பறியே
னைம்புலனோ டாடி யழியுமெனை யுங்காக்க
வெம்பெருமா னீயறிவா யென்று.

'நான் யார்? எவ்வாறு இருக்கின்றேன்? எவ்வாறு அகந்தையாக எழுகின்றேன்? தோன்றும் அகந்தையாகிய என் இயல்பு என்ன?' என்று ஆராய்ந்து அறியாமலும், உன்னிடம் உண்மையான பக்தியும் கொள்ளாமலும், நீ உள்ளே ஆன்மாவாய் ஸ்புரித்து விளங்குவதை உணராமலும் நான் இருந்து வருகிறேன். ஏனெனில், ஐம்புலன்களோடு கூடி ஆடி அழிகின்ற என்னையும் நிச்சயமாகக் காப்பாற்றும் வழியை

எம்பெருமானாகிய நீதான் அறிந்திருக்கின்றாயே என்ற நம்பிக்கையில் தான் அவ்வாறிருக்கின்றேன்.

525. என்னசெயச் சொன்னாலுஞ் செய்வேனா னென்றெழும்பு
மன்னவர்க்கே நால்யோக மாற்றவைத்தா — யென்ன வொன்று(ம்)
நீயன்றி யென்னா னிகழாதென் றோரவைத்தாய்
ஈயின் றெனக்கஃ தெலாம்.

யாரொருவர் கர்த்துருத்துவ புத்தி யுடையவராய் "என்னை என்ன செய்யச் சொன்னாலும், நான் செய்வேன்" என்று எழும்புகின்றவர் களுக்கே கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்னும் நான்கு வித யோகங்களும் ஆற்றத் தகுந்தவையாய் நீ உலகில் வைத்துள்ளாய். ஆனால் எந்தவொரு காரியமும் நீ யன்றி என்னால் நிகழாது என்ற உண்மையை நான் உணருமாறு செய்தாய், அல்லவா? ஆகையால், எந்தெந்த யோகங்களால் எந்தெந்தப் பயன்களை நான் அடைய வேண்டுமோ, அவற்றை யெல்லாம் நீயே எனக்கு இப்பொழுதே செய்தருள்வாயாக.

526. என்றடைந்தே னுன்சரண மென்னை நடத்துகவென்
றன்றுமுத னன்றுதீ தத்தனையு — முன்றன்
பொறுப்பே ரமண புமானே யகந்தை
யறுப்பா யருணா சலா.

ஸ்ரீ ரமணேச்வரனே! 'என்னை நீயே நடத்தியருள்க' என்று முறையிட்டு உனது திருவடிகளை என்று அடைந்தேனோ, அன்று முதல் என்னிடம் இருக்க வேண்டிய நன்மைகள் தீமைகள் அவ்வளவும், என்னால் இயற்றப்பட வேண்டிய நன்மைகள் தீமைகள் அவ்வளவும், எனக்கு வந்து சம்பவிக்க வேண்டிய நன்மைகள் தீமைகள் அவ்வளவும் உன்றன் பொறுப்பேயாகக் கொண்டு, ஸ்ரீ அருணாசலா, நீ என் அகந்தையை அறுப்பாயாக.

527. வேண்டாமென் றுள்ளம் வெளியுலகை நீக்கவருட்
டூண்டா விடிலென் சுயவலிவாற் — றாண்டாநின்
றுய்யும் வழியெனக்கிங் கொன்றுமில்லை நீயேதான்
செய்யுங் கடனுள்ளோன் செய்.

வெளியுலக சுகங்கள் வேண்டாமென்று மனம் அவற்றை விலக்கி வைராக்கியம் கொள்வதற்கு உன்னுடைய திருவருள் உள்ளேயிருந்து தூண்டாவிட்டால், என்னுடைய சுயபுத்தி வலிமையால் அவ்வுலக சுகங்களைத் தாண்டி உருப்படும் வழி எனக்குக் கொஞ்சங்கூட இல்லை. ஆகையால், நீயே தான் நான் அவ் வுலக சுகங்களைத் தாண்டும் வழியைச் செய்யும் கடமையுள்ளவனாவாய். நீ அவ்வாறே செய்தருள்க.

## 2. உன் நினைவே தா

528. உன்னை மறந்திவ் வுலகை நினைந்திருக்கு
மென்னை மறந்தா யெனினீயும் — பின்னையோ
மீளா வதோகதியே மேவுவேன் நீநினைத்தா
லாளாவே னுன்னா லருள்.

உன்னை மறந்துவிட்டு, இவ் வுலக சுகங்களையே நினைத்து அவற்றிற்காகவே உழைத்துக் கொண்டிருக்கும் அறிவிலியாகிய என்னை நீயும் மறந்தாயென்றால், பிறகு என்ன ஆகும்? நான் மீளாத அதோகதியே அடைவேன். ஆனால் நீ கருணைகூர்ந்து நான் உருப்பட வேண்டுமென்று நினைப்பாயேயானால், அந்த உன்னுடைய அருளால் நான் உனக்கு ஆளாவேன். அருள் செய்வாயாக.

529.ஏது நினைப்பதிலு மெந்தா யுனதருட்சீர்
பாத(ம்) நினைப்பதுவே பாவனமா(ம்) — மீதியெலாம்
வீணினைப்பே யோயா வினைக்குவிப்பே யாகலினின்
றாணினைப்பே மாறாது தா.

என் தந்தையே! இவ் வுடலில் நான் உயிர்வாழ்ந்திருக்கும் நாட்களில் மற்ற எதை நினைப்பதையும் விட, உனது அருள் திருவடிகளை நினைப்பது மட்டுமே பரிசுத்தமான செயலாகும். மற்ற நினைவுக ளெல்லாம் வீண் நினைப்பே யாகும்! அவ்வாறு மற்றவற்றை நினைப்பது வினைகளை ஓயாமல் குவிப்பதே யாகும். ஆகையால், உனது திருவடியாகிய ஆன்ம கவனத்தையே எனக்கு என்றும் நீங்காமல் கொடுத்தருள்க.[39]

530. நின்னையே நோக்கி நிலைத்த மனத்தினனா
யென்னை நீ செய்தருள வெண்ணாயோ — முன்னைநா
டொட்டருட்சீர் பாதந் தொழுதடியேன் கேட்டதிதை
விட்டினொன்றோ மேவ விதி.

ஆன்மாவாகிய உன்னையே உள்ளே திரும்பி நோக்கி உன்னிடத்திலேயே நிலைபெற்ற மனத்தை யுடையவனாக என்னைச் செய்தருள நீ சங்கற்பிக்க மாட்டாயோ? உன்னை தரிசித்த பழைய நாள் முதற்கொண்டு உனது அருட்சீர் பாதங்களில் அடியேன் தினமும் தொழுது கேட்டு வேண்டி வரும் வரம் இதைத் தவிர வேறு இன்னொன்று உண்டோ? நான் இதை அடையுமாறு விதிப்பாயாக.

531. உன்னையன்றி யின்னொன் றுணரா வுளந்தந்தா
லென்னையறி கின்றதின்னு மென்னவோ — உன்னையன்றித்
தன்னை யறியநான் றானேது தன்னறிவோ
னுன்னையலா லாருண் டுரை.

ஆன்மாவாகிய உன்னைத் தவிர வேறு ஒன்றையுமே அறியாதவாறு உன்னில் மூழ்கிக் கிடக்கும் மனத்தை நீ எனக்கு அருள்வாயானால், அதன் பிறகும் என்னை அறிவது என்று வேறு என்ன இருக்கின்றது? உன்னைத் தவிர ஆன்மாவை அறிய நான் ஒருவன் யார்? தன்னை யறியக் கூடியவன் நீயே யன்றி, உன்னைத் தவிர வேறு யார் உண்டு? சொல்க.

## 3. நீ என்னை நினை

532. உன்னை மறந்திருளி னூடலைந்து துன்புழக்கு
மென்னையு மோர்பொருட்டா வேன்றுகொண்ட — வன்னையே
அண்ணா மலைரமணா வன்னியம்விட் டுன்னையே
யெண்ணாநின் றுய்யவெனை யெண்.

என் தாயே! உன்னை மறந்துவிட்டு உலகப் பொருள்களை அறியும் அறியாமை இருளில் அலைந்து, அளவற்ற துன்பத்தை அனுபவிக்கின்ற என்னையும் ஒரு பொருளாக அன்று உனது திருவடிக்கு ஏற்றுக்கொண்ட ஸ்ரீ அண்ணாமலை ரமணா! அன்னியப் பொருள்களை நினைப்பதை விட்டு இனி யேனும் நான் உன்னையே எண்ணி உய்வடைய வேண்டும் என்று நீ எண்ணுவாயாக.

[39] இந் நூலின் 639, 938, 949 பாடல்களின் கருத்தும் இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

533. நனவுக் கனவிதிலே நானாரென் றென்னை
வினவி யகஞ்சேர் விழிப்பான் — மனவடிவ
மாயை யகன்றபர வாலறிவா மட்டுமெனை
நீயிருத்தச் சற்றே நினை.

'நான் யார்?' என்று என்னையே விசாரித்து, அதனால் உள்ளத்தில் இந்த நனவாகிய கனவிலிருந்து விழிப்பு ஏற்பட்டு, இத்தனை காலமாக மன வடிவமாகவே தொழிற்பட்ட மாயை நீங்கப் பெற்று, உன்னதமான ஆன்ம ஞான வடிவமாக மட்டுமே என்னை இருத்துவதற்கு நீ சற்றே நினைப்பாயாக.

534. விலகா தகநாட்ட(ம்) மேவுமீ தொன்றே
யுலகோர் தொழிலுள் ளுயர்ந்த — நலவினையென்
றாதரமோ டெப்போது மாரவெனக் [40]கவ்வூக்க(ம்)
நீதரவே யென்னை நினை.

'உலகில் மானிடராய்ப் பிறந்தோர் செய்யத் தக்க காரியங்கள் யாவற்றுள்ளும் உயர்ந்த நல்ல காரியம் யாதெனில், சிறிதும் பிறழாமல் ஆன்ம நாட்டம் கொள்வதே யாகும்' என்று அறிந்து எப்போதும் ஸ்வாத்மப் பிரியத்தோடு அகநாட்டம் உற்றிருக்குமாறு அந்தப் பேரூக்கத்தை நீயே எனக்குத் தர வேண்டுமென்று நினைத்தருள் வாயாக.

535. கட்டான விச்சையெலாங் கானெரியிற் பஞ்சாக்கிச்
சுட்டாருந் தூயத் துரியமதிற் — கட்டாயம்
வந்தடியே னுன்றன் மலரடியில் வாழ்ந்திருக்கச்
சிந்தைகொண்டே சீரமணா செய்.

திரளான ஆசைகளை யெல்லாம்[41] காட்டுத்தீயில் பஞ்சைப் போல தூய துரிய ஞானத்தில் சுட்டுச் சாம்பலாக்கி, உன் அடியேனாகிய நான் உனது மலரடியில் கட்டாயமாக வந்து வாழ்ந்திருக்க வேண்டுமென்று, ஸ்ரீ ரமணா, நீ கருணைச் சித்தம் கொண்டு எனக்குச் செய்தருள்க.

536. ஓய்ந்தொழிந்த வாசனையா லுள்ளம் பரவெளியா
மீந்திருக்கும் பேரின்ப வீட்டினிலே — வாழ்ந்திருக்க
வண்ணா மலையா மமைதிப் பெருங்குவையே
யெண்ணாய் ரமணா வெனை.

சகல வாசனைகளும் ஓய்ந்து ஒழிந்து, அதனால் என் உள்ளம் வெறும் பராகாசமாக மிஞ்சி நிற்கும் பேரின்பமான முக்தி நிலையில் நான் வாழ்ந்திருக்குமாறு, அமைதிப் பெருந்திரள் வடிவான அண்ணாமலையே, ஸ்ரீ ரமணா, நீ என்னை நினைத்தருள்வாயாக.

537. முனைப்பறமுற் றோய்ந்தவென் மூலமா முன்னி
னினைப்பறநா னிற்க நினைப்பாய் — வினைப்பயனாச்
சீரழிக்கு மூடமலச் சித்தமுறை வாசனையை
வேரழித்து வெற்றி விளைத்து.

முன்வினைப் பயனால் என்னைச் சீரழிக்கும் அஞ்ஞான மலங்களாய் என் சித்தத்தில் குடிகொண்டிருக்கும் வாசனைகளை யெல்லாம் வேரோடு அழித்து வெற்றிகொண்டு, அதனால் அகந்தை அடியோடு முனைப்பற்று ஓய்ந்துபோன என் மூல நிலையமாகிய உன்னில் நான் யாதொரு நினைப்புமற்று நிஷ்டையுற்றிருக்கும்படி நீ நினைத்தருள்வாயாக.

---

[40] 'கன்பூக்கம் மீதுறவே யென்னை விதி' எனவும் பாடம்.

[41] 'என்னை பந்திக்கும் அபரவித்தைகளை யெல்லாம்' எனவும் பொருள்படும்.

538. எண்ணவலை வேனோ விருக்கின்ற தெந்தாயுன்
கண்ணெதிர்ப்பட் டின்னுங் கடையேனுள் — உண்ணவெனை
யின்னுந் திருவுளத்தா லெண்ணிலையோ வுண்முக(ம்)நான்
மன்னும் படிக்கே மகிழ்ந்து.

என் தந்தையே! உனது அருட்கண்ணில் எதிர்ப்பட்டுங் கூட இன்னும் இந்தக் கடையேனாகிய என்னுள் அலைகளாகிய எண்ணங்கள் ஏன் தான் நிலவுகின்றனவோ? நான் உண்முகப்பட்டு நிற்க வேண்டு மென்றும், நீ என்னை உண்டருள வேண்டு மென்றும் இன்னும் நீ உன் திருவுள்ளத்தால் மகிழ்ந்து சங்கற்பிக்க வில்லையோ?

539. மட்டில்லா மந்த மதியே னருள்வசத்துட்
பட்டில்லா தோடிப் பகிர்முகமே — கெட்டுள்ளே
னென்றாலு முன்ற னிணையடியே தஞ்சமா
நின்றேங்கு மென்னை நினை.

அளவு கடந்த மந்தமதியேனாகிய நான் உனது திருவருளுக்கு வசப்படாமல் பகிர்முகத்திலேயே ஓடிக் கெட்டுப் போயிருக்கின்றேன். ஆயினும், நான் உருப்படுவதற்கு உன் திருவடிகளையே தஞ்சமாகக் கெஞ்சி ஏங்கி நிற்கின்றேனல்லவா? ஆகையால், நீ என்னை நினைத்தருள்வாயாக.

540. சுட்டற் றொளிருஞ் சுயவுணர்வே ஞானமெனப்
பட்டப் பகலொளியாய்ப் பன்னியு(ம்)நீ — கட்டுற்ற
தேகோகக் கண்ணேன் றெரியா துழல்கின்றே
னீகாக்க வென்னை நினை.

முன்னிலைப் பொருள்களைப் போல் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியமற்று[42] தானாகவே விளங்கும் தன்னுணர்வு தான் ஞானம் என்ற உண்மையை நீ பட்டப்பகல் ஒளியைப் போல் தெளிவாக உபதேசித்திருந்தும், தேகாத்ம புத்தியால் பந்தப்பட்ட அறிவுடைய நான் அதைத் தெரிந்துகொள்ள முடியாமல் வருந்துகின்றேன். ஆகையால், என்னைக் காப்பாற்றுவதற்கு நீ தான் என்னை நினைக்க வேண்டும்.

541. ஆசைத்தீ முற்று மணைந்தருளா னெஞ்சமரு
ணேசத் திருவுருவா(ம்) நின்னடியில் — வாசமுற்றுப்
போக்குவர வற்றசிவ போக முறும்படியுன்
வாக்காலே யாசீர் வதி.

என் உள்ளத்திலுள்ள ஆசைத்தீ முழுவதும் உன் திருவருளால் அணைந்துபோய், அருணாசலேசனுடைய திருவுருவமேயாகிய உனது அடிகளில் என் மனம் ஸ்திரவாசமுற்று, ஜனன மரணப் போக்குவரவு அற்ற சிவபோகத்தை நான் உண்ணும்படி உன் அருள் வாக்காலேயே நீ ஆசீர்வதிப்பாயாக.

## 4. நீ நினைத்தா லாகும்

542. சற்றே திருவுள்ளஞ் சம்மதிப்பா யென்னிலென்றன்
பற்றெல்லா மோடிப் பறந்திடுமே — முற்று
மகமுகமே யாகமன மாழ்ந்திதய மூழ்கிச்
சுகவடிவிற் சொக்குஞ் சுகித்து.

நீ மட்டும் உனது திருவுள்ளம் சிறிது சம்மதிப்பாயானால், என்னுடைய பற்றுகளெல்லாம் பறந்தோடிப்போகுமே; மனம் அகமுகமாக முற்றும் ஆழ்ந்து இதயத்துள் மூழ்கி சுகமாகிய ஆன்ம சொரூபத்தில் சுகித்துச் சொக்கி நிற்குமே!

[42] 'நான் இன்னார் என்ற வடிவில் உணரப்படும் அகந்தை யுணர்வற்று' எனவும் பொருள்படும்.

543. கோடானு கோடியண்ட கோளங்க ளுன்னருளாற்
கோடா தியங்கிவந்து கொண்டிருக்கக் — கேடான
வற்பனேன் புத்தி யருளுக் கடங்காதோ
நிற்பிப்பா யுன்வசமென் னெஞ்சு.

கோடிக்கணக்கான அண்ட கோளங்கள் ஆகாய வீதியில் உன்னுடைய அருளால் தமது கதி பிறழாமல் இயங்கி வந்து கொண்டிருக்க வில்லையா? அப்படியிருக்க, மிகக் கீழான இவ் வற்பனுடைய புத்தி மட்டும் உன்னுடைய அருளாணைக்கு அடங்காமல் போய்விட முடியுமோ? முடியாது! ஆகையால், என் மனத்தை உன் வசப்படுத்தி நிற்கச் செய்வாயாக.

544. சருவசத்தி யானவென்றன் றாயுமெதி ராடாள்
நிருவிகற்ப முற்றொடுங்கி நிற்பாள் — அருணசைலத்
தந்தையே நீவிரும்பிற் சத்தியொன்று மில்லாவென்
சிந்தையோ நிற்காது செப்பு.

"அசலவுருவில் அச் சத்தி யொடுங்கிட வோங்கும்"[43] என்ற உனது அருள்வாக்கினின்றும் சர்வசக்தியாகிய என் தாயும் உன் எதிரில் தன் சக்தியால் ஆட முடியாமல் அன்பால் நிர்விகற்பமுற்று உன்னில் ஒடுங்கி நிற்பாள் என்ற உண்மை விளங்குகின்றதே. ஸ்ரீ அருணாசல தந்தையே, அத்தகைய நீ விரும்பினால், யாதொரு சக்தியுமில்லாத என் சிந்தை தானோ நிற்காமல் அலையும்? நீயே சொல்வாயாக.

545. அருட்சித்த மென்மே லடைவாயேன் மோக
வெருட்சிப் படுகுழியின் மீள்வேன் — குருப்பொற்றா
ளொன்றே செயவல்ல தல்லா லுலகெதிலு
மின்றே யுதவி யெனக்கு.

என்மேல் நீ அருள் சித்தம் கொள்வாயாகில், என்னை வெருள வைக்கும் மோகப் படுகுழியினின்றும் மீள்வேன். இதைச் செய்விக்க வல்லது என் சற்குருவாகிய உனது பொன் போன்ற திருவடிகளொன்றே யாகும்; அதைத் தவிர, எனக்கு இவ் வுதவி செய்யத் தக்க சக்தி எந்த உலகத்திலுமே இல்லை.

546. எண்ணத்திற் சொல்லி லெழுத்தி லடங்காத
வண்ணத்தி லென்கண்முன் வந்தோனே — திண்ணத்தோ
டென்னை யினிப்பிறவா வின்பநிலை சேர்க்கநீ
யுன்னி னுடனே யுறும்.

நினைப்பாலும் சொல்லாலும் எழுத்தாலும் வர்ணிக்க முடியாத பேரழகுவாய்ந்த ஸ்ரீ ரமணத் திருமேனி தாங்கி என் கண் முன்னே வந்து தோன்றிய கடவுளே! என்னை இனிமேல் பிறவாப் பேரின்ப நிலையில் சேர்க்க நீ மட்டும் திண்ணத்தோடு ஒரு முறை நினைப்பாயாகில், அது உடனே நடைபெறும்.

547. நீமட்டு மென்னையோர் நெல்லின் முனையளவுச்
சேமத் திருத்தத் திருவுளத்திற் — காமுற்றா
லக்கணமே முத்தி யனாதிமல வாசனையு
முக்கரும மும்போய் முடிந்து.

என்னை க்ஷேமத்தில் இருத்த உன் திருவுள்ளத்தில் நீ மட்டும் ஒரு நெல்லின் முனையளவு விருப்பப்படுவாயானால், அந்த க்ஷணத்திலேயே அனாதி மலங்களாகிய மூவாசனைகளும் முக்கருமங்களும் அழிந்து முடிந்துபோய் முக்தி கிடைத்து விடும்.

[43] 'ஸ்ரீ அருணாசல நவமணிமாலை'யின் முதற் பாடலைக் கவனிக்க.

548. அருட்டந் திரமுன்பா லாயிரங் கோடி
யிருக்கின்ற தென்னையுய் விக்க — விருட்பிலத்துள்
ளெத்தனைதா னாழ்ந்த வெளியேனா னாயினுமென்
பத்தமன மெல்லாம்[44] பறித்து.

எளியேனாகிய நான் இருளாகிய நரகத்துள் எவ்வளவு தான் ஆழ்ந்து முழுகிக் கிடக்கின்றேனாயினும், என்னுடைய பந்தவடிவ மனத்தை முழுவதும் பறித்து என்னை உய்விப் பதற்கு உன்னிடம் அருள் தந்திர முறைகள் எத்தனையோ ஆயிரங்கோடிக்கணக்கில் இருக்கின்றன, அல்லவா?

549. சுட்டப் படாத சொரூப சுகானுபவம்
பட்டப் பகலாப் பளிச்சிட்நீ — யிட்டமுற்றாற்
செய்தவமொன் றில்லாச் சிறியே னெனக்குமஃதோ
ரெய்தவரி தாமோ வியம்பு.

இப்படிப்பட்டது என்று குறித்து விளக்க முடியாத ஆன்ம சொரூப சுகானுபவம் எனக்குப் பட்டப்பகலில் விளங்கும் சூரியனைப் போலப் பளிச்சிட்டு விளங்க வேண்டும் என்று நீ இஷ்டமுற்றால், பூர்வ தவமொன்றும் செய்தில்லாத சிறியேனாகிய நானும் அதை அடைவது அரிதாகிவிடுமோ? நீ சொல்வாயாக.

550. ஆரம்பங் காணா வனாதி மனமாயை
பேரும் படியருளும் பெம்மானீ — தீரஞ்
சிறிதுமிலா வென்மேற் சிறிதிரக்க மேனு
முறுதியே லுய்வெனக்கு முண்டு.

ஆரம்பங் காண முடியாத மனமாயையானது அனாதியே யாயினும் அந்தமுடையதாக அதை அழித்தருளும் பெருமானாகிய நீ சிறிதும் வைராக்கிய தீரம் இல்லாத என்மேல் கொஞ்சமாவது இரக்கம் அடைவாயேயானால், எனக்கும் உய்வு உண்டு.

551. எழுத வொணாத வியற்சீர் பகவன்
முழுமுதனீ வந்து முனைந்தா — லழுதழுது
மாயு மடியேன் மனத்துயரந் தீர்ந்தடியோ
டோயு மருள்வா யுடன்.

வர்ணிக்க முடியாத மேன்மைகளை சகஜமாக உடையவனாகிய ஸ்ரீ ரமண பகவானே! முழுமுதற்பொருளாகிய நீ மட்டும் எனக்கு அருள் செய்தே தீருவது என்று வந்து முனைவாயாகில், அப்போதே பலகாலமாக அழுதழுது நொந்து மடியும் என் மனத் துயரங்களெல்லாம் அடியோடு தீர்ந்து ஓயும். அவ்வாறே உடனடியாக அருள்வாயாக.

552. சற்பார்வை கொண்டிச் சகப்பார்வை நீங்கியுனோ
டெப்போது(ம்) நீங்கா திணைந்திருக்கக் -கற்காத
பேதையா னேனுன் பெருங்கருணை யுண்டேலென்
வாதையறும் ஞானம் வரும்.

ஆன்ம திருஷ்டி கொண்டு அதனால் இவ் வுலகப் பார்வை முழுவதும் நீங்கி எப்போதும் உன்னோடு நீங்காது இணைந்து இருக்கும் ஞானக் கல்வியைக் கற்காத அறிவிலியாக நான் ஆனேன். ஆனால் உனக்கு அருட் பெருங்கருணை என்மீது உண்டாகுமாயின், என் துன்பங்களெல்லாம் அழிந்து ஞானம் எனக்குக் கிடைக்கும்.

---

[44] 'பறித்து உய்விக்க' எனக் கூட்டுக.

## 5. ஆண்டநிற் கழகோ?

553. பொறுப்பேற்றுக் கொண்டகுரு போதரம ணாநீ
வெறுப்பேற் றெனையினிக்கை விட்டாற் — பிறப்பேற்று
மீளாப் பழிதுன்ப மேவுவனே யீதழகோ
ஆளா வெனையாண் டவற்கு.

எனது சகல பொறுப்புக்களையும் ஏற்றுக்கொண்ட ஞானகுருவாகிய ஸ்ரீ ரமணா! எக்காரணத்தை முன்னிட்டாவது என்மேல் வெறுப்படைந்து என்னை இனி நீ கைவிடுவாயாகில், மீண்டும் பிறவிகளை அடைந்து மீளாப் பழியும் துன்பங்களும் அடைவேனே. என்னை உனது ஆளாக ஆட்கொண்ட உனக்கு இது அழகாகுமா?

554. ஆண்ட வுனக்கீ தழகோவென் றன்பருனை
வேண்டுவதைக் கேட்க மிகவிருப்பம் — பூண்டனையோ
என்சொல்வே னின்னுமின்னு மேங்கிப் புலம்புவதோர்
நன்சொல்லோ [45]நின்புகழை நாட்டு.

'ஆட்கொண்ட உனக்கு இது அழகாகுமா?' என்று உன் அடியார்கள் உன்னை வேண்டிக்கொள்ளும் பிரார்த்தனையை அடிக்கடி கேட்பதற்கு நீ மிகவும் விருப்பங்கொண்டுவிட்டாயா? மேலும்மேலும் நான் ஏங்கிப் புலம்புவது நல்ல பிரார்த்தனைகளாகுமோ? இது பற்றி நான் என்ன சொல்வேன்? கேளாது அளிக்கும் உன் கேடில்லாப் புகழை நீ நிலைநாட்டுவாயாக.

555. உன்னி னயலா யுடலிருப்பா யானென்றொன்
றின்னு மெழவிடுவ தேற்குமோ — முன்னைப்
பிரமனரி யான பெருமெழுச்சி யுந்தோற்
றுரனறவோங் குற்ற வுனக்கு.

முன்னொரு காலத்தில் பிரம்ம-விஷ்ணுக்களாக எழுந்த மிகச் சக்திவாய்ந்த இரு பெரும் அகந்தையெழுச்சிகளும் வலிவிழந்து தோற்றுப் போகும்படி அண்ணாமலையாக ஓங்கி யெழுந்த நீ, உனக்கு அயலாகவும் இந்த உடல் அளவாகவும் 'நான்' என்று ஓர் அகந்தையெழுச்சி இன்னும் எழுந்து உழலுமாறு அனுமதித்துக் கொண்டிருப்பது உனக்கு ஏற்குமோ?

556. சற்று மயல்படராச் சச்சிதா னந்தமா
முற்று மொளிர்ந்திடுமுன் முன்னிலையைப் — பெற்றிருந்து(ம்)
முக்குணத்த தாகு முனைப்பெழநீ விட்டிருத்தற்
றக்கதுவோ வீதோ தயை.

சிறிதும் மாயையின் நிழல்கூடப் படாத சச்சிதானந்தமாகப் பூரணமாய் விளங்கிக் கொண்டிருக்கும் பரமாத்மாவாகிய சற்குருவே! உன்னுடைய முன்னிலையை நான் அடைந்திருந்துங் கூட, முக்குண வசத்ததாகிய 'நான்' என்ற ஒரு முனைப்பு எழும்படி நீ விட்டிருப்பது தக்கதோ? இதுவோ உனது கருணை?

557. அருட்பெருமை சிந்தியா தந்தோவென் னெஞ்ச
மருட் குடில வாழ்வைநிச மாகப் — பொருட்படுத்தி
யெத்தனையோ வோயாம லெண்ணவலைப் பாழ்படநீ
வைத்தனையே வண்மையிதோ மாற்று.

அந்தோ! என் மனம் உன் திருவருள் பெருமையையே சதா தியானிக்காமல், அதற்கு மாறாக மருளால் தோன்றியிருக்கும் அற்ப தேக வாழ்வையே என்னுடைய

[45] 'நின் புகழ்' — "கேளா தளிக்கும் உ ன் கேடில் புகழ்" (ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை — 22)

உண்மையான வாழ்வாகப் பொருட்படுத்தி, அதை முன்னிட்டு ஓயாமல் எழுகின்ற கணக்கற்ற எண்ணங்களின் வலையில் சிக்கிப் பாழ்படுமாறு நீ என்னை வைத்துவிட்டாயே! இதுதான் உன் அருட்கொடையோ? இந் நிலையை மாற்றியருள்வாயாக.

558. விலகி யயலில் வெறிந்து விரிந்தே
யலையுமென் வாழ்வுக் கபய — மிலதேயோ
அன்றுமின்று மென்று மடியேனைக் கண்காணிக்
கின்றவித மீதோ கிளர்.

ஆன்மாவை விட்டு விலகி, அன்னியப் பொருள்களில் ஆசை, பயம் முதலிய வெறி பிடித்து பலவாறு விரிந்து அலைந்து கெடுகின்ற மன வாழ்வினனான எனக்கு உன்னிடம் அபயம் கிடைக்காதோ? அன்றும், இன்றும், இனி என்றும் நீ இவ் வடியேனைக் கண்காணித்துக் காப்பாற்றுகின்ற விதம் இது தானோ? சொல்க.

559. உன்னிலற வென்னை யொடுக்கிவிட லாலுனக்கு
மென்னகுறை நேர்ந்துவிடு மெந்தையே — யின்னுமிவ்வா
றேங்கி யழுதுடன்மூப் பெய்தி யிறப்பதுதான்
றாங்கு முனக்கழகோ சாற்று.

என்னை உன்னிடம் அடியோடு ஒடுக்கி அழித்து விடுவதால், என் தந்தையே, உனக்கு என்ன குறை உண்டாகிவிடும்? இவ்வளவு நாள் கழிந்தும் நான் இன்னும் இவ்வாறே ஏங்கி அழுது இனி உடலும் மூப்பு எய்தி இறந்துபோவது தான் என்னைத் தாங்குபவனான உனக்கு அழகான காரியமோ? சொல்க.

560. என்னசெய் தாயோ விறைவாநான் காணாம
லுன்னை யொளித்துவைத்தென் னுள்ளத்துட் — பன்னெடுநாட்
சேர்த்தமல வாதனையே தீநடன மாடவிட்டாய்
ஈர்த்தவுனக் காமோ விது.

இறைவா! நான் உன்னைக் காணாதபடி உன்னை எனது உள்ளத்துள் ஒளித்து வைத்துவிட்டு நீ என்ன திருவிளையாடல் தான் செய்கின்றாயோ? பல நெடு நாட்களாக சேர்க்கப்பட்ட மல வாசனைகளே என்னுள் தீ நடனமாடும்படி விட்டு விட்டாயே! என்னை உன் திருவடிகளுக்கு இழுத்து ஆட்கொண்ட உனக்கு இது அழகாகுமோ?

561. பழவா தனைபற் பலவா யகத்துள்
ளெழயா வையுமாற வெற்றி — யுழையாம
லுண்ண வுறங்க வுலகா யதக்கருமம்
பண்ணவோ யென்னைவைப் பாய்.

உள்ளத்துள் பற்பலவாக எழுகின்ற பண்டை வாசனைகள் எல்லாம் அழியும்படி இவ் வாழ்வில் ஆன்மநாட்டங்கொண்டு உழைக்காமல், வீணே உண்ணவும் உறங்கவும் உலகாயதக் கருமங்களைப் பண்ணவும் தானோ என்னை வைத்துவிட்டாய்?

562. அற்றார்க் கருள்வா யபயமென் றுன்னடிக்கே
யுற்றார்க் குறுபிறவி யோட்டுவாய் — நற்றாயின்
மிக்க ரமண விழிக்கருணைக் குட்பட்டுந்
துக்கமுறு மென்கண் டிடை.

இல்லாதவர்களுக்கு அருள் செய்வாய்; 'அபயம்' என்று கூறி உன் திருவடிகளை அடைந்தவர்கட்கு இனி பிறவி வராமல் ஓட்டுவாய்; இவ்வாறு பெற்ற தாயைவிட மிகுந்த கருணையுடைய ஸ்ரீ ரமண பிரானே, உன்னுடைய அருள் விழிகளுக்கு

உட்பட்டுங்கூட துன்பமே அடைகின்ற என் கண்ணீரைத் துடைப்பாயாக.

563. பற்றுக்கோ டுன்பதத்தைப் பற்றாம லென்மதியை
யெற்றுக்கோ நம்பி யிருப்பேனான் — வெற்றுக்கோ
விப்பிறப்பை யீந்தா யிறைரமண னாகிவந்துன்
கைப்பொறுப்பிற் கொண்டாய் கழறு.

உன்னுடைய பாதங்களையே என்னைக் காப்பாற்றும் பற்றுக்கோடாகக் கொள்ளாமல், என் உய்வுக்கு என் புத்தி பலத்தை நான் எப்படி நம்பியிருக்க முடியும்? இந்தப் பிறவியை நீ எனக்குக் கொடுத்தது வீணாகத் தானோ? அது மட்டுமின்றி, சற்குரு ஸ்ரீ ரமணனாக நீயும் அவதரித்து என்னை உனது கைப்பொறுப்பில் ஏற்றுக்கொண்டதும் வீணாகத் தானோ? சொல்வாயாக.

564. வாழ்வென்றா லிந்த மனமிதய வாரிதியின்
மூழ்கி யுருவழிய மோனத்தி — லாழ்வதன்றோ
ஏனோ புலன்வா யிழுபடவைத் தாயிதற்குத்
தானோநீ யோருடறந் தாய்.

பயனுள்ள வாழ்வு என்றால், என் மனமானது இதயக் கடலில் வீழ்ந்து மோனத்தின் அடித்தளத்தில் ஆழ்ந்து தன் உருவழிவதே யல்லவா? அவ்வாறாகாமல், என்னை ஏன் புலன்களின் வழியில் இழுத்துச் செல்லப்பட வைத்தாய்? இதற்குத்தானோ நீ இவ்வுடல் வாழ்க்கையைத் தந்தாய்?

565. கேட்டு வருந்தியுன்பாற் கெஞ்சியழு மாறுவிட
மாட்டாயென் றெண்ணி மகிழ்ந்துள்ளேன் — மீட்டுங்
குறையும் முறையுங் கொடுப்பையே லாண்ட
விறைநிற் கழகோ விது.

உன்னிடம் வருந்திக் கேட்டுக் கெஞ்சி அழுது நிற்குமாறு என்னைப் பாவியாக விடமாட்டாய் என்ற நம்பிக்கையில் தான் நான் இவ் வாழ்வில் மகிழ்ச்சியாக உள்ளேன். ஆனால் அவ்வாறின்றி, மீண்டும் மீண்டும் குறைகளையும் முறைகளையும் கூறி யழும் நிலையை நீ என்னிடம் உண்டாக்குவாயானால், என்னை ஆட்கொண்ட இறைவனாகிய உனக்கு இது அழகாகுமா?

566. உன்னை மறந்தலையு முள்ளத்தா னாக்கவோ
வென்னை வரவழைத்தா யெந்தையே — என்னவிதை
யார்க்குரைத் தேங்கி யழுவே னெனையருட்கண்
பார்க்க விரும்பிலையோ பார்.

என் தந்தையே, இந்த ஜன்மம் முழுவதும் உன்னை மறந்துவிட்டு உலகப் பொருள்களையே நாடி யலையும் மனமுடைய ஒருவனாக ஆக்குவதற்கோ என்னை சற்குரு தரிசனம் தந்து உன்னிடம் முன்பு வரவழைத்தாய்? இது எவ்வளவு பரிதாபகரமாக இருக்கின்றது? இதை யாரிடம் சொல்லி ஏங்கி அழுவேன்? உன்னுடைய அருட்கண்களால் என்னைச் சிறிது கடாக்ஷிக்க இஷ்டப்பட மாட்டாயா? கடாக்ஷித்தருள்க!

567. பிறக்குமுடன் முன்னும் பிணமான பின்னு
முறக்கத்து மில்லா வொருவன் — புறப்பட்டு
நானுடலென் றாடும்பொய் நாடகத்தை யென்வாழ்வா
யேனுணர விட்டா யெனை.

இவ் வுடல் பிறப்பதற்கு முன்னும், இவ் வுடல் இருந்து பிணமான பிறகும், இவ் வுடல் அற்றுத் தூங்கும் சமயத்திலும் உணரப்படாத ஒருவன் (அகந்தை) இப்போது எழுந்து 'நான் இந்த உடலே யாகும்' என்ற அபிமானத்தோடு நடிக்கின்ற ஒரு பொய் நாடகத்தையே எனது உண்மை வாழ்வாக நான் உணரும்படி என்னை ஏன் விட்டாய்?

568. மலவுடனா னாகவபி மானித் துழலு
மலகையா யானழிய லாமோ — வுலக
குருநாத நின்பிள்ளைக் குற்றநிலை மாற்றித்
தருமா றிலையோ தயை.

இந்த மலவுடலையே 'நான்' என்று அபிமானித்து உழலும் ஒரு பேயாக நான் வாழ்ந்து அழிவது ஞாயமோ? உலக மகாகுருவே, உன் பிள்ளையாகிய எனக்கு ஏற்பட்ட இந்தக் கீழ்நிலையை மாற்றித் தர வேண்டும் என்ற தயவே உனக்கு உண்டாக வில்லையோ?

569. பன்றியினுங் கேடாப் பகரலா மென்றநின்சொற்
கின்றுசான் றாநா னிருக்கின்றேன் — நன்றிதுநின்
ஞானக் கொடைப்புகழ்க்கு ஞாயமோ நானுடலா
வீனப் புலையே னிருப்பு.

"தின்றமல மாக்குமல தேகோகர் பவ்வீதின் பன்றி யினுங் கேடாப் பகர்"[46] என்று நீ யருளிய பாடலுக்கு நானே உதாரணமாக இருக்கின்றேன். நல்லது! 'நான் இந்த உடலே' என்று இந்தக் கீழான புலையேன் வாழ்ந்திருக்கும் இருப்பு உன்னுடைய ஞானக் கொடைப் புகழுக்கு ஞாயமோ?

570. முற்றமுழு வத்துவுனின் மூழ்கி முனைப்படங்கக்
கற்றறியே னாநாட் கழிக்கவோ — பெற்றெனைநீ
தன்றாளி லிட்டின்று தாலாட்டி யூட்டிவளர்க்
கின்றாய் ரமணா கிளர்.

பரிபூரணப் பொருளாகிய உன்னில் நான் முழுகி அகந்தை முனைப்பு முற்றும் அடங்கக் கற்றுக் கொள்ளாதவனாய் என் வாழ்நாளை வீண் நாளாகக் கழிப்பதற்காகவா நீ முன்பு என்னைப் பெற்று உன் திருவடிகளில் சீராட்டி, தாய் போல் தாலாட்டி உணவூட்டி வளர்த்து வருகின்றாய்? ஸ்ரீ ரமண சற்குருவே , நீயே சொல்க.

571. நீநா னறப்புல்லி நிட்டானு பூதிபெற
லானா லலாதோரி லாபமென்னே — தானாக
நீயே யெனக்குன் னினைப்பீந் தழைத்துமறந்
தாயேனான் செய்வதெது தான்.

'நான்' என்ற அகந்தை அழியும்படி நீ என்னைச் சேர்ந்து[47] அதனால் நான் நிஷ்டானுபூதி பெற்றவனானாலொழிய, இவ் வாழ்வில் என்ன லாபமிருக்கின்றது? முன்பு ஒரு நாள் நீயே தானாகவே எனக்கு உன் நினைப்பைக் கொடுத்து உன் திருவடிகளுக்கு வரவழைத்துவிட்டு இப்பொழுது என்னை மறந்துவிட்டாயானால், நான் என்னதான் செய்வேன்?

[46] 'ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை — விளக்கவுரை'யின் பக்கம் 386ல் உள்ள ஸ்ரீ பகவானருளிய 'உபதேசத் தனிப்பாக்கள்' 9வது செய்யுளைக் காண்க.

[47] 'நீ' என்றும் 'நான்' என்றும் தோன்றும் பேதம் அற்றுப்போகும்படி நீ என்னுடன் ஒன்று சேர்ந்து எனவும் பொருள்படும்.

## 6. நீ யல்லால் யார் வல்லார்?

572. நின்றுணர்ந் துள்ளே நிலைத்த வறிவுருவா
யென்று மிருக்க வெனக்கருள்வாய் — கொன்றுமனப்
பொல்லா வெழுச்சி புறப்படா வாறுகுரு
வல்லாற் செயவல்லா ரார்.

அலையும் மனம் ஓய்ந்து உள்ளேயே ஆன்மாவை யுணர்ந்து நிலைபெற்ற ஞானமே வடிவாய் (ஸ்திதப்பிரஜ்ஞனாய்) நான் என்றும் வாழ்ந்திருக்க எனக்கு அருள் செய்வாயாக. சற்குருவாகிய உன்னைத் தவிர மனத்தின் பொல்லா எழுச்சியைக் கொன்று அது மீண்டும் புறப்படாதபடி செய்யக் கூடியவர் யார் உளார்?

573. அருளைத் தடுக்கு மகங்காரி நானிங்
கொருமுறையு மீண்டு முதியா — தொருவிடநின்
பேரருளே யல்லாற் பிறிதோர் வலிமையுளா
ராரொருவ ருண்டோ வருள்.

என்னை உய்விக்க வேண்டுமென்ற பெருங்கருணையால் நீ பொழியும் பேரருளைத் தடுத்துப் பயனில்லாமற் போகும் படிச் செய்கின்ற 'நான்' என்ற அகங்காரி (அகந்தை) மீண்டும் ஒரு முறை கூட எழாதபடி அழிந்துபோகச் செய்வதற்கு உன் பேரருளே தவிர வேறு யார் ஒருவர் வல்லமையுடையவராக முடியும்? ஆகையால் நீயே அருள்க.

574. அருளொன்றா லன்றி யடியேன் மனத்தை
யிருணின் றெடுக்கவழி யில்லை — குருவடிவங்
கொண்டென்னை யாண்டோய் கொடாயே லருளார்தா
னுண்டென்ன வீவா ருரை.

உன் அடிமையாகிய என்னுடைய மனத்தை அஞ்ஞான இருள் வழியினின்றும் மீட்டு எடுப்பதற்கு உன்னுடைய திருவருள் ஒன்றினாலன்றி வேறு வழியே இல்லை. சற்குரு ஸ்ரீ ரமண வடிவை மேற்கொண்டு வந்து என்னை ஆட்கொண்டவனே, நீயே அருள் தராவிட்டால், வேறு யாரொருவர் 'நான் தருவேன்' என்று முன்வருவர்? நீயே சொல்க.

575. பார்த்துத் தடுத்துப் பகிர்முகமா காதென்னை
யீர்த்துக் கொடுபோ யிதயத்துட் — சேர்த்துக்
கரைக்கும்பே ராற்றல் கருணைக் கழற்றா
மரைக்கன்றி யார்க்குண்டு மற்று.

என்னை இடைவிடாது கண்காணித்து, நான் பிழையான வழியிற் போகாதபடி தடுத்து, மேலும் பகிர்முகப் படாதபடியே என்னை உள்ளே இழுத்துச் சென்று இதயத்துள் சேர்த்து, எனக்குஒரு தனியிருப்பு இல்லாதபடி ஆன்மாவில் கரைத்துவிடக் கூடிய அருட்பெரும் சக்தி என்னை ஆட்கொண்ட உனது கருணைத் திருவடித் தாமரைகளுக்கன்றி வேறு யாருக்கு உண்டு?

576. குற்றம் பொறுப்பார் குணந்திருத்தா ரோர்சிலரென்
குற்றந்தண் டித்துக் குணமீவார் — மற்றசிலர்
குற்றம் பொறுத்துங் குணமாய்ப் பணித்தருள்வா
னுற்றவனீ யொன்றேதா னுண்டு.

சில பெரியோர்கள் என் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளக் கூடியவர்கள்; ஆனால் அக் குற்றங்களைப் புரியும் என் கீழ் குணத்தைத் திருத்த மாட்டார்கள். மற்றும் சில பெரியோர்கள் என் குற்றங்களுக்காக என்னைத் தண்டித்து எனக்கு உயர் குணங்களைக் கொடுப்பார்கள். ஆனால், என் குற்றங்களைப் பொறுத்துக்கொள்வது

மட்டுமின்றி, தூய குணங்களை நான் அடையுமாறு திருத்தியருளவும் வல்ல பெரியோன் எனக்கு சற்குருவாகிய நீ ஒருவனே உண்டு.

577. எல்லாம் பொறுக்கு மிறைரமணப் பேரருட்கே
யல்லா லெவர்க்கு மரிதரிதே — பொல்லாப்
புரையோடிப் போயழிந்தேன் புத்தியையு மாற்றிக்
கரையேற்று மன்புக் கனிவு.

மிகவும் சீர்க்கெட்டுத் தீய வழிகளிலேயே புரையோடிப் போய்ப் பாழாகிய என்னுடைய புத்தியையும் மாற்றிக் கரை யேற்றும் அருட்கனிவு, எல்லாப் பிழைகளையும் பொறுக்கும் ஆண்டவனாகிய ஸ்ரீ ரமணப் பெருமானே, உன்னுடைய திருவருள் ஒன்றிற்கே தவிர மற்ற யாரிடத்தும் காண்பது அரிதினும் அரிதாகும்.

578. யாரு மிரங்கு மவலநிலை யுற்றேனைச்
சேரும் படியுன் றிருவடிக்கே — கூரருளே
வேறார்க்குஞ் சற்று மியலாதென் பாவமெலா(ம்)
நீறாக்கிக் காக்க நினை.

இவ் வுலகிலுள்ள எந்த ஜீவனும் என் பழிபாவங்களைக் கண்டு இரக்கப்படத் தக்க அவ்வளவு கீழ் நிலையையுற்ற நான் உன் திருவடிகளை வந்தடையுமாறு அருள் புரிவாயாக. என் பாவங்களை யெல்லாம் எரித்து என்னைக் காப்பாற்ற வேறு எந்த தெய்வங்களுக்கும் கொஞ்சமும் முடியாது. ஆகையால், நீயே என்னைக் காப்பாற்ற நினைப்பாயாக.

579. சமான மிலாரமண சற்குருவே யானுஞ்
சமானமிலேன் கீழ்மைத் தரத்தில் — புமானன்றி
யாராலு மாகா தடிக்கசடேன் புன்மையெலாம்
வேரோ டறுத்தருள வேறு.

யாரும் தனக்குச் சமானமில்லாதபடி மாகோன்னத சகஜாத்ம நிலையில் வீற்றிருக்கும் ஸ்ரீ ரமண சற்குருவே, கீழ்மைத் தரத்தில் மாகோன்னத நிலை யடைந்துள்ளதால் நானும் அவ்வாறே சமானமில்லாதவனாக இருக்கின்றேன்! ஆகவே, எல்லாரிலும் மிகத் தாழ்ந்த கசடனேயாகிய என் கீழ்மைகளை யெல்லாம் வேரோடு அறுத்தருள பெருமானாகிய உன்னாலன்றி வேறு யாராலும் ஆகாது.

580. நுட்பபுத்தி கொண்டுமதை நூதனமாய்க் கெட்டுழலும்
பற்பலவாம் போக்கிற் பயன்படுத்து — மற்பனெனை
யாவருய் விக்கவல்லா ரண்ணா மலைரமண
தேவனீ யல்லாற் சிறந்து.

உன்னுடைய திருவருளால் கூர்மையான புத்தி படைத்திருந்தும், அதைப் புதுப்புது விதமாகக் கெட்டுப் போகும் பற்பல வழிகளிலேயே உபயோகிக்கும் அற்பனாகிய என்னை, அண்ணாமலை ஸ்ரீ ரமணதேவனே, உன்னைத் தவிர சிறப்பாக யாரொருவர் உய்விக்க முடியும்?

581. தன்னி லமிழ்ந்திருக்குஞ் சத்தி யெனக்களிக்க
வுன்னி னெவரொருவ ருண்டுகொல் — அன்னியமற்
றான்மமய மாகி யகந்தையடி யோடழிந்த
மேன்மையே யென்றன் விருப்பு.

நான் ஆன்மாவிலேயே முழுகி நிஷ்டை யுற்றிருக்கத் தக்க சக்தியை எனக்குக் கொடுக்க உன்னைத் தவிர வேறு யார் உண்டு? அன்னிய உணர்வே யில்லாமல் நான்

ஆன்மமயமாகவேயாகி அடியோடு அகந்தை அழிந்த உயர்ந்த நிலையை அடைவதே என் விருப்ப மாகும்.

582. காலமெல்லாம் வீணாய்க் கழிவதன்றி நின்னருளின்
கோலமுண்ணும் வாழ்வுகை கூடிலதே — யாலமுண்ணக்
கூசாத நீயுமென் குற்றங்கண் டஞ்சுவையே
லீசாயார் செய்வா ரெனக்கு.

வாழ்நாளின் காலமெல்லாம் வீண் நாளாகக் கழிகின்றனவே தவிர, உன் அருளழகைப் பெற்ற வாழ்க்கை எனக்குக் கைகூட வில்லையே. ஆலகால விஷத்தை யுண்ணுவதற்குக்கூட பயப்படாத நீயும் என் குற்றங்களைக் கண்டு பயப்படு வாயானால், ஈசுவரனே, எனக்கு வேறு யார் அருள் செய்வார்?

## 7. நீயே வல்லோன்

583. வல்லவுனக் கன்றி மனுச்செய்து கொண்டயலிற்
றொல்லைமனஞ் செத்துத் தொலையுமோ — அல்லையொளி
தானகற்ற வேண்டுமன்றித் தந்திரமாந் த்ரீகமுயல்
வேனதற்குக் கொள்வ தினி.

மகா சக்திமானாகிய உன்னைத் தவிர பிற தெய்வங்களிடம் முறையிட்டுக் கொள்வதால் ஓயாத் தொல்லை தருகின்ற என் மனம் செத்துத் தொலையுமோ? (தொலையாது.) இருளை ஒளி தான் நீக்க வேண்டுமே தவிர, அதற்குத் தந்திரங்களும் மந்திரங்களும் கொண்டு இனி முயற்சி செய்வது ஏனோ?

584. காட்டினாற் காண்கின்றேன் கண்புதைத்தாற் றூங்குகின்றேன்
பாட்டினாற் பாடுவித்தாற் பாடுகின்றேன் — ஆட்டினா
லாடாதா ராருண் டருளா லகத்தணைத்தாற்
கூடாரா ருண்டுநீ கூறு.

நீ திருவுள்ளம் நிறைந்து எவற்றைக் காட்டித் தருகின்றாயோ, அவற்றையே நான் காண்கின்றேன்; அவ்வாறு நான் காண முடியாதபடி என் அறிவைப் புதைத்தால், நான் அவற்றில் தூங்கிப்போகின்றேன்; அவ்வாறே உன்னைப் பாக்களினால் பாடவைத்தால், நான் பாடுகின்றேன். ஆகவே நீ ஆட்டுவித்தால், அதன்படி ஆடாதவர்கள் யாருண்டு? அவ்வாறே நீ உன் திருவருளால் ஆன்மாவோடு அணைத்தால், உன்னோடு இரண்டறக் கூடாதவர்தான் யாருண்டு? நீயே சொல்க.

585. நானியலே னீயே நடத்தி யெனையாதோ
ரானியிலா துன்னடிக்கே யைக்கியஞ்செய் — யேனியலா
திச்செயலுன் வான்கருணைக் கேற்பன்றோ வென்னையினி
யச்சமற்ற வாழ்வி லமர்த்து.

நான் ஒன்றும் இயலாதவன்; ஆகையால் நீயே என்னை யாதொரு கேடும் இல்லாதபடி நடத்திச் சென்று உனது திருவடியில் ஐக்கியம் செய்துகொள்வாயாக. இச் செயல் உன்னால் ஏன் முடியாமல் போய்விடும்? இது உன்னுடைய பெருங்கருணைக்கு ஏற்புடையதே யல்லவா? ஆகையால், இனி என்னை யாதொரு அச்சமு மில்லாத ஆன்ம வாழ்வில் அமர்த்துவாயாக.

586. இயலாமை யேதொன்று மில்லானென் றுன்றன்
செயலாண்மை நன்கறிவேன் றேவா — மயலானா

னெத்துணைதான் பின்பட் டிருந்தாலு(ம்) நின்னருட்கை
வைத்திடின்மெய் வாழ்வுற்றேன் வா.

உன்னால் இயற்ற முடியாதது யாதொன்றுமே இல்லை என்ற உனது எல்லாம்வல்ல செயலாண்மையை, குருதேவனே, நான் நன்கு அறிவேன்! ஆகவே, மயலில் மூழ்கி எவ்வளவு தான் நான் பின்பட்டு இருந்தாலுங் கூட, நீ உன் அருட்கரத்தை என்மீது வைப்பாயே யானால், அக் கணமே நான் மெய் வாழ்வு பெற்றுவிட்டேன். நீ அவ்வாறு அருள் செய்ய வருவாயாக.

587. இலகு சுதந்தரனீ யெற்கருள வெண்ணில்
விலகுமன்றி யெத்தடையு மேவா — துலகங்க
ளேழுக்கு மில்லை யெதிர்க்கவலி யென்னுடைய
வூழுக்கு மில்லை யுரன்.

சர்வ சுதந்தரனாகிய நீ எனக்கு அருள வேண்டும் என்று எண்ணுவாயாகில், அதற்குத் தடையாக உள்ள எதுவும் விலகிவிடுமே தவிர எதிர் நில்லாது. அவ்வாறு உன் சங்கற்பத்தை எதிர்க்க ஏழுலகங்களுக்கும் சக்தியில்லை; அதுமட்டுமின்றி, என்னுடைய பிராரப்தத்திற்கும் உன்னை எதிர்க்கும் சக்தியில்லை யல்லவா?

588. சுதந்தர(ம்)நீ தந்தாய் சொரூபம் விரும்ப
சுதந்தரமா நீயருளுஞ் சூழ்வா — யெதிர்ந்தெவர்தா
னெவ்வினைதா னின்னையோ வென்னையோ தான்றடுக்கு
மிவ்விடமே செய்யருளின் றே.

வாழ்வின் சகல காரியங்களும் என் சுதந்தரமற்று பிராரப்தத்திற்கே கட்டுப்பட்டதானாலும், ஆன்மசொரூபமாகிய உன்னை விரும்பும் சுதந்திரம் மட்டும் எனக்கு நீ யருளியிருக்கின்றாய். அவ்வாறே, என் ஊழ்வினையாலும் கட்டுப்படாமல் நீ சுதந்திரமாகவே எனக்கு அருளும் செய்வாய். ஆகையால் உன்னையோ என்னையோ எதிர்த்து யாரொருவர் அல்லது எந்தவொரு கர்மா தடுக்க முடியும்? எனவே இப்பொழுதே இங்கேயே அருள் செய்வாயாக.

589. பாசப் பசுத்துவத்தேன் பக்குவமே யற்றபுலை
நீசப் பழிமனத்தே னென்னினு(ம்)நீ — யீசனிலும்
மிக்ககுரு வன்றோ விதிமீறி யுங்கருணை
வைக்கவியன் றோனன்றோ வை.

பாசத்தால் கட்டுப்பட்ட பசுத்துவமுடைய ஜீவனே நான் என்றாலும், மேலும் சிறிதும் பக்குவமற்ற நீசப் புலையப் பழி மனத்தை யுடையவனே நான் என்றாலும், நீ ஐந்தொழில் செய்யும் ஈசுவரர் களையும் விட உயர்ந்த சற்குருமூர்த்தி யன்றோ? ஆகையால், என் பிராரப்தத்தையும் மீறி என்மீது கருணை வைக்கக் கூடியவன் அல்லவா நீ? அவ்வாறே கருணை வைப்பாயாக.

590. இந்தப் புலையுடலை யானென் றெழுந்தமதி
யெந்தப் பரம்பொருளை யாசித்தே — சொந்த
சொரூப சுகநிலையுற் றோயுமோ வந்த
குருபரனீ யன்றோ கொடு.

இந்த மாமிச உடலை 'நான்' என்று அபிமானித்து எழுந்த ஜீவ மதியானது எந்தப் பரம்பொருளிடம் யாசிப்பதால் சொந்த ஆன்மசொரூபச் சுகநிலையை அடைந்து தன் இருப்பற்று அழியுமோ, அந்தப் பரம்பொருளாகிய குருபரன் நீயே யல்லவா? யாசிக்கும் எனக்கு அந் நிலையைக் கொடுத்தருள்வாயாக.

591. கால ஹரனாங் கருணா நிதிரமணன்
மூலமே முற்று முடியுமன்றித் — தூலச்

சடமயனென் னாலோ சமர்த்த(ர்)பிற ராலோ
கெடவரிதென் சென்மவினைக் கேடு.

நான் பலகோடி ஜென்மங்களாகச் சேர்த்து வைத்த வினைக்கேடுக ளெல்லாம் காலகாலனாய், கருணாநிதியாயுள்ள ஸ்ரீரமண சற்குருவின் மூலமே முழுவதும் அழிய முடியுமே தவிர, ஜடமயமான இந்த ஸ்தூல தேகத்தையே 'நான்' என்று உணர்ந்திருக்கும் அற்ப அகந்தையாகிய என்னாலோ, அன்றி அணிமாதி அஷ்டசித்திகளைப் பெற்ற சமர்த்தர்களாகிய பிறர் எவராலுமோ அழியக் கூடியதல்ல.

592. பிராரத்த முண்டொழித்தாற் பின்னுமோர் தேகம்
வராநித்த வாழ்வு வருமோ — கராவொத்த
வாசனையுஞ் சஞ்சிதவா காமியமு மாய்ப்பதினீ
யீசனையும் விஞ்சியெனக் கீ.

இந்த ஜன்மத்திற்கு அமைக்கப்பட்ட பிராரப்தத்தை அனுபவித்துத் தீர்த்துவிட்டால் மட்டும், எனக்கு இன்னும் ஒரு தேகம் வராத நித்திய வாழ்வு கிடைத்துவிடுமோ (கிடைக்கின்றதோ?) முதலையை ஒத்து என்னை மேன்மேலும் கேட்டிலேயே இழுத்துச் சென்று அழுத்தும் வாசனைகளையும், அவற்றால் குவிக்கப்படும் சஞ்சித ஆகாமிய வினைக்கூட்டங்களையும் அழிக்க வேண்டாமா? அவற்றை அழிப்பதில் நீ ஈசுவரனையும் மிஞ்சி எனக்கு அதிகமாக அருள் செய்வாயாக.

593. நல்லோர் பெரியோர் நவிலும் பரபக்தி
யில்லாத வஞ்ச விடம்பனேன் — சொல்லாற்
றுதித்துனது பாதத் துணைபெறச்செய் வாயேல்
விதித்தடை யும் மாறி விடும்.

நல்லவர்களும் ஆன்மாவை உணர்ந்த பெரியோர்களுமாகிய மகான்கள் உபதேசிக்கும் பரபக்தி இல்லாதவனாயினும், ஆனால் பக்தன் போல் ஆடம்பரம் செய்பவனே யாயினும், நான் உன்னைத் தமிழ்ப் பாக்களால் போற்றி அதனால் உனது திருவடிகளின் அருட்டுணையைப் பெறும்படி செய்விப்பாயானால், விதியினால் எனக்கு ஏற்பட்டிருக்கும் எல்லாவித ஞானத்தைத் தடுக்கும் தடைகளும் மாறிவிடும்.

594. கல்லினு மிக்கக் கடிய மனத்தேனை
புல்லினு மற்பப் பொருளேனை — யல்லினு
மிக்க விருண்டமதி வீணனையு முய்விக்கத்
தக்ககுரு சீரமணன் றான்.

கருங்கல்லையும்விடக் கடிதான மனமுடையவனும், புல்லைவிட மிகவும் அற்பப் பொருளானவனும், அஞ்ஞானத்தால் மிகவும்இருண்ட புத்தியுடைய ஈனனுமாகிய என்னையும் உய்விக்கத் தக்க சற்குரு, ஸ்ரீ ரமண மூர்த்தியே, நீ ஒருவனேதான்.

595. எல்லாம்வல் லாயதனா லேழே ழுலகமுந்தம்
பொல்லா வினைப்பயனைப் போக்கவுனை — வல்லாயெம்
மாட்டிரங் கென்றே வழிபடுவ ரென்றுயருங்
கேட்டிரங் காயோ கிளர்ந்து.

நீ எல்லாம்வல்ல பரம்பொருளாகையால், ஏழேழுலகத்தில் (சகல உலகத்தில்) வாழும் தேவர், மனிதர், மிருக பக்ஷிகள் முதல் புழுக்கள், கிருமிகள் வரையிலுமுள்ள சகல உயிரினங்களும் தத்தமது பொல்லா வினைகளின் பயன்களைப் போக்கியருளுமாறு கருமப் பயன் தரும் கர்த்தனாகிய உன்னிடம் வந்து 'எல்லாம் வல்லவனே, எம்மிடம் கருணை செய்வாயாக' என்று வணங்கிப் போற்றி வழிபடுகின்றனரன்றோ? ஆகையால், அத்தகைய நீ எனது துயரங்களையும் கேட்டு மனமிரங்கி அருள்புரிய

மாட்டாயோ?

596. எல்லாம் விழுங்கு மிறையுன் னருள்வெளத்தென்
பொல்லாங்கெங் கோமுழுகிப் போகாதோ — வல்லான்
ரமண குருவடிவி னான்காண வந்த
சமயசஞ் சீவியன்றோ தாங்கு.

நல்லவை தீயவை என்ற பேதம் பாராமல் யாவற்றையும் விழுங்கிச் செல்லும் கடவுளாகிய உனது அருள் வெள்ளப்பெருக்கில் என்னுடைய பொல்லாங்குகள் (தீமைகள்) துரும்பு போல் எவ்வளவோ சுலபமாக முழுகி யழிந்துபோய்விட மாட்டாவோ? ஸ்ரீ ரமண சற்குரு வடிவில் நான் காணும்படி எழுந்தருளி வந்த சர்வவல்லபனும் சமயசஞ்சீவியும் நீயே யல்லவோ? ஆகையால் என்னையும் பொல்லாங்கு நீக்கிப் புரப்பாயாக.

597. அருள்வலியா லாட்டி யமைக்கவென் னெஞ்சத்
திருள்வலியென் னேயோ ரெதிர்ப்போ — மருள்வலிய
வீனர்த(ம்) நெஞ்சு மிறைரமணா நின்னருளால்
ஞானமுறு(ம்) நாளிந்த நாள்.

இறைவா, ரமணா, கொடிய மயக்கங்கள் நிறைந்த அற்பர்களது மனமுங் கூட உன்னுடைய திருவருளால் ஆன்மஞான மடையக் கூடிய அருள் வெள்ளப் பெருக்கான சற்குரு அவதார காலமன்றோ இந்தக் காலம்? அத்தகைய சர்வசக்தியாகிய உனது திருவருளால் என் மனத்தை நீ திருத்தியமைப்பதற்கு என்னிடமுள்ள அஞ்ஞான இருளின் வலிமை ஓர் எதிர்ப்பாகிவிடுமா? (ஆகாது.) ஆதலால் என்னைத் திருத்தியமைப் பாயாக.

598. தக்கவலி யோனடியைச் சார்ந்தாற் பிறப்பறுதன்
மிக்கெளிதென் பாருரைக்கு வேறின்றி — யிக்கலியிற்
றக்கணா மூர்த்தியவ தார ரமணனேநின்
பக்கமே சேர்ந்தவெனைப் பார்.

'தக்க ஆன்ம ஞான யோக சக்தி வாய்ந்த ஒரு சற்குருவின் திருவடிகளைச் சரணமடைந்தால், யாரொருவரும் மறுபிறப்பற்று மோக்ஷமடைவது மிகவும் எளியதாகும்' என்று கூறும் மேலோர் உரைக்கு மாறுபடாமல் (கீழ்ப்படிந்து) அதன்படியே. இக் கலியுகத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அவதாரமாகவே தோன்றியுள்ள ஸ்ரீ ரமண சற்குருமூர்த்தியே, உன் திருவடிகளையே சரணமடைந்துள்ள என்னைக் கடாக்ஷித்தருள்வாயாக.

599. பாரந் தரிக்கும் பலமுடையா யுன்புகலாச்
சேரன்ப ரெத்தனைதான் றீவினைமேற் — கூரினுமுன்
றண்ணோக்காற் றாபந் தணிந்து பகிர்முகநீத்
துண்ணோக் குறாரோ வுணர்ந்து.

தன்னைச் சரணடைந்த அன்பர்களின் அகவாழ்வு புறவாழ்வு ஆகிய வாழ்வின் முழுப் பொறுப்பையும் தாங்கி நடத்தும் சக்திமானே! உன்னைப் புகலாயடைந்த அடியார்கள் எவ்வளவு கொடிய வினைகளை யுடையவர்களாக இருந்தாலும், உனது குளிர்ந்த அருட்கண்ணோக்கால் மூவாசைத் தாபங்கள் முற்றும் தணிந்து, புறமுகநாட்டம் நீங்கி, அந்தர்முகப்பட்டு, ஆன்மாவைத் தரிசித்து அறியமாட்டார்களோ? (அறிவார்கள்.)

600. ஐம்புலனாற் பெற்ற வறிவா மறியாமைத்
தும்பினாற் கட்டுண்டு சோர்வடைந்து — வெம்பு
மடியேன் றளையை யவிழ்த்துவிடு விக்க
முடியாதா னோநீ மொழி.

மனம் ஐம்பொறிகளின் வழியே அறிந்துகொள்ளும் ஐம்புல அறிவுகளாகிய அறியாமை என்னும் கயிற்றால் கட்டப்பட்டுத் தளர்வடைந்து, நொந்து அழுகின்ற இவ்வடியேனது பந்தத்தை (கட்டை) அவிழ்த்து என்னை விடுவிக்க முடியாதவனோ நீ? (உன்னால் முடியுமல்லவா?) நீயே சொல்க.

601. நானொருவ னில்லா நலம்பெறுமா றுன்னருளா
லேனொருகாற் செய்ய வியலாதா — மூனுருவப்
பொய்யிருளை யோட்டவருட் போதரவி யாயுதித்த
வைய னருள்வல் லமைக்கு.

தேகாத்மபுத்தி வடிவிலுள்ள அஞ்ஞானமாகிய பொய்யிருளை ஓட்டுவதற்காகவே அருள்ஞான சூரியனாக அவதரித்துள்ள ஸ்ரீ ரமண பிரானே! 'நான்' என்றெழுந்துள்ள அகந்தையாகிய நான் ஒருவன் அழிந்து ஞான நலம் பெறும்படி உனது திருவருளால் ஒரே தடவையில் அருள்செய்துவிடுவது உனது அருட்சக்திக்கு முடியாத காரியமோ? ஏன் முடியாது? நிச்சயமாகவே முடியும்.

602. சூழ்ந்தடர்ந்த தொல்லிருளா னாலுஞ் சுடரொன்று
போந்ததுமே தான்பறந்து போகாதோ — ஆழ்ந்து
தடித்தவறி யாமையிருட் சார்ந்தேனா னாலு(ம்)
நொடிப்பொழுதில் ஞானமுற நோக்கு.

எத்தனையோ யுகமாகச் சூழ்ந்திருப்பதும் அடர்த்தியானதுமான இருளே யானாலும், ஒரு விளக்கு வந்தவுடனேயே, அக் கணத்திலேயே அவ் விருள் அடியோடு நீங்கிவிடுகின்றதன்றோ? அவ்வாறே, நான் மிக ஆழ்ந்து தடித்த அறியாமை இருளை யுடையவனே யானாலும், ஒரே நொடியில் அவ் வஞ்ஞானம் அழிந்துபோய் ஞானம் உண்டாகுமாறு உன் அருட்கண்களால் என்னை நோக்குவாயாக.

603. இன்னதென்றே யுன்ன வியலாவோர் காரணத்தா
லென்னதுநா னென்றோ ரெழுச்சியெழுந் — தென்னதடை
செய்தாலு நில்லாதித் தீமை யழிக்கவருட்
கைதானே வல்லதெனைக் கா.

'இது இன்னதுதான்' என்று கண்டுபிடிக்கவே முடியாத ஏதோ ஒரு காரணத்தால் (மாயையால்) 'நான் இவ் வுடல்' என்ற அகந்தையும் 'இவை என்னுடையவை' என்ற மமதையும் கொண்டதொரு தன்மையெழுச்சி எழுந்து, பிறகு நான் எவ்வளவு தான் அதைத் தடுத்துப் பார்த்தாலும் நில்லாமல் பிரவிருத்தியிலேயே ஈடுபட்டிருக்கும் தீமையாகிய இந்த அகந்தை யெழுச்சியை அழிக்கக் கூடிய சக்தி உனது அருட் கரங்களில் தான் உள்ளதன்றோ? ஆகையால், நீயே அதை அழித்து என்னைக் காப்பாற்றுவாயாக.

604. ஆசையச்ச மற்ற வருள்வாழ் வடையநா
னீசெயத்தான் வேண்டு(ம்) நெறிநில்லா — வேசிமனப்
பித்தனெனா லாகாப் பெருங்கா ரியமிதனை
யத்தனே நீசெய் தருள்.

நான் ஆசை அச்சம் முதலியவையற்ற அருள் வாழ்வைப் பெறுமாறு நீ செய்தேயாக வேண்டும். ஒரு வழியில் நிற்கவியலாத வேசியைப் போன்ற பைத்தியக்கார மனமுடைய என்னால் செய்ய முடியாத இப் பெருங் காரியத்தை, என் ஆண்டவனே, நீயே செய்தருள்க.

## 8. சௌரியங் காட்டியருள்க

605. அசகாய சூர வருளரசே யென்னைத்
தசகோடி மாயைதடுத் தாலும் — மசகதம்போ
லோட்டி யகற்றியெனை யுன்கைப் பிடிக்குளிட்டுக்
கூட்டிவரக் கூடுமன்றோ கூட்டு.

எவ்வித இதர சகாயத்தின் தேவையுமின்றித் தன்னந் தனியே நின்று வெற்றி சூடும் ஞான சக்தியுடைய அருளரசே! பத்துக்கோடி மாயைகள் வந்து சூழ்ந்து என்னைத் தடுத்தாலும், அந்த மாயங்களை யெல்லாம் கொசுக்களைத் துரத்துவது போல அனாயாசமாய் ஓட்டி யகற்றிவிட்டு, என்னை உன் அருட் கரங்களின் பிடிக்குள் இட்டுக் காப்பாற்றிக் கூட்டிக்கொண்டு வரக் கூடியவனன்றோ நீ? ஆகவே, அவ்வாறே என்னைக் காப்பாற்றி யருள்வாயாக.

606. ஒருவீர னென்றோங்கு முன்றனுக்குத் தீராப்
பெருவேலை வைக்கப் பிறந்தேன் — குருவீர
சிங்க ரமண சிவமே யுடனடியா
விங்கின்றே வெல்வா யெனை.

ஒப்பற்ற அருள்ஞான வீர சிகாமணி என்று விளங்கும் பெருமானாகிய உனக்கும் ஓயாமல் பெரும் வேலை கொடுத்துக் கொண்டே இருப்பதற் காகவே நான் பிறந்திருக்கின்றேன் போலும்! சற்குரு ரமண சிவவீர சிங்கமே, உடனடியாக, இப்போதே, இங்கேயே அகந்தையாகிய என்னை வென்றருள் வாயாக.

607. ஆண்ட நினக்கா வகப்பேய்க்கா வாளா(ம்)நான்
மூண்டெழுநா னாரகந்தை மோகமார் — ஈண்டிரண்டு
மொன்றேயா மென்றா லுனக்கடங்கா மோகமுண்டோ
வென்றேதீ ரென்னை விரைந்து.

என்னை ஆட்கொண்ட உனக்கு நான் அடிமையா? அல்லது அகங்காரம் என்னும் பேய்க்கு நான் அடிமையாவதா? 'நான் இவ் வுடல்' என்று விரைந்து எழுகின்ற நான் யார்? இவ் வகந்தை உண்டாவதற்குக் காரணமான மயக்கம் (மோகம்) யார்? இரண்டும் ஒன்றே தான் என்பாயாகில், எல்லாம் வல்லவனாகிய உனக்கு அடங்காமல் ஒரு மோகமும் (மாயையும்) உண்டோ? (இல்லையல்லவா?) ஆகையால், 'நான்' என்ற எழுச்சியை விரைவாக வென்றருள் வாயாக.

608. மேற்கொண்ட விப்பிறப்பும் வீணாயிற் றோவெனைநீ
யேற்கின்ற போரி லிளைத்தனையோ — தோற்கின்ற
வெண்ணந்தான் கொண்டனையோ வெந்தாய் ரமணாநான்
பண்ணுவதென் னேயெனைக்கண் பார்.

உன் திருவருளால் இப்போது நான் எடுத்துள்ள இந்தப் பிறப்பும் வீணாகத்தான் ஆகிவிட்டதோ? என்னை அஞ்ஞானத்தினின்றும் மீட்டு எடுப்பதற்காக சற்குருவாகி வந்து நீ ஈடுபட்ட இவ் வருட்போரில் களைப்படைந்துவிட்டாயோ? அல்லது 'தோற்றுப்போகலாம்' என்ற எண்ணத்தைத்தான் மேற்கொண்டு விட்டாயோ? என் தந்தையே, ரமணா, நீ அப்படிச் செய்தால், நான் என்ன பண்ணுவேன்? நீ வெற்றி சூடி என்னைக் காப்பாற்றியருள உன் அருட்கண்களால் என்னைக் கடாக்ஷிப்பாயாக.

609. குன்றா விவேகமாங் கூர்பகழி யாலகந்தை
கொன்றோங்க வீவாய் குருரமணா — நின்றேங்கு
மேழையே னுன்னருளா லின்றி யகந்தையின்முன்
கோழையே னாவேன் குனிந்து.

வலிவு குன்றாத உத்தமமான நித்தியாநித்திய வஸ்து விவேகமாகிய கூரான அஸ்திரத்தால் அகந்தையை அழித்து நான் ஆன்மாவாக ஓங்கும்படி, சற்குரு ரமணா, நீ அருள் தருவாயாக. உன் திருமுன்பு வந்து நின்று ஏங்கி யழுகின்ற இவ் வேழையேன் உன்னுடைய அருளுதவி யில்லையேயானால், அகந்தையோடு நடத்தும் போரில் அதன் முன்பு வலிவிழந்து ஒரு கோழைப் பிராணியாகித் தோற்றுப்போவேன்.

610. வாசனையா வன்றியுன் வல்லமையா விவ்வுலக
வாசைகளா வன்றி யறிவுருவா — மீசனா
யார்வெல்லப் போகின்றீ ராக்கையிலென் வாழ்க்கையெனும்
போர்மல்கு நெஞ்சிற் புகுந்து.

இவ் வுடலில் எனக்கு நீ ஏற்படுத்திக் கொடுத்துள்ள ஒரு வாழ்க்கை என்னும் பெரும் அருட்போர்க்களத்தில் யுத்தத்திலிறங்கி யார் வெல்லப் போகின்றீர்கள்? வெகு காலமாகத் திரட்டிச் சேர்க்கப்பட்டுள்ள என் வாசனைப் படைத்திரள் வெல்லப் போகின்றதா? அல்லது உன் அருட்சக்தி வெல்லப் போகின்றதா? என் உள்ளத்திலுள்ள உலக ஆசைகள் வெல்லப் போகின்றனவா? அல்லது ஞானசொரூபனான கடவுளாகிய நீ வெல்லப் போகின்றாயா? யார் வெல்லப் போகின்றீர்கள்?

611. இப்போதென் கண்முன் னெழுந்தருளி வந்தரம
ணப்பா வருளாளா வாண்டநின் — செப்பரிய
மோன வருள்வலியு மூடனென்முன் றோற்றதோ
ஞானகுரு வேவெற்றி நாட்டு.

இப் பிறப்பில் என் கண்முன் எழுந்தருளி வந்து குரு தரிசனம் தந்த ரமணப்பாவே, அருளாளனே! என்னை அடிமையாக ஆட்கொண்ட சொல்லுக்கடங்காத உனது மௌன அருட்சக்தி கூட மூடனாகிய என்முன் தோற்றுவிட்டதோ? ஞானகுருவே, உன் வெற்றியையே நிலைநாட்டுவாயாக.

612. அருண்மோனத் தாலுனக்கிங் காகாத துண்டோ
கருவா தனையேன் கருத்தும் — வெருவா
தகமுகமா காதோ வருண்மோனத் தாலே
பகிர்முகமாம் பாச மகன்று.

உனது அருள் மோன சக்தியால் நடத்த முடியாத காரியமும் ஒன்றுண்டோ? அந்த அருள் மோன வடிவால், கொடிய வாசனை களடர்ந்த என் புத்தியும் எதிர்ப்புச் செய்யாமல் பகிர்முகப் பாய்ச்சலை விட்டுவிட்டு அகமுகமாகத் திரும்பி வராதோ? (வரும்.) அருள்க.

613. உடல்வாணா ளெல்லா முதவாவீ ணாளாக்
கெடவாழு மென்னைக் கிருபைக் — கடலான
நின்வல்ல பத்தா னிலைசேர்க்க வேண்டுமன்றி
யென்வல்லே னுய்வுக் கினி.

இவ் வுடலில் நான் வாழுகின்ற நாளெல்லாம் ஒன்றுக்கும் உதவாத வீணாளாகவே கழித்து வாழ்ந்து வருகின்ற என்னை கிருபைக் கடலான உன் அருட்சக்தியால் ஆன்ம நிஷ்டை யிற் சேர்க்க வேண்டுமே யன்றி, என் உய்வுக்கு நானே இனி என்ன செய்துகொள்ள முடியும்? (ஒன்றும் இயலேன்.)

614. கற்றறியு(ம்) நெஞ்சங் கலையை மறந்தகத்தே
நிற்றறியக் கற்கு(ம்) நிசக்கலையைக் — கற்றடங்க
சற்குருவின் வல்லபத்தாற் றானிசையு மன்றியது
தற்சம் மதங்கொள்வ தன்று.

அபரவித்தைகளாகிய அறுபத்துநான்கு கலைகளையும் கற்றறியக் கிளம்பும் என் மனம் அவற்றில் ருசியடைவதை நீத்து, ஆன்மாவில் நிஷ்டையுறக் கற்றுக்கொள்ளும் சத்தியமான ஆன்மவித்தையைக் கற்று அடங்குவதற்கு என் சற்குருவாகிய உனது அருட்சக்தியால் தான் இணங்குமே யன்றி, அது தானாகவே அடங்கி நிற்கச் சம்மதிக்காது.

615. மூலா ணவவணையை மோதி யுடைத்தருளாம்
பாலாழி சேர்கங்கை[48] பாதையிலே — கோலா
கலமா யிர(ம்)நடக்கக் கண்டுந்தன் போக்கில்
விலகாது செல்ல [49]விசை.

என் வாழ்வு என்னும் கங்கை உற்பத்தி ஸ்தானத்திலேயே நற்போக்கைத் தடுக்கும் ஆணவம் என்னும் மூல அணைக்கட்டை மோதி உடைத்துக்கொண்டு நீயாகிய ஆன்ம பாற்கடலில் போய்ச் சேருவதற்காக ஓடிக்கொண்டிருக்கும் பாதையிலே மாயையின் கோலாகலத்தால் பயனற்ற எத்தனையோ உலகக் காட்சிகள் நடக்கக் கண்டும், அவற்றைக் கவனியாது உதாசீனப்படுத்தி, ஆன்மாவை நோக்கிச் செல்லும் தன் போக்கினின்றும் சற்றும் விலகாமல் வேகமாக முன்னேறிக்கொண்டே இருக்கச் செய்வாயாக.

616. உபாதியொன்றை மேற்கொண் டுயிர்த்திருக்கும் வண்ணம்
விபாகமெனக் குற்ற விதமென் — அபாவ
மடியோ டடைந்துன் னருளா லடியேன்
மடிய வலிந்தெழுந்து வா.

ஒரு தேக உபாதியை 'நான்' என்று மேற்கொண்டு ஒரு ஜீவவாழ்வு வாழும்படி உன்னிடமிருந்து எனக்குப் பிரிவு ஏற்பட்டது எப்படியோ அறியேன். இந்த ஜீவ இருப்பு உன்னுடைய அருளால் அடியோடு அழிந்து நான் மடியுமாறு நீ எழுந்து வந்து பலவந்தமாக அருள் செய்வாயாக.

617. ஆன்மானு சந்தான வன்பு மலர்ந்தகத்தே
நான்மாறி நிற்கவே ஞானவருள் — வான்மாரி
பெய்தருள வேண்டும் பிரம்மாத் திரமென்மே
லெய்தருள வேண்டு மினி.

ஆன்மநாட்டம் கொள்ள வேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் எழுந்து அதனால் அகந்தை தன் உருவம் மாறி அழிந்து நிற்கும்படி நீ ஞான அருள்மழை பெய்தருள வேண்டும். 'நான் யார்?' என்று திடமாக விசாரிக்கும் உன் பிரம்மாஸ்திரத்தை என்மேல் இனி எய்தருள வேண்டும்.

618. மறைவினினீ நின்றுமன வாலியுட னென்னை
யறைகூவிப் போர்செயவைத் தாயே — யிறைவா
வருட்கணையே வாம லதிகாலந் தாழ்த்தி
னுருக்குலைவே னந்தோ வுதவு.

இறைவா! நீ நேரடியாக எனக்கு உதவ வெளிவராமல் உள்ளத்தில் மறைந்து நின்றுகொண்டு, மனமாகிய வாலியுடன் என்னை அறை கூவிப் போர் செய்யும்படித் தூண்டிவிட்டாயே! உன்னுடைய அருளஸ்திரத்தை அம் மனத்தின் மேல் செலுத்தாமல் அதிக காலம் தாமதித்துக் கொண்டே இருப்பாயானால், அந்தோ, நான் நிலைகுலைந்து போவேன். ஆகையால், விரைவில் உதவியருள்க.

---

[48] 'கங்கை' = வாழ்வாகிய கங்கை.

[49] 'விசை' = நீ துரிதப்படுத்து என்னும் ஏவல் வினை முற்று.

619. வெற்றிக்கு வித்தாம் விராகக் கவசமணிந்
துற்றகுரு பத்தி யுடைவாளாற் — பற்றுமகங்
கார வசுரனைச்சங் காரம் புரியவெனைத்
தீரனா வுன்னருளாற் செய்.

வெற்றிக்கு மூலகாரணமான வைராக்கிய மென்ற கவசத்தை அணிந்துகொண்டு, எப்போதும் விடாது கையில் ஏந்தி நிற்கும் குருபக்தியாகிய உடைவாளால் அபிமானங்கொண்டு எழுகின்ற அகங்கார அசுரனை சம்ஹாரம் செய்யக் கூடிய தீரனாக உன்னருளால் என்னைச் செய்தருள்வாயாக.

620. ரமண னருள்வலியை நம்பியகங் கார
வெமனை யெதிர்த்தியற்றும் போரிற் — சமமின்றி
வீழ்ந்தேனைத் தூக்கியருள் வெற்றியீ யாவிடிலே
மாந்தோனா வேனம்பி வந்து.

ஸ்ரீ ரமண சற்குருவின் அருள்வலியை நம்பி அகங்காரமாகிய யமனை எதிர்த்து செய்துகொண்டிருக்கும் யுத்தத்தில் அகந்தையின் வலிமைக்கு எதிர் நிற்க முடியாமல் தவறித்தவறி விழுகின்ற என்னை நீ உன் அருளால் தூக்கி நிறுத்தி, என் எதிரியை வென்று எனக்கு நீ வெற்றியைத் தேடித் தராவிட்டால், உன்னை நம்பி வந்தும் ஏமாந்து போனவனே யாவேன்.

621. உன்னடியில் வீழ்ந்தே னுனையே யபயங்கேட்
டிந்நிலத்து வாழ்வுற் றிருக்கின்றேன் — றன்னடியர்
சற்றுங் கலங்கவிடாச் சற்குருவே நின்னருளின்
வெற்றியுற வென்பால் விளை.

உன் திருவடிகளிலேயே வீழ்ந்துகிடக்கின்றேன். உன்னிடமே அபயம் கேட்டு இவ்வுலகில் வாழ்ந்திருக்கின்றேன். தனது அடியவர்களை சற்றும் கலங்க விடாது காப்பாற்றும் சற்குருவே. என்னிடம் உன் அருள் வெற்றி விளைவுறுமாறு செய்க.

622. என்று மெழாம லிறுதியா யானிதயஞ்
சென்று பதியத் திருவருளால் — வென்று
முடிப்பா னிருவர்க்கும் மூண்டபெரும் வேலை
நொடிப்போ துனதருட்கண் ணோக்கு.

இனி மீண்டும் என்றுமே உதிக்காமல் நான் இறுதியாக இதயத்துள் மூழ்கிப் பதியும்படி நீ உன் திருவருளால் வெல்க. நம் இருவர்க்கும் நேர்ந்த இப் பெரிய வேலையை முடித்தருள்வதற்கு நீ உன் அருட்கண்களால் ஒரே நொடிப்பொழுது என்னை நோக்கியருள் வாயாக.

623. பிடியகன் றோடிப் பிறவற்றை யெண்ணும்
படியுளதென் னெஞ்சப் பறவை — வடிவுபெயர்
வாசனைக ளற்ற மவுனவலை வீசிமல
மாசறவே யுட்பிடித்து வை.

என் மனமாகிய பறவை என் கைவசத்தினின்றும் தப்பியோடி பிற பொருள்களையே எண்ணும் வழக்கமுடையதாக இருக்கின்றது. ஆகையால், நீ நாமரூப வாசனைகளற்ற உனது மௌன வலையை வீசி, என் மனத்தைப் பிடித்து யாதொரு குற்றமுமற்றதாகச் செய்து உள்ளே ஆன்மாவாகிய உன்னிடமே வைத்தருள்வாயாக.

624. ஆணையிட்டா னீயென் னழுக்கு மனமுடனே
சாணையிட்ட வைரமெனச் சச்சித்தாம் — சோணையுற்றா

லற்பவுயி ருக்கு மனாயாச முத்தியென்றுன்
சொற்பிரசித் தம்பலிக்கச் சொல்.

சர்வேசுவரனான நீ 'பரிசுத்தமடைவாயாக' என்று ஓர் ஆணையிட்டால், மும்மலங்களால் மிகவும் அழுக்கேறியிருக்கும் என் மனமும் சாணை தீட்டப்பட்ட வைரத்தைப் போல உடனே சத்சித் சொரூபமாகும். 'இத் திருவருணையை அடைவார்களாயின் அற்ப ஜந்துக்களாயினும் சரி, அனாயாசமாக முக்தி யருளப்படும்' என்று கூறியருளிய உனது பிரசித்தமான அருளுறுதி வாக்கியம் மெய்யாகிப் பலிக்கும்படிச் செய்தருள்க.

625. சித்திரமாத் தோன்றுஞ் செகத்திற் குடலிலகம்
புத்தியே காரணமப் பொய்யெழுச்சிச் — செத்தொழிய
மீதுநட மாடியக மேகமென வேவிளங்குன்
பாதமித யத்தே பதி.

விசித்திரங்கள் நிறைந்ததொரு சித்திரத்தோற்றமாகத் தோன்றுகின்ற இந்த உலகக் காட்சிக்கு 'இவ் வுடலே நான்' என்ற அஞ்ஞான அறிவே காரணமாகு மன்றோ? இந்தப் பொய்யான தேகாத்மபுத்தியின் எழுச்சி அழியுமாறு அதன் தலைமேல் 'நான் நானாகிய ஏகமே' என்று அவ்வாறு ஸ்புரித்து அருள் நடனமாடி விளங்கும் உனது அருட்பாதங்களை வைத்து என் உள்ளத்தில் என்றும் பதித்தருள்வாயாக.

626. பாதமென் னுள்ளம் பதிப்பதுதான் மெய்ஞ்ஞான
போத சொரூபம் புரணமுற்று — வாதனையா
லீர்க்கப் படுமனத்தை யில்லா தழித்துன்னிற்
சேர்க்கும் வலிய திறம்.

உனது அருட்பாதங்களை என் உள்ளத்தில் நீ பதிய வைக்கும் உன் திருவருட்செயல்தான் மெய்ஞ்ஞான ஆன்ம சொரூபம் 'நான் நான்' என்று ஸ்புரித்து, வாசனைகளின் வசமாகக் கவரப்படும் மனத்தை இருப்பற அழித்து உன்னோடு ஐக்கியப்படுத்துகின்ற அருட்சக்தி திருவிளையாட்டாகும்.

627. என்னைவிட் டின்னொன் றெதிரிட் டறியவிருப்
பென்னகார ணத்தா லெழுந்தாலு — மன்னதைநின்
செங்கோ லருட்டிறத்தாற் செற்றருள வேண்டும்வே
றெங்கோல மிட்டிதுகொள் வேன்.

சதாகாலமும் ஆன்மாவாகிய தன்னிடத்திலேயே லயித்திருப்பதை விட்டுவிட்டு, முன்னிலையாகத் தோன்றும் அன்னியப் பொருள்களைச் சுட்டி அறிவதற்கு எழும் விருப்பம் பூர்வவாசனை முதலிய எக்காரணத்தால் உதித்தாலும், அதை (அவ் விருப்பத்தை) நீ உன் அருட்செங்கோலின் சக்தியால் வென்று அழித்தருள வேண்டும். இவ் வேண்டுகோளை உன்னிடமன்றி வேறு யாரிடம் சென்று நான் முறையிட்டுக் கேட்டுப் பெற முடியும்? சொல்க.

628. ஞானவே லாமுன் னயன மெதிருற்று
மீன மொழிந்திலே னின்னுமெனின் — மோனமா
மூலாத் திரத்தான் முடித்தா லலாதெனைவே
றேலா திறைவா வெடு.

நான் முன்பு (நீ தேகந் தாங்கி இருந்த காலத்தில்) ஞான வேலாயுதமாக விளங்கிய உன் அருட்கண்களின் எதிரில் வந்து பணிந்துங்கூட என் கீழ்மைகளெல்லாம் இன்னும் நீங்கப் பெற்றிலேன் என்றால், அடுத்த வலிய அஸ்திரமாகிய உன் மௌனாஸ்திரத்தால் என்னை நீ அழித்தால் தவிர மற்ற எதுவும் பயன் தராது.

இறைவனே, உடனே அம்மௌனாஸ்திரத்தையே என்மேல் பிரயோகித்தருள்வாயாக.

629. தீதறியா வுன்றன் றிருவருட்செங் கோலடியேன்
மீதகலா வாறு மிதித்திடுக — வீதடியே
னெய்தப் பெருமா றிரங்குவையே லெவ்வினைதா
னுய்தற் பெறுவதெவ னோது.

தீமை யென்றால் என்னவென்றே அறியாத உனது திருவருட் செங்கோலானது என்றும் அகலாதவாறு என்மீது ஊன்றப்பட்டு மிதித்துக்கொண்டே இருக்கட்டும். இவ் வரத்தை நான் அடையுமாறு நீ இரக்கப்படுவாயானால், பிறகு நான் எந்த வினைப்பயனால் தான் எப்படித்தான் பாதிக்கப்பட முடியும்? சொல்வாயாக.

630. பிழைவினைக் கென்றே பிறந்திருப்போ ரென்றன்
பழவினையி னாலெதிர்ப்பட் டாலு — மெழவகந்தை
சற்று மிடந்தராச் சௌரியத்தை நீகாட்டி
முற்று மழுத்தியருண் மூட்டு.

கொடிய செயல்களைச் செய்வதற்கென்றே இவ் வுலகிற் பிறந்திருக்கும் தீய துஷ்டர்கள் என் பிராரப்தப்படி என்னைச் சந்திக்க நேர்ந்தாலுங் கூட, அவர்களை எதிர்த்துத் தடுக்க எனக்கு அகந்தை யெழுச்சி சிறிதும் எழுவதற்கு நீ இடந்தராமல் உன் அமைதியாகிய பெருவீரத்தை என் புத்திக்குக் காட்டியருளி, அவ் வகந்தை யெழுச்சியை உள்ளத்தில் அப்பொழுதே முழுவதும் அழுத்தி உன் அருட்சக்தியை எனக்கு ஊட்டியருள்வாயாக.

631. வித்தார மற்ற மிகவெளிய வாசகத்தா
லுத்தா ரணமுயிர்கட் கூட்டியவா — செத்தாரை
மீட்டான்மா வாக வெழுப்பியநின் வீறென்மேற்
காட்டாயோ வாஞ்சை கனிந்து.

மிக விரித்த சொற்பொழிவுகளாக ஆகாமலும், அரிய சாஸ்திர பரிபாஷைகள் இல்லாமலும் உள்ள மிக எளிய சிறு சிறு முத்துப் போன்ற அருள் வார்த்தைகளால் இவ் வுலக உயிர்கள் உய்யும்படி உபதேசித்தருளியவனே! தன் பிரம்ம உணர்வினின்றும் தவறுவதாகிய மரணத்தை யடைந்துகிடந்த உன் அடியார்களாகிய பற்பல ஜீவர்களையும் மீண்டும் இறப்பற்ற பரமான்மாவாக எழுப்பித் தந்த உனதுஅருள் வீரத்தை என்மீது வாஞ்சை கொண்டு கனிந்து காட்டியருள மாட்டாயோ?

632. உடலளவா நானென் றுணரும் பிழையாம்
விடலரிய மாய விலங்கைக் — கெடவழிக்கும்
பேராற்ற லெங்கே பெறுவே னுனதருளின்
சீரா லதனைச் சிதை.

'இந்த உடலளவே நான்' என்று உணரும் பிழையறிவாகிய நீக்குவதற் கரிய மாயையாகிய விலங்கை அழித்து ஒழிக்கும் பெருஞ்சக்தியை நான் எங்கு சென்று பெறுவேன்? எனவே, நீயே உன் அருளின் பெருக்கால் இவ் விலங்கை உடைத்தருள்க.

633. பிறவிப் பெருங்குவையாற் பெற்றவினைக் கூட்ட
மறவற் றகவறிவா மட்டு — முறமுற்று
மெவ்வா தனையு மிமியுமிஞ் சாதழிக்குஞ்
செவ்வாள் கரத்தேந் திடு.

எண்ணற்ற முற்பிறவிக் கூட்டங்களால் நான் சேகரித்துள்ள கர்மபலத் திரள்கள் யாவும் அடியோடழிந்து, 'நான் இருக்கிறேன்' என்ற ஆன்மவுணர்வு மாத்திரமாய் நான் மிஞ்சி நிற்பதற்கு, எந்த வாசனையும் இம்மியும் மீதியிராதபடி முற்றும் அழித்தருள வல்ல உன்

அருள்ஞான வாளாயுதத்தைக் கையிலேந்தி வருவாயாக.

634. வெல்க ரமண வியன்கருணை யொன்றேயென்
பல்கரும வன்மைபாழ் பட்டொழிக — தொல்கால
மாகவெற்றி யார்ந்த வகண்டமோ னாத்திரமா
மேகசக்தி வெல்க வெனில்.

ஸ்ரீ ரமண சற்குருவின் அருட்பெருங்கருணை யொன்றே வெற்றி யடைவதாக. எனது பல்வேறு வகைப்பட்ட கர்ம பலன்கள் எல்லாம் பாழாகி யழிவதாக. அனாதி காலமாக வெற்றியே கண்டுவருகின்ற உனது அகண்ட மோனாஸ்திரமாகிய எக சக்தியே என்னிடத்திலும் வெற்றி பெறுக.

## 9. ஆண்ட நீயே யருள்க.

635. உண்மையை நாடி யுளம்புக்கங் கோய்ந்தொழியுந்
திண்மையிலேன் மேலோர் செயலறியே — னண்மையிலே
கொண்டுவந்தன் றாண்ட குருரமணா நீயினிமேற்
கொண்டெதுசெய் வாயோ குறித்து.

உண்மைப் பொருளாகிய ஆன்மாவை நாடி இதயத்துட் புகுந்து அங்கு 'நான் இன்னார்' என்னும் எழுச்சி ஓய்ந்து தானே ஒழிந்துபோகும் திடம் எனக்கில்லையே. மற்ற யாதொரு சாதனையும் நான் அறியேன். அன்று ஒரு நாள் என்னை உனது சமீபத்திற்கு அழைத்துக் கொண்டுவந்து ஆட்கொண்ட குரு ரமணா, இனிமேல் நீ என்னை என்னதான் செய்யத் திருவுளங் கொண்டிருக்கின்றாயோ! (அறியேன்.)

636. உண்மை யுணர்வதற்கோ ருண்மை முயல்வேனும்
பண்ண வியலாப் பதரேனை — யண்மையிலே
கூட்டிவந்தி ருத்திக் குருதரிச னம்பரிவாற்
காட்டியதென் னோநின் கருத்து.

மெய்ப்பொருளை அடைவதற்காக முயற்சிகளில் யாதொன்றையும் உண்மை சிரத்தையோடு செய்ய முடியாத வீணனேனாகிய என்னையும் கூட்டியழைத்துக் கொண்டுவந்து உன் அருகிலேயே அமர்வித்து பரிவோடு சற்குருவாகிய உனது தரிசனமும் நீ காட்டி வைத்தது எது குறித்தோ? உன் திருவுள்ளம் எதுவோ?

637. மெய்யறிவில் லாமல் வெளியோடா நின்றபுல
வையறிவோ டாடி யலுத்தேனுன் — கையுறுமா
றாண்ட திருவருளா லாட்படுத்தப் பட்டபின்பு
வேண்டுவசெய் வோரார் விளம்பு.

உண்மையறிவில்லாததால் புறமுகப்பட்டே அலைந்து கொண்டிருக்கும் ஐம்புல அறிவுகளோடு கூடியே ஓடி யாடி அலுப்படைந்த நான் உன் திருவருட்கரங்களாற் பிடித்துத் தடுத்தாட்கொள்ளப்பட்டே னல்லவா? இனி எனக்கு வேண்டிய நலன்கள் யாவையோ, அவற்றை யெல்லாம் செய்தருளக் கூடியவர் உன்னைத் தவிர வேறு யார்? சொல்க.

638. ஆட்கொண்ட நின்னையே யல்லும் பகலுமுன்னி
வேட்கொண்ட போரிலே வெற்றிகொண்டு — தாட்கண்ட
சாந்தியுணர் வோடிந்தச் சன்மங் கழியவெனக்
கீந்தருள வேண்டு மினிது.

இவ்வாறு என்னைத் தடுத்தாட்கொண்ட சற்குருவாகிய உன்னையே இரவும் பகலும் தியானித்து, மன்மதன் தொடுத்த போரிலே நான் வெற்றியடைந்து, உன் திருவடிகளாகிய ஆன்ம சொரூபத்தைத் தரிசித்த சாந்தி யுணர்விலேயே இப்பிறவி முழுவதும் கழியுமாறு எனக்கு நீ மகிழ்வோடு அருள் செய்வாயாக.

639. அன்னியத்தை யெண்ண லவமாகு(ம்) நானுதிக்குந்
தன்னிடத்தை நாட றவமாகு — மென்னியற்கை
யன்னியத்தி னீங்கி யகமுகமா தற்பொருட்டே
யுன்னடிக்கன் றீர்த்தோ யுதவு.

முன்னிலை படர்க்கைகளாகத்தோன்றும் அன்னியப் பொருள்களை நாடுவது அவமாகும். அவற்றை அவ்வாறு நாடுவோனாகிய 'நான்' உதிக்குமிடமாகிய ஆன்மாவை நாடுவதே தவமாகும். ஆனால், அன்னியங்களையே நாடும் எனது சுபாவம் முழுவதும் நீங்கி அகமுகமாவதற்காகவே அன்று என்னை உன் திருவடிகட்கு இழுத்தாட்கொண்ட சற்குருவே, அகமுகப்படுவதற்கே உதவியருள்க.

640. நினைப்பிக்க வேண்டு(ம்) நினதடியை நீயே
யெனைப்பெற்ற வெந்தையே யாயே — யுனைப்பற்றுஞ்
சாதனைக ளாற்றவோர் சக்தியிலேன் றஞ்சமுற்றேன்
பாதவிணைக் கேயென் பரம்.

என்னைப் பெற்ற என் தாயே, தந்தையே (என் அம்மையப்பனான ரமணபிரானே), உன் திருவடிகளை எனக்கு நீயே நினைப்பிக்க வேண்டும். மற்கட நியாயம் போல நானே உன்னைப் பற்றிக் கொள்ளும் பக்தி சாதனங்களை ஆற்றக் கூடிய சக்தி யொன்று மில்லாதவன் நான். அதனால் உன்னையே தஞ்சமாக வந்து சரணடைந்தேன். என் பாரம் முழுவதும் உன் இரு பாதங்களுக்கே யாகுக.

641. அணையா தினியுன் னருளென்னு ளேற்றிப்
புணையா வளித்தவொளிப் புந்தி — யணலேமற்
றானாலு மேன்மேனீ யாதரவு தாராயேற்
போனாலும் போங்கீழ்ப் புரை.

அண்ணலே, உனது திருவருள் எனக்குச் சிறந்த வழித்துணை யாகட்டும் என்று கருதி என்னுள்ளத்தில் ஏற்றி வைத்த சற்புத்தியாகிய விளக்கொளி இனி அணையாது என்பது உண்மையே. ஆனாலும் நீயே மேலும் மேலும் எண்ணெய் விடுதல் தூண்டிவிடுதல் போன்ற அருளுதவிகளைச் செய்யாமல் விட்டுவிடுவாயாகில், ஒருக்கால் கீழான பிழைவழிகளில் எனக்கு ஒளிதரும் விளக்காக மாறிப்போனாலும் போகுமே. எனவே அவ்வாறு ஆகாமல் அருள்தருக.

642. உடல்பிறந்த நாண்முதற்கொண் டுன்கணன்றி மாந்த
ரிடமிருந்து பெற்றதொன்று மில்லை — கொடைவள்ளல்
நல்ல குருரமண நாத னெனக்குருள
வில்லையெனி லீவா ரெவர்.

இவ் வுடல் பிறந்த நாள் முதற்கொண்டு உன்னருளால் உன்னிட மிருந்தன்றி மனிதர் யாரிடமிருந்தும் நான் பெற்றுக் கொண்டது ஒன்றுமே யில்லை. அத்தகைய நல்ல கொடை வள்ளலாகிய ரமண குருநாதனே, நீ இனியும் எனக்குத் தேவையான யாவற்றையும் வழங்கி யருளாவிட்டால், வேறு யார்தான் எனக்குக் கொடுக்க முடியும்? (முடியாது.)

643. ஞான விழிப்புதவு(ம்) நற்றவமேற் கொண்டறியா
வீன னெனவறிந்து மேற்றனையே — மோனவலி

வோங்குமிணை யில்லா வுபதேச முந்தோற்றா
லியாங்கெனவ(ம்) நீங்கு மறை.

ஞான விழிப்பைத் தருகின்ற நல்ல விசாரத் தவத்தை மேற்கொள்ளத் தெரியாத அற்பனே யான் என்று நீ அறிந்திருந்தும், அன்று என்னை உனது அடிமையாக ஏற்றுக் கொண்டுவிட்டாயே. இணையற்ற சக்தி வாய்ந்த உனது மௌனோபதேசமுங் கூட என்னிடம் தோற்றுவிடும் படி யாகுமேயானால், வேறு எங்குதான் எனது கீழ்மை நீங்க முடியும்? சொல்க.

644. அகவறிவா நின்றினியோ ரன்னியந்தே ராத
சுகநிறைவை யென்னுட் சொரிவான் — மிகவிளமை
தொட்டிழுத்து வந்துகுரு தோற்றமுங்காண் பித்தோய்பின்
விட்டிருக்க லாமோ வெனை.

ஆன்மசொரூப ஞான வடிவாகவேயாகி யாதொரு அன்னியமும் அறியாத பரிபூரண சுகத்தை என்னுள் பொழிவதற்காகவே, எனது மிக இளமைப் பருவத்திலேயே என் உள்ளத்தில் உன் அருட்கவர்ச்சியால் தொட்டு, உன் இருப்பிடமாகிய அருணாசலத்திற்கு என்னை இழுத்துக் கொண்டுவந்து சற்குரு தரிசனமும் காண்பித்தாயே! இவ்வளவு செய்த அருளாளனாகிய நீ இனிமேற்கொண்டும் செய்ய வேண்டியவற்றைச் செய்யாமல் என்னை விட்டிருக்க லாமோ? சொல்க.

645. எல்லாஞ் செயவல்லா யெல்லா மறிந்தென்மே
லெல்லா ரினு(ம்)நீ யிரக்கமுளா — யல்லவோ
ஆதலினாற் றானா னவனியர்பின் கிஞ்சிற்றும்
போதலிலே னீயே புர.

நீ எல்லாம் செய்ய வல்லவன்; நீ எல்லாம் அறிந்தவன்; மற்ற எல்லாரையும்விட என்மேல் அதிக இரக்கமுள்ளவன்; அல்லவா?[50] ஆகையால்தான் நான் உலகத்தார் யார் பின்னும் கொஞ்சமும் எதற்காகவும் போகாமல் உள்ளேன். நீயே என்னைக் காத்தருள்க.

646. நின்றசிவ ஞான நெடுங்கிரியண் ணாமலைநீ
தென்றலினு மின்பத் திருவுருக்கொண் — டின்றுரம
ணாசா ரியனா யடியேனை யாட்கொண்டா
யீசா வருள்க வெனக்கு.

சிவஞான நெடுங்கிரியாக நின்ற அண்ணாமலையானே, நீயே தென்றலைவிட மிகவும் இனிமையான ஸ்ரீ ரமண சற்குரு என்ற இன்பத் திருவுருக்கொண்டு வந்து அடியேனை ஆட்கொண்டாய் அல்லவா? ஆதலால் இறைவா, நீயே எனக்கு எல்லாம் அருள்க.

647. உலகுக் கிதயமா வோங்கருண சைல
நிலமுற் றிருக்கவைத்த நீயே — விலகாதென்
னுள்ளும் புறமு முனோடொன்றி வாணாட்க
டள்ளும் படிசெய் தயை.

இந் நிலவுலகிற்கு இதயமாக ஓங்கி விளங்கும் அருணாசலத்தை நான் அடைந்து இங்கேயே ஸ்திரவாச முற்றிருக்கும்படி என்னை நீ வைத்தாயல்லவா? மேலும் நீயே என் உள்ளும் புறமும் என்றும் விலகாமல் உன்னோடு சேர்ந்திருந்தவாறே என் உடல் வாழ்நாள் முழுவதும் கழியும்படி வாழத் தயவு செய்தருள்க.

---

[50] 766, 979 பாடல்களுடன் ஒத்து நோக்குக.

648. இழந்த வெதார்த்தநிலை யெய்துவிப்பா னென்னைக்
குழந்தைப் பருவமுதற் கூவித் — தொழும்பழக்க
மேற்படுத்தித் தந்த விறைவா ரமணவினி
மேற்செயலு(ம்) நீயேயார் வேறு.

என்றும் யதார்த்தமாகவே நான் பிரம்மமாக இருந்தும், அந் நிலையை இழந்துவிட்டதாக உணரும் தோற்றமாத்திர அஞ்ஞானநிலை மாறி, மீண்டும் என் யதார்த்த நிலையாகிய உன்னை அடைவிப்பதற்காகவே, எனது குழந்தைப் பருவத்திலிருந்தே உன் திருவருளால் நான் உன்னையே கூவித்தொழுது பாடிப்பணியும் பழக்கத்தை எனக்கு ஏற்படுத்தித் தந்த இறைவனே, ரமணா! இனிமேற்கொண்டு அருள்செய்ய வேண்டியவனும் நீயே யன்றி வேறு யார்?

649. சற்குருநின் பாத தரிசனங்கோ டிப்பிறவி
பெற்றிடினுங் கிட்டாப் பெரும்பேறா — மற்பனெனக்
கெவ்வாறோ கிட்ட வெழுந்தருளி வந்தோயின்
றவ்வாறே வீடு மளி.

சற்குருவே, உனது திருவடி தரிசனமானது கோடிப் பிறவி எடுத்தாலும் கிடைக்காத அவ்வளவு அரிய பெரிய பாக்கிய மாகும்! அத்தகைய உயர் பாக்கியம் அற்பனாகிய எனக்கும் கிடைக்குமாறு எப்படியோ செய்து என்முன் எழுந்தருளி வந்தவனே, அந்த உனது அவ்வியாஜ கருணையின் நியாயப்படியே இப்போது எனக்கு முக்தியும் கொடுத்தருள்வாயாக.

650. தொல்லதிநா ளாவுன் றுணைவேண்டு வேண்டுமென்றே
சொல்லித் தொழுதழுது சோர்ந்துள்ளேன் — வல்லாய்
குருரமணக் காட்சி கொடுத்தா யகந்தைக்
கருவழிந்த காட்சி கொடு.

பண்டை வெகுகாலமாகவே 'பரம்பொருளாகிய உன் திருவருட்டுணை வேண்டும், உன் திருவருட்டுணையே வேண்டும்' என்று பாடித் தொழுது அழுது, அது கிடைக்கவில்லையே என்ற ஏக்கத்தால் மனமும் உடலும் சோர்ந்துள்ளேன். எல்லாம் வல்லவனே, சற்குரு ரமணனாக என்முன் காட்சி கொடுத்தாயே! அவ்வாறே இனி எனக்கு அகந்தை அழிந்த உனது ஞானக்காட்சியையும் கொடுத்தருள்வாயாக.

651. பிலவழியே தப்பும் பெருங்கள்வர் போலைம்
புலவழியே தப்பும் புலையே — னலைவழிய
வாண்டுகொண்ட நின்பா லலாமற் பிறரிடத்தில்
வேண்டகில்லே னீயே விதி.

கன்னமிட்டுத் திருடும் பெருங்கள்வர்கள் கன்னமிட்ட துவாரத்தின் வழியே தப்பி ஓடிவிடுவதைப் போலவே, கள்ளவழிகளாகிய ஐம்புல வழியே தப்பி பகிர்முகப்பட்டு ஓடும் புலையேன் நான். இத்தகைய என்னையும் உலகாயதத்தில் அலைந்து அழியாமல் ஆட்கொண்ட உன்னிடமன்றி வேறு யாரிடத்தும் எதையும் வேண்ட மாட்டேன். நான் எதை அடைய வேண்டுமாயினும், நீயே அவற்றை எனக்கு விதித்தருள்வாயாக.

652. நீயே நெறியாகு(ம்) நீயே நிலையாகு(ம்)
நீயே நெறியா னிலைசேர்ப்போ — னீயே
யெதற்கும் வலியரம ணேச னெனக்கென்
றொதுக்கவினை யொன்றுமிலை யோர்.

சகல நெறிகளும் (மார்க்கங்களும்) நீயே யாகும்; அந் நெறிகள் யாவற்றாலும் அடையப்படும் முடிவு நிலையும் நீயேயாகும். ஆகவே, நீயே என்னைத் தக்க நெறியால்

நிலை சேர்ப்போனாகின்றாய். நீயே எல்லாம்வல்ல, எவரையும்விட வல்ல ரமணேசுவரனல்லவா? ஆகையால் நான் செய்ய வேண்டும் என்று என் பொறுப்பில் நீ விடக்கூடிய சாதனை யாதொன்றுமில்லை. அறிந்தருள்க.

## 10. நீயே துணை

653. வன்மத்த மோக வலிவான் மதியிழந்தே
யுன்மத்த னாயலைத லுற்றேனைச் — சென்மத்தின்
பற்பலவற் றூடும் பரிபாலித் தீற்றிலருட்
சற்குருவா யாண்டோய் சரண்.

கொடிய மதம் பிடித்த மோக வலிமையால் விவேகமிழந்து பித்தனாக அலைந்த என்னை, கடந்துபோன பலகோடி ஜன்மங்களினூடேயும் அருளால் காப்பாற்றிக்கொண்டே வந்து, கடைசியில் இந்த ஜன்மத்தில் எனக்குப் பரிபூரணமாக அருள் செய்து முடிப்பதற்காக ஸ்ரீ ரமண சற்குருவாக அவதரித்து வந்து ஆட்கொண்டவனே, நீயே சரண்.

654. அண்ணா மலையே யருளின் மலையாயென்
கண்ணாரக் கண்ட கடவுளே — பண்ணாலுன்
சீர்பாடத் தந்த சிவமே ரமணாநின்
சார்பே யுயிரென் றனக்கு.

அண்ணாமலையே, அருளே மலையாகத் திரண்டெழுந்த வனே, நான் என் கண்ணாரக் கண்ட கடவுளே, தமிழ்ப் பாடல்களால் உன் சீர்பாடும்படி எனக்குக் கொடுத்து வைத்த சிவமே, ஸ்ரீ ரமண பிரானே, உன்னைச் சார்ந்திருப்பதே என் உயிர்க்குப் பெருந்துணை யாகும்.

655. உற்பவமா யோங்கி யொழியுந் திரிவிதமாங்
கற்பனையே [51]காணாக் கடவுளே — சற்குருவே
மானிடமாத் தோன்றிநின்ற மாவிருடி யேநினது
கானிழலே யென்றன் கதி.

தனது ஞானப் பேரொளியின் முன் இல்லா தொழியும் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் முத்தொழிலும் ஜீவேசுவர ஜகம் என்னும் மூவிதக் கற்பனையும் ஆகியவற்றைக் கடந்து விளங்கும் கடவுளே, எனது சற்குருவான ஸ்ரீ ரமண பிரானே, மானிட வடிவில் என் கண்முன் தோன்றி வாழ்ந்த மகரிஷியே, உன்னுடைய திருவடி நிழலே எனக்குக் கதி யாகும்.

656. அசத்துநா னற்ப னனித்தனா னித்ய
நிசத்தியலை நாடி நிலைக்க — வசத்தனான்
ஆதலினென் னான்ம ரமண வடைக்கலமாப்
போதருகின் றேனுன் பொறுப்பு.

நான் அசத்து; நான் அற்பன்; நான் அநித்தியன்; என்றுமுள்ள மெய்ப்பொருளின் இயல்பை விசாரித்தறிந்து அதிலேயே நிஷ்டையுறுவதற்கு நான் சக்தியற்றவன். ஆதலால், என் ஆத்ம ரமணனே, உன்னையே அடைக்கலம் புகுந்துள்ளேன். என்னை ரக்ஷிக்க வேண்டியது உன் பொறுப்பாகும்.

657. எப்பிறப் பெய்தினு மெய்த வரியகுரு
நற்பதமாஞ் சத்தரிச னத்தாலே — யிப்பிறப்போ

---

[51] 'காணாக் கடவுளே': 'குருவாசகக் கோவை' 23வது பாடலில் வரும் "இறைவனது திட்டியிலே இல்லா உலகை" என்ற சொற்றொடரைக் காண்க.

டேது மினிப்பிறக்க வேலை யிலாதுனருட்
போதெனக்கீ யட்டும் புகல்.

எவ்வளவு உயர்ந்த ஜன்மம் எடுத்தாலும் அடைய முடியாத சற்குரு பாதங்களாகிய ஸத்தைத் தரிசிக்கும் பாக்கியம் இப்போது எனக்குக் கிடைத்துவிட்டதால். இந்தப் பிறப்புக்குப் பின் இனிமேல் பிறக்க வேண்டிய எந்த அவசியம் இல்லாதபடி உனது அருட்பாதமலர்கள் எனக்குப் புகலளிப்பனவாகட்டும்.

658. கண்ணுக் கிமையினிலுங் கட்டுடைக்குக் கையினிலும்
பெண்ணுக்குத் தாயினிலும் பேருதவி — பண்ணு
மரிய துணையென்றென் னாருயிர்க்கு நின்னை
குருரமணா கொண்டேன் குறித்து.

கண்ணுக்கு உதவும் இமைகளைவிட, அவிழ்ந்த உடையை உடனே கட்டிக்கொள்ள உதவும் இரு கைகளையும்விட, ஒரு பெண்ணுக்கு (அவளது பிரசவ சமயம் போன்றவற்றில்) உதவும் அவளைப் பெற்ற தாயையும்விட என் உயிருக்கு அரும் பெரும் உதவி புரியக் கூடிய துணைவனாக, சற்குரு ரமணா, உன்னை நான் தீர்மானித்து உன் திருவடிகளில் நம்பிக்கை கொண்டிருக்கிறேன். அருள்வாயாக.

659. வித்தையெட் டெட்டுமொரு மித்தையாப் போகபர
வித்தையா மான்ம விசாரத்தா — வித்தரைமேன்
மெய்யைமெய் யாக மிளிரவைத்த நின்னடியிப்
பொய்யனுக்கு முண்மைப் புகல்.

ஆயகலைகள் அறுபத்துநான்கும் பரவித்தையாகிய ஆன்மவிசாரக் கலையின் முன்னிலையில் வெறும் பொய்க்கலைகளாகிவிடும்படியும், இவ்வுலகில் ஆன்மாவே மெய்ப்பொருளாக விளங்கும் படியும் உபதேசித்து நிலைநிறுத்திய உனது திருவடிகள் பொய்யனாகிய எனக்கும் மெய்யான புகலாகட்டும்.

660. எங்கிருக்கின் றேன்மே லினியெம் முயற்சிகொண்டே
யெங்குசெல் வேனா னிதற்குமுன் — னெங்கிருந்தே
னொன்று மறியா துடன்மயக்கக் காரிருளிற்
பொன்றுகின்றே னீயே புகல்.

நான் இப்போது எங்கு எவ்வாறு உள்ளேன்? இனிமேல் எந்தவிதமான முயற்சியை மேற்கொண்டு எங்கு செல்லப் போகின்றேன்? நான் இதற்கு முன் (இவ் வுடல் பிறப்பதற்கு முன்) எங்கு எதுவா யிருந்தேன்? இவற்றைப் பற்றி ஒன்றுமே அறியாத மூடனாய், 'இவ் வுடலே நான்' என்னும் காரிருளில் மயங்கிக் கிடந்து அழிகின்றேன். இத்தகைய எனக்கு நீயே புகல்.

661. ஞானவா ளேந்துகுரு நாத னுனதருளா
லீனவாழ் வற்றிடுவே னின்றேலித் — தீனனேன்
செய்வினையாங் காட்டெரியாற் றீய்வே னலாதொன்று
முய்வழிகா ணேனென் னுயிர்க்கு.

ஆன்மஞானமாகிய வாளாயுதத்தை ஏந்திய சற்குரு நாதனே, உனது திருவருளால் 'நான் உடலே' என்ற புலைவாழ்வு நீங்கப் பெற வேண்டும். இல்லாவிடில், தீனனாகிய நான் செய்யும் ஆகாமிய, சஞ்சித வினைகளாகிய காட்டுத் தீயால் எரிந்துபோகக் கூடியவனே யாவேன். எனவே, உனது திருவடிகளைத்தவிர என் உயிருக்கு உய்வழி வேறொன்றையும் நான் காணவில்லை.

662. உன்னருளொன் றேதானென் னுற்றதுணை யென்று கொண்டிங்
கிந்நிலம்வாழ் தேகத் திருக்கின்றே — னின்னொருவர்
யாரும் துணையில்லே னஞ்சலளித் தாறுதலே
சேரும் படிரமணா செய்.

உன் திருவருள் ஒன்று மட்டுமே எனக்கு உற்ற துணை யென்ற நம்பிக்கை கொண்டு, இவ்வுலகத்தில் ஜீவித்திருக்கும் இவ் வுடலில் வாழ்ந்திருக்கின்றேன்; வேறு யாரையும் நான் துணையாகக் கொள்ளவில்லை. ஸ்ரீ ரமண பிரானே, நீயே எனக்கு அபயம் தந்து நான் ஆறுதலடையும்படிச் செய்தருள்க.

663. அருணகிரி நின்றென்னை யாட்கொண்ட ஞான
குருரமண னானவருட் கோவே — வருபிறவி
மாற்றுந் தொழிலிற்கை வல்லவனே நின்னடியைப்
போற்றவைத்தோய் நீயே புகல்.

ஸ்ரீ ரமண பிரானே, அருணகிரியில் எழுந்தருளியிருந்து என்னை ஆட்கொண்ட ஞானகுருவாகிய அருட்சக்கரவர்த்தியே, தன்னடியார் களுக்கு இனி வரக்கூடிய மறு பிறவிகளை அழிக்கும் தொழிலிற்கைதேர்ந்த வல்லுனனே, உனது திருவடிகளையே துதிக்குமாறு என்னைச் செய்தவனே, நீயேஎன் புகலாகும்.

664. அத்தத்தி னெல்லிபோ லவ்வப்போ தென்னைநீ
யெத்தனையோ காப்பாற் றியதெல்லாஞ் — சத்தியமே
யல்லவோ வின்றுன் னருட்டுணைக்கே நான்மிகவுஞ்
சொல்லவோ வேண்டு(ம்)நீ சொல்.

அவசியம் ஏற்பட்ட எத்தனையோ தடவைகளில் அவ்வப்போது நீ என்னை காப்பாற்றியருளிய தெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி போல் அவ்வளவு சத்தியமான அருள் நிகழ்ச்சிகள் அல்லவா? அப்படியிருக்க, 'இன்றும் நீ அருட்டுணை செய்ய வேண்டும்' என்று நான் மறுபடியும் உன்னிடம் சொல்லிக்கொள்ளவா வேண்டும்? (நான் கேளாமலேயே அருள்வாயன்றோ?) நீயே சொல்க.

665. என்றருள்செய் தாலு மெனக்கருளுந் தெய்வ(ம்)நீ
யொன்றுதான் மற்றிங் கொருவரிலை — யன்றருண
ஞான மலையடியி னாயேனை யாட்கொண்ட
மோனரம ணாநீ முடி.

அன்றொரு நாள் அருணாசலமாகிய ஞான மலையின் அடிவாரத்தில் எழுந்தருளி என்னை மோனமாக ஆட்கொண்ட ஸ்ரீ ரமண சற்குருவே, இன்றைக்கே யன்றி இனி எனக்கு என்றைக்கு அருள் செய்வதாயிருந்தாலும் சரி, எனக்கு அருள் செய்யப்போகும் தெய்வம் நீ ஒருவனே யாகும். வேறு தெய்வம் இங்கு யாரொருவருமில்லை. ஆகையால், உன் அருட்செயலை நீயே செய்து முடித்தருள்க.

## 11. நின்னருளே பிரதானம்

666. நின்னருளா லிவ்வுடலி னீடித் தொருவாழ்க்கை
யின்னு மிருக்கின்ற தெம்பெருமான் — றன்னறிவி
லென்னை யிழந்தபே ரின்ப வியல்வாழ்வு
முன்னருளே தான்செயவேண் டும்.

எம்பெருமானே, இந்த உடலில் எனக்கு ஒரு வாழ்க்கை இன்னும் நீடித்திருப்பது உன் அருளாலேயே யாகும். இனி ஆன்ம அறிவில் இவ் வகந்தை வாழ்வை இழந்து நிற்கும் பேரின்ப சகஜ வாழ்வையும் உன்னருளேதான் ஏற்படுத்தித் தர வேண்டும்.

667. அருளொன்றா லன்றியொன்று மாகாதென் றோர்ந்துன்
கருணைத் திருவுளத்துக் காக்கிச் — சருவமுமே
ஆரா தொருமுயல்வு மன்பிலேன் கைகூப்பி
யாராதிக் கின்றே னருள்.

நான் உனது திருவருள் ஒன்றினாலன்றி வேறெந்த முயற்சியாலும் ஒன்றும் நடவாது என்ற உண்மையை உணர்ந்து, 'யாவும் உனது கருணைத் திருவுளப்படியே யாகுக' என்று என்னைச் சமர்ப்பித்து, அதனால் யாதொரு சாதனை முயற்சியும் அற்றவனாய் இவ் வன்பிலா அடியேன் உன்னைக் கைகூப்பித் தொழுது நிற்கின்றேன். அருள்க.

668. பற்றுக்கோ டாவென் பரமகா ருண்ணியநீ
முற்றுமெனக் காகியிக மோகமெலா — மெற்றி
யனாயாச மாக வருள்புரிவா யின்றே
[52]லெனாலியா தாகு மினி.

என்மேல் பரமகருணை யுடையவனே, நீ எனக்கு முழுவதும் பற்றுக் கோடாக ஆகி நின்று, இவ் வுலக ஆசை மயக்கங்களை யெல்லாம் அகற்றித் தந்து, அனாயாசமாக நான் உன்னையடையும் படி அருள்புரிவாயாக. இல்லாவிட்டால், என்னால் இனி என்ன செய்ய முடியும்? (முடியாது.)

669. திருவருளே வேண்டுந் திரும்பி யகத்தின்
சொருபமதி லாழ்ந்து சுகிக்க — குருவடிவங்
கொண்டருணைக் கென்னைக்கைக் கொண்டிழுத்து வந்தநினைத்
தெண்டனிட்டு வேண்டுகின்றேன் செய்.

நான் உண்முகமாகத் திரும்பி ஆன்ம சொரூபத்தில் ஆழ்ந்து சுகிப்பதற்கு உனது திருவருளேதான் துணை செய்ய வேண்டும். சற்குரு வுருவில் அவதரித்து, அன்று என்னை அருணாசலத்திற்கு அருளால் பலவந்தமாக இழுத்துக் கொண்டுவந்து சேர்த்த உன்னையே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து வேண்டுகின்றேன். செய்தருள்க.

670. காண லறிதற் கலத்தலுன் னிற்றிரமா
யூண லுவத்தலென்பர் உண்மையென்ன — தோணுமொரு
நானுதியாத் தன்னிழப்பே நானிவ் விழப்புறவென்
கோனருளே வேண்டுங் கொடு.

கடவுளை அல்லது ஆன்மாவைத் தரிசித்தல், அறிதல், அதனுடன் ஒன்றாகிக் கலத்தல், ஆன்மாவாகிய உன்னிடமே ஸ்திரமாக ஊன்றி நிற்றல், பேரின்பம் துய்த்தல் என்றெல்லாம் பெரியோர் கூறுகின்றனர். ஆனால் உண்மையில் இவை யாவும் என்ன? தோற்ற மாத்திரமாக 'நான் இவ் வுடல்' என்ற வடிவில் எழுந்துள்ள எழுச்சி உதிக்காமலிருக்கும் தன்னிழப்பு நிலையே இத்தனைவிதப் பெயர்களால் அழைக்கப்படுவதன்றோ? எனவே நான் இத் தன்னிழப்பு நிலையைப் பெறுவதற்கு என் ஆண்டவனாகிய உனது திருவருளே முக்கியமாக வேண்டப்படுவதாகும். ஆகையால் உன் அருளைத் தருவாயாக.

671. ஏறுநிலை யெல்லாமே லேறியரு ளெய்துமொரு
வீறெனக்கு நீகொடுக்க வில்லையே — மாறுமன
வெண்ணமோ வல்ல திதயத்து ளெய்தவருள்
வண்ணமன்றோ வேண்டு(ம்)நீ வா.

[52] 'எனாலியலா தேது மினி' எனவும் பாடம்.

ஏற வேண்டிய எல்லாவித மேல்நிலைகளுக்கும் ஏறிச்சென்று அங்கு உன் அருளைப் பெற வேண்டு மென்றால், அதற்கான மன உறுதியையும் சக்தியையும் நீ எனக்குக் கொடுத்தருளவில்லையே. என்னிடம் இருப்பது யாதெனில், அடிக்கடி மாறிச் சலன மடைந்து கொண்டே இருக்கும் சுபாவமுள்ள மனம் ஒன்று தான். இந்த மனமா நான் இதயத்துள் சென்று முழுக உதவக்கூடிய சக்தியுடையது? அல்லவே! உனது அருட்சக்தியின் உதவியல்லவா வேண்டும்? எனவே நீயே வந்தருள்க.

672. எனதென் றிருப்பொன் றிருப்பதற வோய்ந்த
பினரங் கிருக்கப் பெறுவ — தெனவென்
றனுபவமா யோர்ந்தே யழுத்தமுட னிற்க
வுனதருளே வேண்டு முதவு.

'இது நான்' அல்லது 'நான் இவ்வாறுள்ளேன்' என்றவாறு எனக்கென்று உள்ள ஒரு தனியிருப்பு முற்றும் ஒழிந்த பிறகு அங்கு என்ன எது உள்ளது என்பதை அனுபவமாக அறிந்து யானற்ற அந் நிலையிலேயே அழுத்தமுடன் நிட்டையுற்றிருக்க உன்னுடைய அருளே வேண்டும். கொடுத்தருள்க.

673. தனுகரணக் கட்டுவிட்டுத் தானாக மிஞ்சிப்
பனுவலரு மோனம் பதிந்து — மனுமிதய
வுண்மைவாழ் வுன்னடியே னூன்றிநிற்க வுன்னருளின்
வண்மையின்றி யில்லை வழி.

தேகம், இதிலுள்ள கரணங்களாகிய இந்திரியங்கள் முதலியவற்றாற் கட்டப்பட்ட கிரந்தி பேதிக்கப்பெற்று, நான் ஆன்மாவாக மிஞ்சி நின்று, உரை கடந்த மோன சமாதியில் பதிந்து, இதயத்தில் ஸ்திரம் பெற்று வாழும் உண்மை வாழ்வை யடைய உனது அருட்கொடையைத் தவிர வேறு வழியே யில்லை.

674. ஒடுங்கியுளத் தொன்றா யுபாதியுற் பத்தித்
தொடங்கவிடாத் தோன்றாத் துணையுன் — னிடங்கரைந்தே
யென்றென்று மீளா வியற்கைநிலை யெய்தவரு
ளன்றிவழி யில்லை யருள்.

உள்ளத்தில் ஒடுங்கி ஒன்றாகி, 'நான் இன்னார்' என்ற உபாதி யெழுச்சி எழும்பச் சிறிதும் இடங்கொடாத தோன்றாத் துணையான உன்னிடம் நான் கரைந்து மறைந்து போய், என்றைக்கும் மீண்டும் வராத சகஜநிலையை அடைவதற்கு உனது திருவருளைத் தவிர வேறு வழியேயில்லை. தயை செய்து அருள்வாயாக.

675. வெய்யி லுழன்ற விளம்பயிர்நா னுன்னருளாப்
பெய்யுமழை யாலன்றிப் பேறடையேன் — கையிலுறு
நெல்லிக் கனியாக நின்றனையென் கண்முன்னீ
புல்லிப் பிறவியறப் போக்கு.

உலக ஆசைகள், அவற்றினால் பெற்ற துன்பங்கள் ஆகிய வெய்யிலில் வதங்கித் துவண்ட இளம் பயிர் நான். இனி பெய்யப்போகும் உனது திருவருளாகிய மழையினாலன்றிப் பயனில்லாமற் போய்க் கெடுவேன். உள்ளங்கையில் நெல்லிக்கனி தெற்றென விளங்குவது போல் அன்று நீ என் இருகண்களின் முன்னும் வெகு ஸ்பஷ்டமாகக் காணும்படி வந்து நின்றாயே. அந்த நீயே என் உள்ளத்தில் புகுந்து சேர்ந்து எனக்கு இனி மறுபிறவிகள் உண்டாகாதவாறு அவற்றைப் போக்கியருள்வாயாக.

676. உண்மை முமுட்சுத்வ முண்டாக நின்னருளின்
வண்மையே வேண்டுமன்றி மற்றென்றன் — னுண்மையிலா

நெஞ்சத்தா லாகுமோ நித்தியா நித்தியத்தைக்
கொஞ்சத்துங் கண்டுட் கொள.

உண்மையான முமுட்சுத்துவம் எனக்கு உண்டாக வேண்டுமாயின், அது உனது அருட்கொடையால்தான் ஏற்படவேண்டுமே தவிர, போலியாகிய என் தடித்த மனத்தால் ஆராய்ந்து நித்தியாநித்திய வஸ்துவை விவேகித்துக் கொஞ்சமேனுங் கண்டுகொள்வதென்பது முடியுமோ?

677. கற்றடைய வொண்ணாக் கனமோன முன்னருளா
லுற்றிடுத லன்றி யொருக்காலுஞ் — சிற்றறிவாம்
பேரறியா மைகொண்ட பித்தனெனா லாகுமோ
கூரருளென் மீதே குளிர்ந்து.

அப்பியாசித்து அதன் பயனாயடைய முடியாததான மாட்சிமை மிக்க மோனானுபூதியானது உன் அருளால் கிடைக்க வேண்டுமே தவிர, சிற்றறிவு என்னும் பெரிய அறியாமையைக் கொண்ட பைத்தியக் காரனாகிய என்னால் ஒருக்காலும் பெற இயலுமோ? (நடவாது.) ஆகையால் மனங்குளிர்ந்து என்மீது அருள்புரிவாயாக.

678. மோனப் பெருங்கடலா முன்னெழுந்த நின்பெருமை
யானப் படியே யமர்ந்துணரேன் — ஞானத்
திருவருளே தானே தெளிவித்தல் வேண்டுங்
குருவருளின் மாண்பைக் குளிர்ந்து.

(ஆதிகுரு தக்ஷிணாமூர்த்திக்குச் சமானமாய்) மோனப் பெருங்கடலாகவே என்முன் எழுந்தருளிய முழுமுதற் பரம்பொருளே, யானும் மனோவாக்குகாயங்களை முழு மோனமாக்கி ஆன்ம நிஷ்டையுற்று அப்படியே இருந்து உனது உண்மையான மகிமை முழுவதையும் அறிய முடியாத பேதையானேன். என்முன் எழுந்தருளிய சற்குருவாகிய உனது அருள் மகிமையை உனது ஞானத் திருவருளேதான் கருணைகூர்ந்து எனக்குத் தெளிவாக உணர்த்தியருள வேண்டும்.

679. உள்ளமாய் மாறா வொருவனாய்ப் பேரின்ப
வெள்ளமாய் முற்றும் வெளிமுகர்க்குக் — கள்ளமாய்
நிற்கு முனதியலை நின்னருளில் லாதடியேன்
கற்க வியலுமோ காண்.

சகல உயிர்களுக்கும் இதயமாய் (ஆன்மாவாய்), முக்காலத்தும் மூவிடத்தும் சிறிதும் மாற்றமில்லாத ஏக வஸ்துவாய், பேரின்ப சமுத்திரமாய், ஆனால் பகிர்முகர்களாகிய மாந்தருக்குச் சற்றும் தெரியாமல் ஒளிந்திருப்பவனாய் விளங்கும் உனது சகஜ மகிமையை உன் திருவருளாலன்றி அடியேன் அறிந்துணர முடியுமோ? என்னைக் கடாக்ஷித் தருள்க.

680. இட்டமுற்றார்க் கன்றி யிரண்டற்ற மோனமணிப்
பெட்டகத்தை யீயாப் பெரும்வள்ளால் — இட்ட
முனதருளாற் கிட்ட வுனையே யிரக்கு
மெனதியல்பைக் கண்டருள்வா யேற்று.

அத்வைத மோனமணியாகிய பொக்கிஷப் பெட்டியை விரும்புவார்க் கன்றி

மற்றவர்கட்குக் கொடுக்காத பேரருள் வள்ளலே! உனது திருவருளாலேயே எனக்கு அந்த விருப்பத்தை உண்டாக்கித் தருமாறு உன்னிடமே கெஞ்சுகின்ற எனது தீன நிலையைக் கண்டு இரங்கி அருள் புரிவாயாக.

681. நல்லகுரு நாத ரமண கருணையினா
லல்ல தடியே னவமழியேன் — சொல்லிற்
சுருக்கமா யிஃதேயென் றோத்திரமென் னெஞ்சி
னுருக்கமுமுன் கைமாட் டுளது.

யாவரினும் சிறந்த எனது சற்குருநாதனான ஸ்ரீ ரமண பகவானாகிய உனது அருட்பெருங்கருணையாலன்றி அடியேன் கீழ்மை முற்றும் அழியப் பெற முடியாது. சுருங்கக் கூறின், இதுவே என் ஸ்தோத்திரமாகும். இவ்வாறு செய்யும் ஸ்தோத்திரத்தையும் முழு அன்புடனும் உள்ளம் உருகியும் செய்யும்திறமும் கூட நீ தான் எனக்கு ஏற்படுத்தித் தர வேண்டும்; அப் பொறுப்பும் சக்தியும் கூட உன் கைவசத்தில் தான் உள்ளது.

682. உண்மையறி வற்றிவ் வுலகேமெய் யென்றுமுடற்
றிண்மைபெறு மாறும்வீண் சிந்தனைக — ளெண்ணிறந்தே
யெப்போதுங் கொண்டிளைக்கு மேழையேற் குன்னருடான்
மெய்ப்போத மீயவேண் டும்.

உண்மையான ஞானமில்லாமல், இவ் வுலகமே மெய்யென்றும், இவ் வுலகில் வாழும்என் உடலே 'நான்' என்றுங் கருதுவதால், இவ் வுடல் திடமான ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டு மென்றும் விரும்பி, அதற்காக எண்ணிறந்த வீண் சிந்தனைகளையே இரவும் பகலும் கொண்டிருக்கும் அறிவற்ற ஏழையாகிய எனக்கு உன் திருவருள்தான் மெய்ஞ்ஞானத்தை யருளவேண்டும்.

683. பல்லூழி காலம் பயிற்றிடினு மென்சித்த(ம்)
நல்லா மெனச்சிறிது(ம்) நம்புகில்லேன் — வல்லா
யிருளுக் கொளிபோ லிமைப்போதிற் போ(ம்)நின்
னருளுக்கு முன்னென் னழுக்கு.

பலவகைப்பட்ட சாதனை நெறிகளால் பல்லூழி காலம் பயிற்றினாலும், மும்மலம் நிறைந்த என் புத்தி நல்லதாக மாறிவிடும் என்று எனக்குச் சிறிதும் நம்பிக்கை யில்லை. எல்லாம் வல்லவனே, பல்லூழி காலமாய் இருள் மூடிக்கிடந்த குகையே யாயினும் ஓர் ஒளி விளக்கைக் கொண்டுவந்தால், உடனே அந்த அடர்ந்த பழைய இருள் அத்தனையும் மறைந்து போவது போலவே, உன் திருவருள் ஒளி என் உள்ளத்தில் அருளப்பெற்றால், கண் இமைக்கும் ஒரு நொடிப் பொழுதிற்குள் என் மன அழுக்குகளெல்லாம் அடியோடழிந்து, சித்தம் சிவமயமே யாகிவிடும்.

684. கனத்த மலத்திரையைக் கையருள்வா ளின்றி
மனத்தா லறுத்தெறிய மாட்டா — தனைத்திருளு(ம்)
நின்னருளாம் ஞானவொளி நேர்ந்தா னொடிப்போதின்
மின்னலென மாய்ந்து விடும்.

மிகத் தடித்துப்போன (ஆணவம், கன்மம், மாயை எனப்படும்) மும்மலங்களாகிய மறைப்பை உன் கரத்திலுள்ள அருள்வாளா யுதத்தால் அறுத் தெறிய முடியுமே தவிர, அதை என் அற்ப புத்தியால் அகற்றிவிட முடியாது. உனது அருளாகிய ஞான தீபம் என்னுள் ஏற்றப்பட்டால், மின்னல் மறைவதைப் போல ஒரு நொடியில் எல்லா அஞ்ஞான இருளும் மாய்ந்துவிடும்.

685. செய்யுங் கருணைத் திருவருள்வந் தாலன்றி
யுய்யும் வழியெனக்கிங் கொன்றில்லை — பொய்யும்
புரையு(ம்) நிறைந்தவிருட் புந்திவலி யோமெய்த்
துரியநிலை சேர்க்குந் துணை.

நீ கருணையோடு வந்து திருவருள் செய்தாலன்றி, நான் இவ் வாழ்வில் உய்வடைய ஒரு வழியுமே யில்லை. பொய்யும் கீழ்க்குணங்களும் நிறைந்து அஞ்ஞான இருள்மயமாக இருக்கும் என் புத்தியின் சக்தியா என்னைத் துரிய மென்னும் மெய்ந்நிலைக்கு அழைத்துச் செல்லும் ஒரு துணையாகிவிட முடியும்? (முடியாதென்க.)

686. கானலென்றும் பொய்யாங் கனவென்று மிவ்வுலக
மீனமென்று மெண்ணியெண்ணி யென்னபயன் — நானெழுந்த
பின்செய் முயற்சியுன்றன் பேரருள்வந் தாலன்றி
யென்செய்யு(ம்) நன்மை யெனக்கு.

இவ் உலகம் கானல் நீருக்குச் சமானம் என்றும், கனவு போன்ற பொய்த்தோற்றம் என்றும், இழிவானது என்றும் மனத்தால் நினைத்து நினைத்து மட்டும் யாதொரு பயனும் உண்டாகவில்லையே. அவ்வாறு நினைக்கும் மனமாகிய நான் ஆன்மாவை விட்டு வேறாக எழுந்து வெளிமுகப்பட்ட பிறகு அம் மனத்தால் செய்யப்படும் எந்த முயற்சியும் உனது பேரருள் வந்தாலன்றி எனக்கு என்ன நன்மையைச் செய்துவிட முடியும்? (ஒன்றுமில்லை.)

687. ஈடெடுப்பில் லாநின் னியல்பாங் கருணையே
வீடளிக்க வேண்டுமன்றி வீணனேன் — பீடைமனப்
பக்குவமோ சாதனையோ பற்றாத தாற்கருணை
மிக்கருள்க வென்பால் விரைந்து.

ஒப்புயர்வில்லாததும் உன் சுபாவமானதுமான அவ்வியாஜ கருணைதான் எனக்கு மோக்ஷத்தைக் கொடுக்க வேண்டுமே தவிர, வீணனாகிய எனது பீழை மனத்தின் பக்குவமோ அல்லது அந்த மனத்தாற் செய்யப்படும் எந்தச் சாதனையுமோ மோக்ஷத்தைத் தரும் சக்தியற்றதே. ஆகையால், நீ என்பால் விரைந்து வந்து அளவற்ற கருணை செய்தருள்வாயாக.

688. அருளா லலாம லனுபூதி ஞானத்
தெருளார்வ தில்லை சிறிதுங் — குருநாத
நின்னருளை வேண்டி நினைந்துருகி நிற்பதலா
லென்னசெய வல்லே னியான்.

உனது திருவருளால் நடந்தேறினாலன்றி, அனுபூதி ஞானத் தெளிவு சிறிது கூட எவராலும் அடையத் தக்கதல்ல. ஆகையால், என் சற்குரு நாதனே, உன் அருளை வேண்டி உன்னை நினைந்து உருகி அழுது நிற்பதைத் தவிர நான் என்ன செய்ய முடியும்?

689. நற்றா மரையடிக ணாட்டியித யத்துணட
முற்றோ யுனதிரக்க மொன்றுமட்டும் — பெற்றாலென்
சோகமெலாந் தீருஞ் சுகசேரு(ம்) நின்னடிமை
யாகுமுள முன்றனரு ளால்.

நல்ல தாமரை மலர்களைப் போன்ற உனது திருவடிகளை என் இதயத்தில் (நான் மறவாமல்) ஊன்றி அருள் நடம் புரிந்த பெருமானே, உனது இரக்கம் ஒன்றை மட்டும் நான் பெற்றுவிட்டேனேயானால், உன் அருளால் என் துயர மெல்லாம் நீங்கும்; பேரானந்த முண்டாகும்; என் மனமும் உனக்குப் பிழையாத நல்லடிமையாகஆகிவிடும்.

## 12. தன் அசக்தம் சாற்றல்

690. எண்ணிலா வாசனைக ளெல்லா மழிந்தான்மத்
தண்ணிலா வுண்ணுஞ் சகோரவாழ் — வண்ணலே
காரணமில் லாநின் கருணையால் வாய்க்குமன்றி
யோரணுவு மில்லே னுரன்.

(என் சித்தத்தில் இதுகாறும் சேர்த்துக் குவிக்கப் பட்டிருக்கின்ற) எண்ணிக்கையற்ற உலக வாசனைகளெல்லாம் அழிந்து, நான் ஆன்மாவாகிய குளிர்ந்த சந்திர கிரணங்களை உண்ணும் சகோர பக்ஷியாக வாழும் வாழ்வு பெற வேண்டுமானால், என்னை யாண்டவனே, யாதொரு காரணமு மில்லாமல் என்மேற் பொழியப் படும் உனது (அவ்வியாஜ) கருணையால்தான் அது கிடைக்குமே தவிர, அதைப் பெற எனக்கு அணுவளவு கூட சக்தி இல்லை.

691. நம்பத் தகாதென் னரபுத்தி நின்னருளாஞ்
சம்பத்தை யெய்துஞ் சமர்த்திலதாற் — றம்பற்றுந்
தானே யளிப்பாய் தகாதவற்றை நீக்கியொளி
வானா நிறையென்னுள் வந்து.

என் அற்ப மானிட புத்தியை நம்பத்தகாது; உனது திருவருளாகிய செல்வத்தைச் சம்பாதித்துக்கொள்ளும் சாமர்த்தியம் அதற்கில்லை. ஆகையால் உன்னிடம் உண்மையான பக்தியையும் எனக்கு நீயே யருளிச்செய்க. என் உள்ளத்திலுள்ள தகாதன யாவற்றையும் நீக்கி யழித்துவிட்டு, அருளொளியாகாசமாக நீயே என்னுள் வந்து நிறைந்து கொள்வாயாக.

692. அசத்தைச்சத் தாக வபிமானித் துள்ள
வசைத்தற் கியலா வழுத்த(ம்) — நிசத்தைநா
னெள்ளளவு மோர விடந்தரா துன்னருளா
லுள்ளந் திறந்தஃ துணர்த்து.

அசத்தாகிய உடலையே சத்தான 'நான்' (ஆன்மா) என்று கருதி, அசைக்க முடியாத அழுத்தத்துடனுள்ள தேகாபிமான சக்தியானது நான் உண்மையான ஆன்மாவை எள்ளத்தனை யளவு கூட இன்ன தென்று உணர இடமே தருவதில்லை. ஆகையால், உன் அருளால் நீயே என் உள்ளத்தை மலர்த்தி ஆன்மாவை உணர்த்தியருள்க.

693. கையாலா காத கடையேற் கபயமளித்
தையா ரமணா வருளுகவே — மெய்யாகச்
சொன்னாற் சிறிதுஞ் சுதந்தரமொன் றில்லாத
வென்னாலென் னா(ம்)நீ யிசை.

என்னை ஆட்கொண்ட ஐயனே, ரமணா, யாதொன்றும் செய்ய இயலாத கடையவனாகிய எனக்கு அபயமளித்து, அருள் செய்க. உண்மையைக் கூறுமிடத்து. ஒரு சிறிதும் சுதந்திர மில்லாத என்னால் என் உய்வுக்கு என்ன செய்து கொள்ள முடியும்? நீயே சொல்க.

694. சாதனையா யொன்றுஞ் சரிவரச்செய் யேனுன்றன்
போதனையுட் கொண்டொழுகிப் போற்றுகில்லேன் — வேதனையைக்
கூறி யழுதபயக் கூக்குரலிட் டேங்கலன்றி
வேறறியேன் மாட்டு மிரங்கு.

இடைவிடாது சாதனை யாதொன்றும் நான் சரிவரச் செய்ததேயில்லை. நீ உபதேசித்த நன்னெறிகளை உள்ளத்திற் கொண்டு அதன்படியே தவறாது ஒழுகியதுமில்லை. என் மன வேதனைகளை யெல்லாம் உன்னிடம் வந்து பாடல்களிற் கூறி அழுது அபயக்

கூக்குரலிட்டு ஏங்கி நிற்பதைத் தவிர வேறொன்று மறியாத என்மீதும் நீ இரக்கப்படுவாயாக.

695. வாதனைக்கூட் டத்தின் வலிவை யெதிர்த்தயர்ந்த
வேதனையா லுள்ள மெலிந்தடியேன் — சாதனைகள்
யாதொன்று மாற்ற வசத்தனா னேனுனது
பாதமே வீழ்ந்தேன்காப் பாற்று.

என்னுள்ளிருக்கும் உலக வாசனைகளாகிய பலத்த அசுரப் படைக் கூட்டங்களை எதிர்த்துத் தோற்று அயர்ந்து, அந்தத் தோல்வி வேதனையால் உள்ளமுடைந்ததால் மீண்டும் யாதொரு சாதனையும் ஆற்ற முடியாத அசக்தனாகி, நான் உன் அருட்பாதங்களே சரண் என்று வந்து வீழ்ந்து கிடக்கின்றேன். நீயே என்னைக் காப்பாற்றுவாயாக.

696. என்பா லிலையேயென் றெத்தனைநா ளோநானுன்
முன்போந் தழுதுமுறை யிட்டதெல்லா — மன்பேநீ
கேட்டும் மறந்தாயோ கீழ்மைநின்று(ம்) நானெனையே
மீட்டுக் கொளுந்தவத்தின் வீறு.

'கீழ்மைக் குணங்களினின்றும் என்னை நானே மீட்டுக் கொள்ளும் தவசக்தி என்னிடமில்லையே; ஆகையால், அன்புமயமான இறைவனே, நீயே அருள் செய்க' என்று நான் எத்தனையோ நாட்கள் உன் சந்நிதியில் வந்து அழுது முறையிட்டதை யெல்லாம் நீ செவிசாய்த்திருந்தும் மறந்து விட்டாயோ?

697. அரைவரையிற் சேற்றிலுளோ னாற்று முயற்சி
விரைவி லழுந்த [53]விதம்போல் — வருபுகழிற்
பற்றுள்ள நெஞ்சாற் பரமார்த் திகநூல்கள்
கற்றெங்ஙன் காண்பேன் கதி.

இடுப்பு வரையிலும் சேற்றில் ஆழ்ந்து பதிந்துள்ள ஒருவன் மேலும் அசைந்து அசைந்து முயற்சிப்பானேயானால், மேலும் மேலும் சேற்றில் ஆழப்பதிந்துபோவதற்கே அவனது முயற்சி சகாயமாவது போலவே, வரும் புகழின்மீதுள்ள ஆசையாகிய சேற்றிற் பதிந்த நெஞ்சமுடைய வனாகிய நான் ஞான நூல்களைப் படிப்பதால் பிறர் என்னைப் பாராட்டுவதாகிய புகழாசைச் சேற்றிலேயே மேலும் மேலும் பதிந்து போகவே நேருகின்றதே. எனவே, இச் சாஸ்திரப் பயிற்சியாகிய முயற்சியால் மேலும் அதோகதியைத் தவிர சற்கதியை நான் எவ்வாறு அடைய முடியும்?

698. அருணா சலரமண வம்மையப்பா ஞான
குருவா யுனைவரித்துக் கொண்டுன் — றிருவருளா
லீடேறி னாலன்றி யென்புத்தி சாதனத்தால்
வீடே தடைவேன் விளம்பு.

அருணாசலரமணா, என் அம்மையப்பனே, உன்னை நான் ஞானகுருவாக வரித்துக்கொண்டு உன் திருவருளினாலேயே கடைத்தேறினாலன்றி, என்னுடைய புத்தியாற் செய்யும் சாதனை களால் நான் எவ்வாறு மோக்ஷமடைய முடியும்? நீயே சொல்க.

699. பவத்தினாற் பாவமும் பாவத்தி னாலுற்
பவமுந் தொடரும் படிறேன் — தவத்தையினி
மேற்கொள்வ தென்றுமே மேவாது போலு(ம்)நீ
யேற்கிலன்றி யுய்வே தெனக்கு.

---

[53] 'இதம்' = ஹிதம்.

மேலும் மேலும் பிறவி எடுப்பதால் பாவங்களையே புரிவதும், மேலும் மேலும் பாவங்களையே புரிவதால் மீண்டும் மீண்டும் பிறவி எடுப்பதுமாகவேயுள்ள கொடியவனாகிய நான் இனி தவத்தை மேற்கொள்வது என்பது எக்காலத்திலுமே முடியாததாகுமென்றே தோன்றுகின்றதே. ஆகையால், நீயே உன் அருட் கருணையால், என்னைக் காப்பாற்றப்பட வேண்டிய ஓர் அடிமையாக ஏற்றுக் கொண்டாலன்றி, எனக்கு உய்வு ஏது?

700. ஆகாத தில்லா வருள்வல்ல பத்தாற்றா
னேகான்ம ஞான மெனக்குறலாந் — தேகான்மப்
புன்புத்தி யான்முயன்று போதமுற வென்னாலெச்
சென்மத்து மில்லை திறம்.

செய்ய முடியாத காரியம் ஒன்றுமே யில்லை யென்ற எல்லாம்வல்ல உன் அருட்சக்தியால் தான் எனக்கு ஏகான்ம ஞானம் உண்டாக முடியுமே தவிர, அற்ப தேகாத்மபுத்தியால் நான் முயற்சி செய்து ஆன்மஞானம் அடைவது என்னால் இன்னும் எத்தனை ஜென்மம் எடுத்தாலும் இயலாததே யாகும்.

701. எத்தனைகோ டிப்பிறவி யிப்படியே யென்னைநீ
வைத்தழவே வைத்தாலும் வள்ளலே — முத்தியுறச்
சற்றேனு மென்னிடத்தோர் சத்தியிலே னீதறிந்தோ
யெற்றுக் கெனைப்பிறப்பிப் பாய்.

அருள்வள்ளலாகிய ஸ்ரீ ரமண பிரானே, என்னை நீ இப்படியே அழுது கொண்டிருக்கும்படி இன்னும் எத்தனை கோடிமுறை பிறக்க வைத்தாலும், நான் முத்தியை யடையச் சிறிதும் சக்தியேயில்லாதவனே யாவேன். இந்த உண்மையை நன்கறிந்த நீ இனி என்னை மீண்டும் எதற்காகப் பிறக்க வைக்கப்போகிறாய்?

## 13. தன் அபக்குவம் சாற்றல்

702. சுகநாடு(ம்) நெஞ்சிதயந் தோய்தலற மென்றே
வெகுவா றுபதேசம் விண்டாய் — மிகவேயஃ
தென்னறிவிற் பாய்ந்துபய னீயாத தென்றவறே
யன்னதைநீ மாற்றி யருள்.

மேன்மேலும் சுகத்தையே விரும்புகின்ற மனம் ஆன்மாவை நாடி மூழ்க வேண்டியதே முறையான சுகவழி என்ற உண்மையை அடியார்கள் நன்குணரும்படி பலவிதமாகவும் நீ நிரூபித்து உபதேசித்துள்ளாய். ஆயினும், அவ்வுபதேசம் என் அற்ப அறிவிற் புகுந்து பயன் விளைக்காமலிருப்பது என் பக்குவமின்மையாகிய தவறே யாகும். அந்தப் பக்குவமின்மையாகிய பிழையைநீயே உன்னருளால் மாற்றித் தருவாயாக.

703. சொற்பித்த லாட்டச் சுவைகாட் டுதற்கன்றிக்
கற்பித்த வாறிருக்கக் கற்கிலே — னற்பமெனு
மப்பியா சித்துன் னருளுபதே சப்படியே
நிற்பதன்றோ மேன்மை நிலை.

நீ யருளிய உபதேசங்களைக் கொண்டு வாதப்பிரதிவாத சாமர்த்திய சொற்பித்தலாட்டத்தால் பிறரைச் சுவை காட்டி மயக்குவதைத் தவிர, நீ கற்பித்தவாறே மௌனியாகிச் சும்மா விருக்கும் உபதேச லாபத்தைக் கற்று நான் நிற்பதில்லை. இணையற்ற பெருமையுடைய உனது அருளுபதேசங்களில் சிறிதளவாவது அப்பியாசித்து அவற்றின் நெறிப்படி ஒழுகி நிற்பதல்லவா எனக்கு உண்மையான மேல் நிலையாகும்?

704. அன்பிலே னுண்மையி லப்பா வுனதருட்சீர்
செம்பதத்தி லென்றே தெரிகின்றே — னென்பவிசிங்
கித்தகைய தேனுமெனை யின்னுங்கை விட்டிருந்தா
லெத்தகைக்கே டெய்துவனோ யான்.

என் தந்தையே. உனது அருட்பெருமைமிக்க திருவடி களினிடத்தில் எனக்கு உண்மையான அன்பில்லை என்பதை நன்றாக அறிகின்றேன். என் லக்ஷணம் இப்படிப்பட்டதே யாயினும், எனக்கு மெய்யன்பை அருளாமல் இன்னமும் இப்படியே ஒருபோலியாக என்னை நீ விட்டிருப்பாயாகில், இன்னும் எவ்வளவு பெருங்கேடுகளை யெல்லாம் நான் அடையப் போகின்றேனோ? தெரியவில்லையே! ( அவ்வாறு விட்டிராதே.)

705. எல்லா நலனு மிழந்த வறியேனான்
பொல்லாருண் மிக்க புரையேனான் — நல்லாரு
ணானுமொரு வன்போ னடிப்பே னுனதருளாற்
றானதுமெய் யாகவரந் தா.

நான் எல்லாவித தபோநலன்களையும் இழந்த வறியோன் ஆவேன்; கொடியவர்கள் யாவரிலும் மிகக்கொடியவனே நான்; ஆனால் உனது நல்ல அடியார்களுள் நானும் ஒருவனைப் போல் சும்மா நடிக்கின்றேன். ஆயினும், உனதருளால் என் பக்தி வெறும் நடிப்பேயாகி விடாமல் உண்மையான சற்பக்தி யாகும்படி நீ ஒரு வரந் தருவாயாக.

706. சூழ்நிலையின் சௌகரியஞ் சொல்லிலடங் காவளவில்
லாழ்வதற்குள் ளென்றே யளிக்கின்றாய் — பாழ்மனத்தேன்
வீணாக்கு கின்றேன் மிகவரிய மானிடத்தை
யூணாக்கி யென்னை யொழி.

நான் உண்முகப்பட்டு ஆன்மாவில் ஆழ்ந்து மூழ்குவதற்குப் புறத்தே என்னென்ன விதத்தில் சௌகரியமான சூழ்நிலைகள் அமைய வேண்டுமோ, அவற்றையெல்லாம் சொல்லுக் கடங்காத அளவு சிறப்பாக நீ எனக்கு அமைத்துத் தந்து கொண்டே இருக்கிறாய். ஆனால்,பாழ்மனத்தோனாகிய நான் இத்தகைய கிடைத்தற்கரிய மானிட வாழ்க்கையை (உண் முகப்படுவதில் உழைக்காமல்) பகிர்முகத்திலேயே அலைந்து திரிந்து வீணாக்கி வருகின்றேன். இத்தகைய பயனற்ற வீணனாகிய என்னை இனியும் விட்டுவைக்காமல் உனக்கு ஊணாக்கிக்கொண்டு 'நான்' என்று யாதொரு தனியிருப்பு மில்லாமல் என்னை ஒழிப்பாயாக.

707. தக்க வழிகளிலே சாதனைகள் செய்தறியேன்
மிக்கவரைப் போற்றும் விதியறியேன் — செக்கிழுத்துச்
சென்றவிட மன்றியெங்குஞ் சென்றறியா மாடெனநா
னொன்றுமுன் னேறா துளேன்.

தகுந்த வழிகளிலே நான் யாதொரு சாதனையும் செய்தறியாதவன். மேலும் ஆன்ம ஞானிகளாகிய பெரியோர் களையாவது பணிவுடன் தக்கவாறு போற்றிப் பணியும் முறையும் அறியாதவன். காலையிலிருந்து மாலை வரையில் செக்கிழுத்துக்கொண்டு நடந்துநடந்து சென்றுகொண்டே யிருந்தாலும் தான் இருந்த இடத்தைவிட வேறு எங்கும் சற்றும் சென்றறியாத செக்கு மாட்டைப் போலவே, நான் ஆயுள் முழுவதும் முயன்றும் சிறிதளவுகூட ஆன்மீக வழியில் முன்னேற்ற மடையாதிருக்கின்றேனே. அருள்க.

708. அறிந்திடா னல்லே னறிவித்தா யானா
லறிந்தோனு மல்லே னகந்தை — வெறிந்து

விளக்கேற்றி யஃதில் விரல்பொசுக்கிக் கொள்ளும்
பிளைக்கிரங்கா ருன்னிற் பிறர்.

நான் இன்னது செய்ய வேண்டுமென்று அறியாதவனுமல்லன்; ஏனெனில், நீ சற்குருவாகி வந்து 'ஆன்மாவையே நாடி இரு' என்று ஞானபோதனையும் செய்தாய். ஆனால் அதைப் பின்பற்றி அதன்படி நிற்கத் தெரியாததால், நான் உன் உபதேசத்தை அறிந்தவனுமல்லன் என்றே கூற வேண்டும். அகந்தை வெறி பிடித்த நான், தானாகவே ஒரு தீபத்தை ஏற்றிவைத்து அதன் சுவாலையில் தானே தன் விரலை வைத்துப் பொசுக்கிக்கொள்ளும் ஓர் அறிவிலாக் குழந்தைக்குச் சமானமானவன். அதன் பெற்றோரைத் தவிர வேறு யார் இரக்கப்பட்டு அவ்வித மடமைக் குறும்புகளைச் செய்யவிடாமல் அக் குழந்தையைத் தடுத்துக் காப்பாற்றக் கூடியவர்? அதுபோலவே, என் அம்மையப்பனாகிய நீயே என் மடமையை நீக்கிக் காத்தருளக் கூடியவனாவாய்.

709. மதிநுட்பந் தந்திதய மார்க்கமுற விட்டாய்
அதிநுட்ப வாயுதங்கை யாண்டென் — பதியொப்பு(ம்)
நல்வழியில் வெற்றிபெற நாடாம லைம்புலங்காட்
டல்வழிவிட் டேனா னதை.

ஆன்மாவை யடையும் முயற்சியிற் பயன்படுத்துமாறு நல்ல நுட்பமான புத்தியைநீ எனக்குக் கொடுத்தாய். ஆனால் அற்பனாகிய நான் அந்த அற்புதமான அதிநுட்பமான ஆயுதத்தை என் ஆண்டவனாகிய உன் மனத்துக்கு ஒத்த நல்வழிகளிற் கையாண்டு ஆன்ம சாக்ஷாத்கார வெற்றியை யடையாமல், ஐம்புலன்களாகிய தீய நண்பர்கள் எனக்குக் காட்டிக் கொடுத்த தீய இருள் வழியில் மும்முரமாகக் கையாண்டு கெட்டேன். அந்தோ! அருள்க.

710. எவர்க்கு மிகவிழிந்த வேழையேன் மாய
வவக்கடலி னாழத்தி லுள்ளேன் — சிவக்கிருபை
யான ரமண வருட்குருவுன் னாலன்றி
ஞானமுற வல்லேனோ நான்.

இவ்வாறு எல்லா ஜீவர்களுக்கும் மிக இழிந்த குணத்தை யுடைய அற்பனாகி, மாயையாகிய அவக்கடலின் அடிப்பாகத்தில் மூழ்கிக் கிடக்கின்றேன். சிவக் கிருபையே வடிவான ஸ்ரீ ரமண சற்குருவே, உனது திருவருளாலன்றி நான் ஞானமடைய முடியுமோ? அருள்க.

711. முற்றவமு மில்லேன் முயன்றின் றியற்றவலி
பெற்றவனு மில்லேன் பெரும்பாவக் — கற்றையுருக்
கொண்டனாதி வாசனையின் கூட்டமுமுள் ளேனெனைநீ
கண்டிரங்கி யீவாய் கதி.

நற்கதி யடைவிக்கத் தக்க நல்ல புண்ணிய தவங்களை நான் முற்பிறவிகளில் செய்தவனுமல்லன். அவற்றை இந்தப் பிறவியிலாவது செய்யலாமோ வென்றால், அதற்கேற்ற மன வலிமையும் இப்போது இல்லாதவனாக இருக்கின்றேன். பல ஜன்மங்களாகச் செய்து சேர்த்த பெரிய பாவ மூட்டைகளே உருவெடுத்தவனாய், அதற்குப் பக்கபலமாக அனாதி மல வாசனைக் கூட்டங்களையும் உடையவனாக இருக்கின்றேன். இத்தகைய என்னை நீதான் பார்த்து இரக்கப்பட்டு ஞான கதியை அருள வேண்டும்.

712. நெஞ்சங் கரைந்துன்மே னேயம்பொங் கிக்களங்க
வஞ்சங் களைந்தன்பர் வாழ்கின்றார் — கொஞ்சமும்
மெய்யன்போ தேக விராகமோ வில்லாவிப்
பொய்யன்வாழ் வீனப் புலை.

உன் மெய்யடியார்கள் உன்னை நினைந்து நெஞ்சங் கரைந்து, உன்மேல் அளவற்ற மெய்யன்பு பொங்கி, எல்லாவித வஞ்சகக் குற்றங்களும் நீங்கப் பெற்ற பரிசுத்தர்களாய் வாழ்ந்து வருகின்றனரே. அவ்வாறிருக்க, கொஞ்சங்கூட உன்னிடத்தில் மெய்யன்போ உடலின்மேல் வைராக்கிய புத்தியோ இல்லாத இப் பொய்யனேன் வாழ்வு மிகவும் இழிந்த புலைவாழ்வே யாகின்றது.

713. நாமங்கோ டிக்கணக்கி னாத்தழும்பே றப்புகன்றுச்
சேமமுறு கின்றார் திறனுடையோர் — காமங்
களைப்பெறவே வாதிட்டுக் கத்திவாய்ப் புண்ணா
யிளைப்புறுவேன் புத்தி யிலேன்.

தபோபலம் மிக்க உன் அடியவர்கள் தத்தம் நாக்குத் தழும்பேறு மளவிற்குக் கோடிக்கணக்காக உனது திவ்விய நாமங்களைச் செபித்து அதனால் க்ஷேம வாழ்வை அடைகின்றனரே. ஆனால் புத்தியில்லாதவனாகிய நானோ வாழ்விற்கு வேண்டிய காமியப் பொருள்களைப் பெற வேண்டியே உலகில் போராடிக் கொண்டும், இரைந்து கத்தி வாயைப்புண்ணாக்கிக் கொண்டும் களைத்து அயர்கின்றேனே! என்ன பரிதாபம் இது?

714. இன்னோர் முறைபிறந்தா லென்னாமோ வென்புத்தி
யிந்நாளுன் கண்முன்வந் தெய்தியுமே — கொன்னே
வெளியி லலையும் வினையேன் பிறந்தாற்
றுளியுமீ ளேனான் றுணிபு.

இன்னுமொரு முறை நீ என்னைப் பிறக்க வைப்பாயாகில், என் புத்தி இன்னும் எவ்வளவு கீழ்மையடையுமோ அறியேன். ஏனெனில், நீ அவதரித்துள்ள இந்த மகாபுண்ணிய காலத்தில் நான் பிறந்து வந்து உன் அருட்கண்முன் நின்றுங்கூட வீணாக வெளிமுகத்திலேயே என் புத்தி அலைகின்ற தென்றால், இப்படிப்பட்ட கொடுவினையேனாகிய நான் இன்னொரு முறை பிறந்தால் ஒரு துளிகூட முன்னேறவே மாட்டேன். இது திண்ணம். அறிக. அருள்க.

715. படும்பாடெல் லாம்பொறுத்துப் பக்குவத்தாற் பன்னாட்
கடுஞ்சா தனையியற்றக் கற்றோர் — தொடும்பதத்தைப்
பாடொன்று மின்றிதமிழ்ப் பாட்டொன்று பாடியகங்
கூடக் கருதுவதென் கூத்து.

வாழ்வில் நேரும் பெருஞ்சிரமங்களை யெல்லாம் பொறுத்துச் சகித்துக்கொண்டு, நிறைந்த பக்குவத்தோடு பல நெடுநாட்கள் பற்பல கடுமையான ஆன்ம சாதனைகளை யெல்லாம் இயற்றவல்ல மிகப்பெரிய உண்மையான தவசிகளால் மட்டுமே தொட்டு அடைதற்குரிய உன் அருட்பதத்தைப் பேதையேன் தவ வினையாக யாதொரு பாடும் படாமலும், இந்த ஒரு தமிழ்ப்பாட்டை மட்டும் பாடிவிட்டு அதன் பயனாக இதயத்திற் கூடக் கிடைத்துவிட நினைக்கின்றேனே. என்னேகூத்து இது!

716. காட்டெரிபோன் மண்டிக் கவர்ந்த மயற்புகையுட்
கூட்டுமகங் காரத்தின் கூட்டுறவா — னாட்டம்
புறமுகத்தே போவதன்றிப் புக்ககத்துக் கேக
வறமறுக்கு(ம்) நீயூட் டறிவு.

காட்டுத்தீ மண்டி எரியும் வேகத்தில் எரிந்து எழுந்து என் புத்தியை அடியோடு கவர்ந்து பற்பல மயக்கங்களாகிய கொடிய புகையின் நடுவில் என்னை வைத்து மூடுகின்ற அகந்தையின் கூட்டுறவால் என் புத்தி புறமுகத்திலேயே போவதைத் தவிர, தன் புகலிடமாகிய ஆன்மாவை நாடி உண்முகப்படுவதற்கு அறவே மறுக்கின்றதே. நீயே உன் அருட்சக்தியால் என் புத்திக்கு நல்லறிவு ஊட்டி யருள்வாயாக.

717. ஆற்றல் பதவி யறிவுபே ரைசுவர்ய
வேற்ற மெலாம்படைத்தோ ரெத்தனைபேர் — போற்றிப்
பணிகின்ற நின்னடியிற் பக்குவமில் லேனுந்
துணிகின்றேன் கேட்கத் தொடர்ந்து.

ஆற்றலிலும், சமூகத்தில் பதவியிலும், அறிவிலும், செல்வச் சிறப்பிலும் மிக மேன்மை படைத்துள்ள உனது அடியார்களாகிய எத்தனையோ பேர் வந்து போற்றிப் பணிந்து நிற்கின்ற உனது திருவடியில் பக்குவமில்லாத சிறியேனும் தினமும் தொடர்ந்து முறையிட்டுக் கொள்ளத் துணிந்து வந்து நிற்கின்றேன். என்னே என் செயல்!

718. கண்ணிழந்த வாழ்வாக் கழிகின்ற திப்பிறவி
யுண்ணிறைந்த பேரின்ப வூற்றிருந்து — முண்ணுதற்குத்
தக்க வழியறிவு சத்தி சிரத்தையெனும்
பக்குவமில் லாவிப் பதற்கு.

அருந்தத் தக்க பேரின்ப ஊற்றாகிய நீ உள்ளத்தில் எழுந்தருளி யிருந்தும், அப் பேரின்ப ஊற்றை அருந்துவதற்குத் தகுந்த வழியும் அறிவும் சக்தியும் சிரத்தையுமாகிய பக்குவம் பதராகிய எனக்கு இல்லாத காரணத்தால் எனது இந்தப் பிறவி முழுவதும் கண்ணில்லாத குருடனது வாழ்வு போலவே வீணாகக் கழிந்து வருகின்றதே! அருள்க.

## 14. தற்கேடு கண்டு வியத்தல்

719. சற்குருவைக் கண்ணாற் றரிசிப்ப தேகடைசி
யற்புதமார் சென்மமென்ப ரானானான் — றற்பொழுதிங்
கிப்படியுள் ளேனே யெனக்கும் பிறப்பொழிவை
யெப்படிச்செய் வாயோ வியற்று.

சற்குருவை ஒருவர் எப் பிறவியில் கண்ணால் தரிசிக்கப் பெறுகின்றாரோ, அந்தப் பிறவியே அவருக்கு அற்புதமான கடைசிப் பிறவி என்று பெரியோர்களும் நூல்களும் கூறுகின்றனர். ஆனால் உத்தமோத்தம சற்குருவாகிய உன்னைத் தரிசித்தும், நான் தற்போதும் இவ்வளவு கீழோனாகவே இருக்கின்றேனே. இத்தகைய எனக்குங்கூட நீ எப்படித்தான் பிறவி நீக்கத்தைச் செய்தருளப்போகின்றாயோ அறியேன். ஆயினும் செய்தருள்க.

720. கடவுட் பெருந்தகையாய்க் கண்முன்னர் வந்த
கொடைவள்ள லான குருவே — யடைவரிய
நின்றரிச னம்பெற்று(ம்) நேராகாப் பாழ்விலங்கா
மென்றனையென் சொல்வே னியான்.

எல்லாக் கடவுளர்க்கும் சிறந்தவனாய் என் கண்முன் வந்தருளிய அருட்கொடை வள்ளலான ஸ்ரீ ரமண சற்குருவே, உனது அரிதினுமரிய இக் குரு தரிசனத்தைப் பெற்றுங்கூட, வாழ்வு திருந்தாத பாழான ஒரு மிருகமாகிய என்னை என்ன வென்று கூறுவது? அருள்க.

721. கண்ணெடுத்துப் பார்ப்பாய் கடையே னிகவாழ்வை
மண்ணடுத்த பேருள் வசைமிகுத்தேன் — விண்ணடுத்தோர்
தங்கட்கு மெட்டாத் தகைமையோய் நின்னடிக்கீழ்
தங்கக் கொடுத்துவைத்துந் தான்.

பிரம்மா, விஷ்ணு, தேவேந்திரனைப் போன்ற பெரிய தேவர்களுக்குங் கூட எட்டாத அருட்பெருஞ் சிறப்புடைய ஸ்ரீ ரமண சற்குருவே, உனது திருவடியில் வந்து தங்கி வாழும் பாக்கியம் எனக்குக் கிடைத்துங்கூட, உலகில் வாழும் சகல ஜீவர்களுக்குள்ளும் மிகவும் பழி நிறைந்தவனாக வுள்ள கடையேனது இப் பிறவி வாழ்வை நீயே

கண்ணெடுத்துப் பார்க்க வேண்டும்!

722. கல்லைத்தா னேநட்டுக் காலிடறி வீழ்வோன்போற்
றொல்லைப் புறமுகமே தோய்ந்தலைந்தே — யெல்லையிலாத்
துன்ப நரகைச் சுவைப்பே னறிவினையென்
னென்ப திறைவா விரங்கு.

தானே ஒரு குத்துக்கல்லைத் தரையில் நட்டு வைத்து, அதில் தானே காலிடறிக்கொண்டு விழுந்து துன்புறுகின்ற ஒருவனைப் போல, தொல்லை தரும் புறமுகத்திலேயே ஆவலோடு சென்றலைந்து, அதனால் விளையும் எல்லையற்ற நரக வேதனையை அனுபவிக்கும் என் அறிவை, இறைவா, என்னவென்று சொல்வது? என் அறிவைத் திருத்தியருள்க.

723. நறுமணமா ருண்ணமுதி னாளெல்லாந் தோய்ந்து
மறுசுவைதாங் காணா தகப்பை — சிறுமதியே
னண்ணா மலைரமணா வானேனோ விவ்வாறுன்
றண்ணார் கழல்சார்ந்துந் தான்.

அண்ணாமலை ரமணா! நல்ல மணமும் ருசியுமுள்ள உண்ணும் ஆகார பதார்த்தங்களிலேயே நாள் முழுவதும் தோய்ந்து கிடந்தாலும், அவற்றின் சுவையை அகப்பை அறியாது. அதுபோல, புத்தியற்ற வனாகிய நான் உன்னுடைய குளிர்ந்த திருவடிகளை வந்தடைந்து பல நாள் வசித்திருந்துங்கூட, உன் அருளாகிய லாபத்தை அடையாமற் போனேனோ?

724. என்னுலகென் றென்னிடமென் றென்னவரென் றென்னுடலென்
றென்மனமென் றிவ்வா றெலாமெனதென் — றுன்னியுன்னி
தத்தாப காரத் தவறுக்கா ளானேனுன்
சொத்தாகை யாலென்னே சூது.

இது என்னுடைய உலகமென்றும், இது என்னுடைய வசிக்குமிட மென்றும், இவர்கள் என்னுடையவர்கள் என்றும், இது என்னுடைய உடல் என்றும், இது என்னுடைய மனமென்றும் இவ்வாறு இவை யாவற்றையும் என்னுடையன என்றே மேலும் மேலும் அபிமானித்து, உன்னிடம் ஒப்படைத்த இவற்றை அபகரித்துக்கொண்ட பெரிய கள்ளக் குற்றத்திற்கு ஆளானேன். ஏனெனில், இவை யாவும் உண்மையில் உன்னுடைய சொத்தே யல்லவா? இது எத்தகைய சூதாயிருக்கின்றது!

725. சத்திய புத்தி சகமுடலின் மீக்கூர்ந்து
நித்திரையு மாழ்ந்து நிலைத்துணரே — னெத்தனையோ
தேகாத்ம புத்திகளைச் செற்றநீ கண்டதுண்டோ
மோகாத்ம மூடனென்போன் முன்.

உடலும் உலகமும் சத்தியமானவை என்ற புத்தியால் அவற்றின்மேல் மிக அதிக அபிமானம் உண்டாகி, அதன் காரணமாக, ஆழ்ந்த தூக்கத்தைக்கூட நான் நீடித்து அனுபவிப்பதில்லை. எவ்வளவோ தடிப்புற்ற, எத்தனையோ விதமான தேகாத்மபுத்திகளை ( பந்த ஜீவர்களை) அழித்து வெற்றி கொண்ட நீ என்னைப் போன்ற அவ்வளவு மோகம் நிறைந்த மூடனொருவனை இதற்குமுன் கண்டதுண்டோ?

726. உடலெடுத்த நாடொட் டுடலிறக்கு மட்டு
முடலூடுக்க வுண்ண வுறைய — வுடையிடமூண்
தேட்டநினைப் பைம்புலன்றன் றேவைநினைப் பன்றியுன்னை
வேட்டறியே னந்தோ வியப்பு.

இவ் வுடல் பிறந்த நாளிலிருந்து இவ் வுடல் சாகும் நாள் வரையில் இவ் வுடலுக்கு உடுக்கவும் உண்ணவும் வசிக்கவும் உடை உணவு உறையுள் ஆகியவற்றைத் தேடுவதற்கான எண்ணங்களும், மேலும் ஐம்புலன்களைத் திருப்தி செய்விப்பதற்குத் தேவைப்படுகின்ற பொருள்களைப் பற்றிய எண்ணங்களும் மட்டுமே கொள்வதன்றி, உன்னை விரும்பும் பக்தி எண்ணமே கொண்டிலேன். அந்தோ, இது மிக ஆச்சரியம்!

727. ஆல்போற் றழைத்தே யருகுபோல் வேரோடி
வேல்போற் பதிந்து மிகவாழந் — தோல்போர்த்தப்
பாழுடலை நானென்ற பாவம் வளர்கிறதே
வாழுமுனக் கோசம் மதம்.

தோலால் மூடப்பட்ட இந்தப் பாழான உடம்பை 'நான்' என்று அபிமானிக்கும் தேகாத்மபாவம் ஆலமரத்தைப் போலத் தழைத்தும், அருகம்புல்லைப் போல் நீண்டு வேரோடியும், வேலாயுதத்தைப் போல் மிக ஆழ்ந்து பதிந்தும், மேன் மேலும் வளர்ந்துகொண்டே போகின்றதே! எனது ரக்ஷகனாக என்றும் வாழ்ந்திருக்கும் உனக்கு இந்த அகந்தை இவ்வாறு கொழுத்து வாழ்வது சம்மதமாகுமா?

728. வானவர்க்குங் கிட்டா வசதிநிறை சூழ்நிலைதந்
தூனவக மூல முசாவுதற்கா — வீனனெனக்
கெத்தனையோ நீசெய்து மிம்மியுமுன் னேறாவென்
பித்தமன மாயம் பெரிது.

'இவ் வுடலே நான்' என்ற அகந்தை யெழுச்சியின் மூலத்தை விசாரித்து அறிவதற்கு ஏற்ற வசதி நிறைந்த சூழ்நிலைகளை தேவர்களுக்கும் கிடைக்காத அளவு அற்பனாகிய எனக்கு நீ எவ்வளவோ ஏற்படுத்தித் தந்தும், கொஞ்சங்கூட விசாரத்தில் முன்னேறாத என் பைத்தியக்கார மனத்தின் மாயம், அந்தோ, மிகவும் பெரியதே!

### 15. தற்கேடு கண்டிரங்கல்

729. தானொன் றிருந்துகொண்டு சத்திமுதன் முத்திவரை
யூனின் றனுபவிக்க வுன்னுகின்ற — நானகந்தை
தன்னழிவே முத்திசத்தி சர்வமுமென் றோர்ந்திலதே
யென்னபரி தாப மிது.

தான் ஒரு தனிப்பட்ட வியக்தியாக இருந்துகொண்டு பற்பல சக்திகளையுடைய சித்திகளை அடைவதிலிருந்து மோக்ஷம் வரையிலுமுள்ள எல்லாவிதப் பேறுகளையும் இந்த உடம்பில் இருந்துகொண்டே அனுபவிக்க வேண்டும் என்று திட்டமிடுகின்ற 'நான்' என்னும் அகந்தை, தான் இருப்பற்று அழிவது ஒன்றே உண்மையில் முக்தி யடைவதும், சகலவித சக்திகளை யடைவதும், இன்னும் மற்றும் எல்லாவற்றையும் அடைவது மாகும் என்ற உண்மையை இன்னும் அறிய வில்லையே! அந்தோ, இது என்ன பரிதாபம்!

730. என்னைநா னேயெழுப்பி யிவ்வுடனா னென்றெண்ணி
முன்னிலையா யென்னையே முன்னியலைந் — தென்னே
யவசியமில் லாத்துன் பனுபவிப் பேனை
சிவரமணா செய்க சிறை.

'நான் இவ் வுடல்' என்ற ஓர் எழுச்சியை நானே எழுப்பிக்கொண்டு, பிறகு 'இவ் வுடலே நான்' என்று விவகரிப்பதால் அகந்தையை விருத்தி செய்துகொண்டு, தன்னைத் தவிர வேறொன்றுமில்லாத ஆன்மாவாகிய என்னையே எனக்கு அன்னியமாக என் முன்னிலையில் இருக்கின்ற இவ் வுலகாதிகளாகக் கண்டு, அவற்றையே அடைய நாடி அலைந்து, அதனால் அவசியமற்ற அனேக துன்பங்களை அனுபவிக்கின்றேனே. இது

என்ன அறிவீனம்! சிவரமணா, அப்படிப்பட்ட என்னை அகந்தையாக எழவிடாமலேயே சிறையிட்டருள்க.

731. மனமாங்கண் ணாடிவழி வாலறிவா மென்னைக்
கனவுலகுஞ் சீவனும்போற் கண்டு — முனமிருக்கு
மென்னையே யன்னியமா யெண்ணி விரும்பிவெறுத்
தின்னலுறு கின்றே னிரங்கு.

ஏகமான பேரறிவாம் ஆன்மாவாகிய என்னையே மனம் என்னும் கண்ணாடி வழியே இந்தப் பெரிய பிரபஞ்சமாகவும், அதிலே நான் ஒரு ஜீவனாகவும் கண்டு, அந்த ஜீவனுக்கு முன்னால் காணப்படும் அன்னியப் பொருள்களாகவே ஆன்மாவையும் கருதி, பிறகு அந்த நானாகிய முன்னிலைப் பொருள்களுள் பலவற்றை விரும்பியும் பலவற்றை வெறுத்தும் துன்புறுகின்றேன். இத்தகைய என்பால் நீ அருள் கூர்ந்து இரக்கப்படுவாயாக.

732. சித்தத்தி னுட்பத் திரள்வா தனையுலகச்
சித்திரமாய்க் காணற் றெரியாமற் — சத்தியமா
யிவ்வுலகை யெண்ணியதி லிச்சை யனிச்சைகொண்
டெவ்வளவு கெட்டே னியான்.

பலகோடி ஜன்மங்களாக உண்டாக்கப்பட்டு சித்தத்துள் திரட்டி வைக்கப்பட்டுள்ள நுட்பமான வாசனைகளே உடலின் பஞ்சேந்திரியங் களின் மூலமாக வெளியில் இவ் வுலகச் சித்திரமாகக் காணப்படு கின்றது என்று அறியாததால் இவ் வுலகத் தோற்றத்தை மெய் யென்று கருதி, அதில் விருப்பு வெறுப்புக்கொண்டு, சுகமாகிய என் ஆன்ம நிலையிலிருந்து, அந்தோ, நான் எவ்வளவு தூரம் கெட்டுப்போனேன்!

733. நான்கேட்டுப் பெற்றவிக லாபமெலாம் போதுமவை
யான்மாப ராதமா யாயினவே — ஏன்கேட்டேன்
அந்தோ வினியேனு மவ்விதங்கேட் பானெழுச்சி
யுந்தாம லுன்கீ ழொடுக்கு.

நான் இத்தனை ஜன்மங்களாக உன்னிடம் பிரார்த்தித்து அடைந்த உலக சுகங்கள் எல்லாம் போதும். இப்போது ஆராயுமிடத்து, அவை யாவும் ஆன்மாபராதம் செய்ததாகவே முடிகின்றதல்லவா? அந்தோ, நான் ஏன் அவ் வரங்களை உன்னிடம் கேட்டேன்? இனிமேலாவது அவ்விதம் கேட்கும் ஆசையெழுச்சி உண்டாகாமல் உன் திருவடிக்கீழ் என்னை ஒடுக்குக.

734. மெய்யன்பில் லாதவென் வீண்வாழ்வை யெண்ணுங்கா
லையமில் லாத வதோகதிதான் — ஐயனாய்க்
கண்முனெனை யாண்ட கடவுளே சற்குருவின்
வண்மையான் மெய்வாழ் வருள்.

உன்னிடத்தில் உண்மையான அன்பில்லாமல் வாழும் என் வீண் வாழ்வை நோக்குமிடத்து, சந்தேகமில்லாமல் அதோகதியைத்தான் அடையப் போகின்றேன். ஆனால் எனது சற்குருவாய் என் கண்முன்னே தோன்றி என்னை யாட்கொண்ட கடவுளே, சற்குருவின் அருட்கொடை மகிமையால் எனக்கு மெய்வாழ்வு அருள்க.

735. திருவருட்குச் சம்மதிமிச் சீர்கேடென் பாயே
லருவருத்தென் னாலென்னே யாகு — மொருவிதத்துங்
கைவிடா வேங்கைக் கருணைப் பிடியையும்
பையவகல் வேன்போலும் பார்.

என் வாழ்வு இவ்வளவு சீர்கேடு அடைந்திருப்பது உன் திருவுள்ளத்துக்குச் சம்மதம்தான் என்று சொல்வாயானால், என் சீர்கேட்டை நினைத்து நான் அருவருப்பு அடைவதால் என்ன பிரயோசனம் உண்டாகும்? கொஞ்சங்கூடக் கை நழுவ விடாத கருணை வேங்கைப் புலியாகிய உன் கைப்பிடியிலிருந்தும் நான் கொஞ்சங் கொஞ்சமாக நழுவிவிடுவேன் போல் இருக்கிறதே! அவ்வாறாகாமல் நீயே பார்த்துக் கொள்வாயாக.

736. பத்தியா னிற்கர்ப் பணியா தெனைவிசார
யுத்தியாற் கொல்லாது யோகத்தின் — சித்தியாற்
சாராதுன் பாதஞ் சகத்தி லுடல்வாழ்க்கை
காராக் கிரகமன்றோ காண்.

பக்திமார்க்கச் சாதனையால் என்னை உனக்குப் பூரணமாக ஆன்ம சமர்ப்பணம் பண்ணாமலும், அல்லது விசார மார்க்க யுக்தியால் அகந்தையாகிய என்னைக் கொல்லாமலும், அல்லது யோக மார்க்கத்தை மேற்கொள்வதால் உன்னுடைய திருவடிகளை வந்து சேராமலும் இவ் வுலகத்தில் நான் ஓர் உடலினுள் வாழ்ந்திருப்பது ஓர் இருட்டுச் சிறைக்கூடத்தில் இருப்பதே யல்லவா? உன் அருட்கண் களால் என்னைக் காண்பாயாக.

737. இப்பிறப்பி னீயளித்த வேதுக்கண் முத்தியுறற்
கெப்பிறப்புங் கிட்டா வியல்பினவே — அப்படித்தா
யாகியிருந் தும்பதித னாகிவரு மற்பவவி
வேகியிருந் தென்பயனோ மேல்.

நான் முக்தி யடைவதற்கு இந்தப் பிறவியில் நீ எனக்கு அளித்த ஹேதுக்கள் மற்ற எந்தப் பிறவியிலும் எனக்குக் கிடைக்க முடியாத அவ்வளவு சிறப்பு உள்ளவை யாகும். அவை அப்படிப்பட்டவையா யிருந்தும், கீழ் நோக்கியே நழுவும் அற்பனும் அவிவேகியுமான நான் இன்னும் பல நாள் வாழ்ந்திருந்தும் என்ன பயனோ? (ஒன்றுமில்லை.)

738. கண்கெட் டலையுமோர் கர்த்தபமாய்ப் பல்வழியிற்
புண்பட் டயர்ந்தேனிப் புன்மதியேன் — பண்பட்ட
நின்னடியார் துய்க்கு(ம்) நிஜானந்த வாழ்வுபெற
வென்னுடையாய் சற்றே யிரங்கு.

இவ் வற்ப புத்தியுடைய நான் கண்களை இழந்த ஒரு குருட்டுக் கழுதையைப் போல பல தகாத வழிகளில்அலைந்து, மனம் புண்பட்டு அயர்ந்தேன். என்னை அடிமையாக உடையவனே, இப்படிப்பட்ட நானும் மிக உயர்ந்த பண்பாடுகள் அமைந்த உனது மெய்யடியார்கள் அனுபவிக்கும் நிஜானந்தப் பெருவாழ்வைப் பெறுமாறு சற்றே இரங்கி யருள்க.

739. உன்னை யகன்றிவ் வுடலுலகைக் கூடியுழன்
றென்னையோ நான்பெற்ற வின்பங்கள் — என்னைநா
னேமாற்றிக் கொள்ளு மிதுவோ வறிவுடைமை
நீமாற்றித் தாவிந் நிலை.

என் ஆன்மாவாகிய உன்னை விட்டு அகன்று இவ் வுடலையே 'நான்' என்று அபிமானித்து, இவ் வுலகப் பொருள்களையே கூடித் திரிந்து நான் என்னதான் சுகங்களை அடைந்துவிட்டேன்? (ஒன்றுமில்லை.) இவ்வாறு நான் என்னையே ஏமாற்றிக்கொள்வது தான் அறிவுடைமையா? எனது இந்த அறியாமை நிலையை நீ மாற்றித் தருவாயாக.

740. தவவாழ்வுக் கென்ன தவஞ்செய்வே னென்றே
தவியாய்த் தவிக்குந் தவறேன் — புவிவாழ்விற்

போக்கியநாட் பற்பலவைப் போலவே யின்னினியு
மாக்குவனோ நாளை யவம்.

உத்தமமான தவவாழ்க்கை வாழ்வதற்கு நான் என்ன தவம் செய்வேன் என்று துடிதுடித்துத் தவிக்கின்ற இப் பிழை மனத்தேன். இந்தப் புவி வாழ்க்கையில் இத்தனை காலமாக வீணாகக் கழித்த பற்பல நாட்களைப் போலவே. இனிமேல் வரும் நாட்களையும் அவநாட்களாகவே யாக்குவேனோ? (அறியேன்.)

741. உள்ளத் துறையு முனையகன் றைம்புலன்வாய்க்
கள்ளத் தனமாய்க் களிப்புறுநான் — கொள்ளத்
தகுவேனோ வுன்னடிக்குத் தக்கவனாய் நல்லோர்
நகுமாறன் றோவென் னடை.

உள்ளத்திலேயே எப்போதும் வீற்றிருக்கும் ஆன்ம நாதனாகிய உன்னை விட்டுக் கள்ளத்தனமாய் அகன்று. வெளியிலுள்ள ஐம்புலன்களின் வழியே இவ் வுலகப் பொருள்களைச் சுகித்து அனுபவிக்கும் நான் உன் திருவடிகளுக்குத் தகுந்த அடிமை யாகமுடியுமோ? என்னுடைய இந்த நடத்தை நல்லோர்களால் பரிகசிக்கத் தக்கதல்லவா?

742. பண்பட்ட வன்பருளம் பைம்பொன்னா மாற்றுமுன்றன்
கண்பட்ட பின்னுங் கடையேனென் — புண்பட்டு
மால்விடத்தாற் கெட்ட மனந்திருந்தி மாறிலதேன்
மேல்விளைவ தென்னோ விரங்கு.

உயர்ந்த பண்பாடுகளைப் பெற்ற உனது அடியார்களுடைய உள்ளத்தை ஆன்மப் பசும்பொன்னாக மாற்றக்கூடிய உன்னுடைய கருணாகடாக்ஷம் என்மேல் பட்ட பிறகுங்கூட பலவாறு புண்பட்டு மாயையின் விஷத்தால் கெட்டுப்போன கடையேனாகிய என் மனம் திருந்தி மாறவில்லையேயானால். இனிமேல் எனக்கு என்னதான் விளையப் போகின்றதோ? நீ இரங்கி அருள்புரிவாயாக.

743. அஞ்சே லெனநீ யபயந்தந் தாலன்றி
யுய்ஞ்ச வழியெனக்கிங் கொன்றுமிலை — கொஞ்சமும்
பக்குவமில் லாத பதரேனுக் கந்தோமே
லெக்கதிவந் தெய்துமோ விங்கு.

'அஞ்சாதே, நான் காப்பாற்றுகிறேன்' என்று நீ எனக்கு அபயம் தந்தாலன்றி, நான் உய்வதற்கு இங்கு யாதொரு வழியும் இல்லை. அவ்வாறின்றி நீ கைவிட்டால், கொஞ்சங்கூடப் பக்குவமில்லாத அற்பனாகிய எனக்கு, அந்தோ, மேற்கொண்டு இவ் வுலகில் என்ன கதி வந்து வாய்க்குமோ? அறியேன்.

744. பொய்யு மிடம்பப் புகழும் பொருந்திநான்
செய்யும் முயற்சி சிரிப்பன்றோ — ஐயகோ
வுண்மையன் பூறி யுலகுதுறந் துள்ளூன்றுந்
திண்மைதந் தென்னைத் திருத்து.

பொய்யும் இடம்பப்புகழும் பொருந்தியுள்ள நான் உன்னை யடைவதற்காகச் செய்யும் போலி முயற்சிகளும் சிரிக்கத் தக்கனவே யாகின்றனவல்லவா? அந்தோ! எனக்கு உன்னிடம் உண்மையான அன்பு உண்டாகி, நான் இவ் வுலகைத் துறந்து ஆன்மாவாகிய உன்னிடம் உள்ளே திடமாக ஊன்றி நிற்கும் நிஷ்டையைத் தந்து என்னைத் திருத்துவாயாக.

745. துயில்விட் டெழுந்தபின்னர் தூங்குமட்டும் வீணே
பயனற் றலையெண்ணப் பாழ்வா — யுலைவுற்ற

வாறே யுடலினான் வாணாளெல் லாங்கழித்தாற்
பேறே தடைவேன் பிறகு.

நான் தூக்கத்தை விட்டு எழுந்த பிறகு, மீண்டும் தூக்கம் வரும் வரையிலும், பயனற்ற வீணான அலைச்சலுடைய எண்ணங்களாகிய பாழில் அலைந்து துன்புற்றவாறே இவ் வுடலில் வாழ்கின்ற மீதி நாட்களை யெல்லாம் கழிப்பேனே யானால், பிறகு வேறு எந்த உத்தமப் பேற்றை நான் அடைய முடியும்?

746. அறையா முடலி லகப்பட் டகலாச்
சிறையா யதுநானாத் தேர்ந்து — வறியோனா
யானேனே யந்தோ வருள்ரமணா நீயொருவன்
றானே யெனைக்காக்குந் தாய்.

சிறைக்கூடமாகிய இவ் வுடலில் அகப்பட்டு, அதினின்றும் நீங்க முடியாமலும், நான் வசிக்கும் அந்தச் சிறையையே 'நான்' ஆகவும் கருதி பரம ஏழை யானேனே. அந்தோ, அருள் ரமணா, நீ ஒருவன் தான் என்னைக் காப்பாற்றக்கூடிய தாயாவாய்.

## 16. ஆற்றாமை கூறல்

747. அருணா சலரமணா வன்னைதந்தை யீசன்
கருணா கரகுருவாய்க் கண்முன் — னுருவுடனே
வந்தென்னை யாட்கொண்ட வள்ளலே நீகாண்க
வின்றென் னிலையி னிழிபு.

ஸ்ரீ அருணாசலரமணா! மாதா, பிதா, கருணையுடைய சற்குரு, தெய்வம் ஆகிய நான்கும் ஒன்று சேர்ந்த உருவுடனே என் கண்முன் வந்து என்னை ஆட்கொண்ட வள்ளலே! இன்று நான் இருக்கின்ற இழிந்த நிலையை நீ உன் அருட்கண்களால் காண்பாயாக.

748. என்னசெய் துள்ளா யிறைவா யெனையினிமே
லென்னதான் செய்வா னிருக்கின்றாய் — பன்னகம்போல்
யாருங்கண் டஞ்சி யகலுமெனக் குற்றதுணை
யோரொருவ னானநீ யும்.

பாம்பைக் கண்டு எல்லாரும் பயப்படுவதைப் போல், என்னைக் கண்டு யாரும் பயந்து அகலும் படியான குணங்களுடையவன் நான். இத்தகைய எனக்கு உற்ற ஒரேயொரு துணைவன், இறைவா, நீ மட்டுமே. அத்தகைய நீ என்னை இதுவரையில் என்ன செய்திருக்கின்றாயோ, அறியேன்; இனிமேல் என்னை என்ன தான் செய்யப் போகின்றாயோ, அறியேன்.

749. அத்தா வுனதடியே னாற்றே னருளின்மை
செத்தேனு மோயத் திருவருள்செய் — முத்தா
குருரமண னாகியெனைக் கொண்டாண்ட கோவே
யருணசிவ மேவந் தருள்.

தலைவனே, உன் அருளில்லாத் தன்மையை உன் அடியவனாகிய என்னால் பொறுக்க முடியவில்லை. ஆகையால், நான் செத்தாவது என் கீழ்மைக் குணங்கள் எல்லாம் ஓயும்படி திருவருள் செய்வாயாக. முக்தனே, சற்குரு ஸ்ரீ ரமணனாக வந்து என்னை ஆட்கொண்ட இறைவனே, அருணாசல சிவமே, எனக்கு இரங்கி வந்தருள்க.

750. உன்னையே நோக்கி யுயிர்த்திருக்க வைப்பாயே
லென்ன குறையுமிலே னிவ்வாழ்வி — லின்னதுநீ

பண்ணாயே லென்னையுன் பாதத் தழைத்துடலை
மண்ணா மரிக்கவெனும் வை.

ஆன்மாவாம் உன்னையே நோக்கி நிற்கும் நிஷ்டையோடு நான் இவ் வுடலில் வாழ்ந்திருக்கும்படி வைத்து விட்டாயானால், இனி இவ் வாழ்வில் யாதொரு குறையும் எனக்கில்லை. இதைச் செய்தருள நீ இரக்கப்படவில்லை யென்றால், என் உயிரை இனி இவ் வுடலில் வாழ விடாமல் இழுத்து உன் திருவடிகளிற் சேர்த்துக் கொண்டு, இவ் வுடல் மடிந்து மண்ணாகும்படி உடனே மரணத்தையாவது கொடுத்தருள்க.

751. ஏதொன்று மில்லை யினியியற்ற வென்வலத்தாற்
சூதொன்று மென்னளவிற் சூழற்க — வாதொன்றுஞ்
செய்யற்க தீனருட் டீனனெனை மாயையில்
வையற்க வின்னும் மறித்து.

இனி என்னுடைய சக்தியால் இயற்றக் கூடிய தவமோ சாதனையோ யாதொன்றுமே யில்லை. இனி எது செய்ய வேண்டுமோ, அத் தவத்தை நீயே என்னைச் செய்விக்க வேண்டியிருப்பதால் எந்தவித சூதும் செய்யாமல் அருள்வாயாக. இந்த எனது தீன நிலையில் நீ என்னோடு எந்த நியாயமும் கூறி வாது செய்யவே வேண்டாம். தீனர் யாவரிலும் தீனனாகிய என்னை இனியும் ஏதாவது சூது செய்து மாயையில் வழி மறித்துக் கட்டிவைக்காது அருள்க.

752. கைவிட்டா யென்னிற் கருமத்திரளொடுமுன்
செய்துட்ட வாசனையுஞ் சேர்ந்தென்னை — நைவித்
தெழவொண்ணாச் சேற்றி லிழுத்தழுத்து மேநா
னழவெண்ணு வாயோ வருள்.

நீ எனக்கு இரங்கி அருள் செய்யாமல் கைவிட்டாயே யானால், முன்பு நான் செய்துள்ள கர்ம பலத்திரளும் துஷ்ட வாசனைகளும் ஒருங்கு கூடி என்னை நைய வைத்து, மீண்டும் எழுந்திருக்க முடியாததாகிய ஜனன மரணச் சேற்றிலேயே இழுத்து அழுத்தி வைக்குமே. அவ்வாறு நான் துன்புற்று அழுது கிடக்க வேண்டுமென்று நீ எண்ணுவாயோ? அந்தோ! அவ்வாறு எண்ணாதருள்க.

753. அழிந்தகந்தை யாதோ ரடையாள மின்றி
யொழிந்துபட வேண்டினு(ம்)நீ யொவ்வா — திழிந்தமல
வாதனைத்தீ யாலெரித்து வாட்டுவையே னீசெய்யும்
சோதனைக்கென் செய்வேனான் சொல்.

அகந்தை யழிந்து, அது இருந்த அடையாளமுங்கூடத் தெரியாதவாறு ஒழிந்துபோக வேண்டுமென்று நான் உன்னிடம் வேண்டிக்கொண்டும், நீ அதற்குச் சம்மதியாமல் கீழான அசுத்த வாசனைத் தீயால் என்னை எரித்து வாட்டிக் கொண்டே யிருப்பாயாகில், நீ செய்யும் இக் கொடிய சோதனை களுக்கு நான் என்ன செய்ய முடியும்? சொல்க.

754. என்றிரங்கு வாயோ வெனைக்காக்க வேயருணக்
குன்றி லெழுந்த குருரமணா — வன்றியுனை
வேற்றார்பாற் சென்றெதுவும் வேண்டாதே னன்றோவென்
னாற்றாத் துயர மகற்று.

அருணாசலத்தில் எழுந்தருளிய ஸ்ரீ ரமண குருவே, நீ என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று என்றுதான் இரக்கப்படுவாயோ? உன்னைத் தவிர வேறு யாரிடமும் சென்று எதையும் வேண்டாதவ னல்லவா நான்? ஆகையால், எனது தணியாத துயரத்தை நீக்குவாயாக.

755. இறைவா குருதேவா வின்னலிமி யேனுங்
குறையவிலை யேயெனக்கூப் பிட்டுக் — குறைக
ளடுத்தடுத்துக் கூறி யருட்பதங்க ணோகப்
படுத்துவதே யாயிற்றென் பாடு.

'இறைவா! குருதேவா!' என்று உன்னைக் கூப்பிட்டு, 'என் துன்பங்கள் கொஞ்சங்கூடக் குறையவில்லையே' என்று மீண்டும் மீண்டும் என் குறைகளை முறையிட்டுக் கூறி உன் அருட்பதங்களை நோக வைப்பதே என் தொழிலாகிவிட்டது.

756. தன்னைநினைந் தேங்கித் தவிக்குந் தனதடியார்க்
கன்னையினு மிக்க வருளுடையா — யென்னையின்னு
மேங்கவைத்த லின்னருளுக் கேற்பதுவோ வாமாயின்
றாங்க முடியா தது.

உன்னையே நினைத்து ஏங்கித் தவித்து நிற்கும் உன் அடியார்களிடம் அவர்களின் தாயைவிட அதிக அருளுடையவனே, என்னை இன்னும் இப்படியே ஏங்கி நிற்கும்படி வைத்திருப்பது உன்னுடைய இனிய அருளுக்குத் தக்கதோ? தக்கதுதான் என்று சொல்வாயாகில், அது என்னால் தாங்க முடியாததே.

757. தலைவனரு ளானாலுந் தாங்கவிய லாத
பலவிதமா மின்னலிடைப் பட்டு — நிலைகுலைந்து
நெஞ்ச முடைவரையி னீபொறுத்த னீதியோ
அஞ்சலென மாற்றி யருள்.

எனது இந்த ஆற்றாத் துயரங்களெல்லாம் என் ஆண்டவனாகிய உன்னுடைய அருளாலேயே தரப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே யானாலும், என்னால் தாங்க முடியாத அளவு பற்பல விதமான கொடிய துன்பங்களிடையே அகப்பட்டு, நான் நிலை குலைந்து நெஞ்சம் உடைந்து உன்னிடத்தில் நம்பிக்கை குலையும் வரையிலும் நீ எனக்கு அருள் செய்யாமல் பொறுத்திருப்பது நீதியோ? எனவே 'அஞ்சாதே' என்று அபயம் அளித்து என் துயரங்களை மாற்றியருள்வாயாக.

758. என்கீழ்மை காண்பே னிரங்கிநா னேயழுவே
னுன்கேண்மை யற்றேனென் றோலிடுவேன் — றன்காலிற்
றானேயோர் முள்ளழுத்தித் தாளா வலியுழப்போ
னானேனென் னாவே னருள்.

என் மனத்தின் கீழ்மைகளை யெல்லாம் நானே எண்ணிப் பார்ப்பேன்; பிறகு அந்த என் நிலைக்கு நானே இரக்கப்பட்டு அழுவேன். உன்னுடைய அருள் துணையை இழந்துவிட்டேனோ என்று ஓலமிடுவேன். ஒருவன் தன் காலில் ஒரு முள்ளைத் தானே குத்தி அழுத்திக் கொண்டு தாங்க முடியாத வலியால் கஷ்டப்படுவதைப் போலவே நானும் ஆனேன். இனி என்ன ஆவேனோ? அருள்க.

759. தூக்கத்தி னின்றொருவன் றோன்றுவது(ம்) நானெனவிவ்
வாக்கையினைப் பற்றியலைந் தாடுவது — மேக்கமுற்றே
யெந்தாய் ரமணா விதயத் தெனைமீட்பா
யென்றழலுந் தானோ வெனக்கு.

தூக்கத்திலிருந்து விழிக்கும்பொழுது 'நான்' என்ற ஒருவன் இவ் வுடலில் உதிப்பதும், பிறகு 'இவ் வுடம்பே நான்' என்ற அகந்தை வடிவில் உடலை அபிமானித்துப் பற்றிக் கொண்டே (பல ஜன்மங்களாக) எப்போதும் உலகியலில் ஆடியலைவதும், (இடையிடையே அந் நிலைக்கு வருந்தி உன் நினைவு ஏற்பட்டு) உனக்காக ஏங்கி உன்னை நோக்கி நின்று, 'அப்பா, ரமணப்ரபூ, என்னை மீண்டும் இதயத்தினுள்

இழுத்துக் கொள்வாயாக' என்று பிரார்த்தித்து அழுது நிற்பதும் தானோ நீ இப்போது எனக்குத் தந்துள்ள பயன்? (சொல்க.)

760. இயலார்க் கிரங்கு மிதயத்தோ யுன்னி
னயலா மிருப்பையினி யாற்றேன் — மயலாதி
யெக்கரையுஞ் சேரா வியற்பரமோ னானந்த
வக்கரைமேற் சேர வருள்.

ஒன்றும் இயலாத தீன அடியார்களுக்கு இரங்கி அருள் செய்யும் இதயம் உடையவனே! உன்னை விட்டு வேறாகப் பிரிந்து உனக்கு அன்னியமாக இருக்கும் ஓர் இருப்பை என்னால் இனியும் சகித்துக் கொள்ள முடியாது. நான் மயக்கம் முதலிய எந்தக் குற்றங்களும் சேராத இயற் பரமோனானந்த அக்கரையின்மேல் வந்து சேரும்படி அருள் செய்க.

761. உனக்கே தகுமென்ற னொப்புயர்வே யில்லா
மனக்கே டெலாம்பொறுத்து மாற்ற — எனக்கிதனை
யெண்ணித்தான் சாந்தி யிருப்புளது வேறெதனைப்
பண்ணித்தா னென்னே பயன்.

என்னுடைய ஒப்புயர்வு இல்லாத மனக்குற்றங்களை யெல்லாம் பொறுத்துக் கொள்வதோடு மட்டுமின்றி, அவை இனி என்னிடம் சேராதவாறு மாற்றித் தருவதும் உனது திருவருளுக்கே தகும். நான் இதனை எண்ணித்தான் அமைதியாக இருக்கின்றேன். அவ்வாறு இருப்பதைத் தவிர, வேறு நான் என்ன (சாதனைகள்) செய்துதான் என்ன பயன்? ஒன்றுமில்லை.

762. கண்ணிரண்டுங் குத்தியிரு கைகால் களைக்கட்டி
யுண்ண வுணவோ வொருமிடறு — தண்ணீரோ
வில்லாத பாலைமண லிட்டாய்போ லெய்துகின்றேன்
சொல்லா லடங்காத் துயர்.

என்னை இரு கண்களையும் குத்திக் குருடாக்கி, இரு கை கால்களையும் கயிற்றினால் கட்டி, உண்ணுவதற்கு உணவோ அருந்துவதற்கு ஒரு மிடறு தண்ணீரோ கூட இல்லாத பாலைவனத்தின் சுடு மணலில் நீ தூக்கிப் போட்டுவிட்டதைப் போன்ற சொல்லிலடங்காத பெருந் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றேன்[54].

763. காப்பாற்று முன்பொற் கழல்கட்கே கைச்சிரமேற்
கூப்பாக்கி யோலமிட்டுக் கூவுகின்றேன் — நாப்பாடத்
தூண்டுமுனக் கன்றிமனஞ் சூழுலகிற் செல்லாம
லாண்டருள்க நீயென் றழுது.

'உன்னைப் பாடித் துதிப்பதற்கு என் நாவைத் தூண்டி யருள்கின்ற உன்னிடம் தவிர மற்ற வெளியுலகத்தில் என் மனம் செல்லாதவாறு நீ என்னை ஆட்கொண்டருள்க' என்று கூறி, எப்பொழுதும் என்னைக் காப்பாற்றுகின்ற உன் பொன்னான திருவடிகளை நோக்கி, சிரத்தின் மேல் கைகூப்பி, அழுது, ஓலமிட்டுக் கூவித் துதிக்கின்றேன்.

764. அலுத்தே னலுத்தே னருளருளென் றுன்பாற்
சொலித்தேம்பிக் கண்ணீர் சொரிந்தே — வலுத்தோங்கும்
பேரருட் சத்திநீ பேசா திருந்தக்கால்
யாரடியேற் கீவா ரருள்.

---

[54] 837வது பா[illegible] லு[illegible]ன் ஒத்து நோக்குக.

உன்னிடம் வந்து நின்று, 'நீ அருள்க, அருள்க' என்று வேண்டித் துதித்து, தேம்பியழுது, கண்ணீர் சொரிந்து, அலுத்தேன், அலுத்தேன். வலிமை மிகுந்த பெரிய அருட் சக்தியாகிய நீ என் முறையீடுகளைக் கேட்டும் பேசாது இருப்பாயானால், வேறு யார் அடியேனுக்கு அருள் செய்வர்?

765. இனியொன்றுங் கூறுவதற் கில்லை புதிதாய்
சொனதென்றை யேதிரும்பச் சொல்வேன் — புனிதா
அருளின்றி வாழகில்லே னஞ்சலெனத் தஞ்சந்
தருகின் றிலையேதந் தாள்.

இனி புதிதாக நான் ஒன்றும் உன்னிடம் கூறுவதற்கில்லை. இத்தனை நாட்களாகச் செய்த முறையீடுகளையே திரும்பவும் திரும்பவும் சொல்லி முறையிடுகின்றேன். புனிதமானவனே, அதன் சாரம் என்னவென்றால், 'உன்னுடைய திருவருள் இல்லாமல் நான் வாழ முடியாது' என்பதே யாகும். 'அஞ்சேல்' என்று அபயந் தராமல் இருக்கின்றாயே. ஆகையால் உடனே அபயம் தந்து ஆள்வாயாக.

### 17. காலதாமதத்திற் காற்றாமை

766. எல்லா மறிவாய்மற் றெல்லாஞ் செயவல்லா
யெல்லா ரினு(ம்)நீ யிரக்கமுளாய் — பல்லாற்று
முன்னிடமே கூறி யுளமங்க லாய்த்தயரு
மென்னிடமித் தாமதமு மேன்.

நீயே எல்லாம் அறிந்தவன்; மேலும் எல்லாம் செய்ய வல்லவன்; எல்லாரையும்விட என்மீது அதிக இரக்க முள்ளவன்[55]. அத்தகைய நீ உன்னிடத்திலேயே என் குறை முறைகளை யெல்லாம் பலவிதமாகவும் கூறி உள்ளம் வருந்தி அழுகின்ற எனக்கு அருள் செய்வதற்கு ஏன் இவ்வளவு தாமதம்?

767. தோற்று முடலுலகச் சொப்பனத்துக் காதாரம்
ஏற்றபிரா ரத்தவினை யென்றொழியுங் — கூற்றகற்றும்
பாத ரமண பகவ னுனதருளெப்
போதுறுமென் னுண்மை புலர்ந்து.

'நான் யார்' என்ற உண்மை அறிவு மலர்ந்து, சொப்பனம் போலத் தோன்றிக்கொண்டிருக்கும் இவ் வுடல் உலக வாழ்க்கைத் தோற்றத்திற்கு ஆதாரமாகிய பிராரப்தவினை எப்போது அழியும்? மரணத்தை வெல்லும் திருவடியுடைய ஸ்ரீ ரமண பகவானே, உனது அருள் எனக்கு எப்போது கிடைக்கும்?

768. புலனா முலகிற் பொழுது கழித் துண்மை
நலனா(ம்)நா னாரென்ற நாட்ட — மிலனாய்க்
கெடுகின்ற வென்னையருட் கேண்மையளித் துன்கீ
ழிடுகின்ற தென்றோ விசை.

ஐம்புலன்களால் அறியப்படுகின்ற இவ் வுலக வாழ்வுத் தோற்றத்திலேயே பொழுதைக் கழித்து, உண்மைப் பயனைத் தருவதான 'நான் யார்?' என்ற ஆன்ம நாட்டத்தை மேற்கொள்ளாத வனாய்க் கெட்டழிகின்ற எனக்கு உனது திருவருள் சேர்க்கையை அளித்து, என்னை உனது அடியிலேயே விலகாமல் கிடக்க இருத்துவது எப்பொழுதோ? சொல்க (அல்லது, இருத்த இசைவாயாக.)

769. தன்னை விடாதிருக்குங் சத்தி யருள்வாயே
லென்னையுண் டின்னொான் றிரந்தேற்க — வன்னையே

[55] 645, 979 பாடல்களுடன் ஒத்து நோக்குக.

யப்பனே ஞான வருட்குருவே நின்பிள்ளைக்
கெப்பொழுதீ வாயோ விது.

ஆன்மாவை விடாது நாடி நிற்கும் தவசக்தியை நீ எனக்கு அருள்வாயானால், அதன் பிறகு உன்னிடம் யாசித்துப் பெறுவதற்கு வேறு இன்னொன்று என்ன இருக்கின்றது? அன்னையே! என் அப்பனே! என்னை ஆட்கொண்ட ஞான அருட்குருவே! உன்னுடைய பிள்ளையாகிய எனக்கு இதை எப்பொழுது தருவாயோ?

770. உடலென் றதற்கின் றுணவென் றுடையென்
றிடமென் றினும்பலவா யெண்ணும் — மடமென்று
நீங்கியுன் பாத நிழலி லெழாத்தூக்கந்
தூங்குவே னுன்னருளாற் சொல்.

'இவ் வுடல் நான்' என்றும், அதற்கு இன்றைக்கு உணவு வேண்டும் என்றும், உடை வேண்டும் என்றும், இருக்க இடம் வேண்டும் என்றும், இவ்வாறு இன்னும் பற்பலவாக எண்ணிக்கொண்டே இருக்கும் அறியாமை என்றைக்கு நீங்கி, உனது திருவடி நிழலில் (ஆன்மாவில்) வந்து, மீண்டும் எழாத தூக்கத்தில் (ஆன்ம நிஷ்டையில்) உன்னருளால் தூங்குவேனோ? சொல்க.

771. அருளா லழிந்த வகந்தையே னாகுந்
திருநா ளெதுவோ தெரியேன் — குருநாதா
இன்றின்றென் றென்று மெதிர்பார்த் திருக்குமெனைக்
கொன்றுண்ப தென்றோ குறித்து.

உனது திருவருளால் நான் அகந்தை யழிக்கப்பட்டவனாகும் திருநாள் எதுவோ, தெரியவில்லை. குருநாதா, 'அந்தத் திருநாள் இன்றில்லா விட்டால், வேறு என்றைக்கு?' என்று ஒவ்வொரு நாளும் எதிர்பார்த் திருக்கும் என்னைக் குறிவைத்து நீ கொன்று உண்பது என்றைக்கோ?

772. இன்றாகு(ம்) நாளைக்கு ணன்றாகு மென்றுள்ளே
னென்றாகு மேமன்முன் னென்னாகும் — ஒன்றாகு
முண்மை யுனையடைந்து மோரா துடன்மரிக்கின்
வண்மை யுனதருளெவ் வாறு.

இன்றைப் பொழுதிற்குள் உனதருள் கிடைக்கு மென்றும், அல்லது நாளைப் பொழுதிற்குள் அந்த நன்மை நடந்தேறுமென்றும் எதிர்பார்த்து உள்ளேன். இது என்று நடந்தேறும்? இயமன் வருவதற்கு முன் என்ன ஆகும்? (அல்லது, இயமன் வந்தால் அவனுக்கு முன்னால் என் நிலைமை என்ன ஆகும்? ) சற்குருவாகிய உன்னை அடைந்தும், அத்வைத உண்மையை அனுபவமாய் அறியாமல், இந்த உடல் இறந்துவிட்டால், அது உனது திருவருட் கொடைச் சிறப்புக்கு எவ்வாறு பொருந்தும்?

773. நன்றாக்கு வாயென்ற நம்பிக்கை தந்தநீ
யென்றாக்கு வாயென்றே யேங்கியேங்கி — நின்றேக்க
முற்றுவதா னம்பிக்கை மோசஞ்செய் வாயோவென்
றுற்றுடைகின் றேனே யுளம்.

நீ எப்படியாவது மேற்கூறிய நன்மையை எனக்குச் செய்வாய் என்ற நம்பிக்கையைத் தந்துள்ளாய். அந்த நம்பிக்கையைத் தந்த நீ என்றைக்கு அவ்வாறு அருள் செய்வாயோ என்று ஏங்கி ஏங்கி நின்று, ஏக்கம் மேன்மேலும் முற்றுவதால் 'நம்பிக்கை மோசம் செய்வாயோ?' என்ற சந்தேகம் அடைந்து உள்ளம் உடைகின்றேன்.

774. இனியாவே னின்னருட் கு மேற்றகல னாநா
னெனவெண்ணி யெண்ணியெந் நாளு — மினுமந்தோ

வெட்டுணையு முள்ளாழா திந்தவித மேன்மேலுங்
கெட்டுழல்வ தென்னோ கிறி.

உனது திருவருளுக்கு ஏற்ற பாத்திரமாக இனிமேலாவது நான் ஆவேன் என்று ஒவ்வொரு நாளும் எண்ணி யெண்ணியும், அந்தோ, இன்னும் எள்ளளவும் உண்முகப் பட்டு ஆன்மாவில் ஆழாமல், மேலும் மேலும் மேற்கூறியவாறே எண்ணிக்கொண்டு மேற்பரப்பிலேயே நான் திரிந்து கெடுவது எவ்வளவு பைத்தியக்காரத்தனம்.

775. ஒவ்வோர் தினமு முதித்திரவி யென்வாழ்வை
யெவ்வாறென் றெள்ளிநகைத் தேகுகின்றா — னிவ்வாறே
காலங் கழிகின்ற தன்றி யகந்தையற்ற
கோலங்காட் டாயோ குறித்து.

ஒவ்வொரு நாளும் சூரியன் உதித்து என்னைப் பார்த்து, 'உன் ஆன்மீக வாழ்வு என்ன ஆயிற்று?' என்று பரிகசித்துச் சிரித்துவிட்டு மாலையில் மறைகின்றான். இவ்வாறே என் வாழ்நாள் காலம் முழுவதும் கழிந்ததே தவிர, அகந்தை யற்றுப்போன என் ஆன்ம அழகை நீ எனக்குக் குறித்துக் காட்டித் தர மாட்டாயோ?

776. மாறி வரும்பருவ மாறும் வருடங்க
டோறும்வந்து போதலன்றித் தொல்விடயச் — சேறிலுறும்
புன்மனமே மாறியருட் பூரணத்தி லொன்றுமுயர்
நன்மனமாக் காணேனே நான்.

மாறி மாறி வருகின்ற வருஷந் தோறும் பருவங்களும் மாறி மாறி வந்து போகின்றனவே தவிர, பண்டை விஷய வாசனையாகிய சேற்றில் ஊறிக்கிடக்கும் அற்ப மனம் மாறி அருட் பூரணத்தில் ஒன்றாகி நிற்கும் உயர்ந்த நல் மனமாக நான் மாறக் காணவில்லையே!

777. இரவும் பகலுமா யெத்தனையோ நாட்கள்
விரைவி லகன்றனவே வேந்தே — பரவும்
பரிசளித்த நீயென் பவமழித்துன் வண்மை
முரசொலிக்கா தென்னோ முறை.

இரவும் பகலுமாக எத்தனையோ நாட்கள் இவ்வாறே வீணாகி வெகு விரைவில் கழிந்துவிட்டனவே! தலைவனே, உன்னைப் பாடும் பாக்கியத்தை அளித்த நீ என் எழுச்சியாகிய பிறவிகளை அழித்து உனது அருள் வண்மையின் வெற்றி முரசை முழக்காதது எப்படி முறையாகும்?

778. இவ்வா றலைமா றெனையின்னும் விட்டிருந்தா
லெவ்வா றுனதடிமை யெய்துவேன் — வெவ்வேறாத்
தோன்றுமனோ ஜாலச் சுவைநீத் திதயத்துள்
ளூன்றுவிப்ப தென்றோ வுரை.

உன்னை நீங்கி நான் இவ்வாறே அலையும்படி நீ என்னை இன்னும் அனுமதித்துக்கொண்டே யிருந்தால், உனக்கு அடிமை என்ற பதவியை நான் எவ்வாறு அடைவேன்? மனோ ஜாலத்தால் வேறுவேறாகத் தோன்றும் பொருள்களின் மேலுள்ள ஆசைகளை யெல்லாம் விட்டு நான் இதயத்துள் ஊன்றி நிஷ்டையுற்றிருக்கும்படி நீ செய்விப்பது என்றோ? சொல்க.

779. அன்புருவா முன்னி லழுந்திநா னற்றருட்பே
ரின்புருவா நிற்பதினி யெந்நாளோ — வன்பறிவா

யல்பகலற் றண்ணா மலையா யொளி(ர்)ரமணத்
தொல்பகவ னேநீ துலக்கு.

சிதானந்த வடிவாக, அண்ணாமலையாக, இராப்பகலற்று விளங்கிக் கொண் டிருக்கும் ஆதிபகவானாகிய ஸ்ரீ ரமண சற்குருவே! அன்பே வடிவமான உன்னில் அழுந்தி, 'நான்' என்ற அகந்தையற்று அருள் பேரின்ப வடிவாகி நிற்பது இனி என்நாளோ? நீயே சொல்வாயாக.

780. இயக்க மிலேசமு மில்லாது நெஞ்ச
மயக்காந்த மேயணுகு மாறே — வயப்படவே
யென்னைப் புறமாகா தீர்க்குநா ளெந்நாளோ
வந்நாளே நன்னாளெற் காம்.

இரும்பைக் காந்தம் அணுகி யிழுத்துத் தன்னிடமே வைத்துக்கொள்வது போல, என் மனத்தைச் சிறிது கூடச் சலனமில்லாதபடி உன் அருள் வசப்படுத்தி, மீண்டும் நான் புறமுகமாகாதபடி உன்னிடமே இழுத்து வைத்துக் கொள்ளும் நாள் எந்த நாளோ, அந்த நாளே எனக்கு நன்னாள் ஆகும்.

781. விருத்தியற்ற மெய்ந்நிலையின் மீளாம லென்னை
யிருத்திவைக்க வெண்ணுவையே லின்னோர் — வருத்தமுற
வேதுண்டிப் போதே வியற்றா விடிலுனக்கெப்
போதுண்டு காலம் புகல்.

எந்த விருத்தியுமில்லாத ஆன்ம மெய்ந் நிலையினின்றும் நான் மீளாதபடி என்னைத் திடமாக இருத்தி வைக்க நீ எண்ணி விட்டாயானால், நான் இன்னொரு துன்பமடைய என்ன காரணமிருக்கின்றது? நீ இதை இப்பொழுதே செய்யா விட்டால், இதைச் செய்வதற்கு ஏற்ற இன்னொரு காலம் உனக்கு எப்பொழுது உண்டு? சொல்க.

782. இவ்வாறென் வாணா ளெலாங்கழிந்தா லுன்னருளுக்
கெவ்வாறு நான்றகுதி யெய்துவேன் — செவ்வாறு
காட்டி நடத்துங் கடவுணீ வாளாநா
ணீட்டிடுவ தென்னோ நெறி.

என் வாழ்நாள் எல்லாவற்றையும் இவ்வாறே கழியும்படி நீ விட்டு விட்டால், நான் உன் அருளுக்கு எவ்வாறு தகுதி யுடையவனாவேன்? எனக்கு நல்ல வழியைக் காட்டி நடத்தும் கடவுளாகிய நீ சும்மா இப்படியே நாட்களை நீட்டிக்கொண்டு வருவது என்ன நியாயம்?

783. பையற் பருவப் பழையநா டொட்டுனருட்
கையி லெனைக்கொடுத்துக் கைகூப்பி — யையா
பரம்பொருளே நீயேயென் பாதுகாப் பென்றே
யிருந்துவரு மென்பா லிரங்கு.

சிறு குழந்தைப் பருவமாகிய பண்டை நாளிலிருந்தே என்னை உன் அருட்கையில் ஒப்படைத்து, கைகூப்பி நின்று, 'என் தலைவனே, பரம்பொருளே, நீயே என் பாதுகாப்பு' என்று வேண்டி இருந்து வருகின்ற என்பால் இரக்கம் கொள்க.

784. காலைப் பொழுதுவந்து கையேந்தி நின்றவெனை
மாலைப் பொழுதுவரை வாயிலிலே — ஆலைக்
கரும்பா யனற்புழுவாய்க் கண்கலங்க விட்டாற்
[56]பெரும்புகழோய்க் கேற்குமோ பேர்.

[56]'கேளா தளிக்குங் கேடிற் புகழோன் அருணாசலன்' என்று 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'யில் போற்றப் பட்டதைக் குறிக்கும்.

அதிகாலையிலேயே (இளமையிலேயே) உன்னிடம் அடைக்கலமாக வந்து ஆன்ம ஞானத்தை யாசித்து நின்ற என்னை மாலைப் பொழுது வரையில் (முதுமை வரையில்) உன் சந்நிதியிலேயே காத்துக்கிடந்து, அக் காலம் முழுவதும் ஆலையிலகப்பட்ட கரும்பைப் போலவும், அனலிடை அகப்பட்ட புழுவைப் போலவும், மாயையிடை அகப்பட்டுக் கலங்கவிட்டால், அடியார்களைத் தவறாது ரக்ஷித்து நீ அடைந்த புகழுக்கு இது தகுமோ?

785. வரும்போ(ம்)நாண் மாத வருடங்கள் வீணே
யருஞ்சா தனையற் றகன்று — பெரும்பகுதி
வாணாளும் போக வருநாளென் னாமோநீ
காணாய்நா னுய்யுங் கதி.

நட்களும், மாதங்களும், வருடங்களுமாகக் காலம் வந்து போய்க்கொண்டே இருக்கின்றது ஆனால் வாழ்நாளில் பெரும் பகுதி ஆன்மசாதனை யில்லாமல் வீணே கழிந்துபோக, இனி வரும் நாள் என்ன ஆகுமோ? நான் உய்யும் வழியை நீயே பார்த்துச் செய்தருள் வாயாக.

786. காப்போ னெனநின்னைக் கண்டுகொண்ட பின்னருமென்
றீப்போன் றெரிநசைக டீராயேன் — மூப்போ
டிறப்புடலஞ் சேருமே லென்செய்வே னெந்தாய்
சிறப்பீதோ நின்னருட்குச் செப்பு.

என்னைக் காப்பாற்றக் கூடிய அருள் வள்ளல் நீதான் என்று உன்னை நான் கண்டுகொண்ட பிறகும் மேலோங்கி எரியும் தீயைப்போல எரிந்து எழுகின்ற எனது உலக ஆசைத் தீயை நீ அணைக்காவிட்டால், முதுமையும் மரணமும் இவ் வுடம்புக்கு வந்து சேருமே; என் தந்தையே, அப்பொழுது என்ன செய்வேன்? இது உன்னுடைய திருவருளுக்குச் சிறப்பாகுமோ? சொல்க.

787. ஆளாகி யுன்பா லழுதொழு திப்படியே
நாளாயிற் றெந்தாய் நரவுடலந் — தாளா
தழிந்து விடுமே யதற்குள் ளருட்பாற்
பொழிந்திடவேண் டாமோ புகல்.

உனக்கு அடிமையாகி உன்னிடமே அழுது தொழுத வண்ணம் எத்தனையோ நாட்கள் ஆயினவே. எந்தையே, இனி இந்த மனிதவுடல் நீடித்திராமல் அழிந்துவிடுமே. அதற்குள் உன் அருள் ஞானப்பாலை நீ பொழிய வேண்டாமோ? சொல்க.

788. பார்த்திருப்ப தன்றிப் படிறேன் றுயரெல்லாந்
தீர்த்தணைப்ப தென்றோநீ தேர்கிலேன் — போர்த்த
வுடல்வாழ்வு மிவ்வா றொழியுமேற் செய்யக்
கடவதென்னோ காத்திருந்தக் கால்.

அடியேனுடைய துன்பங்களை யெல்லாம் நீ பார்த்துக் கொண்டே இருக்கின்றாயே யன்றி, இனி அவற்றைத் தீர்த்து என்னை உன்னோடு ஐக்கியப்படுத்திக் கொள்வது எப்பொழுதோ அறியேன். நான் போர்த்திக்கொண்ட இந்த உடல் வாழ்வு இவ்வாறே வீணாகக் கழியுமாறு காத்துக் கொண்டே இருந்தால், மேலே செய்யக் கூடியது என்னவோ?

789. வெட்கமெலாம் விட்டு வெகுகால மென்னெஞ்சி
னுட்கிடக்கை யுன்பா லுரைத்தேனே — மட்கலமாந்
தேகவா ணாளுஞ் சிறுகி வருகிறதே
யாகவேண் டுங்கடமை யாற்று.

வெகு காலமாக என் மனத்தினுள் இருந்த குறைகளை யெல்லாம் பிறர் நகைப்பார்களே என்ற வெட்கத்தையும் விட்டு உன்னிடம் கூறிப் பிரார்த்தித்தேனே. மண் பாத்திரத்திற் கொப்பான இந்த தேகத்தின் வாழ்நாளும் குறைந்துகொண்டே வருகின்றதே. ஆகையால், இனிமேல் நீ எனக்குச் செய்ய வேண்டிய அருட்கடமைகளை ஆற்றுவாயாக.

790. படலம் படலமாய்ப் பல்பிறவித் தோற்ற
முடலுலக வாசனையா லுற்றுத் — தடுமாறும்
பேதைமையை நீக்கப் பெருங்கருணை வள்ளாலெப்
போதொருநாள் வைத்தாய் புகல்.

பெரிய கருணை வள்ளலே! படலம் படலமாக முன்பும் பின்பும் பல பிறவித் தோற்றங்களை உடல் உலக வாசனைகளால் மீண்டும் மீண்டும் பெற்று அதிலேயே நான் உழன்று தடுமாறு கின்ற அறியாமையை ஆன்ம ஞானத்தால் நீக்குவதற்கு நல்ல நாளாக என்றைக்கு ஒரு நாள் வைத்துள்ளாய்? சொல்க.

791. புத்திமங்கி யைந்து புலன்களு மங்கியுடற்
சத்திமங்கிச் சாகுந் தருணத்தே — வைத்தனையோ
வல்லவநான் கேட்ட வரமளிப்ப தற்கேற்ற
நல்ல முகூர்த்தமுள்ள நாள்.

எல்லாம் வல்லவனே, நான் கேட்ட ஆன்ம ஞான வரமளிப்பதற்கு ஏற்ற நல்ல முகூர்த்தமுள்ள ஒரு நாள், என் புத்தி மங்கி, ஐம்புலன்களும் உணர்ச்சி மங்கி, உடலின் இயக்க சக்தியும் மங்கி, அது சாகுந் தருணத்தில் தான் வைத்திருக்கின்றாயோ?

792. மயல்கூரு நெஞ்ச மயக்கற் றுனக்கே
யியல்பா யுருசிமிக வெய்தி — அயலாகா
தென்றென்று முன்னடியி லின்புற் றிருக்கவரு
ளின்றன்றி யென்றுசெய் வாய்.

உலக விஷயங்களிலேயே மயக்கமடைந்து நிற்கும் மனம் அம் மயக்கம் நீங்கி, உன் திருவடிகளிலேயே இயல்பாக மிக அதிக ருசி யடைந்து, உன்னை விட்டு என்று நீங்காமல் உன் திருவடிகளிலேயே இன்புற்று இருப்பதற்கு இன்றைக்கில்லாவிட்டால், இனி என்றைக்கு நீ அருள் செய்வாய்?

793. இன்றோ டகந்தைவாழ் விற்றொழிய நீயோங்கி
நின்றாக வேண்டு(ம்)நா ணீட்டற்க — வன்றாண்டு
கொண்டருணைக் கீர்த்த குருரமணா நின்னருட்கண்
கண்டிலதோ வென்கீழ்க் கடை.

என்னுடைய அகந்தை வாழ்வு இன்றோடு முடிவடையுமாறு உன் அருளாட்சி ஓங்கி நின்றேயாக வேண்டும். இனியும் நாட்களை நீட்ட வேண்டாம். அன்றொரு நாள் என்னை ஆட்கொண்டு அருணாசலத்திற்கு இழுத்து வந்த குரு ரமணா! எனது கடைப்பட்ட கீழ்க் குணங்களை யெல்லாம் உன்னுடைய அருட்கண்கள் இன்னும் காணவில்லையா?

794. ஐவிடயத் தீவா யகப்பட்டென் னாளெல்லாஞ்
செவ்வியநின் னுண்மைத் தெரியாம — லொவ்வாக்
கடுவா தனையிற் கழிகின்ற தந்தோ
இடுவாய் முடிவொன் றிதற்கு.

ஐம்புல விஷயத் தீயின் மத்தியில் அகப்பட்டதால், என் வாழ்நாள் எல்லாம்

உன்னுடைய பரமாத்ம உண்மை தெரியாமலேயே தகுதியற்ற கொடிய வாசனைகளின் வசமாகவே கழிகின்றதே. அந்தோ! இத்தகைய அகந்தை வாழ்வுக்கு நீ ஒரு முடிவிடுவாயாக.

795. எங்குமென்று மென்னு மிடங்கால முங்கடந்தே
தங்கும் பெருங்கருணைத் தந்தையே — இங்கின்
றழுதுமுறை கூறி யழைக்குமெனைக் காக்க
முழுது முடிந்தோய் முடி.

'எல்லா விடத்திலும் எல்லாக் காலங்களிலும் நீ யிருப்பவன்' என்றவாறுகூட கூறப்படும் ஒரு இடங்காலக் கட்டுப்பாட்டையுங் கடந்து காலதேச மின்றி விளங்கும் பெருங்கருணைத் தந்தையே! இக் காரணத்தால் நீ, இங்கு இப்பொழுது அழுது முறைகூறி உன்னை அழைக்கும் என்னை இங்கு இப்பொழுதே காக்க முழுதும் வல்லவனாவாய். எனவே, உன் அனுக்கிரகத்தைச் செய்து முடிப்பாயாக.

796. ஊழி னடிச்சுவடே யூன்றா வகமுகமா(ம்)
நாழியறி யாவழியி னானடந்துள் — ளாழச்சென்
றேகரச மான விதயா புரியடைந்தென்
சோகமெலாந் தீர்வதென்றோ சொல்.

பிராரப்தத்தின் அடிச்சுவடுகூட படாததும், கால தேசங்களுக்கு உட்படாததுமான அந்தர்முக வழியில் நான் நடந்து உள்ளே ஆழ்ந்து சென்று, பேரின்பமயமான இதயாபுரியை அடைந்து என் வருத்தங்க ளெல்லாம் நீங்கப் பெறுவது என்றோ? சொல்க.

797. அலரும் மலரா யகமுன் னருளாற்
புலரும் பொழுதெப் பொழுதோ — தலைவா
ரமண குருதேவா நானழிய நீவந்
தமருந் திருநா ளறை.

என் உள்ளமானது உன்னுடைய திருவருளால் முற்றும் மலர்ந்த மலராக விரியும் காலம் எப்பொழுதோ? தலைவா, ஸ்ரீ ரமண குருதேவா, இவ் வகந்தை 'நான் அழியும்படி நீ வந்து என் இதயத் தாமரையில் அமரும் திருநாள் என்றோ? சொல்க.

798. இக்கால மில்லையெனி லேழைக் கருள்வார்மற்
றெக்காலும் யாருண்டுன் னிட்டமின்றி — மிக்கக்
கருணா கரரமணக் கண்ணனே யின்றே
யருள்வாழ் வடைய வருள்.

அதி கருணாகர ஸ்ரீ ரமணக்கண்ணனே, நீ இப்பொழுதே எனக்கு அருள இஷ்டப்படாவிட்டால், வேறு எக்காலத்தில் யாரொருவர் இவ் வேழைக்கு அருள்வர்? (யாருமில்லை.) ஆகையால் நான் இன்றே அருள் வாழ்வு அடையும்படிச் செய்வாயாக.

799. முடிவாக வோயுமக மோனத் திருநாள்
விடிவாவ தென்றென்றே வேண்டி — யடியேன்
பிசைந்துகை யேந்தியருட் பெய்கழல்வீழ்ந் தேற்று
மிசைந்திலையோ நெஞ்ச மினும்.

'அகந்தை முடிவாக ஒழிகின்ற மோனத் திருநாள் என்றைக்கு விடியும்?' என்று உன்னிடம் அடியேன் வேண்டி, கைகளைப் பிசைந்து கொண்டும், கையேந்திக்கொண்டும், அருள்பொழியும் உனது திருவடிகளில் வீழ்ந்து யாசித்தும், நீ இன்னும் உள்ளம் இசையவில்லையோ?

800. எப்படித்தான் சொல்வே னிறைவா வினிமேல்யான்
சொற்படுத்திப் பாட்டிற் றுயரெல்லா — மிப்படியே
நீ வாளா நாட்களெலா(ம்) நீட்டிக் கழிக்கிலுடற்
சாவாது சாவதென்று சாற்று.

இறைவா, இனிமேல் என் துயரங்களை யெல்லாம் இதுவரை கூறியதற்கு மேல் பாடல்களில் சொற்படுத்தி நான் எப்படித்தான் சொல்வேன்? ஆனால் நீயோ இப்படியே நாட்களை யெல்லாம் வீணாக நெடிது கழிப்பாயானால், என் உடல் சாகாமல் நான் சாவது எப்போது? சொல்க.

801. வாக்குமன மெட்டா வகையி லருளியுனக்
காக்குவையா ளாவென் றதைநம்பி — ஏக்கமுடன்
காத்திருக்கின் றேனெங் கடவுளே காயமின்னும்
போர்த்திருக்கின் றேனீ புரி.

என் கடவுளே, சொல்லவோ எண்ணவோ முடியாத அற்புதமான புத்தம்புது வழியில் நீ எனக்கு அருள் செய்து என்னை உனக்கு ஆளாக்கிக்கொள்வாய் என்று நம்பி ஏக்கமுடன் காத்திருக்கின்றேன். அந்த நம்பிக்கையாலேயே இன்னும் இவ் வுடலைப் போர்த்தியிருக் கின்றேன். ஆகையால் நீ ஸ்புரித்தருள்வாயாக.

802. விடிமுன் னிருள்போல் விளக்கொளி குன்றிக்
கெடுமுன் கிளம்புதல்போ லோங்கிப் — படரு
மகந்தையெனுட் செய்யும்பே ராரவா ரத்தான்
மகிழ்ந்தெதிர்பார்த் துள்ளேனீ வா.

சூரியனது பேரொளி தோன்றுவதற்குச் சற்றுமுன் அதிகாலையில் இருள் அதிகப்பட்டிருப்பது போலவும், ஒரு விளக்கொளி அணைந்து போகும் முன் ஓங்கி எழுந்து எரிவது போலவும், என்னுள்ளே அகந்தை மேன்மேலும் படர்ந்து எழுந்து செய்கின்ற பெரிய ஆரவாரத்தைக் கண்டு, 'இது அழியப்போகிற தருணம் வந்துவிட்டது' என்று உள்ளத்தில் மகிழ்ந்து உன் வரவை எதிர்பார்த்துள்ளேன். நீ எழுந்தருள்வாயாக.

## 18. உடல்வாழ்வி லுவர்ப்பு

803. விவேக மிலாததோர் வீண்வாழ்வுக் கென்றோ
விவாறொரு தேகமெனக் கீந்தா — யொவாதனவே
யித்தேகஞ் சிந்தை யியற்று மெனிலிவைகள்
செத்தேனு மோயவருள் செய்.

நித்தியா நித்திய வஸ்து விவேகமின்றி வீணாக வாழ்வதற்கென்றோ நீ இவ்வாறு எனக்கு ஒரு தேகத்தை அளித்தாய்? இந்த தேகமும் மனமும் உனக்கு ஒவ்வாத காரியங்களையே செய்யும் என்றால், இவை இறந்தொழியவாவது அருள் செய்வாயாக.

804. உனக்கொன்று மாவதில்லை யூனுடலி னான்வாழ்ந்
தெனக்குன்னைச் சேர விதனால் — மனக்கள்ள
வாதனைகள் மாய்க்க வழிபிறக்கு மென்றிருந்தேன்
சாதனைக்கின் றேலிதனைச் சாய்.

நான் இந்த ஊனுடலில் வாழ்வதால் உனக்கு ஒரு லாபமும் உண்டாகப்போவதில்லை. ஆனால் எனக்கோ கள்ளத்தனமான மனவாசனைகளை அழித்து உன்னை நான் அடைய இவ் வுடலில் நான் வாழ்வதனால் ஒரு வழி பிறக்கும் என்று நினைத்துத் தான் இத்தனை நாள் இவ் வுடலில் வாழ்ந்திருந்தேன். இவ் வுடல் வாழ்வு ஆன்ம சாதனைக்குப் பயனற்றது என்றால், இதனைக் கொன்று சாய்ப்பாயாக.

805. இருந்தாக வேண்டியதா யிங்கொன்று மில்லை
பொருந்தாதென் வாழ்விந்த பூமிக் — கருந்துயரே
யென்றனுக்கு மற்றோர்க்கு மிந்தநா னோயமன
முன்றனக்கே னில்லை யுரை.

நான் இனி இவ் வுடலில் வாழ்ந்திருந்து ஆக வேண்டியதாக ஒரு காரியமும் இல்லை. என் வாழ்வு இந்த பூமிக்குப் பொருந்தாததே யாகும். இப்படி நான் வாழ்வதால், எனக்கும் மற்றவர்களுக்கும் பெருந்துன்பமே. ஆகையால் இந்த 'நான்' (அகந்தை) அழிவதற்கு இன்னும் உனக்கு ஏன் மனம் வரவில்லை? சொல்க.

806. எனைத்துயர்ந்த சென்ம மெனினுந் துயரே
தினைத்தனையுஞ் சென்மமினித் தேடேன் — மனித்தசென்மம்
இன்றிருப்ப தான விதுவு மினிவேண்டே
னுன்றிருத்தா ளொன்றவரு ளூட்டு.

நர தேவ ஜன்மங்களில் எவ்வளவு உயர்ந்ததானாலும், அது துன்பம் நிறைந்ததே. ஆகையால், தினையளவுகூட இனி எந்த ஜன்மமும் நான் வேண்டேன். இன்றைக்கு இருந்து கொண்டிருப்பதாகிய இந்த மனித ஜன்மமும் இனி ஒரு வினாடிகூட நீடிக்க வேண்டேன். உன்னுடைய திருவடியை நான் வந்து சேர அருள் செய்வாயாக.

## 19. உலகியலார்க் கஞ்சுதல்

807. அஞ்சினேன் வேற்றா ரருகினிற் பேச்சரவங்
கொஞ்சமெனுங் கேட்கக் குருதேவா — தஞ்சமென
வுன்னடிக்கே வந்து முலகத்தா லச்சமுற
வென்னைவைக்க லாமோ விரங்கு.

குருதேவா, எனக்கு அருகில் வேற்று மனிதர்கள் யாராவது பேசுங் குரல் கேட்கும் போதெல்லாம், அதை எள்ளளவுங்கூட கேட்க அஞ்சினேன். உன்னுடைய திருவடியே தஞ்சம் என்று வந்துங்கூட, இவ் வுலகத்தைக் கண்டு நான் அச்சமுறும்படி என்னை வைக்கலாமோ? இரங்கி அருள்க.

808. நடுங்குகின்ற துள்ளமிந்த நானிலத்தைக் காண
வொடுங்குகின்ற தந்தோ வுடலுங் — கொடுங்குணமே
கொண்டவர்க்கே யிந்தக் குவலயமோ ரின்பநிலம்
தொண்டருக்கெங் கேயிட(ம்)நீ சொல்.

இந்த உலகத்தைக் காண என் உள்ளம் நடுங்குகின்றது; அந்தோ, என் உடலும் ஒடுங்குகின்றது. கொடிய குணங்களுடைய தீயவர்களுக்கே இவ் வுலகம் ஓர் இன்ப நிலம். எனின், என்னைப் போன்ற தொண்டர்களுக்கு இடம் எங்கே? நீயே சொல்க.

809. உலகோ ரெனைக்காண வொண்ணா விடத்தில்
விலகா துனோடெனைச்சேர் விப்பாய் — பலகா
லழுதுன் னடியி லனேகமுறை வீழ்ந்து
தொழுதுஞ்செய் யாயோ துணை.

உலகத்தார் யாரும் என்னைக் காணமுடியாத இடத்தில் நான் உன்னோடு விலகாது சேர்ந்திருக்கும்படி செய்விப்பாய். உன்னுடைய திருவடிகளில் நீண்ட காலமாக பலமுறை அழுது தொழுது விழுந்து முறையிட்டும் எனக்குத் துணை செய்யாயோ?

## 20. வீணாவதோ?

810. ஒன்றல்ல பல்பிறவி யோகப் பிரட்டனாய்ப்
பொன்றியதெல் லாமெனக்குப் போதாதோ — இன்றுளதிற்
சற்குருநீ வாய்த்தாய் தவறி யிழிவுறா
தெற்கருள வேண்டு மினிது.

ஒரு பிறவியல்ல, பல பிறவிகளாக யோகபிரஷ்டனாகி வீணான தெல்லாம் எனக்குப் போதாதோ? இன்று எனக்கு ஏற்பட்டுள்ள இப் பிறவியில் நீ சற்குருவாக வந்து கிடைத்தாயே! இனியாவது யோகத்தினின்றும் தவறி இழிவடையாதபடி எனக்கு நீ நன்றாக அருள வேண்டும்.

811. கிறிபேசி நாட்கழித்துக் கேடகலாப் புன்மை
வறியேனா யாவதற்கோ வந்தேன் — குறையே
யறத்திளைக்கு மண்ணா மலைரமணா வுன்றாட்
குறக்கமறச் செய்யுள் ளுதித்து.

வீண் பேச்சுக்களைப் பேசி, நாட்களைக் கழித்து, மனக் குற்றங்களை யெல்லாம் நீக்கிக் கொள்ளாத அற்பனாகவும் ஏழையாகவும் ஆவதற்கோ நான் உன்னை நாடி வந்தேன்? அடியார்கள் யாதொரு குறையுமற்று ஆன்மாவில் திளைப்பதற்காகவே அருள் செய்யும் ஸ்ரீ அண்ணாமலை ரமணா! நீ என்னுள் உதித்து உன் திருவடி ஞானத்தை மறந்து உறங்கிப்போகாமலிருக்கும்படி செய்தருள்க.

812. தனித்துத் தனித்திருந்துன் றாபமே லிட்டுப்
பனித்தகண் ணீருடனென் பாபச் — செனிப்பைப்
பயனாக்கித் தாவென்று பற்பலகாற் கேட்டு
மியலாதென் பாயோ வெனக்கு.

உலக மக்களை விட்டு அடிக்கடி தனியே சென்று தங்கி, உன்னுடைய ஆவல் மேலிட்டு, நீர்த்துளி ததும்பும் கண்ணீருடன் 'என்னுடைய இந்த பாபப் பிறவியைப் பயனாக்கித் தருவாயாக' என்று பற்பலமுறை நான் பிரார்த்தித்தும், நீ 'முடியாது' என்று எனக்குச் சொல்லிவிடுவாயோ?

813. புலவுலகே பற்றிப் பொழுதெல்லா மெண்ணி
மலவுடல்வா ணாளையிந்த வாறே — செலவழிக்கும்
வீணனா தற்கோ வினைதீ ருனையன்று
காண வழைத்தனைநீ காண்.

ஐம்புலன்களின் வழியே தோன்றுகின்ற இவ் வுலகத்தைப் பற்றியே பொழுதெல்லாம் எண்ணிக்கொண்டு இந்த மலவுடல் வாழ்நாள் முழுவதையும் இப்படியே செலவழிக்கின்ற ஒரு வீணனாக நான் ஆவதற்குத் தானோ, வினை தீர்ந்த பரம்பொருளாகிய உன்னை நான் வந்து தரிசிக்கும்படி அன்று நீ வரவழைத்தாய்? நீயே உன் அருட் கண்களால் காண்க.

814. கேடடைந்து மோகக் கிறிபிடித்துச் சாவதற்கோ
பீடுடைய நின்பாற் பிடித்திழுத்தாய் — வீடடையச்
செய்வையெனப் பாடிநான் றேம்பி யழுததெலாம்
பொய்யெனக்கொண் டாயோ புகல்.

இவ்வாறு மனம் கேடான நிலையை அடைந்து, மோக வெறி பிடித்து, கடைசியில் இவ் வுடல் சாவது என்ற ஒரு காரியத்திற்காகத் தானோ, அருட்பெருமையுடைய உனது திருவடிகளுக்கு என்னைப் பிடித்து இழுத்து வந்தாய்? 'நான் முக்தியை அடையும்படி அருள்செய்வாய்' என்று பலமுறைப் பாடித் தேம்பி யழுததெல்லாம் வெறும் வேஷம் என்று தீர்மானித்துவிட்டாயோ? சொல்க.

815. உண்டுடுத்தி வீணி லுழலவோ வன்றுனைநான்
கண்டடுத்துக் கெஞ்சிக் கதறினேன் — பண்டுதொட்டே
சேர்த்தபழ வாதனையைத் தீமூட்டி யென்னையுனோ
டீர்த்தணைத்தி டாயோ வினி.

உண்டும் உடுத்தியும் வீணே வாழ்வுப் பொழுதைக் கழிப்பதற்காகவா அன்று நான் உன்னைத் தரிசித்து, உன் சந்நிதியுற்று, கெஞ்சிக் கதறினேன்? முன் பல ஜன்மங்களாகச் சேர்த்த பண்டை வாசனைகளை யெல்லாம் நீ ஞானத்தீ மூட்டி எரித்து, என்னை உன்னிடம் இனி இழுத்து அணைத்துக்கொள்ள மாட்டாயோ?

816. இழந்த சுகவறிவை யெய்துவிக்க வேண்டித்
தொழுந்தொறுங்கண் ணீர்ப்பெருக்கிற் றோய்ந்தே — யழுங்குரலைப்
பொய்க்கண்ணீ ரென்றகன்று போயினையோ வென்னைமயன்
மைக்கண் ணமிழ்ந்தழிய வைத்து.

'நான் இழந்துபோன ஆன்ம சுகத்தைப் பற்றிய அறிவை மீண்டும் அடைவிப்பாய்' என்று வேண்டி வணங்கும் பொழுதெல்லாம் பெருகிய கண்ணீரில் தோய்ந்து அழுத என் குரலைக் கேட்டும், இது பொய்க் கண்ணீர் என்று தீர்மானித்து, இரக்கமின்றி என்னை உலக மாயையில் முழுகி அழிய வைத்துவிட்டு நீ நீங்கிப் போயினையோ?

817. துன்ப மகற்றுந் துணைவா ரமணேசா
வென்புகல்வே னின்னுமின்னு மேழையே — னுன்புகலா
வந்தவெனைக் காவாமல் வாளா விருப்பையே
லெந்தகதி யாவே னியான்.

அடியார் துன்பங்களை யெல்லாம் அழித்துக் காப்பாற்றும் துணைவனாகிய ஸ்ரீ ரமணேசா, ஏழையாகிய நான் இன்னும் இன்னும் உன்னிடம் என்ன சொல்வேன்? உன்னையே அடைக்கலமாகவந்த என்னைக் காப்பாற்றாமல் சும்மா யிருப்பாயானால், நான் என்ன கதி யடைவேன்?

818. நானற்ற பேரழிவாம் ஞானப் பிரளயஞ்சேர்
மோனப் பெரும்பேற்றை முன்னிட்டு — தீனப்
பதரேனன் றுன்பாற் பணிந்தழுது கெஞ்சிக்
கதறியதும் வீணோ கழறு.

'நான்' என்ற அகந்தை அற்றுப்போகின்ற பேரழிவாகிய ஞானப் பிரளயத்தால் ஏற்படும் மோனமாகிய பெரும் பாக்கியத்தை வேண்டி அற்பனும் அசக்தனுமாகிய நான் முன்பு உன்னிடம் பணிந்து, அழுது, கெஞ்சிக் கதறிய தெல்லாம் வீண் தானோ? நீயே சொல்க.

819. புரையேது மில்லாத பூரணமா முன்னிற்
கரையாது காலங் கழித்தித் — தரைமீது
துஞ்சவோ வேண்டுஞ் சுகமளிக்க நின்னிடத்தும்
பஞ்சமோ ஞானப் பழம்.

குற்றங்குறை யொன்றுமில்லாத பரிபூரண ஆன்ம வஸ்துவாகிய உன்னில் நானும் ஒன்றாகிக் கரையாமல், இவ் வுலக வாழ்வில் வீண் காலம் கழித்துவிட்டு இறந்துபோவதைத் தான் நீ எனக்கு அருள வேண்டுமோ? எனக்கு ஆன்ம சுகத்தை யளிக்கின்ற ஞானப்பழம் உன்னிடம் கூடப் பஞ்சமோ?

820. படைப்புயிர்க ளெல்லாம் பழிக்கின்ற தென்னை
மடப்பெரிய னென்றகந்தை வாழ்வாற் — கடைப்பட்

டனியாய மாக வழிவிலழி யாம
வினியேனு முன்னி லிருத்து.

என்னுடைய அகந்தை வாழ்வைக் கண்டு என்னை மடமையிற் பெரியவன் என்று உன்னால் படைக்கப்பட்ட உயிர்களெல்லாம் பழிக்கின்றன. இவ்வாறு எல்லா உயிர்களிலும் கடையனாகி அகந்தை வாழ்வில் நான் அநியாயமாக அழிந்துவிடாமல், இனியாவது ஆன்மாவாகிய உன்னில் என்னை இருத்துக.

821. அலைந்துழல வைக்கு மனாதிமா யத்தாற்
றொலைந்ததுமெய் வாழ்வுச் சுகமே — குலைந்தவெறுங்
கூத்தாகப் போகாதிக் கொள்பிறவி யென்னிதயக்
கூத்தா வருளே கொடு.

சதாகாலமும் உலகியலிலேயே நான் அலைந்து வருந்தும்படி வைக்கின்ற அனாதி மாயையால் எனது வாழ்வின் உண்மையான சுகமே பல ஜன்மங்களாகத் தொலைந்தது. இப்பொழுது ஏற்றுக் கொண்டுள்ள பிறவியும் அவற்றைப் போலவே உலகியலில் குலைந்துபோன வெறும் கூத்தாகப் போய்விடாதபடி, என் இதயத்தில் நடனமிடும் அருட் கூத்தனே, நீ அருள் தருவாயாக.

## 21. நின்னையே நம்பினேன்

822. மனிதரையுந் தேவரையு மற்றெதையு நம்பா
துனதடியே நம்பியிவ ணுற்றேன் — புனித
மனத்தனா யாக்கிபர மார்த்தசிவ ஞான
மெனக்கருளிச் செய்வாய்நீ யென்று.

நீ என்னைப் பரிசுத்த மனமுடையவனாகச் செய்து பரமார்த்த சிவஞானத்தை யெனக்கு அருளிச்செய்வா யென்று உன்னுடைய திருவடிகளையே நம்பி, மற்ற எந்த மனிதரையும் தெய்வங்களையும், மற்றும் இன்னும் எந்த சக்திகளையும் நம்பாமல் உன்னிடம் வந்தடைந்தேன்.

823. நல்லோ ரெனச்சொல்லிக் கொள்ளு(ம்) நரவுலக
ரெல்லோரும் வேண்டா தெனைத்தள்ள — வல்லனாய்
தீனபந்து வானநின் சேவடியே நம்பிநிற்கு
மீன னெனையருள்வா யேற்று.

இம் மனித வுலகில் உள்ளவர்களுள் தன்னை மிக உயர்ந்த நல்லவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் எல்லா மக்களும் என்னை வேண்டாம் என்று ஒதுக்கவே, எல்லாம் வல்லவனாயும் தீனபந்துவாயுமுள்ள உன்னுடைய திருவடி களையே நம்பி வந்துநிற்கும் அற்பனாகிய என்னை ஏற்றுக் கொண்டு அருள்வாயாக.

824. நம்பினே னெந்தாய் நலந்தருமுன் பாதமல
ரெம்பிழைமன் னித்து மினிப்பிழைசெய் — வம்புமனஞ்
செய்ய விழையாத் திருப்ப முறவைத்தும்
மெய்யுதவி செய்யுமென்றே மேவு.

என் தந்தையே! நன்மையே செய்கின்றஉன் பாதமலர்கள் என் குற்றங்களை யெல்லாம் மன்னித்தும், குற்றம் புரியும் என் குறும்பு மனமானது இனி அக் குற்றங்களைச் செய்ய விரும்பாமல் திருந்த வைத்தும், மெய்யுதவி செய்யும் என்றே நம்பினேன். அவ்வாறே செய்தருள்க.

825. பெருங்கவலை கொண்ட பெருமானீ யென்பால்
வருங்கறைகள் யாவையுமே மாற்ற — அரும்பெருநின்

னல்ல வருட்டுணையே நம்பியுயிர் வாழ்கின்றே
னில்லைமற் றொன்று மெனக்கு.

என்னிடம் உண்டாகும் கொடிய குற்றங்கள் எல்லா வற்றையும் நீக்கியருள வேண்டும் என்று பெருங்கவலை கொண்ட பெருமான் நீ ஒருவனே. அத்தகைய உனது அரிய பெரிய நல்ல அருள் துணையையே நம்பி நான் உயிர் வாழ்கின்றேன். நான் நம்பத்தக்கதாய் வேறு யாதொன்றும் எனக்கில்லை.

826. உன்னாற்றா னுய்வென் றுறுதி யளித்தோயை
யெந்நாளு நம்பி யிருக்கின்றேன் — மன்னா
ரமண வடிவகுரு நாதவினி யென்று
மிமையும் பிரியே லெனை.

எனக்கு உய்வு வேண்டுமென்றால், அது உன்னால்தான் நடந்தேறப் போகின்றது என்ற உறுதியளித்தவனாகிய உன்னையே நான் எந்நாளும் நம்பியிருக்கின்றேன். அருளரசே, ஸ்ரீ ரமண வடிவம் எடுத்து வந்துள்ள என் குரு நாதனே, நீ என்னை இனி என்றும் இமையளவும் பிரியாதிருப்பாயாக.

827. உன்னடிமைப் பேறுறுவார்க் கொவ்வுநெறி யொன்றேனு
மன்னுகிலா வேழை மதியினே — னென்னசெய்வேன்
பேரரு ளாளப் பெருந்தகையே நின்கருணைச்
சீரினையே நம்பியுள்ளேன் செய்.

அடைவதற்கரிய உன் அடிமைப் பேற்றை அடைவோர் களுக்கு அவசியமாக இருக்க வேண்டிய ஒழுக்கங்கள் ஒன்றுகூட இல்லாத ஏழை மதியினனாகிய நான் என்ன செய்வேன்? பேரருளாளப் பெருந்தகையே, உன்னுடைய அவ்வியாஜ கருணைச் சிறப்பை நம்பியே நான் இருக்கின்றேன்: நீ அருள் செய்க.

828. எப்படியு மென்னை யிரட்சிப்பா யென்றுநம்பிக்
கைப்படியக் கூப்பிக் கரைந்தழுது — மிப்படியே
சற்றுமிரங் காது சதிசெய்தா லேழையெனக்
குற்றிடுவ தென்னோ வுரை.

நீ எப்படியாவது என்னைக் காப்பாற்றிவிடுவாய் என்று நம்பி இரு கரங்களையும் சேர்த்துக் குவித்து, உன் திருமுன்னர் மனம் கரைந்து அழுது பிரார்த்தித்தும், நீ இப்படியே கொஞ்சமும் இரங்காமல் சதி செய்தால், ஏழையாகிய எனக்கு என்ன நேரப் போகின்றதோ, சொல்க.

829. மனிதராற் பன்முறையும் வஞ்சிக்கப் பட்டு
நனியனுப வம்பெற்றோ னானே — யுனதிடமு
மக்கதியே யுற்றா லடியே னடைவதினி
யெக்கதியோ நீயே யியம்பு.

மனிதர்களால் பலமுறையும் ஏமாற்றப்பட்ட அனுபவம் உடையவன் நான். உன்னிடமும் எனக்கு அதே கதி தான் கிடைக்கு மென்றால், அடியேன் இனி அடையப்போகும் நிலை எதுவோ? நீயே சொல்க.

830. ரமணகுரு வல்லபத்தி னம்பிக்கை வைத்தே
யமநியம மேதுமியற் றாமல் — சுமையிருளாம்
வெம்பவத்தி னின்றும் விடுதலைநீ யீவையென
விம்பருளே னெந்தா யிரங்கு.

ஸ்ரீ ரமண சற்குருவே, உன்னுடைய அருட் சக்தியே எனக்காக யாவும் செய்யும் என்ற நம்பிக்கை கொண்டே, நான் யம நியமமாகிய சாதனைகள் எதுவும் செய்யாமல் அடர்ந்த அஞ்ஞான இருளாகிய ஜனன மரணத்தினின்றும் நீயே எனக்கு விடுதலை கொடுத்துவிடுவாய் என்று நம்பி இங்கு வாழ்ந்திருக்கின்றேன். எந்தையே, நீ இரங்குவாயாக.

831. எவ்வாறு(ம்) நீகை விடாயென் றிருக்கின்றேன்
செவ்வா றெனைத்திருத்துஞ் சீரமணா — ஒவ்வாத
சொற்செயலுஞ் சிந்தனையுந் தோயா தெனையுன்கீழ்
நிற்கவைப்பாய் பேரருளா னீ.

தகுந்த நல்வழியில் என்னைத் திருத்தும் ஸ்ரீ ரமணா, நீ எப்படியும் என்னைக் கைவிட மாட்டாய் என்றே இருக்கின்றேன். ஆகையால், உனக்குச் சம்மதமில்லாத எந்தச் சொல்லும் செயலும் எண்ணமும் எனக்கு உண்டாகாதபடி, என்னை உன் அருளாட்சிக்குக் கீழ் அடங்கி நிற்கும்படி உன் பேரருளால் நீயே செய்தருள்க[57].

832. நம்பிக்கை வைத்து ரமண திருவடியே
கும்பிட்டு வாழுங் கொடியேற்குத் — தம்பற்றே
தந்தயலைச் சாராத் தவமூட்டி நின்னடியே
வந்தடையச் செய்வாய் வலிந்து.

ஸ்ரீ ரமண திருவடிகளிலேயே நம்பிக்கை வைத்து அவற்றையே கும்பிட்டு வாழுங் கொடியவனாகிய எனக்கு அந்தத் திருவடிகளிலேயே பற்றளித்து, மற்றவற்றைச் சாராது இருக்கும் தவத்தை மூட்டி, அந்த உனது திருவடிகளையே நான் வந்து அடையுமாறு நீ வலிந்து செய்தருள்வாயாக.

833. பன்னரிய நெஞ்சின் பழிபாவ மெல்லாம்போ
யுன்னருளா லோர்நாளி லுய்யுமென்றே — யின்னுமின்னுந்
தேறியுயிர் வாழுமுன்றன் சேயேனம் பிக்கைக்கோ
ரூறுவரா துன்னருட்கோ லோச்சு.

என் மனத்திலுள்ள சொல்ல முடியாத பழி பாவங்களெல்லாம் உன் அருளால் ஒரு நாள் நீங்கி அந்த மனம் உய்வடையும் என்று நம்பி இன்னும் இன்னும் உள்ளம் தேறி உயிர்வாழ்கின்றேன். அத்தகைய உன் பிள்ளையின் நம்பிக்கைக்கு ஒரு கேடும் வராதபடி உன்னுடைய அருட் செங்கோலைச் செலுத்துவாயாக.

## 22. கைவிடேல்

834. பத்தியின்மை கண்டஞ்சிப் பற்பலகா னெஞ்சயர்ந்து
[58]சித்தியெனும் பேச்சேயிச் சென்மத்தி — லத்தமித்து
விட்டதோ வென்று வியாகூல முற்றேன்கை
விட்டனையோ நீயும் வெறுத்து.

என் உள்ளத்தில் பக்தியில்லாததைக் கண்டு அஞ்சி, பலமுறை உள்ளமுடைந்து, இந்த ஜன்மத்தில் ஆன்ம சித்தி யென்னும் பேச்சே அஸ்தமித்துவிட்டதோ என்று கருதி மிகுந்த துக்கமுற்றேன். நீயும் என்னை வெறுத்துக் கைவிட்டு விட்டாயோ?

---

[57] 217வது பாடலுடன் ஒத்து நோக்குக.

[58] 'சித்தி' = ஆன்மசித்தியாகிய ஞானம்.

835. கொள்ளும் பதத்திற் குழைந்தழுது கெஞ்சியவென்
னுள்ளமிக வேங்கி யுடைந்தயரத் — தள்ளுவதோ
வல்லான் கருணை வழக்க மெனக்குன்னா
லெல்லாஞ் செயற்கூடு மே.

எத்தகையோரையும் ஏற்றுக்கொள்கின்ற உனது திருவடிகளில் குழைந்து அழுது கெஞ்சிய என் உள்ளம் மிகவும் ஏக்கமுற்று உடைந்து தளர்ந்து போகும்படி தள்ளி விடுவது தான் எல்லாம்வல்லவனாகிய உன் கருணைக்கு வழக்கமோ? ஆனால் எனக்கு எல்லாவற்றையும் செய்தருள உன்னால் முடியுமே.

836. செய்யாத மாதவமுந் தீராவென் புன்குணமு
மையாநீ யெண்ணி யகலாதே — கையாலென்
சென்னிமிசைத் தீண்டித் திருவருளைப் பாய்ச்சியெனை
யுன்னிடமே வைத்துள் ளுறை.

நான் செய்து முடிக்காத நல்ல தவத்தையும், நான் விலக்கி யொழிக்காத அற்ப குணங்களையும் கருதிப் பார்த்து, ஐயனே, நீ என்னை விட்டு அகலாதே. உன் அருட்கரங்களால் என் சிரத்தைத் தீண்டி, உன் திருவருளை என்னுள் பாய்ச்சி, என்னை எப்பொழுதும் உன்னிடமே இருக்க வைத்து, நீயும் என் உள்ளத்திலேயே உறைவாயாக.

837. கண்ணிழந்து காலூன மாகிக் கடும்பசியோ
டுண்ணவொன்று மின்றி யொதுங்கவுமோர் — தண்ணிழலுங்
கிட்டா துளவிக் கிறிபிடித் தேனைக்கை
விட்டாலென் னாவேன் விளம்பு.

கண்களும் குருடாகி, கால்களும் ஊனமாகி, பசியும் அதிகரித்து, உண்பதற்கு உணவொன்று மில்லாமல், ஒதுங்குவதற்கு ஒரு குளிர்ந்த நிழலுங்கூட கிடைக்காமல் உள்ள ஒரு மனிதனைப் போன்று துன்பத்திற் குள்ளாகியுள்ள இந்தப் பைத்தியக்காரனாகிய என்னை நீ கைவிட்டால்,என்ன கதியாவேன்? சொல்வாயாக[59].

838. கள்ளமனங் காட்டுங் கதியெல்லா(ம்) நல்லதெனத்
துள்ளி யெழுந்து தொடர்ந்ததனாற் — றள்ளரிய
துட்டசங் கற்பமகஞ் சூழ்ந்தேனை நின்னருளும்
விட்டுவிட்டா லேதுகதி வேறு.

வஞ்சகமான இந்த மனம் காட்டிக் கொடுக்கின்ற உலக சுகப் பாதைகளை யெல்லாம் நல்லவை என்று எண்ணி, அவற்றில் ஆசை மிகுந்து துள்ளி யெழுந்து, அவற்றையே பின்பற்றிய காரணத்தால் இப்போது விலக்க முடியாத பல துஷ்ட சங்கற்பங்களை உள்ளத்தில் குவித்துவிட்டேன். அப்படிப்பட்ட என்னை உன்னுடைய திருவருளும் கைவிட்டு விட்டால், எனக்கு வேறு கதி ஏது?

839. ஓரணுவுஞ் சுத்தமிலா வுள்ளத்தே னையொதுக்கக்
காரண(ம்)நீ பல்கோடிக் காட்டலாம் — சீரமணா
அவ்வியா ஜக்கருணை யாளனீ யல்லவோ
வவ்வியல்பா லென்னைக்காப் பாற்று.

ஓர் அணுவளவுகூட சுத்தமில்லாத மனத்தையுடைய வனாகிய என்னை ஒதுக்குவதற்கு நீ பல கோடி காரணங்களைக் காட்ட முடியும். ஆயினும், ஸ்ரீ ரமணா, நீ காரணம் வேண்டாக் கருணையாளனல்லவா? அந்த உனது இயல்பால் என்னைக் காப்பாற்றுவாயாக.

[59] 762வது பாடலுடன் ஒத்து நோக்குக.

840. அசத்தா முலக மனைத்தும் விழுங்கி
நிசத்தசிவ மோனமா நிற்கும் — விசித்திரனே
சென்னிக் கரங்கூப்பிச் சேவடியில் வீழ்ந்திருக்கு
மென்னைப் புறந்தள் ளிடேல்.

அசத்தாகிய ( நிஜ இருப்பில்லாத) இப் பிரபஞ்சம் முழுவதையும் தன் உண்மை இருப்பின் விளக்கத்தால் விழுங்கிவிட்டு நிசப்தமான மோன சிவ மலையாய் ஓங்கி நிற்கும் விசித்திர சொரூபனே! தலைமேல் இரு கரங்களையுங் கூப்பிக்கொண்டு, உனது சேவடியில் வீழ்ந்து கிடக்கும் என்னை விலக்கித் தள்ளாதே.

841. உனையிரந்து கேட்க வுரிமை வறுமை
யெனவிரண்டு முள்ள வெளியேன் — றனைவெருண்டு
தள்ளா தருள்வாயென் சற்குருவா யுன்னையே
கொள்ளாநின் றேனைக் குறித்து.

உன்னிடம் யாசித்துக் கேட்டுப் பெறுவதற்கு உரிமையும் வறுமையும் ஆகிய இரு தகுதிகளையும் இவ் வெளியேன் பெற்றிருக்கின்றேன். உன்னையே சற்குருவாகக் கொண்டுள்ள அத்தகைய என்னைக் கோபித்துத் தள்ளிவிடாமல் குறிப்பிட்டு அருள் செய்வாயாக.

842. கூறித் துதிதமிழிற் கூவியுன்பாற் கெஞ்சுவதின்
வேறுவழி மேவியறி யாதவெனைச் — சீறி
யகற்றுவையே லண்ணா மலைரமணா வந்தோ
மிகத்துடிப்பேன் வேதனையால் வெந்து.

ஸ்ரீ அண்ணாமலை ரமணா, தமிழ்ப் பாடல்களைப் பாடி உன்னைத் துதித்துக் கூவி உன்னிடமே கெஞ்சுவதைத் தவிர வேறு யாதொரு சாதனையும், செய்தறியாத என்னை நீ கோபித்து அகற்றுவா யேயானால், அந்தோ, மன வேதனையால் வெந்து மிகவும் துடிப்பேன்.

843. தன்னிழப்பு வேண்டா தகந்தையாற் சத்திபெற
[60]வுன்னியவ ருன்னைவிடுத் தோடவிட்டா — யென்னினு
மென்னதுநா னின்றி யிறந்தொழிய வேண்டுவன்யா
னென்னையவர் போற்கை விடேல்.

பண்டை ஸ்ரீ ரமண பக்தர்கள் என்று சொல்லப்படுவோருள் சிலர் தன்னை யிழப்பதாகிய அகந்தை நாசத்தை வேண்டாமல், அவ் வகந்தையை வைத்துக் கொண்டே அதன் முயற்சியால் பலவித சக்திகளையும் சித்திகளையும் பெற விரும்பியதால், உன்னை விட்டு அவர்கள் ஓடும்படி செய்து விட்டாய். ஆனால் யானோ 'நான்', 'எனது' என்ற அகந்தை மமதைகள் இரண்டும் அடியோடு இறந்தொழிய வேண்டுகின்றேன். ஆகையால் என்னை அவர்களைப் போலக் கைவிடாதே.

844. யாதோர் சுதந்திரமு மாற்றலுமில் லாதவென்றன்
மீதோர் குறையால் வெறுப்பையேல் — நாதா
கரையேறு கின்றநற் காலமெக் கால
முரையா யருள்வா யுடன்.

எந்தவிதமான சுதந்திரமும் ஆற்றலுமில்லாத என்மீது ஏதாவது ஒரு குறையைச் சொல்லி நீ என்னை வெறுப்பாயாகில், குருநாதா, நான் கரையேறக் கூடிய நல்ல காலம் எப்போது வரும்? சொல்க. (வராது.) ஆகையால் இப்பொழுதே, உடனேயே அருள் செய்வாயாக.

---

[60]'உன்னியவர்': பண்டை ரமண பக்தர்கள் என்று சொல்லப்படுவோருள் சிலர். அவர்கள் சித்தி சக்திகளைப் பெற ஆசைப்பட்டு, அதனால் ஸ்ரீ பகவானிடம் மனம் வேறுபட்டு விலகிச் சென்று விட்டதைக் குறிக்கின்றது இச் செய்யுள். இந் நூலின் 963வது பாடலையும் இங்கு வாசித்துணர்க.

845. யாதோர் நிபந்தனையற் றானசர ணாகதனென்
மீதோர் வெறுப்பால் விடுவையேல் — நாதாமற்
றெவ்வழியு மில்லை யெனக்கபய மாதலினீ
கைவிடவே கூடாது காண்.

எவ்வித நிபந்தனையுமின்றி உன்னிடம் சரணடைந்த என்மேல் நீ ஏதாவது ஒரு வெறுப்பைக் கொண்டு கைவிடுவாயானால், குருநாதா, எனக்கு அபயம் கிடைக்க வேறு எந்த ஒரு வழியும் இல்லை. ஆகையால் நீ என்னைக் கைவிடவே கூடாது. இதன் அவசியத்தை நீ கண்டருள் வாயாக.

## 23. வாதாடல்.

846. என்னாயிற் றெந்தா யிணையடியில் வீழ்ந்தழுதென்
னன்னாயென் னப்பாவென் றஞ்சலித்த — புன்னாயே
னானாலு முன்னையே யாசித்த நின்பிள்ளை
ஞானார்த்த வாழ்வி னலம்.

உனது திருவடிகள் இரண்டிலும் வீழ்ந்து அழுது 'என் அன்னையே, என் அப்பனே' என்று கும்பிட்டவனும், அற்ப நாய் போன்றவனாயினும் வேறு யாரிடமும் போகாமல் உன்னிடமே யாசித்தவனுமான உன் பிள்ளையாகிய எனது ஞானார்த்த வாழ்வின் நலன், எந்தையே, என்ன ஆயிற்று?

847. இல்லாத தில்லா திறந்தொழிய வுள்ளநீ
யல்லா லனிய மறியாத — தொல்லியல்பாஞ்
சொந்த சொரூப சுகானு பவமெனக்குத்
[61]தந்தாற்றான் றந்தாய்நீ தாய்.

உண்மையற்ற அகந்தை இருப்பற்று இறந்து ஒழியவும், என்றும் மெய்ப்பொருளாயுள்ள உன்னைத் தவிர வேறு யாதொரு பொருளின் இருப்பும் அறியாததும், எப்போதும் விளங்கும் சொந்த ஆன்ம சொரூபமுமான சுகானுபவத்தை நீ எனக்குக் கொடுத்தால்தான், எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்த தாய் நீ ஆவாய்.

848. என்னிருப்பி லேயே யெழாதிருக்கும் பேராசை
யுன்னிடத்திற் கொள்ளு முயர்பத்தி — யென்னிருப்பி
லேகாக் கிரமும்பே ரிச்சையுந்தந் தாலென்னை
நீகாத்து நிற்றல் நிஜம்.

என் சொந்த இருப்பு நிலையாகிய ஆன்மாவிலேயே மூழ்கி, பிறகு என்றென்றும் அகந்தையாக எழாமல் இருக்க வேண்டும் என்று கொள்ளும் பேராசைதான் உன்னிடத்தில் நான் கொள்ளும் பக்தி வகைகளுக்குள் உயர்ந்ததாகும். அந்த என் சுய இருப்பின்மேல் ஏகாக்கிரமும் அளவு கடந்த பிரியமும் நீ எனக்கு அருளினால்தான், நீ என்னை எப்பொழுதும் காப்பாற்றி நிற்கின்றாய் என்ற தீர்ப்பு நிஜமாகும்.

849. வள்ளலே யுன்னருளால் வாழ்வு துலக்கமுற்று
வொள்ளியோ ரெத்தனைபே ருள்ள(ம்)மகிழ் — வெள்ளக்
கடலா விரிந்து கமழ்கின்ற துண்மை
யடியேனுங் கொள்ள வருள்.

வள்ளலே, உன்னுடைய காரணமில்லா அருட்பெருங்கருணையால் ஆன்ம வாழ்வு விளக்கமுற்ற எத்தனையோ ஞானிகளுடைய உள்ளமெல்லாம் ஆனந்த வெள்ளக் கடலாக விரிந்து அருள் மணம் கமழ்கின்றன. இது உண்மையே யல்லவா? ஆகையால் அடியேனும் அவ்வானந்தக் கடலை யனுபவிக்க அருள் செய்வாயாக.

[61] 'தந்தால்தந் தாய்நீயென் றாய்' எனவும் பாடம். இதன் பொருள்: "...கொடுத்தால்தான், தந்தையே, நீ என் தாயும் ஆவாய்."

850. கண்ணார்ந்த நல்லோர் கடிதுன் கழல்பணிந்து
மண்ணார்ந்த தேகமதி மாய்ந்துய்ந்து — பண்ணார்ந்த
நற்றமிழாற் போற்றிசெய நானொருவன் மட்டுமழ
லுற்றிடுத னன்றோ வுரை.

சிறந்த அறிவுடைய நல்லவர்கள் உன் திருவடிகளில் பணிந்து, 'மண்ணாகும் தேகமே நான்' என்ற அகந்தை மதிமாய்ந்து வெகு விரைவில் உய்வு அடைந்து, பண் இசைச் சுவை மலிந்த நல்ல தமிழால் உன்னைப் போற்றி செய்யவும், நான் ஒருவன் மட்டும் அவ்வாறின்றி அழுதுகொண்டிருக்கவும், நீ செய்வது நன்றோ? சொல்க.

851. தெள்ளிய சிந்தைத் திறலோ ரிடையறா
தள்ளிப் பருகியா னந்தத்தாற் — றுள்ளித்
திளைத்திருக்கு முன்கமலச் சேவடித்தே னூற்றைக்
களைத்தலுத்தேற் குங்கிடைக்கக் காட்டு.

தெளிந்த புத்தியும் சக்தியும் உடைய பெரியோர்கள் ஓயாமல் உன் பாத தாமரையாகிய தேனூற்றை அள்ளிப் பருகி அவ் வானந்த லஹரியால் துள்ளி அதிலேயே திளைத்திருக்கின்றனர். உன்னிடம் கேட்டுக் கேட்டுக் களைத்து அலுத்துப்போயிருக்கின்ற எனக்கும் கிடைக்கும்படி அதைக் காட்டித் தருவாயாக.

852. பற்றகல வைக்கும் பரஞான மெய்க்கல்வி
கற்றவர்க ளெல்லாங் களிப்பெய்த — பெற்றநின்
பிள்ளைநான் மட்டுமகப் பேய்வசமாச் சீரழியக்
கள்ளமேன் கொண்டாய் கழறு.

எல்லாப் பற்றுக்களையும் அழிக்கக் கூடிய ஆன்ம ஞான மெய்க்கல்வியை உன்னிடம் கற்றுக்கொண்டவர்கள் எல்லாம் பேரின்பம் உற்றிருக்கவும், நீ பெற்ற உன் பிள்ளையாகிய நான் மட்டும் அகந்தைப் பேயின் வசப்பட்டுச் சீரழியவும், நீ ஏன் இப்படி ஒரு வஞ்சக நெஞ்சங் கொண்டாய்? சொல்க.

853. புலர்ந்த சதோதயமாப் பொங்குமுன் ஞான
நலங்கண்டார் துய்க்குமா னந்தம் — உலர்ந்து
மணம்வண்ண மில்லா மலராய் வதங்குங்
குணமில்லே னுக்குங் கொடு.

நூறு சூரியர்கள் உதித்து ஒன்றாய் வந்தது போல தம்முள் பொங்கி எழுகின்ற உன்னுடைய ஞான மகிமையை அனுபவித்துக் கண்ட பெரியோர்கள் எந்தப் பேரானந்தத்தை அனுபவிக்கின்றார்களோ, அதை வாசனையோ அழகோ இல்லாமல் தோன்றி வெய்யிலில் காய்ந்து வதங்கும் ஒரு குணமில்லாத மலரைப் போல் இருக்கும் எனக்கும் அனுபவிக்கக் கொடுத்தருள்வாயாக.

854. பொல்லாருண் மிக்கப் புரையேன் மனத்திருக்குந்
தொல்லான வாசனைபோய் துப்பறிவா — மெல்லாக்கி
னல்லா லுனையெல்லாம் வல்லா னெனப்பெரியோர்
சொல்ல லுபசாரச் சொல்.

கொடியவர்கள் அனைவரையும்விட மிகக் கொடிய குணமுடைய என் மனத்திலிருக்கும் பண்டை வாசனைகளெல்லாம் அழிந்துபோய் பரிசுத்த ஞான சூரியனாக என்னை நீ ஆக்கினாலொழிய, உன்னைப் பெரியவர்கள் 'எல்லாம் வல்லவன்' என்று போற்றிய தெல்லாம் உண்மையற்ற வெறும் உபசாரச் சொல்லே யாகிவிடும்.

855. கண்வாய்மெய் நாசிசெவி காட்டிக் கொடுப்பதெலா
முண்மீந்த சித்தத் [62]துருவடிவென் — றெண்ணாது
மெய்யுலகா வெண்ணி விரும்பி வெறுத்தழியச்
செய்யுமிதோ நின்னருளின் றீர்ப்பு.

கண், வாய், மெய், நாசி, செவி ஆகிய பஞ்சேந்திரியங்கள் காட்டிக் கொடுக்கும் உலகத் தோற்றமானது தன்னுள்ளே சித்தத்தில் வெகு காலமாகச் சேர்த்து வைக்கப்பட்டிருந்த வாசனைகளின் ஸ்தூல வடிவே என்று அறிந்துகொள்ளாமல், உண்மையாகவே வெளியில் இருக்கும் உலகம் என்று எண்ணி, அவற்றை விரும்பியும் வெறுத்தும் நான் அழியும்படிச் செய்வது தானோ நீ உன் அருளால் எனக்கு அளித்த அறிவுத் தீர்ப்பாகும்?

856. குருவருளில் லாததுகை கூடாதென் றுன்றன்
றிருமுகத்தி னின்றுமொரு செஞ்சொல் — வருவதுண்டே
அஃதன்றோ காரணமென் னாற்றாத் துயரத்திற்
கெஃதுண்டு வேறொன் றிசை.

'ஆன்ம ஞானமானது ஒருவனுக்குக் குருவருள் இல்லாமல் கைகூடாது' என்ற ஓர் உண்மை உரையை நீ அடிக்கடி திருவாய்மலர்ந்தருளியது உண்டல்லவா? என்னுடைய தீராத துயரத்திற்குக் காரணம் குருவருள் இல்லாமைதான் அல்லவா? அதைத் தவிர வேறு என்ன காரணம் உண்டு? சொல்க.

857. குருகிருபை யின்றியொன்றுங் கூடாதென் றோர்ந்துன்
றிருவடிக்கே யோலமிட்டுச் செப்பி — வருமெனது
தீனமனத் தன்மை தெரியாதோ சீரமண
ஞானகுரு வேநீ நவில்.

'குருவருளின்றி யாதொரு ஆன்மீக முன்னேற்றமுங் கைகூடாது' என்று அறிந்து, என் சற்குருவாகிய உன்னுடைய திருவடிகளிலேயே எப்பொழுதும் ஓலமிட்டுப் பிரார்த்தித்து வருகின்ற என் மனத்தின் தீனத் தன்மை உனக்குத் தெரியாதோ? ஸ்ரீ ரமண ஞான குருவே, நீயே சொல்வாயாக.

858. பாயா தகத்தே படிந்தயலைப் பாராம
லோயாத வுள்ளின்ப முற்றிருக்க — நேயா
வெனக்குதவ லாகாதோ வென்னோ விதனா
லுனக்குக் குறைவதுதா னோது.

என் அன்புள்ள ஆண்டவனே, நான் ஆன்மாவில் பதிந்து, வெளிமுகப் பட்டு பிறவற்றைப் பார்க்காமல், இடைவிடாத உண்முக இன்பம் அனுபவித்திருக்கும்படி நீ எனக்கு உதவக் கூடாதோ? அவ்வாறு உதவுவதனால், உனக்கு என்ன குறைந்து போய்விடும்? சொல்க.

859. யானொருவ னொன்றி யழிந்துன் னருளடியிற்
போனதினா லேகுறைந்து போவதென்னே — வானகிலச்
சிட்டித் திதிவிழையுஞ் சீவரில ரோவுனக்கு
நட்டமென்ன வென்னழிவி னால்.

அகந்தை வடிவான நான் ஒருவன் உன் திருவடிகளில் ஒன்றாய்க் கலந்து அழிந்துபோய்விட்டால், உனக்குக் குறைந்துபோகக் கூடியது என்ன? (நான் இல்லாவிட்டாலும்) வானுலக பூவுலகங்களில் தாம் படைக்கப்பட்டு வாழ்ந்திருக்க வேண்டும் என்று விரும்புகின்ற எண்ணற்ற கோடிக்கணக்கான ஜீவர்கள் உனக்கு இல்லையோ? நான் ஒருவன் மட்டும் அழிந்துபோவதனால், உனக்கு என்ன நஷ்டம் உண்டாகிவிடும்?

[62] 'உருவடிவு' = பேருருவம், ஸ்தூல உருவம் (உருத்தல் = மிகுதல்)

860. உன்னைநினைந் தென்னை யுதறி யகமகமாந்
தன்னைநினை யாதுநினைந் தாழ்ந்திருக்க — வென்னை
யிருத்தவல்ல துன்னருளோ வென்மனமோ சற்றும்
பொருத்தமில்லை நின்சாக்குப் போக்கு.

உன்னையே தியானித்து, அகந்தை வடிவாகிய என்னை முற்றிலும் துறந்து, 'நான் நானே' என விளங்கும் ஆன்ம சொரூபத்தையே நினைப்பற்று நாடி, அதிலேயே ஆழ்ந்திருக்கும்படி என்னை இருத்தி வைக்கக் கூடிய பெரும் சக்தி உன்னுடைய திருவருளா அல்லது என்னுடைய மனமா? (அது உன்னுடைய திருவருட் சக்தியே யாவதால், நீ அவ்வாறு என்னை இருத்தி வைக்காமல்) சாக்குப் போக்குச் சொல்லி வருவது கொஞ்சமும் பொருத்தமில்லை.

861. என்னிடத்திற் புத்திவன்மை யெவ்வளவீந் துள்ளாயென்
றுன்னடிக ணன்றா யுணருமே — சொன்னபடி
வாழும் வழியோ வலிவோ விலேனாயின்
வீழும் பழியுன்றன் மேல்.

நீ உன்னுடைய அருளால் என்னிடத்தில் எவ்வளவு புத்தி வலிமை கொடுத்து வைத்திருக்கிறாய் என்பதை உன்னுடைய திருவடிகளே நன்கு அறியுமே. உண்மை இவ்வாறாயிருக்க, நீ உபதேசித்தபடியே சிறிதும் தவறாமல் உத்தமமாக வாழும் வழியோ வலிமையோ இல்லாமல் நான் சீர்கெடுவேனாயின், (அதற்கு வேண்டிய புத்தி வலிமையை நீ எனக்கு முன்பே கொடுத்து வைக்காத காரணத்தால்) நான் சீர்கேடடைந்த பழி உன்மேல்தான் விழும்.

862. இருக்குமுன்னில் யானென் றெழும்புமெனை மீட்குஞ்
சுருக்கவழி நீயறியா தொன்றோ — செருக்கறுமெய்ஞ்
ஞானாத் திரந்தரித்த நாதரம ணாநான்வீ
ணானாற் பழியுனக்கே யாம்.

'நான் இவ் வுடல்' என்ற அகந்தையாகி எழும்பும் என்னை ஆன்மாவாக இருக்கும் உன்னில் தடுத்து மீட்டு எடுக்கும் சுருக்கமான வழி உனக்குத் தெரியாத ஒன்றா? அகந்தைச் செருக்கை அழிக்கின்ற மெய்ஞ்ஞான அஸ்திரம் தரித்த ஸ்ரீ ரமண நாதா, நான் வீணானால் அந்தப் பழி உனக்கே யாகும்.

863. ஏற்பட் டிருக்கு மிடைஞ்சலெது வேனுமுனக்
காட்பட் டிருக்கு மடியேனுள் — மேற்பட்
டினியுமது தீரா திருப்பாயேற் பொல்லா
வனியாய மன்றோ வருள்.

உனக்கு ஆட்பட்டிருக்கும் இவ் வடியேனாகிய என்னுள் ஆன்ம ஞானத்திற்குத் தடையாக ஏற்பட்டிருக்கும் இடைஞ்சல் எதுவாக இருந்தாலும் சரி, இனிமேற்பட்டு நீயும் அதனைத் தீர்த்து வைக்காம லிருப்பாயானால், அது பொல்லாத அநியாய மல்லவா? ஆகையால் அருள் செய்க.

864. அருளுக் கெதிராவோ ராணை யிடவெப்
பொருளுண் டெனைநீ புணரத் — திருவுள்ளம்
பற்றுவையே லஃது பலிக்காமற் போமோநீ
[63]மற்றினியேன் கொள்வாய் மலைப்பு.

[63] 'மற்றினியேன் சொல்வாய் மறுப்பு' எனவும் பாடம். இதன் பொருள்: "...உண்மை இவ்வாறிருக்க, நீ ஏன் மறுப்பு சொல்ல வேண்டும்?"

நான் காப்பாற்றப்பட வேண்டுமென்று தீர்மானிக்கும் உன்னுடைய திருவருளுக்கு எதிராக 'வேண்டாம்' என்று கட்டளை பிறப்பிக்க வேறு எந்தப் பொருள் உண்டு? நீ என்னைச் சேரத் திருவுள்ளம் கொள்வாயானால், அது பலிக்காமற் போகுமோ? உண்மை இவ்வாறிருக்க, நீ ஏன் மலைப்பு கொள்கிறாய்?

865. அகந்தை விடத்தினுக் கஞ்சு(ம்)நா னந்த
வகந்தையின் வேறோ அலனேல் — அகந்தையே
தன்னழிவுக் காவுன் றயவைநா டும்போதிங்
கென்னதடை சொல்வா யினி.

அகந்தையின் விஷசமான தோஷங்களுக்குப் பயப்படுகின்ற நான் அந்த அகந்தையைவிட வேறொருவனா? இல்லை. அந்த அகந்தையேதான் நான் என்றால், தான் அழிக்கப் படுவதற்காக அந்த அகந்தையே உன் அருளை நாடும் பொழுது, நீ இனிமேல் என்ன தடை சொல்ல முடியும்?

866. எந்நினைவு மற்ற வியல்பா மிருப்புணர்வி
லென்னையிருத் தாதகுறை யென்னவோ — வுன்னைவிட
வெக்குறையும் போக்கியுட னென்னைரட் சிக்கவல்ல
மிக்கவரார் நீசொல் விடை.

யாதொரு நினைப்புமற்று இயல்பாகவே விளங்கும் இருப்புணர்வில் (ஆன்மாவில்) நீ என்னை இருத்தாத குறை எது பற்றியோ? அது எத்தகைய குறையாயிருந்தாலும், அதை நீக்கி உடனே என்னை ரக்ஷிக்கவல்ல மிக்க சக்திவாய்ந்தவர் உன்னைவிட யார் இருக்கின்றார்கள்? நீயே விடை சொல்க.

867. சொன்னது கேட்குஞ் சுயவலிவில் லாவடியே
னென்னதான் கேட்டு மிரங்காயேன் — முன்னர்
வதுவினையோ பைத்தியத்தின் மாற்றமோ சொல்வா
யெதுநடப்ப திவ்வா றெனின்.

நீ விதித்த நெறிகளைக் கேட்டு அவ்வாறே நடக்கக் கூடிய சுயவலிமை கொஞ்சமும் இல்லாத அடியேன் உன்னிடம் எவ்வளவு பிரார்த்தித்தும், நீ இரங்காமல் இவ்வாறே காலம் தாழ்க்கில், திருமணம் முதலிலாவதா, பைத்தியம் முதலில் தெளிவதா? (அதாவது, நீ என்மேல்இரங்கி அருள் செய்தாலன்றி, நீ சொன்னவாறு என்னால் நடக்க இயலாது; ஆனால் நான் அவ்வாறு நடந்தாலன்றி, நீ அருள்செய்ய மாட்டாய்.) இவ்வாறெனின், இவ் விரண்டில் எது முதலில் நடக்க வேண்டியது? நீயே சொல்வாயாக.

868. தன்சொரூபங் காணா வரையிற் சகமயலை
யென்செயினு நீத்த லியலாதால் — முன்செய்யுங்
காரியமென் பாற்பெய் கருணையா(ம்) நின்கடனே
ஓரவென் னுண்மை யுரு.

தன்னுடைய ஆன்ம சொரூபத்தைத் தரிசிக்காத வரையில், என்ன முயற்சி செய்தாலும் உலக மயக்கத்தை விட்டுவிடுவது முடியாததே யாகும். ஆகையால், நான் என் உண்மை சொரூபத்தை உணருவதற்கு முதலில் நடந்தேற வேண்டிய காரியமாவது நீ என்னிடம் கருணை செய்ய வேண்டியதாகிய உன்னுடைய கடமைக் காரியமே யாகும்.

869. தானாய்த் தராத தயாளனோ நீயெனினு(ம்)
நானாய்க்கேட் கின்றேனீ நல்குகவே — ஊனாய்
வழுவாநின் றின்னும் வருபிறவி சேர்க்கு
மெழுவா யிலாத விருப்பு.

கேளாமலேயே அளிக்கும் கிருபைக்கடல் அல்லவா நீ? அப்படி யிருந்தும், நானாகவாவது உன்னை யாசித்துக் கேட்கின்றேன். 'இந்த சரீரமே நான்' என்று உணரும் குற்றத்தைப் புரிந்து, அதனால் மேன்மேலும் பிறவியிலேயே கொண்டுபோய்ச் சேர்க்கின்ற மூல எழுச்சியாகிய அகந்தை அடியோடு இல்லாமற் போகின்ற சுத்த ஆன்ம இருப்புணர்வை இப்பொழுதாவது நீ அருள்வாயாக.

870. சும்மா விருக்கச் சுயமே யுதவுமுனை
யம்மா வருள்கவென வாசித்தும் — பெம்மானே
நின்னருளின் சாயையையு(ம்) நெஞ்சுணர வில்லையோ
பின்னையே னோடுவதப் பேய்.

எதுவுமே கேட்காமல் ஒருவன் சும்மா இருந்தாற்கூட தானாகவே அருளுதவி செய்கின்ற உன்னை[64] 'அம்மா, அருள்க' என்று நான் யாசித்தும், பெருமானே, உன்னுடைய அருளின் நிழலைக்கூட இவ் வற்பனாகிய எனது மனம் உணரவில்லையோ? உணர்ந்திருக்கின்றது என்றால், பிறகு அந்த மனமாகிய பேய் சும்மா இராமல் ஏன் ஓடியலைகின்றது?

871. என்றுமா றாத விருப்பா மெனின்மாற்ற
மின்றி யிருக்கவிய லாததேன் — குன்றுருவாய்
முன்றோன்றி நின்றுபர மோனத்தா லுள்ளொளிர்வித்
தின்றோங்கு மெந்தா யெனக்கு.

அருணாசல வடிவாக என் கண்முன் தோன்றி நின்றுகொண்டும், மேலும் உனது பரமோனத்தால் என் உள்ளத்தில் கதிர்வீசிக்கொண்டும் இன்று ஓங்கி நிற்கும் என் தந்தையே! ஆன்மசொரூபம் முக்காலத்தும் சிறிதும் மாறாமல் இருந்து விளங்குமெனின், நான் அதுவாய் இடைவிடாமலும் சலனமில்லாமலும் இருக்க (நிஷ்டையுற்றிருக்க) முடியாதது ஏனோ?

872. கேட்டலுத்து நெஞ்சங் கெடுமா றுனதடியர்
மாட்டணுவும் வன்மமுற மாட்டாயே — பாட்டுடையா
யுன்னிடமே யோலமிட்டுள் ளோய்ந்தயரு முன்பிள்ளை
யென்னிடமே னிச்சோ தனை.

உன்னுடைய அடியவர்கள் தத்தம் உய்வுக்காக உன் திருவடிகளில் வந்து கெஞ்சிப் பிரார்த்தித்துத் திரும்பத் திரும்பவும் உன் அருளைக் கேட்டு நெஞ்சம் அலுத்துத் தளர்ந்து கெட்டுப் போகும்படி ஒரு சிறிதும் நீ விடமாட்டாயே. மெய்யடியார்களாற் பாடப் பெற்ற அநேக துதிகளை யுடையவனே, உன்னிடத்திலேயே எப்போதும் கூவித் தொழுது ஓலமிட்டு உள்ளம் சோர்வடைந்து நிற்கும் உன் பிள்ளையாகிய என்னிடம் இன்னும் இரங்காமல் இத்தகைய சோதனை ஏனோ?

873. அப்பழுக்கில் லாத வருள்வாழ்வு வாழ்வதற்கே
யிப்பிறவி பெற்ற விளமைதொட்டுன் — பொற்பதத்தைக்
கெஞ்சிப் பணிந்தழுது கேட்டதெலா முன்செவியுட்
கொஞ்சமெனுங் கொண்டிலையோ கூறு.

மனோவாக்குக்காயங்களில் யாதொரு குற்றங் குறையுமில்லாத அருள்வாழ்வு நான் வாழ வேண்டுமென்று தீர்மானித்து, இவ் வுடற் பிறவி பெற்ற இளமைப் பருவத்திலிருந்தே உனது பொற்பாதங்களையே கெஞ்சி வணங்கி அழுது அருளுதவி கேட்டு வந்ததை யெல்லாம் நீ கொஞ்சங்கூட செவிகொள்ளவே யில்லையோ? கூறுக.

---

[64] 'மனோவாக்குக்காயங்களின் செயலற்று ஆன்ம சொரூபமாய் நான் சும்மா இருப்பதற்கு வேண்டியவற்றை யெல்லாம் தானாகவே அருள்செய்து உதவுகின்ற உன்னை...' எனவும் பொருள்படும்.

874. ஆள்விட்டுச் சொல்லி யனுப்புகின்றாய் நின்னருட்கை
வாள்முற்றும் [65]வல்லதென்ற வாய்மையை — நாள்முற்றுங்
கெஞ்சியழு மென்னுள்ளே கீழ்மைவடு வின்னுந்தான்
துஞ்சவில்லை யேவிடைநீ சொல்.

நீ உன்னிடமிருந்து ஒருவரை என்னிடம் அனுப்பி 'என் கையிலுள்ள அருள் வாளாயுதமானது எல்லாம் செய்ய வல்லது; வருந்தாதே' என்ற உண்மைச் செய்தியை சொல்லி யனுப்புகின்றாய். அது சரியே. ஆயினும் நாள் முழுவதும் உன்னைக் கெஞ்சிப் பாடி அழுது கொண்டிருக்கும் என் உள்ளத்தில் நிறைந்திருந்த கேடுகளின் வடுக்கள் இன்னும் மறையவில்லையே. இதற்கு நீ விடை சொல்வாயாக

875. நீயனுப்பும் மெய்யுரையா னெஞ்சஞ் சிறிதளவு
தீயனைய துன்பகன்று தேறுகின்ற — தோயமுற்று
மென்றுன் பெருங்கருணை யெய்துமோ வன்றுவரை
யொன்றும் பயனில்லை யோர்.

இவ்வாறு நீ சொல்லி யனுப்புகின்ற மெய்வசனங்களாகிய அபய வாக்கால் என் மனம் உன்னைப் பிரிந்து நின்று தவிக்கும் தீப் போன்ற தாபத்தினின்றும் சிறிது தேற்றமடைகின்றது. ஆயினும் அப் பிரிவுத் துயரம் முற்றும் ஓயும்படி உனது அருட்பெருங்கருணை என்று என்னை வந்தடையுமோ. அன்றுவரையில் யாதொரு பயனுமில்லையே. அறிந்தருள்க.

876. அன்னியத்தை நாடா தகமா யமர்ந்திருப்ப
தென்னியற்கை யாகிப்பே ரின்பமுற — நின்னருளால்
யான்கிடைக்கப் பெற்றேனே லியாதொன்று மீண்டுமுன்பா
லேன்முறைசெய் வேனோ விசை.

முன்னிலைப் படர்க்கைகளாகத் தோன்றும் அன்னியப் பொருள்களை நாடாமல் தன்னையே நாடி ஆன்மாவாக அமர்ந்திருக்கும் சகஜாத்ம
நிஷ்டை உன் திருவருளால் எனது சுபாவ நிலையாகிப் பேரின்பமே உற்றிருக்கப் பெறுவேனாகில், மீண்டும் உன்னிடம் வேறு எது ஒன்றை வேண்டி முறையிடப்போகின்றேன்? (ஒன்றுமில்லை.) நீயே சொல்க.

877. நின்னருளாற் றீராத நீசமொன்று மில்லையென்ப
தென்னளவின் மெய்யாக் கினையென்றா — லின்னொருகான்
மீண்டு நிரூபிக்க வேண்டியவா றோர்நீச
னியாண்டுமெக் காலு [66]மிரான்.

உன்னுடைய பேரருட்சக்தியால் நீக்கியருள முடியாத நீசத்தன்மை யாதொன்றுமே இல்லை என்பதை என் விஷயத்தில் மெய்யாக்கிக் காட்டிவிடுவாயானால், மீண்டும் ஒருமுறை நீ உன் எல்லாம் வல்ல அருட்சக்தியின் மகிமையை நிரூபித்துக் காட்ட வேண்டிய அவசியத்தை உண்டாக்கும்படி எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் பெரிய நீசன் எவனொருவனும் இருக்கவே மாட்டான்.

878. உதவாக் கரைக்கோ ருதாரணம்வே றின்றி
மிதமிஞ்சும் வீணனெனை மீட்டா — லதுவேநீ
தீனபந்து வென்ற திருநாமம் பூண்டதின்மெய்
யான நிரூபணமீ தாற்று.

---

[65] 'வல்லதென்றுன் வைபவத்தை' எனவும் பாடம்.

[66] 'எழான்' எனவும் பாடம். 'பிறக்கவே மாட்டான்' என்பது இதன் பொருள்

உதவாக்கரை (பயனற்ற) ஜீவர்களுக்குள் யாரும் சமானமாக முடியாதபடி மிதமிஞ்சிய வீணனாகிய என்னை நீ மாயையினின்றும் மீட்டருள்வாயாகில், அதுவே நீ 'தீனபந்து' என்ற திருநாமம் பூண்டதற்கு மெய்யான நிரூபணமாகும். இவ்வாறு நின் பெயரின் உண்மையை நிரூபித்தருள்வாயாக.

879. அரவும் புலியுமே யச்சவைமட் டன்றி
யரவும் புலியு மருண — கிரியிலும்
வந்துன்னை யன்புசெய்த மாண்புரைக்க வல்லேனோ
வெந்தா யெனக்கு மிரங்கு.

நீ நடராஜப் பெருமானாகி அருள் நடனமாடிய சிதம்பரம் பொற்சபையில் பாம்பும் புலியும் (பதஞ்சலியும் வியாக்ரபாதருமான மஹரிஷிகள்) உன்னை நேசித்து நின்றது போலவே, அருணகிரியிலும் நின் ஆதி வாசகாலத்தில் பாம்புகளும் புலிகளுங்கூட உன் பேரருளுக்கு வசமாகி அன்பு கொண்டு பழகி வந்த உன் அருள் மகிமையை நான் கூற வல்லவனோ? என் தந்தையே, கொடிய பிராணிகளையும்விட கொடியவனாகிய எனக்கும் நீ இரங்கி அருள் செய்வாயாக.

880. என்னைக்கா ணாய்போ லிருப்பாயே லெள்ளளவு
முன்னைக்கா ணாத வுலகினன்போல் — தன்னைத்தான்
மேன்மேலுங் கேடாக்கி வீழ்வேனே நீயருள்க
வான்மாப ராதமுறா வாறு.

நீ என்மேல் பாராமுகத்துடன் (முன் பின் தெரியாத வேற்றான் ஒருவனைப் பார்ப்பது போல்) இருப்பாயாகில், அடைதற்கரிய சற்குரு தரிசனத்தை உன் கருணையால் நீ எனக்கு அளித்திருந்துங்கூட, உன் தரிசன பாக்கியமே பெறாத ஒரு மருட்டு இலௌகிகனைவிடக் கேடானவனைப் போலவே சீரழிந்து, என்னை நானே மேலுங் கேடாக்கிக் கொண்டு அழிந்துபோவேனே. இவ்வாறு மிகக் கொடிய ஆன்மாபராத பாபத்திற்கு நான் ஆளாகாதபடி நீ என்னைக் காத்தருள்வாயாக.

881. பெம்மானுன் னிச்சைப் பிரகாரம் விட்டடியேன்
சும்மா விருக்கவருள் சூழாயோ — தம்மா
லியலாமை கூறி யிரந்தழூஉம் யானுன்
னயலானோ பிள்ளையன்றோ வாற்று.

பெருமானே, உனது திருவருளிச்சைப்படியே யாவும் நிகழட்டும் என்று விட்டுவிட்டு அடியேன் மனோவாக்குக் காயங்கள் மூன்றும் ஓய்ந்து சும்மா இருக்கும்படி நீ அருள் செய்ய மாட்டாயோ? இது என்னால் இயலவில்லையே என்று உன்னிடமே தெரிவித்து அருளுதவி நாடி யாசித்து அழுது நிற்கும் நான் உனக்கு வேற்றானோ? உன் பிள்ளையே யல்லவா? ஆகையால், நான் சம்பூரண சரணாகதி முற்றச் செய்ய அருளுதவி புரிவாயாக.

882. நீதா னருள்புரிய வேண்டுமிதை நின்னோடு
வாதாட வாய்மதிக்கு வன்மையிலேன் — றாதா
வருணா சலரமணா அன்றென்னை யாண்ட
குருநா யகமே கொடு.

அருணாசலரமணா, அருட்கொடை வள்ளலே, அன்று என்னை ஆட்கொண்ட குருநாயகனே, நீதான் எனக்கு அருள்புரிய வேண்டும். இவ் விஷயத்தில் உன்னோடு வாதாட என் புத்திக்கும் என் நாவிற்கும் கொஞ்சமேனும் வன்மையேயில்லை. ஆகையால், என்னை வாதாடித் தோற்கடிக்க முயலாமல் உன் திருவருளைக் கொடுப்பாயாக.

## 24. உன் புகழுக்குக் கேடுறா தருள்க

883. இருக்குமுன் னிற்கரைந்திங் கில்லாமற் போய்நா
னருட்கடலா லுண்ணப்பட் டாற்றான் — குருப்புகழுக்
கீனமிரா தெந்தா யியல்பாந் திருவருளுக்
கூனமுறா தென்னா லொழி.

உண்மையில் இருப்புள்ள ஆன்மாவாகிய உன்னில் பொய்த் தோற்றமாகிய 'நான்' என்னும் அகந்தை கரைந்து இருப்பற்றுப் போய் உன்னுடைய அருட்கடலால் முழுவதும் விழுங்கப் பெற்றால்தான், சற்குருவின் புகழுக்கு ஈன முண்டாகாது. என் தந்தையே, இயல்பாகவே பெருகும் உன் திருவருட் புகழுக்கு, நீ அருள் செய்யாததால், என்னால் ஊனம் உண்டாகாதபடி என்னை ஒழித்தருள்வாயாக.

884. உன்னைத் தவிர வொருபொருளு மீதியின்றி
யென்னை நினைக்கவைப்ப தேனெந்தா — யன்னையினும்
பேரரு ளாளனெனப் பேர்வகித்தா யென்னளவி
லோரணுவு மஃதுண்மை யோ.

எந்தையே, உன்னை நினைக்காமல் மற்ற ஒவ்வொரு பொருளையும் யாதொன்றும் மீதியிராமல் நான் மாற்றி மாற்றி நினைத்துக்கொண்டே இருக்கும்படி நீ என்னை வைப்பது ஏனோ? அடியார்களுக்கு அவர்களது தாயைவிடப் பெரிதும் அருள் புரிபவன் என்ற பெயரைச் சூடியிருக்கிறாயே. அது ஓர் அணுவளவாவது என் விஷயத்தில் உண்மையாகுமோ?

885. என்று மிருக்கு மியல்பா மவுனத்தாற்
கொன்றென் னகந்தைக் கொடும்புலியைத் — தொன்றுதொட்டு
நீ புனைந்த வெற்றி நிறுவி யுனைப்பிரிந்த
தாபமினி யேனுந் தணி.

என்றென்றும் இயல்பாகவே ஆன்மாவில் ரமித்திருக்கும் உனது சகஜ மௌனமாகிய வாளாயுதத்தால் என் அகந்தை யாகிய கொடிய புலியைக் கொன்று அனாதி காலமாக நீ சூடிவரும் வெற்றிமாலையை உண்மையாக்கி, நான் உன்னைப் பிரிந்த தாபத்தை இனியேனும் தணித்தருள்வாயாக.

886. எல்லோருங் கைவிடலா மெந்தா யெனையெனினும்
பொல்லா னெனைநீ புறந்தள்ளி — னல்லோர்
வியப்ப ரிறைதன் விதிமீறி னானென்
றயர்ப்ப ரதனா லருள்.

எந்தையே, என்னை உன்னைத் தவிர மற்ற எல்லாரும் கைவிடலாம்; அது தோஷமாகாது. ஆனால் நீ மட்டும் என்னைப் பொல்லாதவன் என்று வெறுத்து வெளியில் தள்ளுவாயானால், உன் அருள் மகிமையை உணர்ந்த நல்லோர் வியப்படைந்து 'இறைவன் தன் கருணை விதியை மீறினான்' என்று கூறி துயரப்படுவர். ஆகையால் அச் சொல்லுக்கு ஆளாகாமல் எனக்கு அருள் செய்வாயாக.

887. என்னளவிற் காட்டு மிரக்கமின்மை கண்டாரேன்
முன்னையுனை வள்ளலருண் மூர்த்தியென்றே — சொன்னபல
மேலோரு மந்தோ வியந்தெனக்கா வேண்டியுன்றன்
பாலோர் பழிசொல்வர் பார்.

இதற்குமுன் உன்னை 'அருள் வள்ளல், கருணாமூர்த்தி' என்றெல்லாம் அறிந்து போற்றிய மேலோர் பலரும் இன்று நீ என்னளவில் காட்டுகின்ற இரக்கமில்லாத் தன்மையைக் காண்பார்களேயாயின், வியப்படைந்து எனக்காகப் பரிந்து வேண்டி உன்மேல், அந்தோ, ஒரு பழி சொல்வர்! நீயே உணர்ந்து பார்ப்பாயாக.

888. ஒன்று மியலா துனதடிக ளேசரண
மென்றுவந்த வேழையெனை யேமாற்றில் — குன்றருண
ஞானக் கொடைரமண நாமமுடை யோனுனக்கோ
ரீனப் பழிவருமென் னே.

யாதொன்றும் இயற்ற சக்தி யற்றவனாய் உனது திருவடிகளே சரணம் என்று வந்து அடைந்த ஏழையாகிய என்னை நீ ஏமாற்றுவாயாகில், ஸ்ரீ அருணாசலரமண ஞானக் கொடையாளி என்ற நாம முடையவனே, உனக்கு ஓர் ஈனமான பழி வந்து சேரும். என்ன, இது உனக்குச் சம்மதமோ'?

889. ஆகாத தில்லை யருள்வலத்தா லென்றபுகழ்
போகாத வாறென்பாற் பொய்யாகி — நீகாத்தல்
வேண்டாவோ நான்கை விடப்படுத னீதியோ
வாண்டா னருளுக் கறை.

உன் அருட் சக்தியால் ஆகாத காரியம் ஒன்றுமே யில்லை என்ற பெரும் புகழ் என்னளவில் பொய்யாகிப் போகாதவாறு நீ காத்துக்கொள்ள வேண்டாமோ? நான் கைவிடப்படுதல் முன்பு என்னை யாட்கொண்ட உனது அருளுக்கு நீதியாகுமோ? சொல்வாயாக.

890. பக்குவமின் றேனும் பணிந்தோ ரகந்தையின்று
தற்கொலைக்குச் சம்மதித்துன் றாளடைந்து — மிக்கவிழைந்
தென்னைக்கொன் றுண்ணென் றிரந்து மெழாயேலேச்
சுன்னைப்பே சாதோ வுலகு.

நானாகிய ஓர் அகந்தை தெய்வீக சம்பத்துக்களால் நல்ல பக்குவத்தைப் பெறாவிட்டாலும், தற்கொலைக்கு (அகந்தை யழிவுக்கு)ச் சம்மதித்து இன்று உனது திருவடிகளை அடைந்து பணிந்து, மிகுந்த ஆவலோடு 'என்னைக் கொன்று உண்பாயாக' என்று யாசித்தும் நீ அவ் வகங்கார சம்ஹாரத்திற்கு எழுந்தருளாவிட்டால், இவ் வுலகம் உன்னை ஏசிப் பேசாதோ?

891. விருப்பு வெறுப்பை விரும்பு(ம்) மனமுன்
னருட்பெருக்கா னாசமுற வாற்றிக் — குருப்புகழுக்
கீன முறாவா றெனையும் புரந்தான்ம
ஞானவியற் காட்டி நடத்து.

விருப்பு வெறுப்புக்களையே மிகவும் பாராட்டி அலையும் என் மனம் உனது அருட்பெருக்கினால் நாசமுறும்படி நீ செய்து, சற்குருவின் புகழுக்கு ஈனமுண்டாகாதபடி என்னையும் ரக்ஷித்து, ஆன்ம ஞான லாபத்தைக் காட்டிக் கொடுத்து என்னை நடத்தியருள்வாயாக.

892. தோன்றி யிருந்துமறை சொப்பனமே யாஞ்சீவ
நான்றெரிந் துள்ள நனவுலகை — யீன்றமுன்
தன்மறப்புத் தூக்கந் தவிர வெழுப்பிவைத்த
னின்மரபன் றோந நிகழ்த்து.

ஜீவ நானாகிய அகந்தை அறிந்துகொண்டிருக்கும் ஒரு சொப்பனமே போலத் தோன்றி, இருந்து, மறைகின்ற இந்த நனவுலக வாழ்வை உண்டாக்கி வைத்த ஆன்ம மறதி என்னும் ஆதித் தூக்கத்தை நிவர்த்தி செய்து என்னை எழுப்பி வைப்பது உன் திருவருளின் வழக்கமே யல்லவா? ஆதலின் நீ அவ்வாறே செய்தருள்க.

893\. அண்ணா மலையி னடியி லமர்ந்திருந்து
முண்ணாடுங் கல்விபெற வொண்ணாதேற் — கண்ணே
விழித்திருந்துங் காண வியலாக் குருடாப்
பழித்திடா ரோபார்ப் பவர்.

அண்ணாமலையின் திருவடியிலேயே வாழ்ந்திருந்துங் கூட உள்ளே ஆன்மாவை நாடியடையும் மெய்க் கல்வியை என்னால் பெற முடியாமல் போகுமானால், சொரூப நோக்கு உடைய உன் அடியவர்களாகிய பெரியோர் என்னை 'கண் விழித்திருந்தும் காண முடியாத குருடன்' என்று பழிக்க மாட்டார்களோ?

894\. நின்புகழுக் கூறு நிகழவோ நீயுன்றன்
முன்புகொணர்ந் தாயெனையோர் முன்னைநாள் — அன்பறிவா
மானந்த மோன வமைதி யளித்தடியே
னீனந் தவிர்ப்பா யினி.

உன்னுடைய அருட்புகழுக்குக் கேடு உண்டாக்கிக் கொள்வதற் காகவோ முன்பொரு நாள் நீ என்னை உனது சந்நிதிக்குக் கொண்டுவந்து சேர்த்தாய்? இனியாவது சச்சிதானந்த மோன அமைதியை எனக்கு அளித்து அடியேனின் கீழ்மையை யெல்லாம் தவிர்பபாயாக.

895\. எட்டுணையு(ம்) நானென் றெழாமை யருளுவையேற்
கட்டமெலாந் தீர்ந்து கவலையறும் — நட்டமுறா
திப்பிறப்பை யேனு மினிப்பிறவா மைக்குதவு(ம்)
நற்பிறப்பாச் செய்துனரு ணாட்டு.

எள்ளத்தனைகூட அகந்தை 'நான்' என்று எழாத நிலையை நீ எனக்கு அருள் செய்வாயானால், என் கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து, மேலும் யாதொரு கவலையுமில்லாமல் ஆகிவிடும். என்னுடைய இந்தப் பிறவியையாவது நஷ்டமான தாகாமல், இனி பிறவாமையை எய்துவதற்கு உதவக் கூடிய நல்ல பிறவியாகச் செய்து உன் திருவருளை நிலைநாட்டுவாயாக.

896\. நம்பிக் கிடந்து ரமண திருவடியிற்
கும்பிட் டழுது குறைகூறித் — தம்பற்
றகலுவதை யன்றியொன்று மாசியேன் றோற்றாற்
புகலருமி ழுக்குன் புகழ்க்கு.

ஸ்ரீ ரமணபிரானாகிய உன்னையே நம்பி உனது திருவடிகளிலேயே குறைகூறி அழுது கும்பிட்டுக் கிடந்து, சகல பற்றுக்களும் ஒழிய வேண்டும் என்பதைத் தவிர வேறு ஒன்றையும் வேண்டி யறியாத நான் தோற்றுப் போவேனாயின், உன்னுடைய அருட்புகழுக்கு சொல்லற்கரிய பெரும் இழுக்கு உண்டாகிவிடும்.

### 25. அருளின்மையை வியத்தல்

897\. இந்தசென்ம மட்டோமுன் னெத்தனைசென் மங்களிவ்வா
றென்றனையே மாற்றினையோ வென்னறிவே —னெந்தையே
போது முனக்கிப் பொருந்தா வருளின்மை
சூதறநின் னுண்மை துலக்கு.

இந்த ஜென்மத்தில் மட்டுந் தானோ, அல்லது இதற்கு முன் எத்தனை ஜென்மங்களிலுமோ என்னை நீ இவ்வாறு ஏமாற்றினாயோ? நான் எப்படி அறிவேன்? எந்தையே, உனக்குத் தகுதியற்ற இந்த அருளின்மை போதும். இனி மேலாவது சூது செய்யாமல் உன் உண்மையை (மெய்ஞ்ஞானத்தை) எனக்கு விளக்கியருள்வாயாக.

898. பாரபட்ச மற்ற பரமகரு ணாமூர்த்தி
சீரமண ஞானகுரு தேவனே — காரகந்தைக்
காளாக்கி யென்னையிவ் வாறழிக்க வெவ்வளவு
நாளாக வன்ம(ம்) நவில்.

பாரபக்ஷமற்ற பரமகருணாமூர்த்தியே, ஸ்ரீ ரமண ஞான குருதேவனே, அஞ்ஞான அகந்தைக்கு என்னை ஆளாக்கி இவ்வாறு சீரழிக்க வேண்டும் என்று எவ்வளவு காலமாக நீ பழிவாங்கும் தீர்மானம் கொண்டிருந்தாயோ? சொல்க.

899. இப்படியோர் பேதைநா னிங்குழலக் காணார்போ
லெப்படிநீ வாளா விருக்கின்றாய் — அப்படியோர்
ஈரமிலாச் சித்த மிறைவன் றனக்குமுண்டோ
யாரறிவார் நீயருள்செய் யாறு.

ஒரு பேதையாகிய நான் இவ்வாறு இவ் வுலகில் துன்பத்தில் உழன்றுகொண்டிருக்க, இதைக் காணாதவன் போல் நீ எப்படிச் சும்மா இருக்கின்றாய்? அப்படிப்பட்ட ஓர் ஈரமில்லாத சித்தம் இறைவனாகிய உனக்கும் உண்டோ? (இராது என்பதால்) நீ எனக்கு சூக்ஷ்மமாக (எனக்கும் தெரியாமல்) அருள் செய்யும் ரகசிய வழிகளை யார் அறிவார்?

900. வீட்டாசை கொண்டும் வினையின் வலியெதிர்க்க
மாட்டா தவனாய் வழிநெடுகப் — பாட்டாலுன்
பேருதவி தாவென்று பிச்சையெடுக் குங்குரலுஞ்
சேருவதன் றோநின் செவிக்கு.

மோக்ஷ ஆசையைக் கைக்கொண்டும், அது நிறைவேறாதபடி தடுக்கும் வினைகளின் சக்தியை எதிர்க்க முடியாதவனாய், வழிநெடுக 'உன் அருள் பேருதவியைக் கொடு' என்று பாடல்களால் பாடி நான் பிக்ஷையெடுத்துக் கொண்டும் வரும் குரல் உன்னுடைய செவிகளுக்கு எட்டவில்லையோ?

901. உள்ளந் திரும்பிமுனைப் போய்ந்து சுகிக்கவுள்ளே
தள்ளும் படியெனையுன் றாளிறைஞ்சி — வெள்ளமெனக்
கண்ணீ ருகுத்ததெலாங் கண்டிலதோ பேரருளால்
விண்ணோங்குன் ஞான வழி.

'மனம் ஆன்மாவை நோக்கி, உண்முகமாகத் திரும்பி, வெளியில் கிளம்பும் முனைப்பு ஒழிந்து, நான் சுகித்திருக்கும் படி என்னை உள்ளே தள்ளுவாயாக' என்று உன் திருவடிகளில் கெஞ்சி ஆற்று வெள்ளம் போல் கண்ணீர் சொரிந்ததை யெல்லாம் பேரருளால் மிகச் சிறந்து ஓங்கும் உன் ஞான விழிகள் காணவே யில்லையோ?

902. பற்றுதியா வாறுன்றாட் பற்றளிப்பா யென்றிளமை
யுற்றமுன்னை நாடொட்டே யோலமிட்டேன் — சற்றேனு
முன்னருளாற் பற்றிங் கொழிந்தறியே னிங்ஙனமே
னென்னையழ வைத்தா யிசை.

இளமைப் பருவமுற்ற ஆதிநாளிலிருந்தே 'எனக்கு உலகப் பற்றுகள் உண்டாகாதபடி உன் திருவடிப் பற்றை அளிப்பாய்' என்று ஓலமிட்டு வருகின்றேன். ஆயினும், உன்னுடைய திருவருளால் கொஞ்சமாவது உலகப் பற்று எனக்கு ஒழிந்து அறியேன். இவ்வாறு ஏன் என்னை அழ வைத்தாயோ? சொல்க.

903. இவ்விதமென் புத்தி யிழிந்துவிட நின்னுளமு
மொவ்வியதோ வுன்ற னுதவியிதோ — எவ்விதமுங்

காப்பாற்ற வென்னைக் கடன்கொண்ட நின்னையன்றித்
தீர்ப்பா ரெவரென் றிகைப்பு.

இவ்விதமாக என்னுடைய புத்தி இழிவடைந்துவிட வேண்டும் என்று உன் திருவுள்ளமும் அனுமதித்துவிட்டதோ? இதுதான் உன் அருள் உதவியோ? எப்படியாவது என்னைக் காப்பாற்றியே தீர வேண்டும் என்ற கடமையைக் கொண்ட உன்னைத் தவிர என் உள்ளத் திகைப்பைத் தீர்த்து வைப்போர் யாவர்?

904. உண்டருள்க வென்றோ ருலர்ந்தசோற் றுப்பருக்கை
விண்டழுது கெஞ்ச விருந்துண்டோன் — கண்டு
சிரிக்கின்றாற் போன்றுளதிச் சேயேனுன் பாற்கை
விரித்தழநீ வேண்டா விதம்.

உன் பிள்ளையாகிய நான் உன்னிடம் கைகளை விரித்து ஏங்கி அழுதும், நீ என்னை விரும்பாமல் இருப்பது ஓர் உலர்ந்துபோன சோற்றுப் பருக்கை வயிறு நிறைய விருந்துண்ட ஒருவனிடம் போய் 'என்னை உண்டருள்க' என்று கூறி அழுது கெஞ்ச, அவன் அதை உண்ண விரும்பாமல் கண்டு சிரிக்கின்றதைப் போல் இருக்கின்றது.

905. இருளென்றா லெவ்வா றிருக்குமெனக் கேட்கு
மருணனைப் போலென் னலறல் — ஒருசிறிதும்
ஓராயோ ஞான முதவுங் கருணைக்கண்
பாராயோ வென்மேற் பரிந்து.

'இருள் என்றால் எப்படி இருக்கும்?' என்று கேட்கும் சூரியனைப் போல், நீயும் நான் அலறிச் செய்யும் முறையீடுகள் ஒன்று கூட அறிய மாட்டாயோ? என்மேல் பரிவு இரக்கம் கொண்டு, ஞானத்தை அருளும் கருணைக் கண்ணால் என்னைப் பார்க்க மாட்டாயோ?

906. இயந்திரத்திற் சிக்க லிருக்குமிடஞ் செப்பஞ்
செயுந்திரத்தா யென்னுளெங்கே தீமை — இயைந்ததந்த
முட்டுப்பா டோயவருண் மூட்டாம லென்னையென்னே
விட்டுப்பார்க் கின்ற விதம்.

ஓர் இயந்திரத்தில் எந்த இடத்தில் பழுது நேர்ந்திருக்கின்றது என்று அறிந்து, அதைச் செப்பம் செய்யுந் திறமை யாளனைப் போன்றவனே! என்னுள்ளே எங்கே என்னவிதமான கேடு ஆன்ம ஞானத்திற்குத் தடையாக ஏற்பட்டிருக்கின்றதோ, அந்தச் சிக்கலைக் கண்டறிந்து, அது தீரும் வண்ணம் திருவருள் மூட்டாமல் என்னைச் சும்மா விட்டுப் பார்த்துக்கொண்டே இருப்பது என்ன நியாயம்?

907. ஆனந்த மன்றி யழுங்கலொன்றுங் காணாத
ஞானந் திகழுன் னயனங்கள் — யானிந்த
வாறழுதுன் ளேங்கி வருந்துவது காண்டற்கெவ்
வாறுசகிக் கின்றதிறை வா.

இறைவா, பேரானந்தமன்றி யாதொரு துன்பத்தையும் உனது அடியார்களிடம் ஏற்படுத்திக் கண்டறியாத ஞான விகாசமுள்ள உனது இரு விழிகளும், நான் இவ்வாறு உள்ளம் ஏங்கி அழுது வருந்துவதைக் காண்பதற்கு எவ்வாறு சகிக்கின்றனவோ?

908. கதறிப் புலம்புமெனைக் காணார்போ னிற்கு
மிதய குருரமண வெந்தாய் — கதியற்றுக்
கெஞ்சியழு மென்னைக் கெடுத்தகற்றித் தள்ளிவைக்க
வஞ்சமுற்ற தேனுன் மனம்.

உன்னிடம் வந்து கதறிப் புலம்புகின்ற என்னைச் சிறிதும் காணாதவனைப் போலவே என் இதயத்தில் வீற்றிருக்கும் என் சற்குரு ஸ்ரீ ரமண தந்தையே! வேறு எந்தக் கதியுமின்றி உன்னிடமே கெஞ்சி யழுது நிற்கின்ற என்னை மேலும் மேலும் கேடுறச் செய்து உன்னிடமிருந்து தூரத்தில் அகற்றி என்னைத் தள்ளி வைக்க உன் மனம் ஏன் இவ்வாறு வஞ்சனை செய்ததோ?

909. தன்னாட்டங் கொள்ளத் தனிவிருப்பம் யானடைமா
றுன்னாட்ட மென்மேலு மூன்றாதோ — பன்னாட்க
ளிவ்விதமே வேண்டு மிரவலனை யேமாற்ற
வெவ்விதமா றிற்றுன் னியல்பு.

நான் ஆன்மநாட்டங் கொள்ள அதிக விருப்பமடையும்படி உன்னுடைய அருள் நாட்டம் என்மேல் படாதோ? பல நாட்களாக இவ்விதமே வேண்டி நிற்கும் யாசகனாகிய என்னை ஏமாற்றும் அளவிற்கு உன் கருணையுள்ளம் எப்படித்தான் மாறிவிட்டதோ?

910. காட்டித் தராவிடினான் காணகில்லே னென்றுனிடம்
ஏட்டி லெதிரி லிசைத்தழுது(ம்) — நாட்டமகங்
கொண்டிழுத்துப் போயுட் குவிக்கா தலையவிட்டுக்
கண்டிருப்ப தோகருணைக் கண்

'நீ அருள்கூர்ந்து ஆன்ம தரிசனம் காட்டித் தராவிட்டால், என்னால் காண முடியாது' என்று உன்னிடம் ஏட்டில் எழுதிய பாடல்களாலும் எதிரில் நின்று பாடி யழுவதாலும் முறையிட்டுக் கேட்கும், எனது நாட்டத்தை உண்முகப்படுத்தி குவித்து ஒருமுகப்படுத்தி, உள்ளே இழுத்துப் போய் இதயத்தில் சேர்க்காமல், அதை வெளியில் அலையும்படி உன் கருணைக் கண்கள் விட்டுப் பார்த்துக் கொண்டிருக் கின்றனவோ?

911. துயரமுறு நெஞ்சத் துடுக்கடக்கி நின்பா
லுயரவரு ளூட்டாம லென்னே — மயலிருள்வாய்
மீண்டுமீண் டும்பாய விட்டிருக்கின் றாய்ரமண
வாண்டவனே செய்க வருள்.

உலகில் துன்புறுகின்ற என் மனத்தின் பகிர்முகத்துடுக்கை யடக்கி, உன்னை நோக்கி மேலோங்கிவர உன் திருவருளை அதற்கு ஊட்டாமல், இருண்ட உலக மயக்கத்திலேயே அது மீண்டும் மீண்டும் பாயும்படி விட்டிருக்கின்றாயே! ஸ்ரீ ரமண ஆண்டவனே, என்னே இது? நீ அருள் செய்க.

912. முற்று மழிந்து முனைப்பிலா வெற்றிருப்பே
[67]நற்றவமா யார்ந்திருக்க நானென்று — முற்ற
பெருந்துணையா முன்சொருபப் பேராசை மூட்டும்
மருந்திலையோ நின்கை வசம்.

'நான்' என்னும் முனைப்பு முழுவதும் அழிந்துபோய், வெறும் இருப்பு மாத்திரமாய் மிஞ்சி நிற்கின்ற நல்ல தவத்தில் நான் எப்பொழுதும் ஊன்றி நிற்கும்படி ஸ்வஸ்வரூபப் பேராசையை (பக்தியை) என்னுள் மூட்டிவிடுகின்ற மருந்து எனக்குற்ற பெருந்துணையாகிய உன் கைவசம் இல்லையோ?

913. நீண்டிடையிற் சற்று(ம்) நிழலற்ற பாலைவழி
தாண்டவிய லாமற் றவிப்பேன்பா — லாண்டவா
என்னே கருதி யிருக்கின்றாய் மால்வாய்நான்
கொன்னே படலோ குறி.

---

[67] 'நான் நற்றவமாய் என்றும் ஆர்த்திருக்க' எனக் கூட்டுக.

வெகுதூரம் நீண்டதாகவும் இடையில் கொஞ்சமும் நிழல் இல்லாததாகவும் உள்ள ஒரு பாலைவனத்து வழியைக் கடந்து தாண்டிச் செல்ல முடியாமல்தவிக்கின்ற என்னைப் பற்றி, ஆண்டவா, நீ என்னதான் தீர்மானித்திருகின்றாய்? உலக மயக்கங்களிடையே நான் அனாவசியமாக அழிந்துபட வேண்டும் என்பதுதான் உன் குறிக்கோளோ?

914. கூடாது கூடாது நின்னருட்செங் கோன்முறைக்கிக்
கேடான நெஞ்சானான் கெட்டழிதல் — கோடாநின்
பேரருளு மென்னைப் பிழைகருதி நீக்கிலென்பா
லாரொருவர் செய்வா ரருள்.

இந்தக் கேடான மனத்தால் நான் மேன்மேலுங் கெட்டழிவது உன் அருட்செங்கோலின் ஆட்சி முறைக்கு சிறிதும் கூடவே கூடாத காரியமாகும். அடியார்களுக்கு அருள் செய்வதில் சிறிதும் தவறாத உன்னுடைய பேரருளுங்கூட என் பிழைகளைக் கருதி என்னை நீக்கிவிடுமானால், வேறு யாரொருவர் தான் என்பால் அருள் செய்வாரோ?

## 26. பாட்டுவிக்குந் தந்திரமோ?

915. தாண்டரிய வஞ்ஞான சாகரத்தி லன்பர்களை
வேண்டுமென்றே நீதள்ளி விட்டுவிட்டால் — வேண்டியவ
ரெவ்விதமெல் லாம்புலம்பி யேத்துவா ரென்றிலக்க
விவ்விதஞ்செய் தாயோ வெனை.

தாண்டுவதற்கு அரிய அஞ்ஞானமாகிய சமுத்திரத்தில் நீ வேண்டுமென்றே உன் அன்பர்களைத் தள்ளிவிட்டுவிட்டால், அவர்கள் எவ்விதமெல்லாம் புலம்பிப் பிரார்த்தித்து வேண்டித் துதிப்பார்கள் என்பதை உலகில் காட்டிக் கொடுப்பதற்குத் தான் என்னை இவ்விதம் செய்தாயோ?

916. ஏங்கிக் குமுறு மிதயத்தோ டுன்பதத்தைத்
தாங்கித் துதிக்குந் தமிழ்ப்பாக்க — வீங்கொன்று
மில்லையோ மேலோ ரிசைத்தனரே யற்பனென்வாய்ச்
சொல்லையோ தூண்டிற்றுன் சூது.

உனக்காக ஏங்கி உண்மையான அன்பு பொங்கும் இதயத்தோடு உன் திருவடிகளை உச்சிமேல் தாங்கித் துதிப்பதற்கு இங்கே தமிழ்ப் பாடல்கள் யாதொன்றுமா இல்லை? மேலோர்களாகிய உன்னுடைய அடியவர்கள் எவ்வளவோபாடி யிருக்கின்றனரே! அவை யெல்லாம் இருக்க, அற்பனாகிய என்வாய்ச் சொல்லையோ உன் சூது தூண்டிவிட்டது?

917. சொல்லாற் பொருளாற் சுவைமலிந்தே பத்திவெள்ள
மெல்லாத் திசையு மெழுந்தார்ப்ப — நல்லார்
உனதருளாற் போற்று முயர்வின்முன் பேதை
சொனதுமொரு தோத்திரமோ சொல்.

சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பி எட்டுத் திசையிலும் பக்தி வெள்ளம் பொங்கித் ததும்ப நல்லவர்களாகிய உனது அடியார்கள் உனது திருவருளாலேயே உன்னைப் போற்றி யிருக்கும் சிறந்த ஸ்தோத்திரங்களின் முன்பு, அறிவீனனாகிய நான் சொன்ன இதுவும் ஒரு ஸ்தோத்திரமாகுமோ? சொல்க.

918. ஆற்றாமை யாற்றா னலர்த்துவையோ பாமலர்வா
யூற்றா வுவகையினா லோடாதோ — வீற்றா
ளடித்தாற்றா னம்மாவென் பேனோ மதலை
பிடித்தணைத்தாற் பேசேனோ பின்.

உன்னைப் பிரிந்த பிரிவாற்றாமையைக் கொடுத்துத்தான் என் வாயில் பாமலர்களை மலர வைக்க வேண்டுமோ? உன் அருளால் எனக்குப்பேரின்ப முண்டாக்கினால், அந்த மகிழ்ச்சியால் என் வாயிலிருந்து பாமலர்கள் ஊற்றெடுத்துப் பெருகி ஓடாதோ? பெற்றெடுத்த தாய் தன் பிள்ளையாகிய என்னை அடித்தால்தான், 'அம்மா' என்று கூறிக் கதறுவேனோ? அன்போடு பிடித்து அணைத்துக்கொண்டால், பிறகு 'அம்மா' என்று பேச மாட்டேனோ?

919. பொங்கியெழுந் துக்கப் புனல்வாய் தமிழ்வெண்பா
தங்குதடை யின்றித் தவழ்ந்துவரக் — கங்குலிலு
மாட்டிவைத்தற் போது(ம்)மெய் யானந்த முண்பித்துப்
பாட்டுவித்தாற் பாடேனோ பா.

உன் பிரிவால் பொங்கிப் பொங்கி எழுகின்ற துக்க சாகரத்தில் என்னுள் தங்குதடையில்லாமல் தமிழ் வெண்பாக்கள் ஊர்ந்து வந்துகொண்டே யிருக்கும்படி இருள் நிறைந்த இரவிலுங்கூட என்னை நீ பாடும்படி ஆட்டிவைத்தது போதும். உன்னை அடைந்த மெய்யான ஆனந்தத்தை யெனக்கு வூட்டி என்னைப் பாட வைத்தால், நான் தமிழ்ப் பாக்கள் பாட மாட்டேனா?

920. தூங்கவிட மாட்டாய் சுவைக்கவியூற் றீந்துன்பா
லேங்கித் துதிக்க வியற்றுகின்றாய் — தாங்க
வியலா மனக்குறைக ளெல்லாந்தீர்த் தென்ற
னயலா முணர்வை யழி.

இரவில் தூங்கக்கூட நீ என்னை விடுவதில்லை; சுவை ததும்பும் தமிழ்க் கவியூற்றைத் திறந்துவிட்டு, அதைக் கொண்டு நான் உன்னிடம் ஏங்கித் துதிக்கும்படி செய்கின்றாய். அத்தகைய நீ தாங்க முடியாத என் மனக்குறைகளை யெல்லாம் தீர்த்து, நான் உனக்கு வேறாக இருக்கின்ற அன்னிய இருமை யுணர்வை அழித்தருள்வாயாக.

921. நன்மையொன்று மில்லா நரவுடலு(ம்) நற்றமிழா
லின்மைகளும் புன்மைகளு மேயிசைக்கும் — வன்மையுந்
தந்துவிளை யாடற் சமர்த்தோ பெருமையோ
எந்தைரம ணாநீ யெனக்கு.

என் தந்தையாகிய ஸ்ரீ ரமணா, நீ எனக்கு யாதொரு நன்மையுமில்லாத ஒரு மானிட சரீரமும், நல்ல தமிழைக் கொண்டு என் மனக்குறை களையும் அற்பத் தன்மையையுமே உன்னிடம் பாடி முறையிடும் புலமையையும் கொடுத்து என்னிடம் இத் திருவிளையாடல் களைச் செய்வது உன் சமர்த்தோ? இதுதான் உனக்குப் பெருமையோ?

922. கெஞ்சுஞ்செஞ் சொற்களினிக் கிட்டா விதந்தமிழிற்
பஞ்சமுண் டாம்வரையிற் பாடிவிட்டேன் — உய்ஞ்சவைத்த
பின்றுதிக்குஞ் சொற்களே பேரளவின் மிஞ்சினவுன்
னின்பளித்துப் பாடவைப்ப தென்று.

இனி தமிழ் மொழியிலேயே உன்னைக் கெஞ்சிப் பாடும் செஞ்சொற்கள் ஒன்றுகூட இல்லாமல் தமிழில் அச்சொற்களுக்குப் பஞ்சம் உண்டாகும் வரையில் பாடிவிட்டேன். இனி என்னை உய்ய வைத்த பிறகு உன்னை மகிழ்வோடு துதிக்கும் சொற்களே தமிழில் ஏராளமாக மிஞ்சியிருக்கின்றன. ஆகையால், உன் அருளின்பத்தைக் கொடுத்து என்னை என்று பாட வைக்கப் போகின்றாய்?

923. களித்து மலர்ந்தமுகக் காந்தியுட னின்ப
மளித்தரம ணப்பநின தன்பிற் — றிளைத்துதமிழ்த்

தீஞ்சொல்லா லேத்தித் திருத்தியுற்றி ருப்பதற்கு
வாஞ்சையெக் கீயிவ் வரம்.

உன் ஆன்ம ரமணத்தால் களித்து, மலர்ந்த பிரகாசமுள்ள முகத்துடன், எனக்கு இப்பேரின்பத்தை அளித்த ஸ்ரீ ரமணப்பாவே, உனது மெய்யன்பில் திளைத்து இனிய தமிழ்ச் சொல்லால் உன்னைப் புகழ்ந்து, அந் நிலையில் திருப்தி யுற்றிருப்பதற்கு எனக்கு மிகவும் ஆசை. ஆகவே நீ எனக்கு இவ் வரத்தை அளிப்பாயாக.

924. தானன்றி மற்றில்லாச் சச்சிதா னந்தபர
மோனந் துலங்கிலன்றி மூடனேன் — ஏனென்று
மீயென் றிடுவென் றிணையென் றிசைவசைக
ளோய்வின் றுளறுவனன் றோ.

தன்னைத் தவிர யாதொரு பொருளுமே யில்லை என்ற அஜாத சச்சிதானந்த பரமோன நிலை விளங்கினாலன்றி, மூடனாகிய நான் 'ஏன் இப்படிச் செய்தாய்?' என்றும், 'இதைக் கொடு; அதைக்கொடு; உன்னுடன் என்னை இணைத்தருள்' என்றும் வசைப் பாடல்களையே ஓய்வில்லாமல் உன்னிடம் உளறிக்கொண் டிருப்பேனல்லவா?

925. உன்பாதத் தெட்டமட்டு மோதிடிலுய் வுண்டிந்த
வெண்பாவைப் பாடுங்கான் மெய்சிலிர்த்து — நன்பாவாய்க்
கேட்டோர் வியக்கக் கிளர்ந்ததனாற் றானோவென்
மாட்டிரங்கி லாயுன் மனம்.

உன்னுடைய திருவடிகளுக்கு மட்டுந் தெரியும்படி இந்த வெண்பாக்களைப் பாடினால், எனக்கு உய்வுண்டாகும். அவ்வாறின்றி இந்த வெண்பாக்களைப் பாடும்பொழுது அவற்றைக் கேட்கும் பிறர் மெய்சிலிர்த்து 'நல்ல பாக்கள்' என்றுவியக்கும்படிப் பாடியதால் தானோ, நீ என்பால் மனமிரங்கவில்லை?

926. புகழ்ச்சி யெனும்பேய்ப் புலைச்சிக் கடிமை
மகிழ்ச்சியோ டேற்றதால் வந்த — விகழ்ச்சித்
தவக்குறையே காரணமுன் றண்ணருளில் லான்போ
லவக்குரனான் கூறி யழல்.

புகழ்ச்சி என்னும் பேய்ப் புலைச்சிக்கு ஆசைப்பட்டு, அவளுக்கு அடிமை செய்வதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டதால் உண்டான உண்மையான இகழ்ச்சியாகிய தவக்குறையே நான் உன்னுடைய அருளில்லாதவன் போல அவக்குரலில் பாடி யழுவதற்குக் காரணமாகு மல்லவா?

927. நாட்டார் மதிக்கவினி நாவசைத்து நான்பாட
மாட்டேனுன் றாட்டா மரையுகப்பப் — பாட்டாகப்
பாடும் பரிசகம் பாவ மகன்றுனருட்
கூடுங் குலாவாய்க் கொடு.

இனிமேல் நாட்டு மக்கள் மதிக்கும்படி நான் நாவசைத்துப் பாட மாட்டேன். உன் திருவடித் தாமரைகள் சந்தோஷிக்கும்படிப் பாடுவதால் அகம்பாவம் அற்றுப்போய், அதனால் வந்து சேரும் உன் அருளையே சிறந்த பரிசாக நான் கொள்ளும்படிக் கொடுத்தருள் வாயாக.

928. உன்பாற் புலம்புகின்ற வோர்வழக்க மேனு(ம்)நீ
யென்பாற் கொடுத்தாயே யீசுவரா — அன்பூறிக்
கெஞ்சியழு தேனுமுன் கேண்மைமற வாதிருக்கு(ம்)
நெஞ்சமெனு மென்பா னிறுத்து.

எதை முன்னிட்டும் எப்பொழுதும் உன்னிடமே வந்து பாடிப் புலம்புகின்ற ஒரு நல்ல வழக்கத்தையாவது நீ எனக்குக் கொடுத்திருக் கின்றாயே. ஸ்ரீ ரமணேசுவரா, அன்பு ஊறி உன்னிடம் கெஞ்சி அழுவதினாலாவது உன்னுடைய உறவை மறவாது இருக்கும் ஒரு நெஞ்சத்தையாவது என்னிடம் எப்பொழுதும் நிறுத்தி வைத்தருள்வாயாக.

929. மனிதர்தமக் குற்றதுயர் வாயுரையான் மற்றோர்
மனிதரிடங் கூறுங்கால் வல்ல — மனிதரான்
மாற்றப்பட் டஃதுு மகிழ்வதிலை யோவுன்னி
னேற்றவல் லாள ரெவர்.

ஒரு மனிதன் தனக்குற்ற துயரங்களை மற்றொரு மனிதனிடம் வாய்விட்டுக் கூறும்போது, அவன் வலிமை மிக்க மனிதனாயிருந்தால், அவனால் இவனது துயரங்கள் மாற்றப்பட்டு, மகிழ்ச்சி உண்டாவது இல்லையோ? அது போலவே, (வலிமையற்ற நான் யாரிடம் குறைமுறைகளைக் கூறிக்கொண்டால் எல்லாம் வல்ல அவனால் என் குறைகள் நீக்கப்பட்டு இன்புறுவேனோ) அந்த மகாசத்திமான் உன்னைத் தவிர வேறு எவர்?

930. பகவான் ரமண பரம குருவா
யிகமே லெனக்குற்ற வீசா — வகமம
கார மழிக்குமுப காரியே யிம்மொழிக்கும்
வாரம்வைத் தென்னை வரி.

ஸ்ரீ பகவான் ரமண பரமகுருவாக எனக்கு இவ் வுலகில் கிடைத்த சர்வேச்வரா! அகங்கார மமகாரங்களை அழித்து என்னை உய்விக்கும் உபகாரியே! என்னுடைய இந்த துதிகளையும் ஏற்று இரக்கங் கொண்டு, உன்னால் காப்பாற்றப் படுபவர்களுள் ஒருவனாக என்னையும் வரித்துக்கொள்வாயாக.

931. குருவே பரம்பொருளே குற்றமுளேன் சீவ
மருளே யகற்றவந்த மன்னா — திருவருளா
னீதந்த புத்திகொண்டு நின்னையழைத் தேனினியுன்
பாதந்தா னீதல் பயன்.

பரம்பொருளே! சற்குருவே! சகலவித குற்றங்களும் உடைய என்னுடைய ஜீவ மயக்கத்தை நீக்கியருள வந்த அருளரசனே! உன்னுடைய திருவருளால் நீயே எனக்குத் தந்த நல்ல புத்தியைக் கொண்டு 'எனக்கு அருள் செய்வாய்' என்ற இத் துதிகளால் உன்னை அழைத்தேன். இனி உன் திருவடிகள் எதை எனக்கு அருள் கின்றனவோ, அது நான் பெறும் பயனாக அமையட்டும்.

## 27. நின்னிச்சை வெல்க

932. இங்கோர் விருத்தி யெழுமே லதுரமணச்
செங்கோலி னிச்சைவழிச் செல்லுகவே — மங்குமனத்
தென்னிச்சை யீதுநிறை வேறுகவென் றுன்னலற
நின்னிச்சை வெல்க நிலைத்து.

என் மனத்தில் எதாவதொரு விருத்தி எழுமேயானால், அது ஸ்ரீ ரமண அருட் செங்கோல் எவ் வழிச் செல்ல வேண்டுமென்று இச்சைப்படு கின்றதோ, அவ் வழியிலேயே அந்த விருத்தி செல்லுவதாக. அவ்வாறின்றி அறியாமை நிறைந்த மனத்தினனாகிய 'இது என் இஷ்டம்; இதுவே நிறைவேற வேண்டும்' என்று நினைக்கும் அகங்காரம் அற்றுப்போகும்படி, இறைவா, உன்னுடைய இஷ்டமே என்னில் வெற்றிகொண்டு நிலைத்திருக்கட்டும்.

933. திருவருளை நம்பிச் செகத்திலுதா சீனம்
பெருகியுள்ள வாழ்வுடையேன் பேதை — குருரமணா
எவ்வாறுங் காக்கு மிறைவா வுனதிச்சை
யெவ்வாறோ வவ்வா றியக்கு.

ஸ்ரீ குரு ரமணா, உன்னுடைய திருவருளையே முற்றும் நம்பியவனாய், அதனால் இந்த உலக வாழ்வில் அக்கரை இல்லாமல் உதாசீனம் பெருகிய ஒரு வாழ்வை யுடையவனாக இப் பேதையேன் இருக்கின்றேன். இத்தகைய என்னை எப்படியும் காக்கின்ற இறைவனே, உன்னுடைய இச்சை எவ்வாறோ அவ்வாறே என்னை நடத்துவாயாக.

934. கூற்றனை மாற்றுங் குருரமண பாதமெனை
யேற்றருள வேண்டு மிரவலனாய் — வேற்றுதவி
யாருமிலே னுன்ற னருளாற் கதியெதுதா
னேருவதா வஃதென் னிலை.

மரணத்தை யொழித்தருளும் ஸ்ரீ ரமண குருவின் திருவடிகள் என்னையும் யாசகனாக ஏற்றருள வேண்டும். நான் வேறு யாருடைய உதவியுமில்லாதவன். உன்னுடைய திருவருளால் எனக்கு எத்தகைய கதி கிடைக்குமோ, அதுவே தான் நான் அடையப் போகும் நிலை.

935. ஊழா லெழுச்சி யுறினு மெனைக்காக்கச்
சூழாநின் றோங்குந் துணையருளா — மாழாழி
யண்ணா மலைரமணா வப்பா வுனைமீறா
வண்ணமே வாழவெனை வை.

எனக்குத் துணையாகச் சூழ்ந்துகொண்ட அரணாகிய ஆழ்ந்த அருட்சமுத்திரமாகவும், என்னைச் சூழ்ந்துகொண்டு ஓங்கி வளர்ந்து நிற்கும் துணையாகிய ஸ்ரீ அண்ணாமலை ரமணனாகவும் இருந்து என்னைக் காப்பாற்றும் அப்பாவே! பிராரப்த வசமாக 'நான்' என்ற எழுச்சி எழுந்தாலும், உன் அருளிச்சையை மீறாதபடியே நான் வாழுமாறு என்னை வைத்தருள்க.

936. உனக்குமா றாவிச்சை யொன்றெனக்குண் டானா
லெனக்கதனை யென்றுமே யீயேல் — மனக்குறைக
ளீந்துநிறை வேற்றா திலாதொழித்தென் றென்றுமெனை
யேன்றுகொளுன் னிச்சைவழிக் கே.

உன்னுடைய இச்சைக்கு மாறாக எனக்கு ஓர் இச்சை உண்டாகுமானால், அதை நீ எனக்கு என்றைக்குமே தராமல் ஒதுக்குவாயாக. எனக்கு மனக்குறைகளை முதலில் உண்டாக்கி, பிறகு அவ் வாசைகளைப் பூர்த்தி செய்து நிறைவேற்றுவது என்பதின்றி, அந்த மனக்குறைகள் என்றென்றுமே எனக்கு உண்டாகாதபடிச் செய்து, உன் இச்சையின் வழியே வாழ்கின்ற தோர் அடிமையாக என்னை ஏற்றுக் கொள்வாயாக.

937. பாட்டிலெது கேட்கப் படுமோ பரமனதைக்
காட்டிலுமே லானதையான் கைக்கொளுமா — றூட்டிப்
புரப்பதிது காறும் புலப்படவைத் தாயே
யிரப்பனுன் னிட்டத்தை யீ.

பரமேசுவரனாகிய நீ உன்னிடம் என்னால் பாடல்களின் மூலம் எவை கேட்கப்பட்டனவோ, அவற்றைக் காட்டிலும் மேன்மையான வற்றையே நான் அடையுமாறு இவ்வளவு காலமும் எனக்கு அளித்துப் பாதுகாத்து வருவதை நான் நன்கு அறியுமாறு செய்திருக்கிறாயே. ஆகையால், உன்னுடைய இஷ்டம் எதுவோ, அதை மட்டுமே நான் கேட்கின்றேன்; நீயும் அதை மட்டுமே கொடுத்தருள்க

938. நின்னைவிட்டு வேறெந் நினைவாலு மேபுதிதா
யென்னையுறப் போகும்பே றேதுமில்லை — யுன்னைவிடா
தெண்ணி யிருக்க விசைவாய்மற் றெல்லாமே
பண்ணுகநின் னிச்சைப் படிக்கு.

உன்னை விட்டுவிட்டுப் பிற பொருள்களை நான் நினைப்பதால், எனக்குப் புதிதாக எதுவும் கிடைத்துவிடப் போவதில்லை. ஆகையால், உன்னையே நான் இடைவிடாது எண்ணியிருக்கும்படி திருவுள்ளம் பற்றுக.[68] இவ் வொன்றைத் தவிர என் வாழ்வில் மற்றெல்லாவற்றையுமே உன்னிச்சைப்படியே செய்தருள்க.

939. ஒன்று மறியே னுடையாய்நா னுன்னுடைமை
நன்றுன் னடைக்கலமந் நாட்புகுந்தே — னென்றே
யிருக்கின்றேன் வேறொன் றியலேன் பொறுப்புன்
னருட்கன்றோ நீநினைத்த தாற்று.

என்னை யாட்கொண்ட அண்ணலே, நான் ஒன்றும் அறியேன். நான் உன்னுடைய உடைமைப் பொருள். பண்டை நாளாகிய அன்றைக்கே நான் உன்னை நல்ல அடையாளமாக வந்தடைந்தேன். இதை நம்பியே சாந்தியாய் இருக்கின்றேன். இந்த நம்பிக்கையைத் தவிர வேறு சாதனை யொன்றும் செய்ய வியலேன். ஆகையால், சகல பொறுப்பும் உன்னுடைய திருவருளுக்கே யாகின்றதல்லவா? எனவே நீஎதை நினைக்கின்றாயோ, அதை எனக்குச் செய்.

940. நம்பி யிருப்பதுன்றன் ஞானத் திருவடிநா
னென்புகலா யென்றென்று மேழையே — னெம்பெருமா
னப்படிச்செய் தாலு மலாதுகை விட்டாலு
மெப்படியென் செய்வே னெதிர்ந்து.

எம்பெருமானே, உனது ஞானத் திருவடிகளையே எனது அடைக்கல ஸ்தானமாக இவ்வேழையாகிய நான் என்றென்றும் நம்பியிருக் கின்றேன். ஆகையால், நீ எனக்கு அப்படி அடைக்கலம் கொடுத்தாலும், அல்லது கைவிட்டாலுங்கூட, உன் இச்சைக்கு எதிராக நான் எப்படி என்ன செய்வேன்?

941. நின்னிட்ட மான நிகழ்வுக்கு மாறாக
வென்னிட்ட மென்றொன் றெழவிடேல் — முன்னிட்ட
நின்பணியி லன்பு நிசமா யுதித்திடிற்றுன்
பென்பதெது வாழ்வி லெனக்கு.

உன்னுடைய இச்சையின்படி நிகழ்வதற்கு மாறாக எனக்கென்று வேறொரு இச்சை எழும்படி அனுமதிக்காதே. உன் திருவருளால் நீ பணித்துள்ள வாழ்வு முறையில் எனக்கு உண்மையான அன்பு உண்டாகிவிட்டால், வேறு என் வாழ்வில் துன்பம் என்பது எது?

942. இட்டத்தா லென்மே லிரக்கத்தாற் கொண்டுவந்தாய்
கட்டத்தா லின்று கசக்குகின்றாய் — தொட்டுத்தா
னேற்றவரு ளாளவெனக் கின்பமோ துன்பமோநீ
யாற்றுவதென் பாக்ய மறி.

உனது காரணமில்லாத கருணையின் விளைவாக உனக்கு என்மேல் ஏற்பட்ட இஷ்டத்தாலும் இரக்கத்தாலுமே என்னை உன் திருவடிகளுக்கு முன்பு கொண்டுவந்தாய். ஆனால் இன்றுவரை அகந்தைப் பேயால் விளைவிக்கப்பட்ட துன்பங்களால் நீ இரக்க மில்லாதவன் போல என்னை கசக்குகின்றாய். என்னை

[68] 529, 639, 949 பாடல்களுடன் ஒத்து நோக்குக.

சங்கற்பத்தால் தொட்டு உனக்கு அடிமையாக ஏற்றுக்கொண்ட அருளாளனே, இன்பமோ அல்லது அது துன்பமோ, நீ எனக்கு எதை அருளுகின்றாயோ, அதையே என் பாக்கியமாகக் கொள்கின்றேன். அறிக.

943. எம்மையினுங் காண்டற் கியலா வருங்குருவா
யிம்மையிலென் கண்முன் னெழுந்தவா — வம்மையினு
மிக்க வருளான் மிலேச்சனெனை யுங்கழற்கீழ்ச்
சிக்கவைத்தோய் நின்னிட்டம் செய்.

எந்த ஜென்மத்திலும் யாரும் பார்ப்பதற்கரிய அருட் பெருங் குருவடியில் இந்த ஜென்மத்திலேயே என் கண்முன் எழுந்தருளியவனே! ஈன்ற தாயையும்விடச் சிறந்த கருணையால் மிலேச்சனாகிய என்னையும் உன் திருவடியின் கீழே பிடித்துச் சிக்க வைத்தவனே! உன் இஷ்டம் எதுவோ,அதைச் செய்தருள்க.

## 28. நீயே யிரு

944. நீநினைத்தாற் செய்யவொரு நேர மிடந்தடையன்
றேனினைக்கி லாயின் றெனைப்புசிக்க — நானினைக்க
வொன்றுமிலா வாறிவ் வுடலாவி யாவுமுனக்
கென்றுகொண்டு நீயே யிரு.

நீ எனக்கு அருள் செய்ய நினைத்தால், அதற்கு எந்த நேரமும் எந்த இடமும் ஒரு தடையாகாதன்றோ? அவ் வாறிருக்க, இன்றே என்னை நீ புசித்து உனக்கு ஊணாக்கிக் கொள்ள ஏன் சங்கற்பிக்கவில்லை? இனி நான் நினைப்பதற்கு யாதொரு அவசியமில்லாதவாறு[69] இவ் வுடல் ஆவி யாவற்றையும் உன்னுடையதாகவே எடுத்துக்கொண்டு, நீயே இங்கு எப்பொழுதும் இருந்தருள்வாயாக.

945. அன்னியத்தை யன்றி யகத்தை யறியாமை
யென்னியற்கை யாகி யிழியுமெனை — உன்னியற்கை
யுன்னையலா லொன்று முணராமை யென்றுணர்த்தி
யென்னியலா யென்று மிரு.

அன்னியப் பொருள்களை அறிவதைத் தவிர தன்னை அறியாத அறியாமையையே எனது சுபாவமாகி இழிவடைகின்ற என்னை '(உன் இயற்கை இதுவல்ல;) உன்னைத்தவிர வேறொன்றையும் அறியாமையே ஆன்மாவாகிய உனது நிஜ சுபாவம்' என்று அனுபவமாய் உணர்த்தி என் இயல்பு வடிவாகவே நீயே என்றும் இருந்தருள்வாயாக.

946. இவ்வுடலே நானா வெனக்கோ ரிருப்புணர்வு
மொவ்வுவதன் றெந்தா யுனதருளா — லவ்வுணர்வைச்
சாக வழித்துச் சகஜ நிருவிகற்ப
வேகமா நீயே யிரு.

இந்த உடம்பே நானாக எனக்கு எவ்வித ஓர் இருப்புணர்வும் இருப்பது சரியல்ல. எந்தையே, உனது அருளால் இவ் வகந்தை யுணர்வை அழித்து சகஜ நிர்விகற்ப ஏகான்மா வாகிய நீயே இருந்தருள்க.

947. நானெழா தென்னை நசிப்பித் தனையேலிவ்
வீனமெலாம் யாரிடத்தெங் கேயிருக்கு — மூனளவா
நின்றவெனைச் சார்ந்திருந்த நீசமெலா மோசம்போ
யென்றுமுள்ள நீயே யிரு.

[69] "நினைப்பதற்கு 'நான்' என்ற ஒரு தனிவியக்தியில்லாதவாறு" எனவும் பொருள்படும்.

இவ் வகந்தை 'நான்' எழாதபடி நீ அழித்துவிட்டால், பிறகு இவ்வளவு காலமாக என்னிடம் இருப்பனவாக நான் முறையிட்டுவரும் கேடுகளெல்லாம் எங்கே, யாரிடத்தில் இருக்க முடியும்? இந்த உடம்பளவாகவே வாழ்ந்திருந்த என்னைச் சார்ந்திருந்த நீசங்களெல்லாம் அழிக்கப்பட்டு, என்றும் யாதொரு களங்கமுமற்றுள்ள நீயே இருந்தருள்க.

948. ஒருடலைக் கற்பித் துடனே யதைத்தானா
வோரு முணர்வொன் றுதியாமல் — வேருடனத்
தன்மை யெழுச்சியைச் சங்காரஞ் செய்துனருட்
சின்மயமா நீயே திகழ்.

பூர்வ சங்கற்ப வாசனைகளால் ஓர் உடம்பை அது இருப்பதாகக் கற்பித்துக்கொண்டும், அதே கணத்தில் 'அந்த உடம்பே நான்' என்று அபிமானித்துக் கொண்டும் ஒரு தன்மையுணர்வு எழாமல் அந்தத் தன்மை யெழுச்சியை வேரோடு அழித்து, அருள் ஞானமயமாக நீயே இருந்தருள்க.

949. உன்னையன்றி வேறொன்று முன்னாத தாற்குறைவா
யென்ன நடந்துவிடு மிவ்வாழ்வில் — தன்னைவிடா
தென்று மிருக்க வெனக்கருளிச் சித்தமலம்
வென்றிதய(ம்) நீவீற் றிரு.

உன்னையே நினைப்பதைத் தவிர மற்றவற்றை நினையாதிருந்து விட்டால், இவ் வாழ்வில் எனக்கு என்ன குறைந்து போய்விடும்? ஆகையால், ஆன்மாவாகிய உன்னை விடாது கருதி தன்னிலேயே என்றும் இருக்க எனக்கு அருள் செய்து, என் சித்தத்தில் இதுவரை இருந்த மும்மலங்களையும் வென்று நீயே என் இதயத்தில் வீற்றிருந்தருள்க.

950. கடல்வெள்ளம் போன்மிகுந்து கங்குகரை காணா
திடங்கால மின்றியென்று மெங்கு — மடர்ந்தொளிரு
மான்மபர மார்த்த வனுபவமா யெஞ்சிநிற்கு(ம்)
நானெனு(ம்)நீ யேவெற்றி நாட்டு.

கங்குகரை காணாமல் மிகுந்து பரவிநிற்கும் கடல் வெள்ளத்தைப் போல், காலதேச வரையறையின்றி எக்காலத்தும் எல்லாவிடத்தும் பூரணமாக நிறைந்து விளங்கும பரமார்த்த ஆன்மானுபவமாய் மாத்திரம் மிஞ்சி நிற்கும் 'நான்' எதுவோ,அதுவாகிய நீயே வெற்றி நாட்டி இருந்தருள்க.

951. நின்னையன்றி நானோர் நிழல்போலு மீந்திருக்க
வென்ன விதத்து மினிவேண்டேன் — [70]உன்னருளாற்
பொய்யுருவா நானொருகாற் போதரவோ ரேதுவின்றி
மெய்யுருவ னீயே விளங்கு.

உன்னைத் தவிர 'நான்' என்று ஓர் அகந்தை நிழல் போலக்கூட எந்த விதத்திலும் இனி மீந்து இருக்க நான் விரும்பவில்லை. இந்தப் பொய்யுருவாகிய அகந்தை 'நான்' மீண்டும் ஒரு முறை எழுவதற்கு இடமே இல்லாதபடி மெய்யுருவனாகிய நீயே உன் அருளால் விளங்கி யிருந்தருள்க.

952. பூரணத்தை யன்றிப் பொருளொன்று மில்லாத
காரணத்தா னானெனகங் காரத்தைச் — சீரணித்து
நீயொன்றே யன்றி நிழல்போலு நானெனுமப்
பேயொன் றெழாமற் பிறங்கு.

---

[70] 'உன்னருளால் விளங்கு' எனக் கூட்டுக

நீ ஆன்ம பரிபூரண வஸ்துவாகையால், உன்னைத் தவிர வேறு யாதொரு பொருளும் உண்மையில் இருக்க முடியாது என்ற காரணத்தால் நீ எனது 'நான்' எனும் அகங்காரத்தை விழுங்கி ஜீரணித்து, நீ யொருவனே இருப்பதைத் தவிர, உன் நிழல் போலக்கூட 'நான்' என்று அந்த அகந்தைப் பேய் ஒன்று எழாமல் விளங்கி யிருந்தருள்க.

953. அன்னியமா வோர்சடமு மன்னியமா வோரிடமு
மன்னாத பேரோளியாம் வத்துவுக்கே — யெந்நாளு
மெங்கேனு மோர்நிழலுண் டாகுமோ வுன்னையன்றி
யெங்கேநா னேதென் னிருப்பு.

(ஓர் ஒளிமய வஸ்துவுக்கு தனக்கென்று ஒரு குறிப்பிட்ட இடமும் தனக்கு வேறான மற்றொரு ஜடப்பொருள் இருப்பும் உள்ளபோதுதான் ஒரு நிழல்உண்டாக முடியுமே தவிர) ஜடவஸ்துவாகவும் தனக்கு அன்னியமாகவும் ஒரு வஸ்து இல்லாமல், மேலும் தனக்கு அன்னியமாக ஓர் இடமும் இல்லாமலும் எங்கும் யாவும் தானேயாக நிறைந்து விளங்கும் பேரொளியாம் ஆன்ம வஸ்துவாகிய உனக்கு என்றாவது எங்கேயாவது ஒரு நிழல் உண்டாக முடியுமோ? ஆகவே, உன்னை யன்றி நான் எங்கே யிருக்கின்றேன்? எனக்கு நிழல் போல் ஒரு தனி இருப்புக்கூட ஏது?

954. மற்றொன் றிலாதுசுப மங்கலப் பூரணமா
வுற்றெங்கு மோங்கு முயர்பொருளே — மற்றிங்
கொருவனா னென்றே யுதிக்கின்றான் போலி
யுருவனைக் கொன்றுநீ யோங்கு.

தனக்கு அன்னிய வஸ்து யாதொன்றுமே இல்லாமல் தானே சுபமங்கலப் பூரணவஸ்துவாய் எங்கும் ஓங்கி நிற்கும் பரம்பொருளே, உனக்கு அன்னியம் போல் இதோ இங்கு ஒருவன் 'நான்' என்ற அகந்தையாக உதித்துள்ளான். இந்தப் போலி உருவத்தினனைக் கொன்றுவிட்டு நீயே ஓங்கி இருந்தருள்க.

955. அன்னியமொன் றில்லா வருளாட்சிக் குள்ளொருவ
னென்னதுநா னென்றிங் கெழுகின்றான் — என்னவிது
நீயிருப்ப தன்றி நினைப்புருவ நானெனுமோர்
"நோயிருக்க லாமோ நுவல்.

தனக்கு அன்னியமாக யாரொருவரும் இல்லாத உன்னுடைய அருளாட்சிக்குள் 'நான்' என்றும் 'எனது' என்றும் இங்கு ஒருவன் எழுகின்றான். இவனை நீ அனுமதிப்பது எவ்வாறு? நீ மாத்திரமே யிருப்பதன்றி, வெறும் நினைப்பு வடிவமாகிய 'நான்' என்னும் ஒரு நோய் உண்டாகி யிருந்துவரலாமோ? சொல்க.

956. ஞானப் பெருஞ்சோதி நாயகமா நான்முகன்மால்
வானத் தவர்முன் வளர்ந்தவா — ஊனத்தே
மோகமுற்ற வென்னெஞ்சை மூல வருளொளியிற்
சாகவைத்தென் வாழ்வாத் தழை.

தேவர்களாகிய பிரம்மவிஷ்ணுக்களின் முன் ஞானப் பெருஞ்சோதி நாயகமாக (ஸ்ரீ அண்ணாமலையாக) வளர்ந்து நின்றவனே, உடம்பின் மேல் மோகமுற்ற என் புத்தியை அதன் உற்பத்தி ஸ்தானமாகிய அருள் ஒளியில் மூழ்கவைத்துக் கொன்று, அதன் பிறகு உள்ள எனது உண்மை வாழ்வாக நீயே செழித்து இருந்தருள்க.

"'பேயிருப்ப தாமோநீ பேசு' எனவும் பாடம். இதன் பொருள்: "...'நான்' என்னும் ஒரு பேய் இருந்துவருமோ, தகுமோ? நீ சொல்க."

957. ஏனோகூ டாதென் னிறைவா விதயமாத்
தானே விளங்குமுன் றாளிலினி — நானோய்ந்து
வாளாநீ மட்டுமே வாழ்வதா வாழவரு
ளாளா வருளே யருள்.

என்னுடைய இறைவனே, தானே இதயமாக விளங்கும் உனது திருவடிகளில் நான் இனி மறைந்துபோய், சும்மா நீ மட்டுமே வாழ்வது ஏனோ கூடாது? அருளாளா, அவ்வாறே நீ மட்டும் வாழ நீ திருவருள் செய்வாயாக.

958. வானாதி தோன்ற மலவுடலாத் தோன்றுமொரு
நானாதி காரணமிந் நானழித்துத் — தானாகி
யந்தமிலா நீயே யகமா வகண்டமாச்
சொந்தநிலை காட்டிச் சுகி.

பஞ்சபூதங்களும் அவற்றாலாகிய பௌதிகங்களும் உண்டாகித் தோன்றுவதற்கு 'இந்த மல மாமிச உடம்பே நான்' என்று தோன்றும் ஓர் எழுச்சியே மூல காரணமாகும். இந்த 'நான்' என்ற அகந்தையை அழித்து ஆதியந்தமில்லாத நீயே உண்மை நானாக அகண்டமாகிய என் சொந்த நிலையைக் காட்டித் தந்து சுகிப்பாயாக.

959. எல்லா மறைந்துண்மை யேகநா னேமிஞ்சி
யில்லாத துள்ள தெனுமிருமை — புல்லா
திருந்த திருந்தவா றேயாக வென்று
மிருந்தா யிருந்தருள் வாய்.

அன்னிய மெல்லாம் மறைந்து, ஏகமாயிருக்கின்ற உண்மை 'நான்' மட்டும் மிஞ்சி, 'இல்லாதது — உள்ளது' என்னும் இருமை யுணர்வே யுண்டாகாமல், இருந்தது இருந்த படியே இருக்குமாறு என்றும் இருந்த நீயே இருந்தருள்க.

## 29. அருளை வியத்தல்

960. இறந்தேனா வின்னு மிருந்தேனா வுன்னை
மறந்தேனா வொன்று மறியேன் — றிறந்துவா
யென்னைப் பிடித்த விறைவேங்கை யேரமணா
பின்னை நடந்ததென்ன பேசு.

வாய் திறந்து என்னைக் கவ்விய வேங்கைப் புலியாகிய இறைவனே, ஸ்ரீ ரமணா, நான் இறந்தேனா? அல்லது இன்னும் இருந்தேனா? அல்லது உன்னை மறந்துவிட்டேனா? ஒன்றுமே தெரியவில்லையே. நீ வாய் திறந்து என்னைப் பிடித்த பின்னர் எனக்கு என்ன நடந்தது? நீதான் சொல்ல முடியும்.

961. நானற்ற வாழ்வே ரமணவாழ் வென்றவுண்மை
மேனற் றவர்க்கும் விளங்காம — லூனிற்பல்
லூழிவாழ் வட்டசித்தி யும்பர்வாழ் வாசிப்பர்
ஏழைக் குணர்த்தினையென் னே.

'நான்' என்ற அகந்தையற்ற வாழ்வே ஸ்ரீ ரமண வாழ்வு (பேரின்ப வாழ்வு) என்ற உண்மையை மேன்மையான தவத்தைச் செய்தவர் களுங்கூட விளங்கிக்கொள்ளாமல், இவ் வுட லிலேயே பல்லூழி காலம் வாழ்வதையும், தேவர்களாகி வாழ்வதையும், அஷ்டசித்திகளைப் பெறுவதையுமே யாசிப்பர். ஆனால், ஏழை யெனக்கு இவ் வுண்மையை உணர்த்தினையே! உன் அருள் இருந்தவாறு என்னே!

962. ஈதே சிறப்பென்றுன் னின்னருளா லென்புத்தி
மீதே யமர்ந்துவலை வீசினோய் — யாதேனுஞ்

சற்றும் பிறழாச் சரணாகதி யென்னுண்
முற்றும் படிநீ முடி.

உன்னுடைய இனிய அருளால் என் புத்தியின்மேல் நீ வீற்றிருந்து அருள்வலை வீசி என்னைப் பிடித்து 'அகந்தையற்று வாழும் இவ் வாழ்வே உயர்வற உயர்ந்தது' என்று என்னை வசியம் செய்தவனே! இந்த உன் அருட்பிடிப்பினின்றும் கொஞ்சமும் விலகாத பரிபூரண சரணாகதி என்னுள் நிறைவேறும்படி நீயே செய்தருள்க.

963. சத்தியிலும் புத்தியிலுந் தானிகரில் லாதெழுந்தோ
ரெத்தனைபே ரீதறியா தேகினார் — பித்தமன
வற்பனெனை யுன்ற னருளால் வசீகரித்துக்
கற்கவைத்த தென்னே கருத்து.

சக்தியிலும் புத்தியிலும் தனக்குச் சமானமில்லாதபடி உயர்வு பெற்ற எத்தனையோ பேர் இந்த உண்மையை அறிய முடியாமல் உன்னை விட்டு விலகிப் போய்விடவும்[72], பித்துப் பிடித்த மனமுடைய அற்பனாகிய என்னை உன்றன் திருவருளால் நீ வசீகரித்து இவ் வுண்மையை எனக்குக் கற்பித்தாயே. உன் கருணை இருந்தவாறு என்னே!

964. பத்திக்கென் சித்தமொரு பாத்திரமே யல்லவது
நத்தித் திரிவதிக லாபமே — யித்தகைய
மூடனையு முன்முன் முடுக்கிக் கொணர்ந்தவரு
ளாடலையென் னென்பே [73]னகோ.

என் சித்தமானது பக்திக்கு ஒரு பாத்திரமே அல்ல. அது ஆசைப்பட்டு அலைந்ததெல்லாம் இவ் வுலகப் பொருள்களை அடையக் கருதியே. இத்தகைய மூடனாகிய என்னையும் மடக்கித் திருப்பி உன் சந்நிதிக்குக் கொண்டு வந்த உன் திருவிளையாடலின் மகிமையை, அஹோ, என்ன வென்று சொல்வேன்?

965. ஆலிலையோன் றாமரையோ னண்ணா மலையெனமுன்
காலிலருச் சித்த கனமலையே — போலிலையோ
வீற்றிருந்து மூவினையின் வேகமற நீயென்னை
யேற்றடிமை கொண்ட வெழில்.

நீ என் முன்னிலையில் குருவும் தெய்வமுமாக வீற்றிருந்து, என் மூவினைகளின் வேகமும் அற்றுப்போகும்படி என்னை உன் அடிமையாக ஏற்றுக்கொண்ட பேரழகான காட்சி, ஆலிலைமேல் துயின்ற விஷ்ணுவும் தாமரைமேல் வீற்றிருக்கும் பிரம்மாவும் 'ஸ்ரீ அண்ணாமலையானே' என்றுதோத்திரம் செய்து உன் திருவடிகளை அர்ச்சனை செய்ய, முன் பொருகால் அசைவற்ற அருணாசலமாய்க் கம்பீரமாக எழுந்தருளியிருந்தது போலவே இருக்கின்றதல்லவா?

966. உன்னிடமே வந்தேன்வே றோரிடமுஞ் சேரேனென்
றென்னதுபோ லிச்செயல்க ளெண்ணுகின்றேன் — உன்னருளா
னீயேயுண் ணின்று நிகழ்த்தி யெனைக்கொணர்கின்
றாயேன் மறந்தே னதை.

'நான் உன்னிடத்திலேயே வந்தடைந்தேன்; உன்னைத் தவிர மற்ற யாரிடத்தும் போக மாட்டேன்' என்று (உன் திருவருளால் நிகழ்த்தப்படும்) இக் காரியத்தை நானே செய்வது போல் எண்ணிப் பெருமை கொள்ளுகின்றேன். ஆனால் உண்மையில் நீயே இத்தனை காலமும் என்னுள் இருந்து உன்னுடைய திருவருளால் என்னைத் தக்கவாறு நிகழ்த்தி உன்னிடம் கொண்டுவந்து சேர்க்கின்றாய், அல்லவா? நான் ஏன் அதை மறந்தேன்?

[72] இந் நூலின் 843வது பாடலையும் இங்கு மீண்டும் வாசித்துணர்க.

[73] 'னருள்' எனவும் பாடம்.

967. புற்புதமாப் போமுலகிற் புத்திச் சலிப்பாற்செய்
யற்புதமோர் காசுக்கு மாகாதா — லற்பனெனைச்
சிற்பரமா வாக்கநீ செய்யுந் திருவிளையாட்
டற்புதத்து ளற்புதமா மாற்று.

நீரில் தோன்றி உடனே மறைந்துபோகும் குமிழிகளுக்குச் சமானமான இவ் வுலக வாழ்வில் புத்தியின் சலன பலத்தால் சிலர் செய்யும் அற்புதமான அஷ்டமா சித்திகள் ஒரு காசுக்கும் ஆகாதனவே. ஆனால் மிக அற்பனாகிய என்னையும் ஞானப் பரம்பொருளாய் மாற்றுவதற்கு நீ செய்யும் அருள் திருவிளையாட்டுக்கள் அல்லவா அற்புதங்களுக்குள் எல்லாம் பெரிய அற்புதமாகும்? அத்தகைய உன் அற்புதத் திருவிளையாட்டுக்களையே நீ ஆற்றுவாயாக.

968. வினையைக் குவித்தபெரு வீணனேன் றன்னை
யனையிற் பெரிதருளா லன்றுன் — முனமழைத்து
மாலயனுங் காணா மலையாயுன் மானிடமாங்
கோலங்காண் பித்தாய் குரு.

பிரம்மவிஷ்ணுக்களுங் காண முடியாத அடிமுடிகளையுடைய ஸ்ரீ அண்ணாமலையானே, வினைகளையே குவித்த பெரிய வீணனாகிய என்னை நீ அன்னையைவிடப் பெரிய நின்னுடைய அருளால் அன்று உன் திருமுன்னர் வரவழைத்து நீ மானிட வடிவம் எடுத்துக்கொண்டு வந்துள்ள உன் சற்குரு தரிசனத்தை நானும் காணும்படி அருள் செய்தாய்.

969. அருளறிவா னந்த வருணா சலமே
குருரமண கோலமேற் கொண்டு — வருதிருநா
ளென்னைப் பிறப்பித் திணையடிகட் கீர்த்தநினக்
கென்னே கடவே னியான்.

அருளும் அறிவும் ஆனந்தமுமான ஸ்ரீ அருணாசலமே, ஸ்ரீ ரமண சற்குரு வடிவத்தை மேற்கொண்டு இவ் வுலகில் அவதரித்து உலவும் திருநாளில் (குரு அவதார காலத்தில்) என்னையும் பிறப்பித்து உனது திருவடிகளுக்கு இழுத்து அணைத்துக் கொண்ட பரம்பொருளே. உன் கருணைக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?

970. அருளரசே யண்ணா மலைரமணா நீநின்
றிருவுளத்தா லெண்ணிவிட்டாற் றீயோ — ரிருள்வினையின்
வாசனையு மெவ்வாறோ மாறி மகாபுனித
நேசதவஞ் செய்த னிசம்.

அருளரசே, ஸ்ரீ அண்ணாமலை ரமணா, நீ மாத்திரம் உன் திருவுள்ளத்தால் சங்கற்பித்துவிட்டால், எவ்வளவு தீயோராக இருந்தாலும், அவர்களிடம் எவ்வளவு அஞ்ஞான வாசனைகள் இருந்தாலும் அவை யெல்லாம் எவ்வாறோ மாறிப் போய், பக்தி மார்க்கத்தில் மகா புனிதமான தவத்தை அவர்கள் செய்ய முடியும் என்பது முற்றிலும் உண்மை.

971. சற்குருநின் சத்திக்குச் சான்றிசைக்க வேண்டுமோ
வற்ப வசங்கியநெஞ் சாலிழைத்த — தப்பிதமுஞ்
சாதனையாய் பேர்சூட்டிச் சாட்சாற்கா ரந்தருவான்
போதருமுன் வண்மை புதிது.

சற்குருவே, உன்னுடைய அருட்சக்திக்கு ஓர் உதாரணம் சொல்ல வேண்டுமாயின், அற்பமும் அசுத்தமுமான என் மனத்தால் நான் இழைத்த தப்பிதங்களை யெல்லாம் ஒரு சாதனையாகப் பெயர் சூட்டி, எனக்கு ஆன்ம சாக்ஷாத்காரம் தருவது என்று நீ முன்

வருகிறோயே! உன் அருளின் வண்மை எவ்வளவு புது மாதிரியாக இருக்கிறது.

972. நம்புவா ரூழிலுள்ள நல்வினையோ தீவினையோ
வெம்பெருமான் கைக்கொண் டியற்றுங்கா — லிம்பரே
ஞானம் விளைக்குமுயர் நற்கருவி யாகியவ
ரீனந் தவிர்ப்பதுமென் னே.

எம்பெருமானே, உன்னையே நம்பும் உன் அடியவர் களது பிராரப்தத்தி லுள்ளவை நல்வினையாகவோ தீவினையாகவோ இருந்தாலும், (அவர்கள் உன்னிடம் சரணாகதி யடைந்த பிறகு) அவர்களது வாழ்வை நீ பொறுப்பேற்றுக் கொண்டு நடத்தும்பொழுது, அவற்றை இங்கே இப்பொழுதே அவர்களுக்கு ஞானத்தை விளைவிக்கக் கூடிய சிறந்த அருட் கருவியாக மாற்றி, அவ் வடியார்களது கீழ்மையை யெல்லாம் நீக்கியருளுவது எவ்வளவு விந்தையாக இருக்கின்றது!

973. திருவருளின் லீலைத் திறத்தை யறிவோ
ரொருவரிலை யென்னே யுலகிற் — புரையுளே
னென்னையுமேற் றுன்கீ ழிருத்தி யிடரகற்று
முன்னருட்சீர்க் கோர்நிகரெங் குண்டு.

உன்னுடைய அருள் திருவிளையாட்டின் திறமையை உள்ளபடி அறியக் கூடியவர் உலகில் யாருமில்லை. ஏனெனில், இவ்வுலகிலேயே மிகத் தாழ்ந்த குணங்களையுடைய என்னையும் உன் அடிமையாக ஏற்றுக்கொண்டு உன் திருவடியில் வாழும்படி இருத்தி வைத்து, என் துன்பங்களை யெல்லாம் நீக்கிக்கொண்டு வருகின்றாயே. இது எவ்வளவு ஆச்சரியம்! உன்னுடைய அருள் பெருமைக்குச் சமமான காரியம் ஒன்று வேறு எங்கு உண்டு?

974. துன்பகற்றி மோனத் துரீயமா யெத்தனையோ
வன்பர்நதி யுண்ட வருட்கடலே — யென்புருக
வன்னோருள் நீபுரித்த வற்புதச் சொற் கேட்டுள்ள
மென்னே வியப்புறுகின் றேன்.

பிறவித் துன்பத்தை யகற்றி, மோனத் துரிய நிலையை அருளி, உன்னுடைய எத்தனையோ அடியார்களாகிய நதிகளை விழுங்கியுள்ள அருட்கடலே, அவ் வடியார்களது தேகத்திலுள்ள எலும்பும் உருகும்படி பேரன்பு வடிவினனாய் நீ அவர்களுள் ஸ்புரித்த அற்புதங்களைச் சொல்லக் கேட்டு என் உள்ளத்தில் எவ்வளவு ஆச்சரியம் அடைகின்றேன்!

975. இருந்ததின் பண்ட மிளஞ்சிறார் கையிற்
பருந்து பறித்துப்போம் பாங்கிற் — பெருந்திறலோய்
மற்றவர்பா னின்றும் வலிந்து பறித்தெனைநீ
பற்றிக் கொணர்ந்ததென்னே பாங்கு.

சிறு குழந்தைகளின் கையிலிருந்த தின்பண்டத்தை ஒரு வலிய பருந்து திடீரென்று பாய்ந்து பறித்துக்கொண்டு போகும் விதத்தில், பேராற்றல் உள்ளவனே, நீ என்னை மற்றவர்களிடமிருந்து பலவந்தமாகப் பறித்து என்னை இங்கே தூக்கிக்கொண்டு வந்துவிட்டாயே. உன் அருளின் திறன் என்னே!

976. எங்கோ பிறந்தேன்மற் றெங்கோ வளர்ந்தேன்போ
யெங்கோ புகல்தருவ ரென்றெண்ணித் — தங்கினே
னானாலு(ம்) நின்பே ரருள்வலமாங் காங்குவிட்டுத்
தானாய்க் கொணர்ந்ததிங்கு தான்.

எங்கேயோ பிறந்தேன்; பிறகு எங்கேயே வளர்ந்தேன்; பிறகு 'பிறவிப் பிணியை நீக்கித் தருவர்' என்று நம்பி எங்கேயோ சென்று தங்கினேன். ஆனாலும் உனது பேரருட் சக்தி என்னை அவ்வவ்விடங்களிலிருந்தும் நீக்கி உனது அவ்வியாஜ கருணையால் தானாகவே கொண்டுவந்தது உன் திருவடிகள் தோய்ந்த இந்த ஸ்ரீ அருணாசலத்திற்குதான்.

977. பன்னெறியைக் காட்டிப் பகிர்முகத்தி லேயலைக்க
வன்னியமாஞ் சாதனைக ளாயிரமுண் — டென்னினுமென்
கற்றறியா நெஞ்சைக் கவர்ந்துவிசா ரத்திணையுன்
பொற்பதவீ றேயற் புதம்.

பற்பல நெறிகளை எனக்குக் காட்டி என்னை சூக்ஷ்மமாக பகிர்முக நாட்டத்திலேயே அலைந்துகொண்டிருக்க வைப்பதற்கு பிற யோகங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. அப்படியிருந்தும், சாஸ்திர அறிவு இல்லாத என் மனத்தைக் கவர்ந்து ஆன்ம விசார மார்க்கத்திலேயே பொருத்தி வைக்கின்ற உன் பொன்னடிகளின் அருட்சக்தியோ மிகவும் அற்புதமானது.

978. துதிக்கவுனை நின்றக்கால் துட்டநெஞ்ச முள்ளே
பதுக்கமுற்றுச் சொல்லெழும்பாப் பாங்கில் — மதிக்கொளியே
வாராத தென்னே மவுனத்தாற் செய்யுமோ
ரரா தனையோ வது.

உன்னை ஸ்தோத்திரம் செய்ய நின்றால், கொஞ்சங்கூட சொல்லே எழும்ப முடியாத விதத்தில் சிந்திக்கும் அறிவொளி சக்தியே வரப்பெறாமல் எனது இந்த துஷ்ட மனமானது உள்ளே பதுங்கிக்கொள்கிறது. என்ன ஆச்சரியம்! ஒருகால் இதுதான் உன்னை மௌனத்தால் ஆராதிக்கும் நிலையோ?

## 30. தேற்றமுறல்

979. வல்லோனெல் லாமறிவோன் வாலருளோன் வண்மையோ
னல்லோன் குருரமண நாதனெனக் — கெல்லோரி
னின்றியமை யாதவனா யிங்கிறைவ னீயுள்ளா
யென்றே கவலை யிலேன்.

எல்லாம் வல்லவனாய், எல்லாம் அறிந்தவனாய், எல்லாரையும்விட என்மீது கருணையுள்ளவனாய்[74], எல்லாவற்றையுங் கொடுக்கக் கூடிய கொடை வள்ளலாய், எல்லாரையும் விட நல்லவனாய், எல்லாரையும் விட எனக்கு இன்றியமையாத வனாய், இறைவனாகிய ஸ்ரீ குரு ரமண நாதனே, நீ எனக்கு இங்கு கிடைத்துள்ளாய் என்று அறிந்து, அதனால் தான் கவலையற்று இருக்கின்றேன்.

980. தெரியுமுனக் கிந்தத் திரவியத்தா னேரும்
பெரியவிபத் தான பிழைகள் — உரியகுரு
நாதனீ யாதலா னாயேனுக் கவ்விபத்திங்
கேதுமுற வொட்டா யினி.

இந்த பூலோகத் திரவியங்களை நான் அளவுக்கு மீறிப் பெறுவதால், எவ்வளவு பெரிய விபத்தைத் தரும் பிழைகளை யெல்லாம் நான் அடைய நேரும் என்பது உனக்குத் தெரியும். நீயே என்னைக் காப்பாற்றுவதற்குரிய சற்குரு நாதன் ஆதலால், இந் நாயேனுக்கு அத்தகைய விபத்துக்கள் எதுவும் வந்தடைய இனி நீ விடமாட்டாய்.

[74] 645, 766 பாடல்களுடன் ஒத்து நோக்குக.

981. கண்ணறியே னேனுங் கடவுள் ரமணவடிக்
கண்ணுறைய வாட்கொண்ட காரணத்தா — லெண்ணிறந்த
பல்கலைகற் றார்க்கும் [75]பலிக்கரிய மோனசுகம்
மல்கவளிப் பாய்மெய் வரம்.

நான் நல்லறிவு இல்லாதவன் என்றாலுங்கூட, ஸ்ரீ ரமணக் கடவுளே, நான் உன் திருவடியில் வசிக்கும்படி நீ ஆட்கொண்டகாரணத்தால், கணக்கற்ற பல சாஸ்திரங்களைக் கற்றவர்களுங்கூட அடையமுடியாத மோன சுகத்தை நான் அடையும்படி ஒரு மெய் வரத்தை நீ அளிக்கின்றாய்.

982. மலையைக் கடலாக்கும் வல்லபத்தா யுன்ற
னெலையற்ற சத்திமுன் னென்றன் — புலைநெஞ்சம்
பங்கமுற்று ஞானத்தாற் பத்தா யிரமாற்றுத்
தங்கமா தற்கென் றடை.

உயர்ந்த மலையையும் ஆழ்ந்த கடலாக மாற்றக் கூடிய வலிமையுடையவனே[76], உன்னுடைய எல்லையற்ற அருட்சக்திக்கு முன் எனது அற்பமான தேகாத்மபுத்தியும் உருவழிந்து ஆன்ம ஞானத்தால் பத்தாயிரம் மாற்றுத் தங்கமாக மாறிப் போவதற்கு என்ன தடையுள்ளது?

983. நீயிருக்க நான்காண நேசித்தின் பூட்டுசுவை
யாயிருக்க வொன்றே தவனியிலே — தாயழைத்தாற்
பாவையெறிந் தோடிவராப் பாலனுள னோரமண
தேவனரு ணாசலனே செப்பு.

ஸ்ரீ அருணாசலரமண தேவனே, நீ எப்பொழுதும் என்முன் எழுந்தருளி யிருக்க, நானும் உன்னை எப்பொழுதும் கண்டுகொண்டிருக்க, இனி என் மனத்தில் இன்பச் சுவையை ஊட்டி என் நேசத்தைப் பறிக்கக் கூடியதாய் இவ் வுலகில் எந்தவொரு பொருள் இருக்க முடியும்? பொம்மைகளை வைத்து விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தை ஒருவனை அவனுடைய தாய் கூப்பிட்டால், அந்த பொம்மைகளை எறிந்துவிட்டு ஓடிவராமல் அவன் இருப்பானோ? நீயே சொல்க.

984. அண்டங் களைக்குவித்தொன் றாக்கினதி னும்பெரிதா
மண்டுதவஞ் செய்துநீ வைத்திருக்க — வுண்டு
பிதிரார்ச் சிதம்புசிக்கும் பிள்ளையெனக் கேனோர்
விதிநொந் திடத்தவத்தால் வெந்து.

கோடிக்கணக்கான அண்டங்களையும் ஒன்றாகிக் குவித்தால் எவ்வளவு பெரிய குவியலாக அது இருக்குமோ, அதைவிடப் பெரிதான அளவில் நிறைந்த தவச்செல்வத்தை என் தந்தையாகிய நீ தேடி வைத்திருக்கும் பொழுது, அவற்றின் பயனை உண்டு பிதிரார்ச்சிதம் புசிக்கும் பிள்ளையாகிய எனக்கு நானாக இன்னொரு தவத்தைச் செய்து கஷ்டப்பட ஒரு தலையெழுத்து ஏனோ?

985. விட்டதொன்று மில்லை விடவேண் டியதுமில்லை
கட்டமொன்று மில்லை களிப்பில்லை — நட்டமொன்று
நண்ணியதே யில்லையொரு நானில்லை சீரமணப்
புண்ணியனே நீயணைக்கும் போது.

[75] 'படைக்கரிய' எனவும் பாடம்.

[76] "அருள் நிறைவான வமுதக் கடலே..." என்று ஸ்ரீ பகவான் அண்ணாமலையை அமுதக் கடலாகக் கூறியது இங்கு குறிப்பிடப் பட்டது.

நான் துறந்தது ஒன்றுமில்லை; நான் துறக்கவேண்டியதாகவும் ஒன்றுமில்லை; எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை; எந்தவித சுகக் களிப்பும் இல்லை; எந்தவிதமான நஷ்டமும் உண்டானதே யில்லை. ஏனெனில், புண்ணியனாகிய ஸ்ரீ ரமணப் பெருமானே, நீயே என்னை அணைக்கும்போது, இவற்றைப் பெற 'நான்' என்னும் ஒருவனே இல்லாது போவதால்.

## 31. நீயே யுள்ளாய்

986. எவ்வா றுதிக்கின்றே னென்றென் னுதிப்பினான்
செவ்வே கவனஞ் செலுத்துங்கா — லவ்வா
றுதித்திருந்து நோக்குநா னோய்கின்றே னீயே
யதிக்கிரமித் துள்ளாய்மற் றங்கு.

'நான் என்ற அகந்தையாக முதலில் எப்படி உதிக்கின்றேன்?' என்று என் உற்பத்தி ஸ்தானத்தில் நன்றாக கவனம் செலுத்தும் போது, அவ்வாறு முன்பே உதித்து, எழுந்து, இருந்து நோக்கும் அகந்தையாகிய நான் ஓய்கின்றேன்; என்னை அதிக்கிரமித்து நீயே அவ் விடத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்றாய்.

987. நானா ரெத்தன்னை நாடுவதா னானெழுச்சி
தானாகக் குன்றித் தலைசாய — நீநானா
னென்றிருப்ப தன்றிநா னெங்கிருப்பே னந்நிலையி
னின்றிருப்போ னானன்று நீ.

'நான் யாராயிருக்கின்றேன்?' என்று தன்னை நாடுவதால் 'நான் இன்னாராக இருக்கின்றேன்' என்று எழுந்த அகந்தை யெழுச்சி தானாகவே குறைந்துபோய் அழிய, அங்கு நீ 'நான் நானே' என்று விளங்கியிருப்பது தவிர, 'நான் இன்னார்' என்று ஒருவன் எங்கு இருப்பேன்? அந்த நிலையில் நின்றிருப்போன் ( நிஷ்டையில் அனுபவப்படுவோன்) நான் அல்ல; நீயே.

988. மூவவத்தை முப்பாழே முக்குணமு முப்பாழே
மூவுலகு முப்பாழுன் முன்னிலையில் — ஆவியா
யப்பாழுக் காப்பாலா யான்மபரி பூரணமா
யெப்போது நீயே யிருப்பு.

ஆன்மவிளக்கமாகிய உன் முன்னிலையில், வந்து போவதாகக் காணப்படும் நனவு, கனவு, துயில் என்னும் மூவவஸ்தைகளும் இல்லாதவையே; அவ்வாறே, மாறி மாறி வந்துபோவதாக உணரப்படும் சத்துவரஜோதமமாகிய முக்குணங்களும் இல்லாதனவே; சித்தத்தில் வாசனைகள் உள்ளவரையுமே வெளிப்பட்டு மனத்திற்குப் புலனாகும் மூவுலகங்களும் இல்லாதனவே. உயிராகிய (ஜீவனாகிய) அந்த இல்லாத அகந்தைக்கும் அப்பாற்பட்டு, பரிபூரண ஆன்மாவாய், மேற்கூறிய சகல பாழ்கள் இருந்ததாகத் தோன்றியபோதும், பிறகு அவை இல்லாதபோதும் மெய்யாக இருந்து விளங்கும் வஸ்து நீ ஒருவனே.

989. தன்னை நினைவுறுத்தத் தக்கதோர் முன்னிலையா
யென்னை வசீகரிக்கு மெந்தையே — யுன்னை
யருணா சலமென் றகநினைக்க நானென்
றொருமா வுணர்வா யுளாய்.

( காணப்படும் எந்த முன்னிலைப் பொருளும் பிற எண்ணங்களையே பெருக்கித் தருவனவாயிருக்க, ஆனால்) ஆன்மாவாகிய என்னை ஞாபகப்படுத்தித் தரத்தக்க ஒரு முன்னிலைப் பொருளாக என் கண்முன் எழுந்து வந்து என்னை வசீகரிக்கின்ற என் தந்தையே, உன்னை 'நீ இந்த ஸ்ரீ அருணாசலமே' என்று உள்ளத்தில் நினைக்கும்

போது, நீ அங்கு 'நான்' என்ற ஒரு பேருணர்வாக விளங்குகின்றாய்.

990. உன்னை நினைப்பதுநான் றன்னை நினைப்பதுவே
யென்னை நினைப்பதெண் ணாமையே — யன்னதூஉ(ம்)
நானென் றெழாதிருக்கு(ம்) நாட்டமே நாடுவது
மேனென் னிருப்பே யது.

நான் உன்னைச் சரியாகத் தியானிக்க வேண்டுமென்றால், 'நான்' என்று விளங்கும் என்னை தியானிப்பதே அதுவாகும். என்னை அவ்வாறு நினைப்பது என்றால், மற்ற எதையும் எண்ணாது இருப்பதே அதுவாகும். மற்றவற்றை நினையாது இருத்தல் என்றால், 'நான்' என்ற அகந்தை எழாதபடி 'இருக்கின்றேன்' என்ற உணர்வின்மேல் நாட்டங்கொள்வது மட்டுமே அதுவாகும். இவ்வாறு தன்னை நாடுவது என்ற ஒரு முயற்சியும் ஏன்? (என் இருப்பு தன்னை அறியும் அறிவும் ஆகிறதல்லவா?) ஆகவே தன்னாட்ட முயற்சியுமற்றுத் தானாய் இருப்பதுவே அது.

991. பிழைத்தேன் பிழைத்தேன் பிழைத்தோனே யாவேன்
பிழைப்பொதியே னாகப் பிறந்தும் — அழைத்தன்
றருணா சலரமண வாசான்கண் தொட்ட
கருணா முதத்தாற் களித்து.

அன்று என்னை வரவழைத்து ஸ்ரீ அருணாசலரமண சற்குரு தனது அருட்பார்வையாகிய கருணாமிருதத்தால் என்னைத் தொட்ட காரணத்தால், திரண்ட பிழைகளோடு கூடிப் பிறந்தவனானாலும், நான் பிழைத்தேன், பிழைத்தேன், பிழைத்தவனே யாகிக் களித்தேன்.

### 32. புன்சொற் றுதியும் பொறுத்தருள்

992. வைது வழக்காடி வாழ்த்தி யிரந்துதுதி
செய்து பலவிதமாச் சிந்தையிலுன் — பெய்கழலே
யுன்னி யடியே னுரைத்த பிழைகளெல்லா
மன்னித் தருள்வாய் மகிழ்ந்து.

உன்னை ஏசியும், உன்னுடன் வழக்காடியும், உன்னை வாழ்த்தியும், உன்னைக் கெஞ்சித் துதித்தும், இன்னும் பற்பலவிதமாகவும் உனது திருவடிகளையே என் மனத்தாற் சிந்தித்து, அடியேன் கூறிய பிழை மொழிகளை யெல்லாம் நீ மன்னித்து என் துதியில் மகிழ்ந்து அருள் செய்வாயாக.

993. தாளாப் பிரிவின் றவிப்பாலு முன்னுரிமை
யாளா மகவாம்பே ரன்பாலு — மூளாநின்
றுள்ளப் பதைப்போ டுரைத்தேன் [77]வசைபொறுத்துக்
கொள்ளக் கடனருளே கூர்ந்து.

உன்னைப் பிரிந்து தாங்க முடியாது தவித்த துக்கத்தாலும், உனக்கே முழுவதும் உரிய அடிமை அல்லது பிள்ளை என்று எழுந்த பேரன்பாலும், உள்ளத்தில் பதைப்பு மூண்டு நான் கூறிய இத் துதியின் பிழைகளை யெல்லாம் பொறுத்து அருள்கூர்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டியது உன் கடமை யாகும்.

[77] 'வசையிசையாய்க்' எனவும் பாடம்

994. நின்னருளா லன்றி நிகழ்த்தவொணா ரெத்தவமு
மன்னுயிர்க ளென்றபெரும் வாய்மையுணர்ந் — துன்னருளா
லுன்னருளைக் கெஞ்சி யுருகித் துதிக்கலுற்ற
வென்னுரையு மேற்க விரங்கு.

உலகில் உள்ள ஜீவர்கள் யாரும் உன் திருவருளின் உதவியாலன்றி எந்தத் தவத்தையும் செய்ய முடியாது என்ற பேருண்மையை நன்றாக உணர்ந்து, உன்னுடைய திருவருளின் உதவியைக் கொண்டே கெஞ்சி 'உன் திருவருளே வேண்டும்' என்று உருகித் துதித்த என்னுடைய இந்தப் பாடல்களையும் நீ அருள் கூர்ந்து ஏற்றுக்கொள்ள இரங்குவாயாக.

995. எள்ளப் படாத வியல்பா மிருப்புணர்வைக்
கள்ளப் படுத்துமகங் காரத்தைக் — கொள்ளையிடுஞ்
சோரா வெனையுஞ் சுலபமா யாட்படுத்துஞ்
சூராநின் றாட்கென் றுதி.

யாராலும் இகழ்ந்து வேண்டாம் என்று தள்ளிவிட முடியாத சகஜ இருப்புணர்வாகிய ஆன்மாவை மறைந்து போனதாகத் தோன்றும்படிச் செய்யும் அகங்காரத்தைக் கொள்ளையடிக்கும் அருள் திருடனே! அவ் வகந்தையே யாகின்ற என்னையும் வெகு சுலபமாக வென்று உனக்கு ஆட்படுத்தும் ஞான சூரனே! உன்னுடைய திருவடிகளுக்கே என் துதிகள் ஆகட்டும்.

996. அருளுடையா யென்னை யடிமை யுடையாய்
தெருளுடைமைச் செய்தருளுந் தேவே — பொருளறியாப்
புன்கலக்க முற்றுப் புலம்பியவென் கூக்குரலுன்
நன்செவிகள் கேட்க நயந்து.

அருளுடையவனே! மேலும் என்னை அடிமையாக உடையவனே! எனக்கு ஞானத் தெளிவை அளித்தருளும் தேவனே! ஆன்மப் பொருளை அறியாமல் அற்பனாகக் கலக்க முற்றுப் புலம்பிய என்னுடைய இந்தக் கூக்குரல்களையும் உன்னுடைய திருச்செவிகள் விரும்பிக்கேட்டு அருள்வதாகுக.

997. போற்றுமடி யார்க்குப் புரண ரமணமாந்
தோற்றமறை வற்ற சுயஞ்சுடரே — யேற்றருள்க
நல்லோ ரருட் டுதியி னாதத் தினித்தசெவி
பொல்லோனென் புன்மொழியும் பூண்டு.

உன்னைப் போற்றும் அடியார்களுள் ஸ்புரண ரமண வடிவில் விளங்குகின்ற, தோற்றம் மறைவற்ற ஆத்ம ஜோதியே! உத்தம அடியார்கள் தமது அருள் வாக்கினால் உன்னைத் துதி செய்த நாதத்தில் இனிப்புற்ற உன் இரு செவிகளும் பொல்லாதவனாகிய எனது இந்த அற்ப மொழிகளையும் கேட்டு ஏற்று அருள் செய்வதாக.

998. கேளா தளிக்குங் கிருபைக் கிழுக்கென்னான்
மூளாத வாறு முடித்தருள்க — கேளாநின்
றிவ்வா றெனைப்பாட்டு வித்தவனு நீயதனா
லெவ்வாறு நான்கேட்ட தாம்.

அடியார்கள் உன்னிடம் வந்து கேட்க வேண்டும் என்றுகூட காத்திராமல், தானாகவே வலிந்து சென்று அவர்களுக்குக் கிருபை செய்யும் உனது அருட்கொடைப் புகழுக்கு என்னால் இழுக்கு ஏற்படாதவாறு நீ செய்தருள்க. உன்னைக் கேட்கும்படி அருள் தந்து என்னை இவ்வாறு பாட வைத்தவனும் நீயே யாகையால், இவை யாவும் நான் உன்னைக் கேட்டதாக எவ்வாறு ஆகும்? (நீயே கேட்க அருளியதால் உன் கேளாது அளிக்கும் கிருபைக்கு என்றும் இழுக்கில்லை என்றவாறு.)

999. அருளா லழிந்திவ் வகமம காரம்
பொருளுக் கயலிலாப் போத — [73]வுருவகமா
வென்னை யெழுப்ப விசைத்தவிண் ணப்பமிதற்
குன்னருளே கர்த்தா வுளம்.

இந்த அகந்தை மமதைகள் அருளால் அழிந்துபடவும், யாதொன்றும் சத்வஸ்துவுக்கு அயலாகாத அனன்னிய ஞானவடிவாக என்னை எழுப்புவதற்கும் பாடப்பட்ட இந்த ஞானப் பிரார்த்தனைக்கு உண்மையான கர்த்தா உன் அருள் உள்ளமே (உன் திருவுள்ளமே) யாகும்.

1000.ஏதுமிய லாத வெளியே னெனைப்போன்ற
கோதுடையார்க் குங்கைக் கொடுத்துதவி -சாதுசன
நல்லோர்க்கே யுள்ளபர ஞானபூ மிக்கழைத்துச்
செல்வோய்நீ வாழி செழித்து.

ஒன்றுமே இயலாதவர்களும், என்னைப் போன்ற குற்றமுடையவர் களுமான எளிய அடியார்களுக்கும் உன் அருட்கரத்தை உதவி, சாது ஜனங்களாகிய மகான்களுக்கே உரிய பிரம்ம ஞானபூமிக்கு அழைத்துச் செல்பவனே, நீ செழித்து வாழ்க!

குறிப்பு: 'என் போலும் தீனரை...' என்ற 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை'யின் 105வது பாடல்இங்கு ஒத்து நோக்கத் தக்கது.

ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் முற்றிற்று

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து

[73] 'உரு அகமா': 'அக வுருவா' என மாற்றிக்கொள்க.

ஆ



இ

ஊ

எ

த



தா



தி



தீ



து

பூ



பெ



பே



பை



பொ



போ



ம



மா



மி

# இந்நூலின் கண்....

சிறு பிராயம் முதல் ஸ்ரீ சுவாமிகளின் உள்ளத்தில் இருந்து வந்த அருள் வேட்கையும் ஞானப் பசியும் மெல்ல மெல்ல வளர்ந்து வளர்ந்து, முற்றி கடைசியாக ' ஸ்ரீ ரமண வருகை' மூலம் முழுதும் கனிந்து, அதன் பயனாய் அவரது ஏக்கமும் தாபமும் நிறைந்த ஜீவத்துவம் ஸ்ரீ பகவானின் ஞானாக்கினியால் முற்றிலும் எரிக்கப்பட்டு நீராக்கப்பட்ட பிறகும், பிராரத்தித்துப் பிரார்த்தித்துப் பெற விரும்பும் அவரது சுபாவமும் ஸ்ரீ பகவானின் அருளையே முற்றும் சார்ந்து நிற்கும் அவரது போக்கும் அவரது தேக வாழ்வின் இறுதிக் கட்டம் வரையிலும் அவரிடம் தொடர்ந்தே வந்தது என்பதை அவர் மேற்கொண்டு பாடிய 'ஸ்ரீ ரமண குருவருளந்தாதி', 'ஸ்ரீ அருணாசல வெண்பா', 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்', 'ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலையின் விரிவுப்பாமாலை', மற்றும் ' ஸ்ரீ ரமண கீதத்'தின் அநேகப் பாடல்களைக் காணும் போது நன்கு தெரிந்துகொள்ளலாம்.

இவ்வாறாக குருவருளுக்காகவும், ஞான நிலைக்காகவும் அழுதும் தொழுதும் பாடிப் பரவும் அவரது மனப்பாங்கு ஞானாக் கினியால் புடம் போடப் பட்ட பிறகு அவர் யாத்த 'ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம்' வடிவில் செறிவுடன் விளங்குவதைக் காணலாம். மேலும் அவருடைய தேகவாழ்வின் கடைசி நாட்களில் கடைசியாக எழுதிய பின்வரும் பாடலிலும் செயல், சொல், எண்ணம் ஆகிய யாவற்றுக்கும் ஸ்ரீ பகவானின் அருளையே சார்ந்து அவர் இறுதிவரை வாழ்ந்து வந்ததைக் காணலாம்:

இஷ்டமுனக் கில்லாத எச்செயலும் செய்யேனான்
இஷ்டமுனக் கில்லாத எச்சொல்லும் சொல்லேனான்
இஷ்டமுனக் கில்லாத எந்நினைவும் எண்ணேனான்
இஷ்டமிதை நின்னருளால் ஈடேற்றி வைப்பாயே.

இப் பாடல் அவரது அருள் வாழ்க்கைக்கு ஒரு முத்தாய்ப்பாய்ச் சிறந்து விளங்குவதாய் அமைந்துவிட்டது.

பிறவிப் பயனுற விரும்புவோருக்கு இந்த நூல் அனுகூலமாக அமையும் என்பதில் ஐயமில்லை


ISBN 978-81-934684-0-1
9 788193 468401

**AUDIO CD INSIDE**